ஸ்ரீ:

# இராமாயண தருமம்.

## (ஓர் ஆராய்ச்சி நூல்.)

---

சிந்தாமணி கிராமம் கர்ணம்

**S. K. ரெங்கய்யங்கார் அவர்களால்**

இயற்றப்பெற்று


ஸ்ரீவில்லிபுத்தூர்

கருணாநிதி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பெற்றது.

1934.




விலை ரூ 1—8—0.

ஸ்ரீ

# இராமாயண தருமம்.

## விஜ்ஞாபனம்.

சுலோகம்,

*யதா யதாஹி தர்மஸ்ய க்லாநிர்பவதி பாரத*
*அப்யுத்தான மதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாம்யஹம்*
*பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம்*
*தர்மஸம் ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே”*

(இதன் பொருள்) ஹே அர்ச்சுனா! (உலகத்தில்) தருமத்திற்குக் குறைவும், அதருமத்திற்கு ஏற்றமும், வரும்போதெல்லாம் யான் என்னைப் படைத்துக்கொள்கிறேன். நல்லோரைப் பாதுகாத்தற்கும், தீயோரை அழித்தற்கும், தருமத்தை நன்கு நாட்டுதற்கும் (யான்) யுகந்தோறும் அவதரிக்கிறேன்.

என்று கிருஷ்ணபரமாத்மா அர்ச்சுனனுக்கு உபதேசித்தருளியிருக்கிறார். (பகவத்கீதை - அத். 4. சுலோ. 7 8)

---

அந்தப்பிரகாரம், பகவான் மத்ஸ்ய - கூர்மாதி அவதாரங்கள் எடுத்து அந்தந்தக்காலங்களில் துஷ்டர்களை ஸம்ஹரித்து, ஸாதுக்களுக்கு சௌக்கியத்தை அருளியிருக்கிறார். ஆனால் 7-வதான அவதார காலத்தில், உலகத்தில் வைதீக தருமங்கள் நாளுக்கு நாள் குறைந்தும், அதருமங்கள் அதிகரித்தும் வந்ததினால், உலகத்திலுள்ளவர்களுக்கு சகல வைதீக தருமமார்க்கங்களையும் போதிக்கத் திருவுள்ளங்கொண்டு, கருணாநிதியும் அவாப்த ஸமஸ்தகாமனும், அனந்த கல்யாண குணாத்மகனுமான ஸ்ரீய: பதி,

*“அறந்தலை நிறுத்தி வேதமருள் சுரந்தறைந்த நீதித்*
*திறந்தெரிந்துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்*
*இறந்துக நூறித் தக்கோரிடர் துடைத்தேக விண்டு*
*பிறந்தனன்றன் பொற்பாத மேத்துவார் பிறப்பறுப்பான்.”*
(கம்பர் – சுந் – கா – பிணி. 81)

என்றபடி, தசரதச்சக்கரவர்த்திக்கு இராம இலக்ஷ்மண, பரத சத்துருக்கனர் என்னும் நான்குதிருக்குமாரர்களாக மனுஷ்ய ரூபமாக அவதரித்து, சாமான்ய தருமங்கள், விசேஷதருமங்கள் முதலான ஸகல தருமங்களையும், தாமே அனுஷ்டித்துக் காண்பித்துத்

தருமத்தை நன்கு நிலைநாட்டியும், ஸாதுக்களுக்குத் துன்பங்களைச் செய்து வந்த கொடிய அரக்கர்களை ஹதம் செய்து ஸாது ஸம்ரக்ஷணமும் செய்தருளியிருக்கிறார்.

இந்த விருத்தாந்தங்களெல்லாம் ஸ்ரீமத் ராமாயணத்தில், வடமொழியில் நன்கு வர்ணிக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீராமாயணம், ஆதியில் பிரம்மாவினால் (சத்தியலோகத்தில்) சதகோடி விஸ்தாரமாகச் செய்யப்பட்டது. அதை, பூலோக வாசிகளான மனிதர்களும் தெரிந்து நல்வழியில் நடந்து உஜ்ஜீவிக்கக் கருதி பிரம்ம தேவர், நாரத மகரிஷி மூலமாக, வான்மீக முனிவருக்கு உபதேசஞ் செய்வித்து, அம்முனி புங்கவரால் இருபத்து நாலாயிரம் சுலோகங்களடங்கிய "ஸ்ரீமத் ராமாயணம்" என்னும் ஆதி காவியமான இதிஹாஸம், வடமொழியில் செய்யப்பட்டிருக்கிறது.

அதைப்பின்னால் மகான்களான விஸ்வாமித்திரர், போதாயனர் முதலியோர் வடமொழியிலும், கம்பநாட்டாழ்வார் முதலான பக்த சிரோமணிகள் தமிழ், தெலுங்கு, மகாராஷ்டிரம், மலையாளம் முதலிய பாஷைகளில் செய்யுள்களாகவும், கத்யங்களாகவும், கீர்த்தனங்களாகவும் செய்யலாயினர்.

இன்னும் கோவிந்தராஜர் முதலான அநேகம் பெரியோர் ஸ்ரீராமாயணத்திற்கு, வியாக்யானங்கள்செய்து, அதன் காவ்ய ரஸங்களையும், அதிலுள்ள தருமங்களையும், தத்துவங்களையும் விளக்கிக் காண்பித்திருக்கின்றனர்.

தஞ்சாவூர் மந்திரியாயிருந்த த்ரயம்பகராயமகீ என்பவர் தர்மாகூதம் என்னும் கிரந்தத்தில் ஸ்ரீராமாயணத்திலுள்ள தருமங்களை சுலோக வரிசையாக வடமொழியில் விஸ்தாரமாக எடுத்துரைத்திருக்கின்றனர்.

ஸ்ரீராமாயணம் பூராவிலும் மனுஷ்யர்கள் அனுஷ்டிக்கவேண்டிய தருமங்கள் கூறப்பட்டிருக்கின்றன வென்பதில் ஐயமில்லை. அவற்றில் முக்கியமான சில தருமங்களை, வான்மீகி ராமாயணம், அத்யாத்ம ராமாயணம், ஆனந்தராமாயணம், தர்மாகூதம், கம்பராமாயணம் முதலிய நூல்களிலிருந்து ஆராய்ச்சிசெய்து எடுத்து, கோவைசெய்து, தமிழ்உலகுக்கு பயன்படுமாறு தமிழ்நடையில், சந்தர்ப்பத்திற்கேற்ற மேற்கோள்கள் வடமொழியிலும், தமிழிலும் சேர்க்கப்பட்டு, 'இராமாயண தருமம்' என்ற பெயருடன் எழுதப்பட்டிருக்கிறது.

வான்மீக முனிவர் ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீராமபிரானுடைய திவ்ய சரிதத்தை வர்ணித்திருப்பதோடு ஸ்ரீராமாயணத்தை ஓரனுபவ தருமசாஸ்திர கிரந்தமாக இயற்றியிருக்கின்றாரென்பதை விளக்கிக்காண்பிக்க வேண்டுமென்பது எனது நோக்கம்.

ஆதலால் இந்நூலில் ஒரு தருமத்தை எடுத்துரைக்கும் பொழுது, அந்த தருமத்திற்குரிய சுலோகங்களை வால்மீகி ராமாயணத்தின் ஏழு காண்டங்களிலிருந்து எடுத்தெழுதி, பின் அவைகளின் தாத்பர்யத்தையும் அவைகளினால் இன்ன தருமம் சூசிப்பிக்கப்படுகிறதென்பதையும் கூறியும், அனேக சந்தர்ப்பங்களில் அத்தருமத்திற்கேற்ற கம்பராமாயணச் செய்யுள்களைச் சேர்த்தும், அதற்காதாரமாக மேற்கோள்கள் தரும சாஸ்திரங்களிலிருந்தும் நீதி நூல்களிலிருந்தும், புராணங்களிலிருந்தும் எடுத்தெழுதப்பட்டிருக்கின்றன.

பெண்களும், பாலர்களும் எளிதில் படித்துணரும்பொருட்டு அனேகவிடங்களில், சொற்களைச் சந்திவிதிப்படி சேர்க்கவில்லை. "முன்னோர் மொழிபொருளே யன்றியவர்மொழியும் பொன்னே போற் போற்றுவம்" என்ற இலக்கணப் பிரகாரம், ஸ்ரீராமாயணத்தின் பூர்வ வியாக்யானங்களில்கண்ட வாக்கியங்களும், தமிழ்மொழி பெயர்ப்புகளிலுள்ள வாக்கியங்களும் பல இடங்களில் எடுத்தாளப்பட்டிருக்கின்றன.

இந்நூலின் முதல் நான்கு தருமங்கள் சில வருஷங்களுக்கு முன் 'ஸ்ரீ வைஷ்ணவன்' என்ற சஞ்சிகைமூலமாக வெளியிடப்பட்டுள்ளன. சில சீர்திருத்தங்களுடன் அவைகளை இந்நூலில் முதற்பாகமாகவும், வேறு சில தருமங்களை இரண்டாம் பாகமாகவும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இதிற் காணப்படும் குற்றங்களை நீக்கி குணங்களை மட்டும் கிரகிக்கவேணுமாய் எல்லா ஆஸ்திகோத்தமர்களையும் பிரார்த்திக்கிறேன்.

எழுதுநண்பர்கள் இதில்சீர்திருத்தஞ்செய்யப்படவேண்டியவைகளையும், சேர்க்கப்படவேண்டியவைகளையும் எமக்குத் தெரிவிப்பார்களாயின் அதனைப் பேருபகாரமாகக்கொண்டு அடுத்த பதிப்பில் வெளியிட ஸித்தனாக இருக்கிறேன்.

இந்நூலுக்கு முன்னுரை, சாற்றுக் கவிகள் முதலியன அளித்து உதவிய பெரியார்களுக்கும், இந்நூல் பூர்த்தியாவதற்கு கூடயிருந்து உதவிசெய்த எனது நண்பர் C. S. சுப்பிரமணிய அய்யரவர்களுக்கும் எனது நன்றியை தெரிவிக்கிறேன்.

சிறிதும் சிரமத்தைக் கவனிக்காமல், எனது சௌகரியம் போல், இந்நூலை அச்சடித்தும், பைபிண்டுசெய்தும் கொடுத்த ஸ்ரீவில்லிபுத்தூர் கருணாநிதி பிரஸ்காரருடைய உதவியை மறக்க மாட்டேன்.

இங்ஙனம்.

**S. K. ரெங்கய்யங்கார்.**

# முன்னுரை.

மாநிலத்து வாழும் மக்கட்கெல்லாம் இகபரமிரண்டிலும் மிகுந்த நற்பயனை ஈயவல்ல அரும்பெரும் தர்மங்கள் அனைத்திற்கும் ஒரு மதிப்பரிய பொக்கிஷமாய் விளங்கும் சீர்மைவாய்ந்துள்ளது ஸ்ரீ ராமாயணம். இம்மாக்கதையின் கதாநாயகரான ஸ்ரீராமபிரானும் கதாநாயகியாரான ஸ்ரீ சீதாதேவியும், பலவாய அறங்களின் இயல்புகளையும் உலகமக்கட்கு ஒழுகிக்காட்டி அறிவுறுத்தும் வண்ணம் மானிட யாக்கையைப் புனைந்துவந்த ஸர்வலோக சரண்யரான எம்பெருமானும் பெரியபிராட்டியாருமே. இத்திருவவதாரங்கள் நிகழ்தற்கு இடமாய் அமைந்த நம் பரதமாநாடு அதனாற் புண்ணியநாடாயிற்று. இவ் அவதாரங்களின் லீலைகளை அருளால் உணர்ந்து எடுபட்டுக்கூறும் தூயமாமுனிவரின் நூலும் புனிதநூலாயிற்று. அந்நூலை ஓதி ஸ்ரீராமரையும் ஸ்ரீசீதாதேவியாரையும் தொழும் நன்மக்கள் யாவரும் பெறலரும் பேறுபெற்றவரேயாவார். அம்மட்டோ! அவ்விருபெரும தெய்வப்பிறப்பினரையும் போற்றிப் பணியாதார் மதங்களனைத்திற்கும் தாயாய்த் திகழும் ஸநாதனதர்மம எனும் சிறப்புப்பெயர்பெற்ற இந்துமதத்தினைச் சார்ந்தவராகார் என்பதும் உண்மையே.

இரும்பிறவித் துயர்நீங்கிப் பெரும்பேரின்பம் எய்துதற்குரியார் விரும்பிவந்து பிறக்கும் பரதமாநாடு எனப் பூவுலகெங்கும் புகழ்பெற்ற ஒரு மெய்யறிஞராற்பாராட்டப்படும் இத்தொன்னாட்டில் இந்நாளில் மேற்றிசைக் கல்வியின் மயக்கத்தாலும் மேற்றிசை நாகரிகத்தின் வலிமையாலும் நம்மவரிற்பலர் ஆண்மக்களும் பெண்மக்களும் நமது பழமையான அறங்களின் மேன்மையினை உணராது மனங்குளம்பி நல்லறிவு குலைந்து, பயனற்ற புதுக்கொள்கைகளில் ஈடுபட்டு வாழ்ந்துவருதல் வெளிப்படையே. இன்னும் பலவகையாகவும் நமது நாடு பண்டைய சிறப்பையும் சீரையும் இழந்திருத்தலும் வெளிப்படையே. இத்தகைய பரிதபிக்கத்தகுந்த நிலையில் இருக்கும் நமது நாடு ‘தள்ளாவிளையுளும் தக்காரும் தாழ்விலாச் செல்வரும்’ சேர்ந்ததாய், பசியும் பிணியும் பகையும் நீங்கியதாய்ப் பண்டுபோல் விளங்கவேண்டுமாயின், நம் நாட்டு மக்கள் அனைவராலும் பற்றற்குரியது ஒன்றே உள்ளது; அது யாதெனில், ‘சிறப்பீனும் செல்வமுமீனும்’ அறம் ஒன்றே. இவ் அறத்தைத் துணையாகக் கைக்கொண்டு வாழ்க்கையைச் செலுத்த விரும்புவார்க்கு வேண்டுவன, அறங்களை விரித்துரைக்கும் ஒரு நூலும் அவைகளை வாழ்க்கையால் நிலைநாட்டிய பெரியார் சரிதையுமே; அவ்விரண்டையும் தன்னகத்தே ஒருங்கே

கொண்ட நூலாவது ஸ்ரீராமாயணமே. ஆதலின் நமது நாட்டு ஆடவர் ஒவ்வொருவரும் ஸ்ரீராமபிரானையும், மகளிர் ஒவ்வொருவரும் ஸ்ரீசீதாதேவியாரையும் 'முன் மாதிரிகளாகப் பின்பற்றி வாழப்பெரிதும் முயலவேண்டும்; இருபாலாரும் ஸ்ரீராமாயணத்து மலிந்துகிடக்கும் தர்மங்களைக் கற்றுச் சிந்தித்தல் வேண்டும். 'கற்பார் இராமபிரானையல்லால் மற்றும் கற்பரோ' என்றார், மயர்வற மதிநலம் அருள்ப்பெற்ற ஒருவர்.

இப்பெருமை வாய்ந்த ஸ்ரீ ராமாயணத்தில் ஆங்காங்கு வெளிப்படையாயும் இலைமறைகாய்போலப் பொதியப்பட்டும்கிடக்கும் பல்வகையான அறங்கள் யாவற்றையும் ஒவ்வொன்றாக எடுத்து, அதனை விளக்கும் சந்தர்ப்பங்களையும் மேற்கோள்களையும் ஏழு காண்டங்களினின்றும் பொறுக்கியெடுத்துச் சேர்த்தளிக்கும் நோக்கமுடையது இந்நூல். ஒவ்வோர் அறத்தைப்பற்றிக் கூறும்போதும், அத்தற்கியைந்த மேற்கோள்களை ஆன்றோர் இயற்றியருளியுள்ள வடமொழி தென்மொழி நூல்களிலிருந்தும் தேர்ந்தெடுத்து உதவுதல் மிகப்பொருத்தமாயும் அழகாயும் அமைந்துள்ளது. அன்றியும், பெண்டிரும் சிறுவரும் படித்துப்பயனடையுமாறு இந்நூல் எளிய இனிய நடையில் எழுதப்பட்டிருப்பதும் சீரியதேயாகும். ஸ்ரீராமாயணத்தில் உள்ள ஸாரமான பொருள்களையெல்லாம் கடைந்தெடுத்துத் திரட்டியுருட்டி, உண்ணுதற்கெளிய சிறிய உருண்டைகளாக அளிக்கும் திறம் வாய்ந்திருத்தலின், இந்நூல் ஸ்ரீராமாயண நவநீதமேயாகும். இத்தகைய நவநீதத்தைத் தமிழ்நாட்டு ஆடவரும் மகளிரும் மனமுவந்து உண்டு, ஞானநலமும் ஒழுக்கநலமும் அமையப்பெற்று நல்வாழ்வு வாழுமாறு, எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சி வேண்டுகின்றேன்.

ஸ்ரீவில்லிபுத்தூர்.
28—3—'32

அ. ஸ்ரீநிவாஸாசாரி, பி. ஏ., எல். டி.,
உதவியாசிரியர்,
ஹிந்து உயர்தரப் பாடசாலை.

ஸ்ரீ:

# இராமாயண தருமம்.

---

இது, சிந்தாமணிக்கிராமம் கர்ணம் ஸ்ரீமத் ரேங்கையங்கார் அவர்களால் வால்மீகி ராமாயணத்தைப் பிரதானமாகக் கொண்டு, ஆநந்தராமாயணம், அத்யாத்மராமாயணம், தர்மாஹூதம், கம்பராமாயணம் முதலிய பல க்ருந்தங்களிலிருந்தும் ஆராய்ச்சிசெய்து தெளிந்த தருமாநுஷ்டானங்களைக் கோவைப் படத் தொகுத் தெழுதியிருப்பதாகத் தெரிகிறது. அவ்வவ் விஷயங்களுக்கேற்ற பிரமாணவசனங்கள் வடமொழியிலும், தென்மொழியிலும் வரையப்பட்டுள்ளன. தருமலோபமுள்ள இக்காலத்தில் தருமம் இப்படிப்பட்டதென்று பலரும் அறியுமாறு எழிய தமிழ்நடையிலெழுதி வெளியிடுவது லோகோபகாரமேயாம். இத்தகைய புத்தகங்கள், தருமோபதேசம் செய்யும் குருக்களுக்கும் கதாகாலக்ஷேபம்செய்பவர்களுக்கும் உபந்யாஸகர்களுக்கும் மிகவும் உபயோகப்படத்தக்கவை. இதில், குருசிஷ்ய தருமம், நன்மக்கட்பேறு, ஒழுக்கமுடைமை, பிறனில் விழையாமை, விருந்தோம்பல், இல்லறச்சிறப்பு, மனைமாட்சி என்னுந் தருமங்கள் ஆராய்ந்து எழுதப்பட்டுள்ளன. இன்னுமுள்ள தருமங்களெல்லாம் இவ்வாறு ஆராய்ந்து எழுதிச் சேர்க்கப்பட்டால் பெரியபுத்தகமாய் வெளிவருமென்று தோன்றுகிறது. இவ்வுலகில் கல்வியும் செல்வமும் சுகவாழ்வுமுடையோர் சிலரே யாக; அவையில்லாதவர் பலராகவுமிருப்பதற்கு தர்மாநுஷ்டானபரர் சிலராகவும் அதனையொழிந்தவர் பலராகவும் இருப்பதே காரணமென்பதை, “இலர்பல ராகிய காரணம் நோற்பார்-சிலர் பலர் நோலாதவர்.” என்ற திருக்குறள் விளக்கமாய் வெளியிட்டிருக்கிறது. இத்தகைய தர்மாநுஷ்டானங்களை உள்ளபடி ஆராய்ந்துபகரிக்கும் ஐயங்காரவர்களுக்குத் தமிழுலகம் நன்றிபாராட்டக் கடமைப்பட்டுருக்கிறது. இம்முயற்சி பரிபூரணமடையும்படி ஈசுவராநுக்கிரகம் உண்டாவதாகுக.

25—7—32,
மதுரை.

திரு. நாராயணையங்கார்,
பத்திராசியர்,
செந்தமிழ்.

ஸ்ரீ:

ஸ்ரீராமாயண தருமம் என்னும் சிறந்த ஆராய்ச்சி நூலிற் சிலபாகத்தைப் படித்தானந்திக்கும்படியான பாக்கியம் எனக்குக் கிடைத்தது. இந்நூலை இவ்வுலகத்தவருக் குபகரித்தருளிய சிந்தாமணிக் கிராமம் கர்ணம் S. K. ரெங்கையங்கார் ஸ்வாமி இதிஹாசச் சிரேட்டமாகிய ஸ்ரீராமாயணமென்னும் மகார்ணவத்தில் மூழ்கிய திலாழ்ந்து கிடக்கின்ற சத்தருமமாகிய சவிதமையும் மணிகணங்களைத் தேடியெடுத்துக் கொணர்ந்து அவற்றினுக் கநுகுணமாகிய நூலோடு நிரல்படக்கோத்துப் பலகோவையாகப் புனைந்திருப்பது கண்ணுறில் யார்தாம் பேரானந்தங்கொள்ளார். இந்நூலிலெடுத்து விளக்கியிருக்கும் தருமம் இம்மையிலெய்துதற் குரிய வெல்லாவின்பங்களையுமெய்துவிக்குமெ, சித்தௌடதமென்றும், பிறவிப்பெருங்கடலைக் கடந்து பேரின்பவீட்டைச் சேரச் செய்யுந் திறமமைந்த மரக்கலமென்றும்,' புகழப்படுவது மிகையாகாது. சுருதிமுதலியவற்றிற் கூறியிருக்கிற உத்தம தருமங்களை யெல்லாம் வெகுசுலபமாக யாவருமுணர்ந்து ஜீவிக்கும்படி ஸ்ரீராமாயண புருஷர்களுடைய திவ்யசரிதங்கொண்டு சுருக்கி விளக்கியிருக்கிறது வியக்கத்தக்கதே. இந்நூலைப் படித்துணர்ந்தவர்கள் காலக்கொடுமையாலே கலங்கியமனமுடையவராயிருந்தாலுந் தெளிந்து தருமஞ்ஞராய்ச் சுசீலராய் வாழ்வார்களென்பதில்லையென்னை? இவ்வருமை பெருமைவாய்ந்த நூலைக் கலாசாலைத் தலைவர்கள் கலாசாலைகளிற் பாடமாகவைத்து மாணவர்களுக்குக் கற்பிக்கும்படி செய்வார்களேயானால் நாஸ்திகர் விதண்டவாதிகள் முதலியோர் எழுதிய நூலைப்படித்தலாலும் அவர்களுடைய சேர்க்கையாலும் தூயவறிவொழிந்து துன்மார்க்கத்திலே யொழுகும்மாணவர்களும் சீக்கிரத்தில் அம்மயக்கந் தெளிந்து நல்லறிவுடையராய் நன்மார்க்கத்திலே நடப்பார்களென்பது நிச்சயம்.

இந்நூல் இந்நிலவுலகில் என்றும் நின்று நிலைவேண்டுமென்றும், இந்நூலாசிரியரும், நன்மையுஞ், செல்வமு, நாளுமெய்தி, வாழவேண்டுமென்றும், சர்வசக்தனை தாமரையாள் கேள்வன் றுளிணைகளைச் சந்ததமும் வந்திப்போமாக.

20—6—32.
ஸ்ரீவில்லிபுத்தூர்,

கவிபூஷணம் ரெ. அப்புவய்யங்கார்,
தமிழ் தலைமையுபாத்தியாயர்,
இந்துஹைஹஸ்கூல், ஸ்ரீவில்லிபுத்தூர்.

சேலம் வரகவி S. T. வெங்கடராவ்அவர்கள் இயற்றிய சாற்றுக்கவி.

---

### எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

சீர்மலிந் தோங்கும்தென் பாண்டிநாட்டில்மேன்மை சிறந்ததாம்பிரவன்னி
[யால்
ஸ்ரீகரமிகுந்ததிரு நெல்வேலி ஜில்லாவை சேர்ந்தசங் கரன்கோவிலாய்
பேர்மலிந் தோங்கும்தா லூக்காவில் பல்வளமும் பெற்ற சிந்தாமணியிலார்
பெரியோர்க ளாதியருள் ஞவப்பெய்த வும்நல்ல பெட்புளம் வாய்ந்த மறையோன்
நேர்மலிந் தோங்கும்ஸ்ரீ வைணவக் குலதிலகன் நெடியோன்றன் னடியனைந்தன்
நெஞ்சமகிழ் நேசன்ரெங் கையங்கா ரெனுமேலோன் நீநிலத்
[தோர்க் கன்புடன்
ஏர்மலிந் தோங்கும்ரா மாயணத் தருமமென் றேற்றமகு டம் சூட்டியே
எழில்மிகும் நற்றமிழி லாக்கியச் சிட்டனூல் எம்மனோர்க் கமுதமாமே.

---

கடையநல்லூர் தமிழ் ஸம்ஸ்க்ருத வித்வான் ப்ரம்மஸ்ரீ வெங்கடேச்வர சாஸ்திரி அவர்களாலியற்றப் பெற்றவை.

---

### வெண்பா.

நன்மைமிகி ராமாயண தருமநன்னூலை
தன்மனத்திலார்வமொடு சச்சனாக்குப் — புன்மைதவிர்
சிந்தாமணிநகர்வாழ் செல்வன் ரெங்கைய்யங்கார்
தந்தான் தரைபுகழத்தான்.

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்.

வடசொலிலும் தென்சொலிலும் வான்மீகி கம்பர்கவி யிராம காதை
திடமுடனே கற்றதனுலறிபொருளை யிதுகற்றோர் தேர்வரன்றே
நடலையிலாமறைநான்கும் முறையுடனே கற்றுணர்ந்தோா நன்குதேரும்
விடயமதை யுபனிடதத்தாலுணர்வரென நூல்கள் விளம்புமன்றோ.

ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஸம்ஸ்தானம் ஆஸ்தான வித்துவான்
பண்டிட் விசுவநாத ஶாஸ்திரி அவர்கள் இயற்றியது.

---

ஸ்ரீராமாயண தர்மமுத்தம மிமம் நாஹம் க்ருதீ ஶம்ஸிதும் /
ஸாத்வீ தர்மசய ப்ரசாரஸரணீ யத்ர ப்ரமாணோஜ்ஜ்வலா //
தத்தச்சித்ர சரித்ர ஸாரஸரஸா ஸத்பி: ஸமீக்ஷாவதாம் /
ஆரூடாசமதிம் தனோதி குதுகம் ஸத்தர்ம ஸம்பாதனே //



ஸ்ரீ:

# விஷய ஸூசிகை.

விஷயம். பக்கம்.

## முதற்பாகம்.

## இரண்டாம்பாகம்.

ஸ்ரீ

# ஸ்ரீமகாவிஷ்ணு ஸ்தோத்திரம்.

சாந்தாகாரம் புஜகசயனம் பத்மநாபம் ஸுரேசம்
விச்வாகாரம் ககனசத்ருசம் மேகவர்ணம் சுபாங்கம் |
லக்ஷ்மீகாந்தம் கமலநயனம் யோகிஹ்ருத்யான கம்யம்
வந்தேவிஷ்ணும் பவபயஹரம் ஸர்வலோகைகநாதம் ||

---

# வால்மீகி ஸ்தோத்திரம்.

கூஜந்தம் ராமராமேதி மதுரம் மதுராக்ஷரம் |
ஆருஹ்ய கவிதாசாகாம் வந்தே வால்மீகி கோகிலம் ||
ய: பிபந் ஸததம் ராம சரிதாம்ருத ஸாகரம் |
அத்ருப்ப்ஸ்தம் முநிம் வந்தே ப்ராசேதஸ மகல்மஷம் ||
வால்மீகேர் முனிஸிம்ஹஸ்ய கவிதா வநசாரிண: |
ச்ருண்வந் ராமகதாநாதம் கோ நயாதி பராங்கதிம் ||

---

# ஆஞ்சநேய ஸ்தோத்திரம்.

ஆஞ்சனேய மதிபாடலானனம் காஞ்சநாத்ரி கமநீய விக்ரஹம் |
பாரிஜாத தருமூல வாஸிநம் பாவயாமி பவமான நந்தநம் ||
யத்ர யத்ர ரகுநாதகீர்த்தனம் தத்ர தத்ர க்ருதமஸ்த காஞ்ஜலிம் |
பாஷ்பவாரி பரிபூர்ண லோசநம் மாருதிம் நமத ராக்ஷஸாந்தகம் ||
மநோஜவம் மாருததுல்யவேகம் ஜிதேந்த்ரியம் புத்திமதாம் வரிஷ்டம் |
வாதாத்மஜம் வாநரயூதமுக்யம் ஸ்ரீராமதூதம் சிரஸா நமாமி ||

அஞ்சிலே யொன்றுபெற்ற னஞ்சிலே யொன்றைத்தாவி
அஞ்சிலே யொன்றாறக வாரியற் காகவேகி
அஞ்சிலே யொன்றுபெற்ற வணங்கைக்கண் டயலாரூரில்
அஞ்சிலே யொன்றைவைத்தா னவனெம்மை யளித்துக் காப்
(பான்.

---

## ஸ்ரீராமாயண ஸ்தோத்திரம்

வால்மீகி கிரிஸம்பூதா ராம ஸாகர காமிநீ |
புநாது புவநம் புண்யா ராமாயண மஹாநதீ ||

ச்லோகஸார ஸமாகீர்ணம் ஸர்க கல்லோல ஸங்குலம் |
காண்டக்ராஹ மஹாமீநம் வந்தே ராமாயணார்ணவம் ||

வேத வேத்யே பரே பும்ஸி ஜாதே தசரதாத்மஜே |
வேத: ப்ராசேத ஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா ||

---

## ஸ்ரீராம ஸ்தோத்திரம்.

ஸ்ரீராகவம் தசரதாத்மஜ மப்ரமேயம்
ஸீதாபதிம் ரகுகுலாந்வய ரத்நதீபம் |
ஆஜாநுபாஹு மரவிந்த தளாயதாக்ஷம்
ராமந்நிசாசர விநாசகரம் நமாமி. ||

ராமாய ராமபத்ராய ராமசந்த்ராய வேதஸே |
ரகுநாதாய நாதாய ஸீதாயா: பதயே நம: ||

ஆபதாமபஹர்த்தாரம் தாதாரம் ஸர்வஸம்பதாம் |
லோகாபிராமம் ஸ்ரீராமம் பூயோ பூயோ நமாம்யஹம் ||

ஆர்தாநாமார்த்திஹந்தாரம் பீதாநாம் பீதிநாசனம் |
த்விஷதாங்காலதண்டம்தம் ராமசந்த்ரம் நமாம்யஹம் ||

நம: கோதண்டஹஸ்தாய ஸந்தீக்ருதசராயச
தண்டிதாகிலதைத்யாய ராமாயாபந்நிவாரிணே. ||

வைதேஹீஸஹிதம் ஸுரத்ருமதலே ஹைமே மஹாமண்டபே
மத்யே புஷ்பகமாஸநே மணிமயே வீராஸநே ஸுஸ்திதம் |
அக்ரே வாசயதிப்ரபஞ்சநஸுதே தத்வம் முநிப்ய: பரம்
வ்யாக்யாந்தம் பரதாதிபி: பரிவ்ருதம் ராமம் பஜே ச்யாமளம் ||

---




# இராமாயண தருமம்.

**ராமாயணம்.** என்ற சொல் வடமொழி.

'ராமஸ்ய அயனம்' எனப்பிரிந்து இராம சரிதமெனவும்

'ராம: அய்யதே அனேன இதி'=ராமாயணம் எனப் பிரிந்து இதனால் இராமன் அடையப்படுகிறான் எனவும் பொருள்படும்.

இன்னும் 'ரமாய இதம் சரிதம்=ராமம், தஸ்யாயன மிதி, ராமாயணம்' எனப்பிரித்து, சீதாப்பிராட்டியின் சரிதமெனச் சாற்றலுமுண்டு.

'காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாச்சரிதம் மஹத் |'

"மேன்மையான ஸீதா சரித்திரமாயும், மஹா காவ்யமுமான இராமாயணத்தை" என்பது இதை வலியுறுத்தும்.

**தருமம்:** 'உலகத்தைத் தரிப்பதால், போஷிப்பதால், தருமமென்று சொல்லுகிறார்கள்.

"வேத: ஸ்ம்ருதி: ஸதாசார: ஸ்வஸ்யச ப்ரியமாத்மான: |
ஏதத் சதுர்விதம் ப்ராஹு: ஸாக்ஷாத் தர்மஸ்ய லக்ஷணம்' ||

என தருமத்திற்கு நான்கு ப்ரமாணங்கள் ஏற்பட்டிருக்கின்றன.

அதாவது, ஒரு விஷயம், தருமமென நிச்சயிப்பதற்கு அது (1) வேதோக்தமாகவிருக்கவேண்டும் அல்லது (2) ஸ்மிருதியிலாவது கூறப்பட்டிருக்கவேணடும், அல்லது (3) அது ஸத்புருஷர்களால் அனுஷ்டிக்கப்பட்டதாகவிருக்கவேண்டும், அல்லது (4) அது மனதிற்கு இனிப்பாகவும் ஆனந்தகரமாகவும் இருக்கவேண்டும்.

இந்த நான்கு ப்ரமாணங்களுக்கு, ஸ்ரீ ராமாயணம் பொருத்த மாயிருக்கிறதோவென்னில்:—

முதலாவது:- வேதம்.

“ வேதமு மற்றுஞ் சொல்லு மெய்யற மூர்த்தி வில்லோன். ”
(கம்பர்)

“ கைவிலேந்தி இலங்கையிற் பொருதாரன்றே
மறைகளுக் கிருதியாவார்.” (கம்பர்)

என்றபடி, வேதத்தினால் அறியும்படியான பரமபுருஷன், ஸ்ரீ ராமனாக அவதரித்தபோது,

1. வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா | ”

அவரை அறிவிக்கிற வேதமும், வான்மீக முனிவரினின்றும் நேராய் ஸ்ரீமத்ராமாயண ஸ்வரூபத்தினாலே அவதரித்தது.

2. இதம்பவித்ரம் பாபக்னம், புண்ணியம் வேதைச்சசம்மிதம் |”

இந்த ஸ்ரீ ராமசரிதமானது, பரிசுத்தம் செய்யத்தக்கதும், பாபங்களை நாசஞ்செய்யவல்லதும், நன்மைகளை விளைவிக்கத்தக்கதும், வேதங்களோடு சமானமானதுமா யிருக்கின்றது.

இந்த இரண்டு ஆதாரங்களினால், முதலாவது பிரமாணமாகிய வேதத்திற்கு பொருத்தமாகிறது.

இரண்டாவது:- ஸ்ம்ருதி.

தர்ம சாஸ்த்ர ரதாரூடா வேதகட்கதரா த்விஜா: |
க்ரீடார்த்தமபி யத் ப்ரூயு: ஸதர்ம: பரமஸ்ம்ருத: || ”
(போதாயனாச்சாரியார்)

வேதத்தை நன்றாய் அப்யசித்தவர்கள் ஸத்புருஷர்கள். அவர்களால் வேதார்த்தங்களைச் சுருக்கிச் சொல்லப்பட்டவைகளை ஸ்ம்ருதிகளாம்.

“ ஸ்ரீ ராமாயணம். ” (2-வது சருக்கம்.)

“ மச்சந்தாதேவ தே ப்ரஹ்மந் ப்ரவ்ருத்தேயம் ஸரஸ்வதீ |
ராமஸ்ய சரிதம் ஸர்வம் குருத்வம் ரிஷிஸத்தம ||
ந தே வாகந்ருதா காவ்யே காசிதத்ர பவிஷ்யதி || ”

(இதன் பொருள்.) நான்முகக் கடவுள் வான்மீகரை நோக்கி 'நம்முடைய சங்கல்பத்தினாலேயே இந்த ஸரஸ்வதி உம்முடைய வாக்கிலிருந்து தோன்றினாள். நீர் ராம சரிதத்தை ஒரு பிரபந்தமாகச் செய்யக்கடவீர். நீர் செய்யுங் காவியத்தில் ஒரு சொல்லும் பொய்யாகாமலிருக்கும்.'' என்றருளிச்செய்த பிரகாரம், வான்மீக முனிவரால் இ ர ா ம ா ய ண ம் செய்யப்பட்டதினால், இதை ஒரு ஸம்ருதியாகச் சொல்லத் தடையில்லை.

மூன்றாவது:- ஸதாசாரம் = (ஸத்புருஷரால் அநுஷ்டிக்கப்பட்டது)

பாலகாண்டம் முதலாவது சருக்கத்தில் 2-முதல் 4-சுலோகங்களினால், வான்மீகமுனிவர் நாரத மகரிஷியைநோக்கி சுவாமி! இவ்வுலகத்தில், இக்காலத்தில், சகல கல்யாண குணங்களும் சவுசில்ய குணமும் மற்றும் அநேக குணங்களுடன் தருமத்தை நன்றாயறிந்த சத்புருஷனைக் கேட்டறிய அடியேன் விரும்புகிறேன். அடியேனுக்கு தேவரீர் அருளிச்செய்யவேண்டும் என்றுவினாவினபொழுது நாரதமகரிஷி, மிகுந்த களிப்புடன் '' ஓய் முனிவரே! நீர் கேட்ட குணங்களெல்லாம்பொருந்திய புருஷனைச்சொல்லுகிறேன் கேளும்

' இக்ஷ்வாகுவம்ஸ ப்ரபவோ ராமோநாம ஜநை: ச்ருத: | '

''இக்ஷ்வாகு குலத்தில் அவதரித்த ஸ்ரீ ராமபிரான் என்பவர்தான்'' என விடையளித்திருக்கிறார். இதனால் ஸ்ரீராமபிரான் ஸத்புருஷன் என்றும் அவரால் அநுஷ்டிக்கப்பட்டவை ஸதாசாரம் என்றும், ஏற்படுவதால், மூன்றாவது ப்ரமாணமும் பொருத்தமாகிறது.

நான்காவது:- ஆத்ம ஸந்துஷ்டி.

'' பாட்யே கேயேச மதுரம் ''

'' ஹ்லாதயத் ஸர்வகாத்ராணி மநாம்ஸி ஹ்ருதயாநிச | ''

(ராமாயணம்)

இந்த ராமாயணம், மனதிற்கும், இருதயத்திற்கும், மிக்கக் களிப்பாக இருக்கின்றது என, இராமாயணம் 4-வது சருக்கத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

இதனால் நான்காவதான ப்ரமாணமும் பூர்த்தியாகின்றது.

இனி, ஸ்ரீராமாயணத்தில் தருமங்கள் வருணிக்கப்பட்டிருக்கின்றனவென்பதற்குரிய ஆதாரங்களைக்கவனிப்போம்.

**ஸ்ரீ வால்மீகி ராமாயணம்:-**

ஆரண்ய-கா. சரு. 37. சுலோ 13.

" ராமோ விக்ரஹவான் தர்ம: ஸாது: ஸத்ய பராக்ரம: | "

(இ-ள்) " ஸ்ரீராமன் உருவங்கொண்ட தருமம்போலும், நற்குணமுடையோனும், உண்மையான தோள்வலியுற்றவனுமாகின்றனன்." என இராவணனுக்கு, ராமத்வேஷியான மாரீசன் உரைத்த வசனம்.

யுத்த-கா. சரு. 28. சுலோ. 19.

யஸ்மின் ந சலதே தர்மோ யோ தர்மம் நாதிவர்த்ததே |
ஸ ஏஷ ராம: ||"

(இ-ள்) "எவரிடமிருந்து தருமம் சலிக்கவில்லையோ எவர் தருமத்தைவிட்டு விலகவில்லையோ, அவரே இந்த இராமபிரான்." என, இராவணனைப் பார்த்து சுகனுடைய வசனம்.

யுத்த-கா. சரு. 91. சுலோ 69.

" தர்மாத்மா சத்ய சந்தஸ்ச ராமோ தாசரதிர்யதி |
பௌருஷே சாப்ரதித்வந்த: ததைனம் ஜஹி ராவணிம் || "

(இ-ள்) "ஸ்ரீராமபிரான் தர்மஸ்வரூபி என்பதும், சொன்னசொற்றவறாதவர் என்பதும், இணையற்ற பராக்கிரமமுடையவரென்பதும் உண்மையாயின், இந்தபாணம் இந்திரஜித்தை ஹதம்செய்யட்டும்." என சபத பூர்வமாயுரைத்த, இளையபெருமானுடையவசனம்.

**ஸ்ரீ பாகவதம் - ஸ்கந்தம் 9 - அத் - 10. சுலோ 55.**

"ஏக பத்நீவ்ரததரோ ராஜர்ஷி சரித: சுசி: |
ஸ்வதர்மம் க்ருஹமேதீயம் சிக்ஷயந்ஸ்வய மாசரந் || "

(இ-ள்) இராமபிரான் ஏகபத்நீ விரதத்துடன், சுத்தராக கிருஹஸ்த தர்மத்தைத் தாம் அனுஷ்டித்தார். ஜனங்களும் அதனைக் கண்டு அவர் அவர்கள் தர்மத்தைவிடாமல் செய்தார்கள்." என பரீக்ஷித்து மஹாராஜனை நோக்கி, சுகப்பிரம்ம ரிஷியின் வசனம்.

**கம்ப ராமாயணம்:-**

"தோன்றிய நல்லற நிறுத்தத்தோன்றினன்." அயோத்தி-நகர் நீங்கு-163

" நல்லற நிறுத்த நணுகித்,
தாமராவினை துறக்து தனை நின்றவனை " ஆரணி-விராத-30.

இராமபிரான் உலகத்தில் தருமத்தை நிலைநிறுத்தவே அவதரித்திருப்பதாக கவிக்கூற்று.

" சூரறுத்தவனுஞ் சுடர் நேமியு
மூரறுத்த வொருவனு மோம்பினும் (ஆரணி—அகத்தி 22)
ஆரறத்தி னுடன்றி நின்றாரவர்
வேரறுப்பென் வெருவன் மினீரென்றான்."

"வெம்புகண்டகர் விண்புக வேரறுத்
திம்பர் நல்லறஞ் செய்ய வெடுத்தவிற் (கிட்கிந்தா – கிட்கிந்தை 4)
கொம்பு முண்டருங் கூற்ற முமுண்டுங்க
ளம்பு முண்டென்று சொல்லுநம் மாணையே."

உலகத்தில், துஷ்ட நிக்கிரகமும், தர்மஸம்ஸ்தாபனமும் செய்வதற்காக, தாம் அவதரித்திருப்பதாக, இராமபிரானுடையவசனம்

" பின்னையேது முதவுந்துணை பெருளுளை பெருண்
மின்னையே யிடைநுடங்கிட விரைந்துதொடர்வா (ஆரணி—விராத39)
னென்னையே யனையவன் பினர்வோர் கடமைவிட்
டென்னையே நுகர்தி யென்றன ளெழுந்து விழவாள்."

இராம, லெட்சுமணர் உலகத்துக்கெல்லாந் தாயைப்போன்ற அன்பினையுடைய தருமசுவரூபிகள், என சீதாபிராட்டியின் வசனம்.

" ஓயாத மலரயனே முதலாக வுளராகி
மாயாத வானவர்க்கு மற்றொழிந்த மன்னுயிர்க்கு (ஆரணி—விராத 52)
நீயாகின் முதற்றாதை நெறிமுறையா லீன்றெடுத்த
தாயாவார் யாவரே தருமத்தின் றனிமூர்த்தி."

பிரம்மதேவன் முதலான சகல தேவர்களுக்கும், உலகத்திலுள்ளஉயிர்களுக்கும், இராமபிரான் முதல்தந்தையெனவும், தருமஸ்வரூபி எனவும், விராத ஸ்தோத்திரம்.

" இருவர் மானிடர் தாபத வேந்திய
வரிவில்வாட் கையர் மன்மதன் மேனியர்
தருமநீரர் தயரதன் காதலர்
செருவினேரு நிருதரைத் தேடுவார்.

ஒன்று நோக் கலருங் வலியோங்கற
னின்று நோக்கி நிறுத்து நினைப்பினர்
வென்றி வேற்கை நிருதரை வேரறக்
கொன்று நீக்குது மென்றுணர் கொள்கையார்." (ஆரணி—கா. 4, 5.)

இராம லக்ஷமணர்கள் தரும சிந்தை யுடையவர்கள், சிறந்த தரும வழியிலே தாங்கள் நின்று ஆராய்ந்து அத்தருமத்தை உலக மெங்கும் நிலைபெறச் செய்யுங்கருத்துடையவர்கள், என கரனிடம் சூர்ப்பனகை வசனம்.

" சங்கு சக்கரக் குறியுள தடக்கை யிற்ருளி
லெங்கு மித்தனையிலக்கணம் யாவர்க்குமில்லை (கிட்கி—மராமர—117)
செங்கண் விற்கரத்தி ராமனத்திரு நெடுமாலே
யிங்குதித்தன னீண்டற நிறுத்துதற் கின்னும்."

கோதண்ட பாணியான இராமன், தர்மஸம்ஸ் தாபனத்தின் பொருட்டு இங்கு திருவவதரித்த ஸ்ரீ மஹா விஷ்ணு வென்பதாக சுக்ரீவ மகாராஜனிடம், தெரிவித்த நவவ்யாகரண பண்டிதரான திருவடியின் வசனம்.

" உழைத்த வல்லிருவினைக்கூறு காண்கலா
தழைத் தயருலகினுக் கறத்தினு றேலா (கிட்கி. வாலிவதை.22)
மிழைத்தவற் கியல்பல வியம்பி யென் செய்தாய்
பிழைத்தனை பாவியுந் பெண்மையா லென்ருன்."

பல பிறப்புகளில் தாம் செய்து சேர்த்த கொடிய கருமங்களை யொழிக்கும் உபாயத்தைக்காணுமல் வருந்திக் கதறுகின்ற உலகத்தவர்கள் உய்யுமாறு அவதரித்துத் தர்மகார்க்கங்களை யெல்லாம் தான் அனுஷ்டித்துக் காட்டும் புருஷோத்தமனுன இராமபிரான், என்பதாக, தாரையிடம் கூறிய வாலியின் வசனம்.

" அறமன்னனுட னெம்பியன்பினே
டுறவுண்ணு வுயிரொன்ற வோவினுன் (கிட்கி. சம்பாதி 45)
பெறவொண்ணுத தொர் பெற்றி பெற்றவற்
கிறவென்னு மிதினின்ப மியாவதோ."

தர்மஸ்வரூபியான இராமபிரான் திறத்தில் ஜடாயு வுயிரைக் கொடுக்க நேர்ந்தது பெரும் பாக்கியமென்று வானரரிடம் சம்பாதி வசனம்.

இத்யாதி வசனங்கள் ஸ்ரீமத் ராமாயணத்தில் ஸ்ரீராமசரிதத்தினுலே தரும ஸ்வரூபமும், தர்மானுஷ்டானமும் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன வென்பதற்குப்போதியசான்ருகும்.

## இராமாவதார காலம்.

(1) வால்மீகி இராமாயணம்—பாலகாண்டம் சரு. 15. சுலோ. 28, 29.

" பயம் த்யஜ்த பத்ரம் வோ ஹிதார்த்தம் யுதிராவணம் |
ஸபுத்ர பௌத்ரம் ஸாமாத்யம் ஸமித்ரஜ்ஞாதிபாந்தவம் ||"
" ஹத்வா க்ரூரம் துராத்மானம் தேவர்ஷீணாம் பயாவஹம் |
தச வருஷ ஸஹஸ்ராணி தசவருஷ சதாநிச ||
வத்ஸ்யாமி மாநுஷே லோகே பாலயன் ப்ருத்வீமிமாம் ||."

(இ-ள்) "ஓ தேவர்களே! இனி அச்சம் என்பதை விட்டு விடுங்கள்; உங்களுக்கெல்லாம் நன்மையே உண்டாகும். அந்தத் துராத்மாவான இராவணனை அவனுடைய பரிவாரங்களோடு சங்கரித்துப் பூலோக பரிபாலனஞ் செய்துகொண்டு பதினோராயிரம் வருடமிருப்பேன்" என்று தன்னைச் சரணமடைந்த தேவர்களை நோக்கி ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் அருளிச்செய்தனர்.

2. வால்மீ—இரா. உத்—கர். சரு. 37—க்குப்பின் ப்ரக்ஷிப்தசரு. சுலோ. 18,19.
ஸனத்குமார முனிவர் இராவணனை நோக்கி:—

" க்ருதே யுகே வ்யதீதேவை முகே த்ரேதாயுகஸ்யது |
ஹிதார்த்தம் தேவமர்த்யாணாம் பவிதா ந்ருபவிக்ரஹ:
இக்ஷ்வாகூணாம் ச யோராஜா பாவ்யோ தசரதோபுவி |
தஸ்ய ஸூநுர்மஹாதேஜா ராமோநாமபவிஷ்யதி. ||"

(இ-ள்) "க்ருதயுகம் கழிந்தபின்னர் த்ரேதாயுகத்தின் துவக்கத்தில் தேவர்களுக்கும் மனுஷியர்களுக்கு மிதமியற்றுமாறு இக்ஷ்வாகு குலத்திலே தசரதனென ஒரு ராஜன் ஜனிப்பான்; அந்தத் தசரத மஹாராஜனுக்குப் புதல்வனாய் ஸ்ரீராமனென்னும் ஒரு மஹாநுபாவன் அவதரிக்கப் போகின்றனன்" என உரைத்தனர்.

3. அத்யாத்ம ரா. பாலகாண்டம் சரு. 7. சுலோ. 25½, 26½.

" த்ரேதாயுகே தாசரதிர் பூத்வா ராமோஹம்அவ்யய: |
உத்பத்ஸ்யே பரயா சக்த்யா ததாத்ரக்ஷ்யஸிமாம்தத: "

(இ-ள்) "அழிவற்ற நான் த்ரேதாயுகத்தில் தசரத சக்ரவர்த்திக்குக் குமாரனாக அவதாரஞ் செய்யப்போகிறேன். அப்போது மறுபடியும் நீ என்னைப் பார்க்கப்போகிறாய்" என்பதாக ஸ்ரீமஹாவிஷ்ணு தனக்கு வரமருளியிருப்பதாக பரசுராமர் ஸ்ரீ ராமபிரானிடம் விண்ணப்பஞ்செய்தனர்.

4. அத்யாத்ம ரா. ஆரண்யகாண்டம் சரு. 9. சுலோ. 19.

த்ரேதாயுகே தாசரதிர்பூத்வா நாராயண: ஸ்வயம் |
ஆகமிஷ்யதி தேபாஹ்ச் சித்யேதே யோஜனுயதௌ ||
தேனசாபாத் வினிர்முக்தோ பவிஷ்யஸி யதாபுரா! ||.

(இ-ள்) " ஸ்ரீமந் நாராயணமூர்த்தி த்ரேதாயுகத்தில் தசரத குமாரனாக பூமியில் அவதாரமெடுத்து, ஸ்ரீ ராமனென்னும் திரு நாமத்துடன் வரப்போகிறார். அவர் திருக்கரத்தால் உன் கரங்கள் சேதிக்கப்படுங்காலம், உன் சாபவிமோசன காலமாகும். " என்பதாக அஷ்டவக்ரமுனிவர் தனக்குஉரைத்திருப்பதாய் கபந்தாசுரன் ஸ்ரீ ராமபிரானை நோக்கிக் கூறினன்.

5. அத்யாத்ம ரா. சுந்தரகாண்டம் சரு. 1. சுலோ. 48.

" புராஹம் ப்ரஹ்மணா ப்ரோக்தா ஹ்யஷ்டாவிம்சதிபர்யயே |
த்ரேதாயுகே தாசரதீராமோ நாராயணோ அவ்யய: || "

(இ-ள) " இருபத்தெட்டாவது பரிவிருத்தியில் த்ரேதாயுகத்தில் சாக்ஷாத் நாராயணன் தசரத குமாரனாகிய ஸ்ரீராமனாக அவதரிக்கப்போவதாய் ப்ரஹ்மதேவர் என்னிடம் அருளிச்செய்திருக்கிறார் " என்பதாக இலங்கணி என்பவள் திருவடி (ஆஞ்சநேயர்) உரைத்தனள்.

6. விவஸ்வான் = சூரியன்

அவருடைய புத்ரர் = மனு (வைவஸ்வதமனு)
அவருடைய புத்ரர் = இக்ஷ்வாகு

இக்ஷ்வாகு பரம்பரையில் தசரதசக்ரவர்த்திக்கு ஸ்ரீராமபிரான் அவதாரம்.

7. வால்மீ-ரா. பால கா. சரு. 18 சுலோகம் 9, 10, 11.

" ததஸ்ச த்வாதஸே மாஸே சைத்ரே நாவமிகேதிதௌ ||
நக்ஷத்ரெ அதிதி தைவத்யே ஸ்வோச்ச ஸம்ஸ் தேஷு
[பஞ்சஸு |
க்ரஹேஷு கர்க்கடெலக்நே வாக்பதாவிந்து நாஸஹ ||
ப்ரோத்யமாநெ ஜகன்னாதம் ஸர்வலோக நமஸ்க்ருதம் |
கௌஸல்யாஜநயத்ராமம் ஸர்வலக்ஷண ஸம்யுதம் ||
விஷ்ணோரர்த்தம் மஹாபாகம் புத்ர மைக்ஷ்வாகவர்த்தநம் | "

(இ-ள்) " பின்பு பன்னிரண்டாவது மாஸமான சித்திரை மாஸத்தில் நவமிதிதி புநர்வஸு நக்ஷத்திரம்கூடின தினத்தில் ஐந்து க்ரஹங்கள் உச்சமாயிருந்தவளவில், கர்கடலக்நத்தில், குரு சந்திரனோடு கூடியிருந்தவளவில், கௌஸல்யாதேவி, ஸகல ஜகத்துக்கும்

நாயகராய், ஸமஸ்த பிராணிகளுக்கும் வந்தநீயராய், ஸாமுத்ரிக சாஸ்திரத்திற் சொல்லிய ஸமஸ்தமான உத்தம புருஷலக்ஷணங்களோடு கூடினவராய், விஷ்ணுவினுடைய பேர்பாதி பாகத்தினுலுண்டானவராய், மஹாபாக்யவானுய், பித்ருக்களைநரகத்தில்நின்று முத்தரிப்பிக்குமவராய், தசரத மஹாராஜனுடைய மனோல்லாசத்தை வ்ருத்திபண்ணுபவரான ஸ்ரீ ராமபிரானைப் பெற்றனள்.

8. கம்ப-ரா. பால-கா. திரு அவதாரப்படலம் 104, 110.

"ஒரு பகலுலகெலா முதரத்துட் பொதிந்
தரு மறைக் குணர்வரு மவனை யஞ்சனக்
கருமுகிற் கொழுந்தெழில் காட்டுஞ் சோதியைக்
திருவுறப் பயந்தன டிறங்கொள் கோசலை."

"மேடமாமதி திதி நவமி மீன் கழை
நீடுறு மாலை கற்கடக நீதிசேர்
ஓடைமா களிறனுனுதயராசி கோள்
நாடினேகாதசர் நால்வருச்சரே."

இந்த ஆதாரங்களினுல், வைவஸ்வத மன்வந்தரத்தில் 28-வது சதுர்யுகமான த்ரேதாயுகத்தில் சித்திரைமாஸத்தில் சுக்லபக்ஷ நவமி திதி, புனர்வசு நக்ஷத்திரம் கூடியசுபதினத்தில் ஸ்ரீமந்நாராயணனே தசரதசக்கரவர்த்திக்குத்திருக்குமாரராக ஸ்ரீராமனென்னும் திருநாமத்துடன் அவதாரம் செய்ததாக ஏற்படுகிறது.

## ஸ்ரீமத் ராமாயண கரணகாலம்.

சர்வஜ்ஞரான ஸ்ரீராமபிரான் மகுடாபிஷேக மஹோத்ஸவம் கண்டருளிய பின்னர், தருமநெறி தவறாது இராஜ்ய பரிபாலனம் செய்தும் ஒழிந்த வேளைகளில் வைதேஹியுடன்கூடி உத்தியான வனத்திற்குச்சென்று நாடோறும் விநோதமாக பொழுதுபோக்கியும் வந்தனர். ஸ்ரீராமபிரான் பிரதிதினம் முற்பகலில் ராஜாங்க சம்பந்தமான சகல காரியங்களையும் நீதிமுறை தவறாது நிறைவேற்றி அதன் பின்னர் அந்தப்புரஞ் சென்று பிராட்டியுடன் அகமகிழ்ந்திருப்பார். ஜானகி ரகுநாயகர்களுக்கு, இவ்விதமாகவே

"தசவர்ஷஸஹஸ்ராணி கதாநி ஸுமஹாத்மனோ: |"

(வா-ரா. உத்-கா. சரு. 42. சுலோ. 26.)

பதினுயிரமாண்டுகள் பெருமையாகச் சென்றன.

வா-ரா, உத்-கா. ஸ. 42. ஸ்லோ. 31, 32.

"அப்ரவீச்ச வராரோஹாம் ஸீதாம் ஸுரஸுதோபமாம் |
அபத்ய லாபோ வைதேஹி த்வய்யயம் ஸமுபஸ்தித: |
கிமிச்சஸி வராரோஹேகாம: கிம் க்ரியதாம் தவ ||"

(இ-ள்) ஒருநாள் ஸ்ரீராமபிரான் ஜானகியை நோக்கி "ஹே! வைதேஹி! நீ கர்ப்பந்தரித்திருப்பது எனக்கு மிகவும் களிப்பைத தருகின்றது. இப்பொழுது நீ யாது விரும்புகின்றனை? நீ யாது வேண்டினும் அதனை யான் நிறைவேற்றுவேன்" எனக் கூறினர்.

அதற்குப்பிராட்டி, கங்கைக்கரையிலுள்ள மிகப்பரிசுத்தமான தபோவனங்களுக்குச் சென்று, அங்கு, மகரிஷிகளுடைய பாத மூலத்திற் சிலநாள் பணிவிடை செய்து ஆனந்தமனுபவிக்க வேணு மென்ற ஆசையிருப்பதாகத் தெரிவித்தாள்.

அந்த சமயம் ஸ்ரீராமபிரான் சீதாபிராட்டியை இராவண கிரஹத்திலிருந்து அழைத்து வந்ததைப்பற்றி சிலர் அபவாதம் சொல் வதாகக்கேட்டு, பிராட்டி கருதியிருந்த காரணத்தையே வியாஜ மாகக்கொண்டு, அவளையழைத்துக்கொண்டு போய் கங்காநதி தீரத்தில் வான்மீக முனிவராச்சிரமத்தருகே விட்டுவிடுமாறு, இளைய பெருமாளுக்கு நியமித்தருளினர்.

சீதாப்பிராட்டி தனியே புலம்பித்தவிப்பதை ரிஷிகுமாரர்களால் கேள்வியுற்ற வான்மீகமுனிவர் உடனே அவ்விடம்சென்று, பிராட் டியைச்சமாதானப்படுத்தி தமது ஆச்சிரமத்திற்கு அழைத்துவந்து அங்குள்ள ரிஷிபத்னிகளிடம் ஒப்புவித்து அவளைக் கருத்துடனே காத்துவருமாறு கட்டளையிட்டனர்.

யமுனாதீரவாஸிகளான முனிவர்கள்மூலமாக மதுவின் மகிமை யையும், அவனது மகன் லவணாசுரனது வரலாற்றையும் கேட்டு ஸ்ரீராமபிரான், லவணாசுரனை வதைக்குமாறும் அவனது நகரத்தி லேயே யிருந்து ராஜ்யபரிபாலனஞ் செய்துவருமாறும் சத்ருக்கன ருக்கு நியமித்தருளினர். லவணாசுரனுடன் போர்புரிவதற்காக அயோத்தியிலிருந்து புறப்பட்டு மூன்றும் நாள், சத்ருக்னர், வான் மீகி ஆச்சிரமத்தில் தங்கினர்.

வா-ரா. உத்-கா. சரு. 66. சுலோ. 1.

> " யாமேவ ராத்ரிம் சத்ருக்ன: பர்ணசாலாம் ஸமாவிசத் |
> தாமேவ ராத்ரிம் ஸீதாபி ப்ரஸூதா தாரகத்வயம் ||"

(இ-ள்) சத்ருக்ன ஆழ்வார், என்றையத்தினம் இராத்திரி வான்மீக முனிவரது ஆச்சிரமத்திலே பர்ணசாலையில் படுத்திருந் தனரோ, அன்றையதினம் இராத்திரி ஸீதாபிராட்டியார் இரண்டு குமாரர்களைப்பெற்றனர்.

இந்த ஆதாரங்களினால் ஸ்ரீ இராமபிரானுடைய பட்டாபிஷே கானந்தரம், பதினாயிரம் வர்ஷங்கள் கழிந்தபின்னரே, குசலவர் ஜநநம் என ஏற்படுகிறது.

வா-ரா. பால-கா. சரு. 4. சுலோ. 1, 2.

> " ப்ராப்த ராஜ்யஸ்ய ராமஸ்ய வால்மீகிர் பகவான் ரிஷி: |
> சகார சரிதம் க்ருத்ஸ்னம் விசித்ர பதமாத்மவான் ||
> சதுர்விம்சத்ஸஹஸ்ராணி ச்லோகாநாமுக்தவான்ரிஷி: |
> ததா ஸர்க்கசதான்பஞ்ச ஷட்காண்டாணி ததோத்தரம் ||"

(இ-ள்) ஸ்ரீராமபிரான் இராஜ்ய பரிபாலனம் செய்துகொண்டி ருக்கும் காலத்தில், வான்மீகமுனிவர் இருபத்திநாலாயிரம் சுலோ கங்களும் ஐந்நூறு சருக்கங்களும், ஆறு காண்டங்களும், உத்ர காண்டமும் செய்தருளினர்.

" மாநிஷாத " என்று ஆரம்பிக்கும் சுலோகத்தினிடமாக வான்மீக முனிவர்க்குற்ற சந்தேகத்தை, (தமஸா நதிக்கரையில்) ப்ரஹ்மதேவர் வந்து நிவர்த்தி செய்து வரங்கள் அளித்து அந்தர்த தானமான பின்பு.

வா-ரா. பால-கா. சரு. 2. சுலோ. 39.

> " தத: ஸசிஷ்யோ வால்மீகிர்முநிர் விஸ்மய மாயயௌ
> தஸ்ய சிஷ்யாஸ்தத: ஸர்வே ஜகு: ஸ்லோகமிமம்புன: ||"
> முஹுர் முஹு: ப்ரீயமாணா: ப்ராஹுஸ்ச ப்ருசவிஸ்மிதா:

(இ-ள்) வான்மீக முனிவர், தம்முடைய சிஷ்யர்களுடனே கூட அதிக ஆச்சரியத்தையடைந்தார். அந்த சுலோகத்தை அவ ருடைய சிஷ்யர்களெல்லோரும் மிகுந்த பிரியத்துடனும், ஆச்சரி யத்துடனும், அடிக்கடி ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டு பாடிக்கழித்தனர்.

மேலேகண்ட சுலோகத்தில் சிஷ்யா:— என்று பகுவசனமாகக் கண்டிருப்பதற்கு, கோவிந்த ராஜீய வ்யாக்யானத்தில் தனது ஆச்சிரமத்திலுள்ள, குசலவர், பாரத்துவாஜர் என்று வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது.

இதனால் குசலவர்கள், ஜனித்து தக்க வயது அடைந்த பின்னரே, இராமாயண கிரந்தம் செய்யப்பட்டதாக ஏற்படுகின்றது.

சத்ருக்ன ஆழ்வான், லவணாஸுரனை சம்ஹரித்து மதுராபுரியை ஸ்தாபித்தபின்

" ததோ த்வாதசமே வர்ஷே சத்ருக்னோ ராமபாலிதாம் |
அயோத்யாம் சக்ரமே கந்துமல்ப ப்ருத்ய பலாநுக: "
(வா-ரா. உத்-கா. சரு. 71. சுலோ. 1.)

(இ-ள்) பன்னிரண்டாவது வருஷத்தில் சத்ருக்னாழ்வான் ஸ்ரீராகவனைச்சேவிக்கக்காதல்கொண்டு சொற்ப பரிவாரங்களுடன் அயோத்தியைக் குறித்துப்புறப்பட்டனர்.

வழியில் 7, 8 நாள் தங்கி வான்மீகாச்சிரமமடைந்து, அம்முனிவர் அளித்த அர்க்கிய பாத்தியாதி அதிதி பூஜைகளைப்பெற்று, அன்றிராத்திரி அவ்வாச்சிரமத்திலேயே சயனித்திருந்தனர்.

வா-ரா. உத்-கா. சரு. 71. சுலோ. 14, 15, 16.

" ஸபுக்தவாந் நரஸ்ரேஷ்டோ கீதமாதுர்ய முத்தமம் |
சுச்ராவ ராமசரிதம் தஸ்மின்காலே யதாக்ருதம்
தந்த்ரீலய ஸமாயுக்தம் த்ரிஸ்தான கரணாந்விதம் |
ஸமஸ்க்ருதம் லக்ஷணோபேதம் ஸமதால ஸமந்விதம் |
சுச்ராவ ராமசரிதம் தஸ்மின்காலே புராக்ருதம் |

(இ-ள்) சத்ருக்னாழ்வான் வான்மீகாச்சிரமத்தில் விருந்தமுது செய்தவளவில், ஸமீபத்தில் அதிமதுரமான ஸங்கீதமொன்று கேட்டது. ஸ்ரீராம சரிதமானது ஸம்ஸ்க்ருத பாஷையில் இசையொத்த தாள லயங்களுடனே, யாழிலிட்டு, சுலக்ஷணமாக மறைவிலே பாடப்பட்டது. அதனைச்செவியுற்றவளவில், சத்ருக்னாழ்வானுக்கு முன்நடந்த ஸ்ரீராம சரித்திரம் மறுபடி தமது கண்ணெதிரில் நடப்பதுபோல தோன்றியது.

வான்மீக முனிவர் தாமுண்டுபண்ணிய இராமாயண மஹா காவியத்தைகுசலவருச்கு உபதேசித்தருளினபோது, அவர்களுக்கு வயது பன்னிரண்டு என ஏற்படுகின்றது.

ஸ்ரீராமபிரான் அச்வமேத யாகஞ்செய்யத் தீர்மானித்து கோமதீ நதீ தீரத்தில் யாகசாலை நிருமித்து வருகிறவர்களுக்கு விடுதிகள் அமைத்து, ஸகல பதார்த்தங்களும் அங்கே சித்தப்படுத்தவும், வானரர், ராக்ஷஸர் முதலான யாவரையும் அவ்வேள்விக்கு வரவழைககும்படிக்கும் தம்பிமார்களுக்கு நியமித்தருளியும்,

வா-ரா. உத்-கா. சரு. 91. சுலோ. 24, 25.

> " மம மாத்ருஸ்சதாஸர்வா: குமாராம்ச: புராணிச |
> காம்சநீம் மம பத்நீம்ச தீக்ஷாயாம்ஜ்ஞாம்ஸ்ச கர்மணி ||
> அக்ரதோ பரத: க்ருத்வாகச்சாத்வக்ரே மஹாயசா: | "

(இ-ள்) " நமது மாதாக்களையும், பரதன் முதலியோர்களுடைய அந்தப்புர ஸ்திரீகளையும், ஸீதைக்குப்பிரதியாக நிருமித்து வைத்திருக்கின்ற சுவர்ண ஸீதையையும் யாகஞ்செய்யும் முறைகளை நன்குணர்ந்த பிராம்மணர்களையும், முன்னிட்டுக்கொண்டு, பரதன் முன்னாலே செல்லக்கடவன் " எனவும் நியமித்தருளினர்.

இதனால் ஸீதாப்பிராட்டி வான்மீகாச்சிரமத்திலிருக்கும்பொழுது யாகம் ஆரம்பிக்கப்பட்டதாக வாகின்றது.

வா-ரா. உத்-கா. சரு. 93. சுலோ. 1.

> " வர்தமானே ததாபூதேயஜ்ஞேச பரமாத்புதே |
> ஸசிஷ்ய ஆஜகாமாசு வால்மீகிர் பகவான் ரிஷி: || "

(இ-ள்) " இவ்வாறு மகாவைபவத்துடனே நடக்கும் அற்புதமான அச்வமேத யாகத்துக்கு வான்மீக முனிவரும் தமது சிஷர்களுடனே எழுந்தருளினர்."

வான்மீகமுனிவர் தாம் கற்பித்த இராமாயணத்தை, முனிவர்கள் வாஸஸ்தானங்களிலும், பிராம்மணர்கள் இறங்கியிருக்குமிடங்களிலும், ராஜமார்க்கங்களிலும், அச்வமேதயாகம் நடக்குமிடத்தில் ஸ்ரீராமபிரான் சன்னதியிலும், பாடிக்கொண்டு போகும்படி தமது சிஷ்யர்களான குசலவர்களுக்குக் கட்டளையிட்டனர். அவ்விருவரும் முனிவர் மொழிந்தவண்ணம், இராமாயணத்தை கானம் செய்துகொண்டு சென்றனர்கள்.

வா-ரா. உத-கா. சரு. 94. சுலோ. 2.

"தாம் ஸசுச்ராவகாகுத்ஸ்த; பூர்வாசார்ய விநிர்மிதாம் |
அபூர்வாம் பாட்யஜாதிம்ச கேயேன ஸமலங்க்ருதாம் ||
ப்ரமாணைர் பஹுபிர்பத்தாம் தந்த்ரீலய ஸமந்விதாம் |
பாலாப்யாம் ராகவ: ஸ்ருத்வா கௌதூஹலபரோபவத் ."

(இ-ள்) "இரண்டு பாலகர்கள் வீணை மீட்டிக்கொண்டு ஏகத குரலினராய் சுலக்ஷணமாக தம்மாசிரியர்கற்பித்த இராமாயணத்தை இன்பமாய்ப்பாடிக்கொண்டுவருவதை ஸ்ரீ ராகவன் திருச்செவி சார்த்தி இஃது அபூர்வமாயும், அற்புதமாயுமிருக்கின்றதே யென வியந்து களிப்படைந்தனர்."

அனந்தரம் அந்தக்காவியத்தின் வரலாற்றையும், அதை இயற்றியவர் வான்மீக முனிவரென்பதையும் அச்சிறுவர்கள் மூலமாக ஸ்ரீராகவன் தெரிந்துகொண்டனர்.

வா-ரா. உத்-கா. சரு. 95. சுலோ. 1.

"ராமோ பஹூந்யஹாந்யேவ தத்கீதம் பரமம் சுபம் |
சுச்ராவ முனிபி: ஸார்த்தம் பார்த்திவை: ஸஹவானரை: ||"

(இ-ள்) ஸ்ரீராகவன் நாள்தோறும் பல முனிவர்களும், அரசர்களும் புடைசூழச் சபையினடுவே முனிகுமாரர்களை வரவழைத்து மிகச்சிறந்ததும், சுபமுமான அவர்களது சங்கீதத்தைச்செவிசார்த்திக் களிகூர்ந்தனர்.

இந்த ஆதாரங்களினால் ஸ்ரீராமபிரான் அயோத்யாபுரிக்கு ராஜாவாக பட்டாபிஷேகம்செய்யப்பட்டு, பதினாயிரம் வருஷங்கள் தருமநெறிதவறாது அரசாட்சிசெய்துவந்தபின் சீதாப்பிராட்டி கர்ப்பமடைந்து வான்மீகமுனிவராச்சிரமத்தில் குசன், லவன் என்னும் இரண்டு குமாரர்களைப்பெற்று, அக்குமாரர்களுக்கு வயது பன்னிரண்டு நிரம்பியபொழுது, வான்மீகமுனிவருக்கு நாரத மகரிஷியால் ஸ்ரீராமசரிதம் சங்க்ரஹமாக உபதேசிக்கப்பட்டு ப்ரஹ்மதேவரின் ஆக்ஞாப்ரகாரம் அம்முனிபுங்கவர் 24000 கிரந்தங்களடங்கிய ஸ்ரீ இராமாயணமென்னும் ஆதிகாவியத்தைச்செய்தருளி அதைத் தமது சிஷ்யர்களான குசலவர்களுக்கு உபதேசிக்க, அவர்களால் அந்த இராமாயணம் ஸ்ரீராமபிரானுடைய அஸ்வமேத மகாமண்டபத்தில் முனிவர், அரசர், வானரர் முதலியோர் சேர்ந்துள்ள சபையில் ஸ்ரீராமபிரான் சன்னதியில் தாளலயத்துடக்கிணங்க கானம் செய்து அரங்கேற்றப்பட்டு சபையோர்களால் மிகுந்த சந்தோஷத்துடன் ஒப்புக்கொள்ளப்பட்டதாக நிச்சயிக்கப்படுகிறது.

ஸ்ரீமத் ராமாயணத்தில் வர்ணிக்கப்பட்டிருக்கும் தருமங்கள்.

# முதலாவது குரு சிஷ்ய தருமம்.

I. குரு சிஷ்ய லக்ஷணம்:—

" தப:ஸ்வாத்யாய நிரதம் தபஸ்வீ வாக்விதாம் வரம் /
நாரதம் பரிபப்ரச்ச வால்மீகிர் முநிபுங்கவம் // "

" தபசு, வேதவேதாந்தங்கள் இவைகளைப் பூர்ணமாக அடைந்தவரும், உபதேசிப்பவர்களுக்குள் மேலானவரும், முனி ச்ரேஷ்டருமான நாரதமஹரிஷியை, தபஸ்வியான வால்மீக முனிவர் தெண்டம் ஸமர்ப்பித்து வினவினார். "

இது இராமாயணத்தின் முதல் சுலோகம். இதனால் குரு சிஷ்ய லக்ஷணம் சொல்லப்பட்டதாகிறது.

எவ்விதமெனில்- ஆசார்யலக்ஷணம்.

(1) தபோநிரதம்:— தவத்தைப் பூரணமாக அடைந்தவர், என்றதினால் அவர் சர்வசக்திவாய்ந்தவர் என்பது ஸூசகம்.

" யத்துஸ்தரம் யத்துராபம் யத்துர்கம் யச்சதுஷ்கரம் /
தத் ஸர்வம் தபஸாஸாத்யம் தபோஹி துரதிக்ரமம் // "

" எது கடக்கமுடியாததோ, எது பெறமுடியாததோ, எது செய்ய முடியாததோ அதெல்லாம் தவத்தால் சாதிக்கமுடியும். ஆகையால் தவத்தை வெல்வதரிது. "

" வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
மீண்டு முயலப்படும். "

" கூற்றங் குதித்தலும் கைகூடு நோற்றலி
னாற்ற றலைப்பட்டவர்க்கு. " (குறள்)

என்ற ஆதாரங்கள் நோக்கத்தக்கன.

(2) ஸ்வாத்யாய நிரதம்:— வேதவேதாந்தங்களைப் பூர்ணமாக அடைந்தவர், என்றதினால் நாரதர் சொல்வதெல்லாம் தருமத்தோடு பொருந்திய ஸத்திய வசனம் என்பது ஸூசகம்.

† வா-ரா. பா-கா. சரு 1. சு. 1.

(3) வாக்விதாம்வரம்:— உபதேசிப்பவர்களுக்குள் மேலானவர், என்றதினால் சிறந்த போதனாசக்தி வாய்ந்தவரெனவும், வ்யாகரணம் முதலான ஸகல சாஸ்திரங்களையும் நன்றாயறிந்தவரென்னும் பொருளாம்.

(4) முனிபுங்கவம்:— முனிச்ரேஷ்டர், என்றதினால் இந்திரிய நிக்கிரகமுள்ளவர் என்பதும், பகவத்யானத்தோடு கூடியவரென்பதும், திரிகால வர்த்தமானங்களை அறியக்கூடியவரென்பதும், ஸதா ஜபபரரென்பதும், ஸூசகம்.

(5) நாரதம்:— நாரத மஹரிஷியை, என்றதினால் நாரம் - ஜ்ஞானம், அதைக் கொடுக்கக்கூடியவர் என்பதும், நாரம் - அஜ்ஞானம், அதை நிவர்த்திசெய்யக்கூடியவரென்பதும், த்ரிலோக ஸஞ்சாரியானபடியால், மூன்று லோகத்திலுள்ள வர்த்தமானங்களை யறிபவரென்பதும், பிரம்ம புத்திரரானபடியால், உத்தம குலத்தைச் சேர்ந்தவரென்பதும் ஸூசகம். ஆகவே இந்த ஐந்துபதங்களினால், ஆசார்யன் பூர்ணமான தபஸையுடையவராகவும், வேதவேதாந்தங்களையும் வ்யாகரணம் முதலான ஸகலசாஸ்திரங்களையுமுணர்ந்தவராகவும், பகவத்பக்தியுடன் அநவரத ஜபபரராகவும், சிஷ்யனுடைய அஜ்ஞானத்தைப்போக்கி, ஜ்ஞானத்தைக்கொடுத்துப் பரமாத்மஸ்வரூபத்தை உபதேசிக்கவல்லவராகவும், ஜிதேந்த்ரியராகவும், உத்தம குலத்தவராகவுமிருக்கவேணுமென்று ஆசார்ய லக்ஷணம் சொல்லப் பட்டதாயிற்று.

" குசப்தஸ்த்வந்தகாரஸ்யாத் ருகாரஸ்தந் நிவர்தக: /
அந்தகார நிரோதித்வாத் குருரித்யபிதீயதே " //

" கு, என்பது அஜ்ஞானத்தையும், ரு, என்பது அதன் நிவர்த்தியையும் சொல்லுகிறபடியால் மனதின் கண்ணுள்ள அஜ்ஞானமாகிற இருளை நீக்கி மெய்ஞ்ஞானமாகிற பிரகாசத்தைத்தருவதால் குருவெனச் சாற்றப் படுகின்றனர்.

" குலனருள் தெய்வங்கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வண்மை
நிலமலை நிறைகோல் மலர் நிகர் மாட்சியும்
உலகியலறிவோ டுயர்குண மினையவும
அமைபவன் நூலுரையாசிரியன்னே. "

என்ற நன்னூல் இங்கு நோக்கத்தக்கது.

சிஷ்யலக்ஷணம்:— (1) தபஸ்வீ:— என்றதினால் பகவத் ஸ்வரூபத்தையறிய ஆவல்கொண்டவரென்பதும், பலவிரதங்களை யனுஷ்டித்தவரென்பதும், சமதமாதிஸம்பத்திகளையடைந்தவரென்பதும், ஜீவகாருண்யமுடையவரென்பதும் களங்கமற்றஇருதயமுடையவரென்பதும் ஸூசகம்.

" உற்றநோய் நோன்றலுயிர்க்குறுகண் செய்யாமை
யற்றே தவத்திற்குரு. " (குறள்)

(2) **பரிபப்ரச்ச:—** என்றதினால், விதிவதுபஸந்ந:, என்பது பொருள். அதாவது, உபதேசம்பெற்றுக்கொள்ள, குருவைத்தேடிப்போய், தண்டம் ஸமர்ப்பித்து, விதிப்பிரகாரம் கேட்கவேண்டுமென்பது.

‡ " தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா |
உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்வதர்ஶிந: || "

" அந்த ஆத்மஜ்ஞானத்தை. குருவைத்தேடிப்போய், தண்டம் ஸமர்ப்பித்து, விதிப்பிரகாரமான கேள்வியினாலும், ஶுஶ்ரூஷையினாலும் அறிந்துகொள்ளக்கடவாய். தத்வமறிந்த பண்டிதர்கள் உனக்கு ஜ்ஞானத்தை போதிப்பார்கள். " என்று அர்ஜ்ஜுனனை நோக்கி யருளிச்செய்த ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய வசனம் இங்கு கவனிக்கத்தக்கது.

ஆகவே, தபஸ்வீ, பரிபப்ரச்ச என்ற பதங்களினால் சிஷ்யலக்ஷணம் சொல்லப்பட்டதாயிற்று.

" ஸத்புத்திஸ்ஸாதுஸேவீ ஸமுசிதசரிதஸ் தத்வபோதாபிலாஷீ |
ஶுஶ்ரூஷுஸ்த்யக்தமாந: ப்ரணிபதநபர: ப்ரஶ்நகாலப்ரதீக்ஷ: ||
ஶாந்தோதாந்தோ நஸூயுஸ்ஸரணமுபகதஸ் ஶாஸ்த்ர விஶ்வாஸஶாலீ |
ஶிஷ்ய: ப்ராப்த: பரீக்ஷாங் க்ருதவிதபிமதம் தத்வதஸ் ஶிக்ஷணீய: " ||

" நற்புத்தியுடன் ஸாதுஸேவையுடையவனாகி நன்னடக்கையுடையவனும், உண்மைஞானத்தை அறிவதில் அபிலாஷையுடையவனும், பணிவிடைக்காரனும், மானவமானமென்பதற்றவனும், ப்ரஶ்னகாலத்தை எதிர்பார்ப்பவனும், சாந்தனும் அஸூயையில்லாதவனும், சரணாகதியடைந்தவனும், சாஸ்திரவிஶ்வாசமுடையவனுமே சிஷ்யனாக அங்கீகரிக்கத் தகுந்தவன். " என்பது நோக்கத்தக்கது.

வால்மீகி பகவான் ப்ருகு வம்சத்திலவதரித்தவர். இவர் (வல்மீகம்-புற்று) புற்றிலிருந்து வெளிவந்ததினால் வால்மீகி என்று பெயர். இவர்க்கு " ப்ராசேதஸர் " (அதாவது வருணனுடைய புத்திரர்) என்னும் பெயருண்டு.



‡ பகவத்கீதை. அத் 4 சு 34.

II. உபதேசக் கிரமம்:—

(1) வான்மீகமுனிவர் நாரதமஹரிஷியை நோக்கி—
"கோந்வஸ்மிந்ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கச்சவீர்யவாந் /"
என ஆரம்பித்து,
"ஏததிச்சாம்யஹம் ச்ரோதும் பரம் கௌதூஹலம் ஹி மே /"

என்றபடி "ஓ ஸ்வாமி! இவ்வுலகிலிக்காலத்தில், அனந்த கல்யாண குணங்களும், ஸௌசீல்யாதி குணங்களுமுடைய உத்தம புருஷன் யார்? என்பதை அடியேன் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். தேவரீர் அடியேனுக்குக் கிருபைசெய்தருளவேண்டும்." என்று பாலகாண்டம் சருக்கம் 1. சு 2 முதல் 5 சுலோகங்கள் மூலமாக ப்ரச்நம் பண்ணினர். அதைக்கேட்டு நாரதமஹரிஷி மிகுந்த சந்தோஷமடைந்தவராய் (பால-கா. சரு 1. சு 8 முதல் 96) சுலோகங்களடங்கிய ஸ்ரீராமசரிதத்தைப் பூராவாகவும், ஸம்க்ஷேபமாகவும் வான்மீகமுனிவருக்கு உபதேசித்தருளினர்.

இதனால்— "தத்விஜ்ஞாநார்த்தம் ஸகுருமேவாபிகச்சேத்"/ என்றபடி வேதாந்தார்த்தங்களை ஒரு குருவினிடத்தில் போய்க் கேட்டே அறியவேண்டுமென்ற தருமமும், "நாப்ருஷ்ட: கஸ்யசித்ப்ரூயாத் /" என்றபடி சிஷ்யன் கேட்காமலிருக்கும்போது குரு உபதேசஞ்செய்யலாகாதென்ற தருமமும் ஸூசிதம்.

(2) விச்வாமித்ரமஹரிஷி யாகஸம்ரக்ஷணார்த்தமாக ஸ்ரீராமலக்ஷ்மணர்களை அழைத்துக்கொண்டு, ஸரயூநதியின் தென்கரையில் சேர்ந்தவுடன மகரிஷி ஸ்ரீராமபிரானை நோக்கி—

§ "மந்த்ரக்ராமம் க்ருஹாணத்வம் பலாமதிபலாம் ததா /
த்ரிஷுலோகேஷுவா ராம ந பவேத் ஸத்ருசஸ்தவ //
பிதாமஹஸுதே ஹ்யேதே வித்யே தேஜஃஸமந்விதே /
ததாமி தவ காகுத்ஸ்த ஸத்ருசஸ்த்வம் ஹி தார்மிக //"

"ஸ்ரீராமா! பலை, அதிபலையென்னும் மந்திரங்களை உபதேசிக்கின்றேன் பெற்றுக்கொள்க. மூன்று லோகங்களிலும் உனக்

§ வா-ரா. பா-கா. சரு 22. சு 12, 14, 19.

குக்ஷத்ரியாக ஒருவனுமாகமாட்டான். மிகுந்தப்ரகாசம் பொருந்திய ப்ரஹ்மபுத்திரிகளான இம்மந்திரங்களை க்ரஹிப்பதற்குத் தார்மிகனான நீயே தகுந்தவன். ஆகையால் உனக்கு உபதேசஞ் செய்கின்றேன்." என்றுரைத்து உபதேசஞ்செய்தருளினர்.

¶ " நோக்கின்னவர்முக நோக்க நோக்குடைக்
கோக்கு மாருமடிகுறா நான்முகன்
ஆக்கிய விஞ்ஞைகளிரண்டுமவ்வழி
ஊக்கினனவையவ ருள்ளத்துள்ளினேர்."

என்ற கம்பராமாயணம் நோக்கத்தக்கது.

பின்னும் விஶ்வாமித்திரமுனிவர் ஸ்ரீராமபிரானை நோக்கி—

† " **பரிதுஷ்டோஸ்மி பத்ரம் தே ராஜபுத்ர மஹாயஶ: /**
**ப்ரீத்யா பரமயா யுக்தோ ததாம்யஸ்த்ராணி ஸர்வஶ: //**
தேவாஸுர கணாந்வாபி ஸகந்தர்வோரகாநபி /
யைரமித்ராந் ப்ரஸஹ்யாஜௌ வஶீக்ருத்ய ஜயிஷ்யஸி //"
" ஸ்திதஸ்து ப்ராங்முகோ பூத்வா ஶுசிர்முநிவரஸ்ததா /
ததௌ ராமாய ஸுப்ரீதோ மந்த்ரக்ராமமநுத்தமம் //"

" சக்கரவர்த்தி திருக்குமாரரான ஸ்ரீராம! உன்னிடத்தில் யான் மிகுதியும் சந்தோஷமுடையவனானேன், உனக்கு மங்களமுண்டாகட்டும். யான் அறிந்ததான எல்லா அஸ்த்திர ஶஸ்த்திர மந்திரங்களையும் உனக்கு உபதேசிக்கின்றேன். அதனால் தேவாஸுர கந்தருவாதி கணங்களை யுத்தத்தில் வஶபஞ்செய்து ஜெயிப்பாய்." என அருளிச்செய்து முனிவர் கிழக்குமுகமாயிருந்து மிக்கப்பிரீதியுடன் கூடி அஸ்த்திர ஶஸ்த்திரங்களின் மந்திரங்கள் யாவற்றையும் ஸ்ரீராமபிரானுக்கு உபதேசஞ்செய்தருளினர்.

மறுபடியும் விஶ்வாமித்திரமுனிவர் ஸ்ரீராமபிரானை நோக்கி—

○ " க்ருஶாஶ்வதநயாந்ராம பாஸ்வராந்காமரூபிண: /
ப்ரதீச்ச மம பத்ரம் தே பாத்ரபூதோஸி ராகவ //"

¶ கம்-ரா. பா-கா. தாடகை 18.
† வா-ரா. பா-கா. சரு 27. ச 2, 3, 21.
○ ஷை சரு 28. ச 10.

" ஸ்ரீராமா! க்ருஸாஸ்வபுத்திரர்களும் பிரகாசத்தோடுகூடி யவர்களும் காமரூபிகளுமான உபஸம்ஹார மந்திரங்களையெல்லாம் உனக்கு உபதேசஞ்செய்கின்றேன்பெற்றுக்கொள். உனக்கு க்ஷேமமுண்டாகும். இவைகளைப் பெற்றுக்கொள்வதற்கு நீயே தகுதியுடையவன்." என அருளிச்செய்து அம்மந்திரங்களையும் உபதேசஞ்செய்தருளினர்.

இதனால், ஆசார்யன் தகுந்த சீடனுக்கே உபதேசம்செய்ய வேண்டுமென்பது ஸூசிதம்.

$ (3) " சொல்லொக்குங் கடியவேகச் சுடுசரங் கரியசெம்மல்
அல்லொக்கும் நிறத்தினாள்மேல் விடுதலும் வயிரக்குன்றக்
கல்லொக்கும் நெஞ்சிற்றங் காதப்புறங்கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்
றன்றே."

" தாடகையின்பேரில் பிரயோகித்த ராமபாணமானது கல்லைப்போன்ற கடினமான அவள் மார்பில் தைத்துத் தங்கியிராமல், ஊடுருவிப் பின்புறஞ்சென்று, கல்வியறிவடையாத மூடர்களுக்கு ஞானவான்கள் உபதேசித்த தத்துவம்போலப் போயிற்று." என்ற கம்பராமாயணத்தாலும்,

‡ " அறிவிலாதவர்க்கறிவன சொல்லுவாரவரால்
இறுதியெய்துவாரென்னு மதின்றுகை கண்டோம்."

என, குபேரன் தனது பரிஜனங்களின் முன்னிலையில் கூறியிருப்பதாலும்,

மூடர்களுக்கு (அபக்குவருக்கு) உபதேசஞ்செய்யலாகாதென்பது ஸூசிதம்.

குறிப்பு:— ஸ்ரீராமபிரான் கேட்காமலிருக்கும்பொழுது விஸ்வாமித்திர முனிவர் தாமாகவே முதலில் மந்திரம் உபதேசித்தது உசிதமோவெனில்,

" தன்மக னாசான்மகனே மன்மகன்
பொருள்நனி கொடுப்போன் வழிபடுவோனே
உரைகோளாளற்கு உரைப்பது நூலே." (நன்னூல்)

$ கம்-ரா. பா-கா. தாடகை 72. ‡ கம்-ரா. உத்-கா. வரை 24.

என்றபடி, ஸ்ரீராமபிரான், சக்கரவர்த்தி திருமகனாகவும், வழிபாடு செய்பவனாகவும், சிறந்த மேதாவியாகவும் இருந்ததினால், முனிவர் உபதேசித்தது உசிதமேயாம்.



III. குருகுலவாசம்.

†. " ஸம்யக் வித்தியாவ்ரத ஸ்நாத: யதாவத் ஸாங்கவேதவித் // "

"(ஸ்ரீராமபிரான்) குருகுலவாஸஞ்செய்து பிரஹ்மசாரி விரதத்தை ஒழுங்காக அநுஷ்டித்து ஸகலவேதங்களையும் சாஸ்திரங்களையும் விதிப்பிரகாரம் அத்யயனம்செய்தும் விரதங்களை ஒழுங்காய் அநுஷ்டித்தும் குருதக்ஷிணைகொடுத்து ஸமாவர்த்தனம்செய்துகொண்டவர், ஸகல வேதார்த்தங்களின் தத்துவங்களை நன்றாயறிந்தவர்.

¶ " குரு கார்யாணி ஸர்வாணி நியுஜ்ய குஶிகாத்மஜே // "

" விஸ்வாமித்திர முனிவருக்கு ஸ்ரீராமபிரான் குருசுஸ்ருஷைகள் யாவற்றையும் நன்றாய்ச் செய்தனர்.

இவைகளினால் எல்லோரும் குருகுலவாஸஞ்செய்து குருவுக்குப் பணிவிடைகள்செய்து ஸகலவித்தைகளையும் கற்றும் விரதங்களையனுஷ்டித்தும் பின்பு குருதக்ஷிணையளித்து குருவின் அனுமதியின்பேரில் ஸமாவர்த்தனம் செய்துகொள்ளவேண்டுமென்பது ஸூசிதம்.

பிரமாணங்கள்:— மிதிலாதிபதியான ஜனகர் சுகப்ரஹ்மரிஷியை நோக்கி—

" ஐயா! பிராம்மணனாலே ஜன்மம்தொடங்கி எதுசெய்யத்தக்கதோ அதைக்கேளும், உபநயனஞ்செய்யப்பட்டு வேதத்தில் பற்றுதலுடையவனாயிருக்கவேண்டும். பிராம்மணரே! தவத்தோடும் குருசுஸ்ருஷையோடும், பிரம்மசரியத்தோடும் தேவதைகளுடைய கடனும், ரிஷிகளுடைய கடனும் தீர்த்தவனும், அஸூயையில்லாதவனும், நியமமுடையவனுமாயிருந்து வேதங்களை அத்யயனஞ்செய்து குருவுக்கு தக்ஷிணைகொடுத்துவிட்டு (அவருடைய) அனுமதிபெற்றுக்கொண்டு பிறகு ஸமாவர்த்தனம் செய்யவேண்டும்." என உபதேசித்தனர்(சாந்திபருவம்-மொழிபெயர்ப்பு.)

" ஸர்வேஷாம் உபநயந ப்ரப்ருத்யாசார்ய குலேவாஸ: /
ஸர்வேஷாமநூத் ஸர்கோவித்யாயா: // " (ஆபஸ்தம்பர்)

† வா-ரா. அ-கா. சரு 1. சு 20. ¶ வா-ரா. பா-கா. சரு 22. சு. 23.

குறிப்பு:— முற்காலத்தில் துவிஜர்கள் தங்கள் புத்திரர்களுக்கு உபநயனஞ்செய்தவுடன் அவர்களை குருவினிடம் கல்விகற்கும்படி விட்டு விடுவார்கள். அரசர்கள் குருமார்களுக்குப் போஜனங்களுக்கு வேண்டிய எல்லா பதார்த்தங்களையும் கொடுத்து ஆதரித்து வந்ததினால் அவர்கள் சீடர்களிடத்தில் பொருளை எதிர்பார்க்கவில்லை. " பைக்ஷம் சாஹாஹ ப்ரசரேத் /" என்றபடி பிரஹ்மசாரிகள் அவசியம் பிரதிதினம் பிக்ஷையெடுக்கவேண்டுமென்பது விதியாகையால், வித்தியார்த்திகள் பிக்ஷான்னத்தைப் புஜித்துக்கொண்டு, சிறிதும் கவலையின்றி குருவின் சுச்ரூஷைகளைக் குறைவுதலின்றிச் செய்து வித்தைகளை அடைந்துவந்தார்கள். ஸதா குருவின் ஸந்நிதானத்திலேயே இருக்கவேண்டியிருந்ததினால் வித்தியார்த்திகளுக்கு உலகவியாபாரத்தில் மனதைச் செலுத்தவாவது ஊர்வம்புகளைக்கேட்கவாவது அவகாசம் ஏற்படமாட்டாது. குருபணிவிடைகளைச் செய்வதிலும் வித்தைகளை கற்றுக்கொள்வதிலுமே அவர்கள் காலத்தைக் கழிப்பார்கள். இவ்வாறு குருஸன்னிதியில் வஸிப்பதற்கு குருகுலவாஸமென்று பெயர். வித்தைகள் கற்றுமுடிந்தபின், குருவுக்கு குருதக்ஷிணையளித்துவிட்டு, அவருடைய அனுமதியின்பேரில் ஸமாவர்த்தனம்செய்துகொள்ளுவார்கள்.

(உதாரணம்):—(1)பலராமரும் ஸ்ரீகிருஷ்ணபகவானும் கர்காசாரியரால் உபநயனஞ்செய்விக்கப்பட்டார்கள். பின்பு

‡ " அதோ குருகுலே வாஸமிச்சந்தாவுபஜக்மது: /
காச்யம் ஸாந்தீபநிம் நாம ஹ்யவந்தீபுரவாஸிநம் //"
யதோபஸாத்ய தௌ தாந்தௌ குரௌ வ்ருத்திமநிந்திதாம் /
க்ராஹயந்தாவுபேதௌ ஸ்ம பக்த்யா தேவமிவாத்ருதௌ //"
அஹோராத்ரைச்சது:ஷஷ்ட்யா ஸம்யத்தௌ தாவதீ: கலா: /
குருதக்ஷிணயாசார்யம் சந்தயாமாஸதுர்ந்ருப //"

" அவர்கள் காசிதேசத்தில் அவந்தியென்னும் பட்டணத்தில் வஸிக்கும் ஸாந்தீபனியென்பவரிடம் சென்று, வணங்கி, அவரை ஆசார்யனாக விதிப்படி அடைந்து தேவனைப்போல் பாவித்து குருசுச்ரூஷைசெய்தனர். அவர்கள் அறுபத்துநான்கு நாட்களில் அறுபத்துநான்குகலைகளையும் அப்யஸித்தார்கள். பின்புஅவர்கள் ஆசார்யனைநோக்கி நாங்கள் தங்களுக்குகுருதக்ஷிணையாக எதனைக்கொடுக்கவேண்டுமென்றுகேட்டார்கள்."

‡ ஸ்ரீபாகவதம்: ஸ்க 10. அத் 45. சு 31, 32, 36.

அதற்கு குருவானவர்,

† " மடலாட்டு வண்டுதை பூந்தொடை மாதுசொற்றுங்
குடலாட்ட மெய்தித்தளர் பாம்பினதுச்சிமேனின்
றடலாட்டு வந்தமழை வண்ணனை நோக்கியன்னோன்
கடலாட்டின்மைந்தன் கழிந்தான்றனைத் தம்மினென்றான்."

என்றபடி, பிரபாஸக்ஷேத்திரத்தில் சமுத்திரத்தில் விழுந்து மரணமடைந்துபோன தமது குழந்தையைத் திரும்பக்கொண்டு வந்து கொடுக்கவேண்டுமென்று சொன்னார். அவர்களும் ஒப்புக்கொண்டுபோய் ஸம்யமனியென்ற யமனுடைய பட்டணஞ் சென்று யமனை அழைத்தனர்.

† " வெருவுற்ற கூற்றம் விரைவோடெதிர் வந்திறைஞ்சி
வரவுற்றதென்கொலென வேத்தலும் வந்தவண்ணம்
தெரிவுற்றதாக்கிச் சிறுவற்றரவொல்லைமீளா
துறவற்பணிந்து தமரன்றனைக்கோள்கவென்றான்."

‡ " குருபுத்ரமிஹாநீதம் நிஜகர்மநிபந்தநம் /
ஆநயஸ்வ மஹாராஜ மச்சாஸநபுரஸ்க்ருத: //
ததேதி தேநோபாநீதம் குருபுத்ரம் யதூத்தமௌ /
தத்வா ஸ்வகுரவே பூயோ வ்ருணீஷ்வேதி தமூசது: //"

யமனும் மிகுந்த பயத்துடன் வந்து வணங்கி 'அடியேனை அழைத்த காரணம் யாது?' என்று கேட்க, தங்கள் குருவின் புத்திரனைக் கொண்டுவந்து கொடுக்கும்படி கட்டளையிடவே யமனும் அப்படியே செய்கிறேனென்று ஒப்புக்கொண்டு குரு புத்திரனைக் கொடுக்க, இராமகிருஷ்ணர்கள் அப்புத்திரனையழைத்துக் கொண்டு குருவினிடம் சென்று ஸமர்ப்பித்து வேறு என்ன செய்யவேண்டுமென்று கேட்டார்கள். அதற்கு குரு,

‡ " ஸம்யக்ஸம்பாதிதோ வத்ஸ பவத்ப்யாம் குருநிஷ்க்ரய: /"

" குழந்தைகளே ! உங்களால் குருசுச்ரூஷை நன்றாகச் செய்யப்பட்டது. உங்களுக்குக் கீர்த்தியும் மேன்மையுமுண்

---

† ஸ்ரீபாகவதம் கந்தம் 10.

‡ ஸ்ரீபாகவதம் ஸ்க 10. அத் 45. சு 45, 43, 48.

டாகட்டும். நீங்கள் கிரஹத்திற்குப் போகலாம்." என்று அனுக்கிரஹித்தார். இராமகிருஷ்ணர்கள் ஆசார்யரிடம் விடை பெற்றுத் தமதிருப்பிடம் அடைந்தார்கள்.

"மாதவத்தோன் புத்திரன்போய் மறிகடல்வாய் மாண்டானை
ஓதுவித்த தக்கணையா வுருவுருவே கொடுத்தான்." என்ற பெரியாழ்வார் திருமொழி இங்கு நோக்கத்தக்கது. இந்த பாகவத இதிஹாஸமும்,

(2) "மஹாமேதாவியான சுக்ர்வேதங்களையும் வேதாங்கங்களையும் அவற்றின் பாஷ்யங்களையும் அறிந்தவராயிருந்தும், தருமத்தையனுசரித்து ப்ரஹஸ்பதியை உபாத்தியாயராக வரித்து அவரிடம் உபநிஷத்துக்களோடும் ஸூத்திரங்களோடும் கூடிய ஸகல வேதங்களையும் தருமசாஸ்திரங்களையும் முழுதும்அத்யயனஞ்செய்துவிட்டுக் குருவுக்குதக்ஷிணைகொடுத்து, ஸமாவர்த்தனமென்கிற வித்தையின் முடிவைச் செய்துகொண்டனர்." என்ற சாந்திபருவமும்,

(3) "ஏகலைவனென்றொருகிராதன் முனியைத் தனியிறைஞ்சி யிவனேவலின் வழா
ஞகலையடைந்து மிகுபத்தியொடு நாடொறுமருச்சுனனை யொத்து வருவான்
மேகலைநெடுங்கடல்வளைந்ததரணிக்கணொரு வில்லியென வின்மையுடையான்
மாகலைநிறைந்து குருதக்கிணை வலக்கையினில் வல்விரல் வழங்கியுளனால்."

என்றபடி, ஏகலைவன் என்னும் வேடன் துரோணரைப்போலப் பதுமை செய்துகொண்டு அதனிடத்தில், குரு பக்தியுடன்கூடி குருசுச்ரூஷைசெய்து வில்வித்தை யப்யஸித்துவந்து துரோணரின் விருப்ப பிரகாரம் அவருக்குத் தனது வலக்கைக் கட்டைவிரலை குருதக்ஷிணையாக அளித்தான். என்ற பாரதமும்,

(4) துரோணாசாரியார் ஶிஷ்யர்களான கௌரவர்களையும் பாண்டவர்களையும் நோக்கி, "நீங்கள் பாஞ்சால ராஜாவாகிய துருபதனை யுத்தஞ் செய்து வென்று அவனைப் பிடித்துக்கொண்டுவந்து எனக்கு குருதக்ஷிணையாக அளிக்கக் கடவீர்கள்" எனக்கட்டளையிட்டனர். கௌரவர்கள் சென்று துருபதனிடம் தோற்றுவந்தபிறகு,

"தகப்படுஞ் சராசனத் தனஞ்சயன் கைவாள்வெரீஇ
யகப்படுந்தராதிபன்றனற்றவில்லிஞணிஞன்
மிகப்படுந் தடங்கொடேர் மிசைப்பணித்து விசையுட
னகப்படுஞ்செயற்கைசெய்து குருவின்முன்னர் நணுகினுன்."

என்றபடி, அர்ஜுனன் துருபதனைவென்று அவனைப் பிடித்துத் தேர்க்காலில்கட்டி துரோணரிடம் கொண்டுவந்தனன். என்ற பாரதமும் நோக்கத்தக்கன.

$ "கௌஸல்யாஸுப்ரஜா ராம பூர்வா ஸந்த்யா ப்ரவர்ததே /
உத்திஷ்ட நரசார்தூல கர்தவ்யம் தைவமாந்ஹிகம் //"

"கௌஸல்யாதேவியின் திருக்குமாரனே! அருணோதயமா கின்றது நித்தியகர்மாநுஷ்டானங்கள் செய்யவேண்டுமாதலால் எழுந்திருக்கக்கடவாய்." என விஸ்வாமித்திரமுனிவர், இராம லக்ஷ்மணர்களை திருப்பள்ளியுணர்த்தினர்.

"உத்திஷ்டேத் ப்ரதமம் சாஸ்ய சரமம் சைவ ஸம்விசேத் /"

என்றபடி, ஆசார்யன் நித்திரையினின்று எழுந்திருக்கு முன்னமே சீடன் எழுந்திருக்கவேண்டுமென்று சாஸ்திரமிருந் தாலும், ஒருசமயம் சிரமத்திஞல் சீடன் அயர்ந்து நித்திரைபோ ஞல் ஆசார்யன் அவனை எழுப்பி நித்திய கர்மாநுஷ்டானங்கள் செய்யும்படி ஏவவேண்டும் என்ற தருமம் ஸூசிதம்.



## IV. குருவுக்குச் செய்யும் உபசாரம்.

$ (1) "ஸ்நாத்வா க்ருதோதகௌ வீரௌ ஜேபது: பரமம்ஜபம் /
க்ருதாந்ஹிகௌ மஹாவீர்யௌ விஸ்வாமித்ரம் தபோதநம் //
அபிவாத்யாபிஸம்ஹ்ருஷ்டௌ கமநாயோபதஸ்ததுः //"

"இராமலக்ஷ்மணர்கள் எழுந்திருந்து ஸ்நாநசமன ஸந்த் யோபாஸனாதி நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு, சந்தோ ஷத்துடன் விஸ்வாமித்திரமஹரிஷியை வணங்கி அவருடன் புறப்பட்டனர்.

இதனுல் பிரதிதினம் காலையில் கர்மாநுஷ்டானம் முடித்த வுடன் குருவந்தனம்செய்யவேண்டுமென்பது ஸூசிதம்.

$ வா-ரா. பா-கா. சரு 23. சுரு 2, 3, 4.

(2) ஸ்ரீராமபிரானுக்கு நியமந்தரிப்பிப்பதற்காக, வஸிஷ்ட மஹரிஷி ஸ்ரீராமபிரான் திருமாளிகைக்கு, சிறந்த தேர்மீதேறிக் கொண்டு எழுந்தருளி, மூன்று கோட்டைவாயல்களைக் கடந்து செல்லுகையில்,

¶ " தமாகதம் ரிஷிம் ராமஸ்த்வரந்நிவ ஸஸம்ப்ரம: /
தத்தோ அவதாரயாமாஸ பரிக்ருஹ்ய ரதாத்ஸ்வயம் //"

○ " தமாகதமாஜ்ஞாய ராமஸ்தூர்ணம் க்ருதாஞ்ஜலி: /
ப்ரத்யுத்கம்ய நமஸ்க்ருத்ய தண்டவத்பக்திஸம்யுத: //"

என்றபடி " வஸிஷ்டர் வருகிறாரென்கிற செய்தியை ஸ்ரீராகவன் செவிசார்த்தி அஞ்சலிஹஸ்தராய் பக்தியுடன் விரைவாக எதிர்கொண்டு ரதத்திற்கு நேராகவந்து தானே அம்முனிவரைத் தேரினின்றும் கீழேயிறக்கி தண்டம்போல பூமியில் விழுந்து தெண்டம் ஸமர்ப்பித்து நின்றனர்.

† ' முனிவனுமுவகையுந் தானுமுந்துவான்
மனுகுலநாயகன் வாயன் முன்னினன்
அனையவன் வரவு கேட்டலங்கல் வீரனும்
இனிதெதிர்கொண்டு தன்னிருக்கை யெய்தினன்.
(கம்பராமாயணம்)

இதனல் குருவினுடைய வரவுதெரிந்தவுடன் எதிர்கொண்டு போயழைத்துவந்து, வந்தனுதியுபசாரம் செய்யவேண்டுமென்ற தருமம் சூசிதம்.

## V. குருவைப் பூஜித்தல்.

(1) ஸ்ரீராமபிரான் பரதாழ்வானை நோக்கி—

‡ " கச்சித் ப்ராஹ்மணோ வித்வாந் தர்மநித்யோ மஹாத்யுதி: /
இக்ஷ்வாகூணா முபாத்யாயோ யத்தா தாத பூஜ்யதே //"

" தம்பி! மஹாஜ்ஞானியும் தருமவானும் இக்ஷ்வாகுவம்சத்திற்கு ஆசார்யனுமான ஸ்ரீவஸிஷ்ட பகவானை நீ நன்றாய் பூஜைசெய்துவருகின்றனையா? " என, குசலம் வினவியருளினர்.

¶ வா-ரா-அ-கா. சரு 5. சு 6, 7. ○ அ-ரா. அ-கா. சரு 2. சு 18, 19.
† கம்-ரா. அ-கா மந்திரை 4. ‡ வா-ரா, அ-கா. சரு 100 சு 9.

(2). பரதாழ்வான் கௌஸல்யாரை நோக்கி—

⊕ "த்ரும்ஸ்சர்ப்யவஜாநாது யஸ்யார்யோ அநுமதேகத: ||"

"தாயே! தேவரீர் திருக்குமாரர் வனவாஸம் எழுந்தருளியதை யாவனொருவன் அறிந்து சந்தோஷிக்கின்றானோ, அவன் குருவை அவமானம் செய்தவனடையும் பாபத்தையடையக் கடவன்" என, அருளிச்செய்தனர்.

இந்த இரண்டு ஆதாரங்களினால் ஆசார்யனை அவசியம் பூஜைசெய்யவேண்டுமென்பதும், அவமானஞ்செய்தவன் நரகத்தையடைவானென்பதும் ஸூசிதம்.

"குரவோ அர்சயிதவ்யாஸ்ச புராணம் தர்மமிச்சதா |
ஏந ப்ரீணத்யுபாத்யாயஸ்தேநஸ்யாத்ப்ரஹ்ம பூஜிதம் ||".

"பழமையான தருமத்தை விரும்பியவன் குருக்களை பூஜித்து ஆராதிக்கவேண்டும். எதனால் உபாத்தியாயர் ப்ரீதியடைகிறாரோ, அதனால் பிரம்மதேவர் ப்ரீதியடைகிறார். (ராஜதருமம்.)

"குரூணும் அவமானோ ஹி வத இத்யபிதீயதே |
அதர்வாங்கிரஸிஹ்யேஷா ஶ்ருதிரேஷா ஸநாதநீ ||"

"குருவை அவமானஞ்செய்தால் குருவை வதம்செய்த பாபம் ஏற்படும். இந்த ஶ்ருதி அதர்வாவினாலும் அங்கிரஸினாலும் கண்டறியப்பட்டிருக்கிறது." என கிருஷ்ணபகவான் அர்ஜுனனை நோக்கி (கர்ணபருவம்) அருளிச்செய்திருக்கின்றார்.

"பரீவாதாத் கரோபவதி ஶ்வாவைபவதி நிந்தக:|
பரிபோக்தா க்ரிமிர்பவதி கீடோபவதி மத்சரீ ||"

"குருவைப்பழித்த சீடன் கழுதையாகவும், நிந்தித்தவன் நாயாகவும், குருவின் பொருளையனுபவித்தவன் புழுவாகவும், குருவின் பெருமையைக்கண்டு பொறாமைப்பட்டவன் வண்டாகவும் ஜனிக்கிறான்.

---

⊕ வா-ரா. அ-கா. சரு 75. சு 30.

" ஆசார்யம் ரித்விஜம்ஸ்சைவ குரும்ஸ்சைவ தபஸ்விநம் |
முநீம்ஸ்சாபி அவமந்யந்தே தே பவந்தி ஹிராக்ஷஸா: ||

என்றபடி, குருவை அவமதித்தவர் ராக்ஷஸனாகவும் ஆகிறார். இவை நோக்கத்தக்கன.



## VI. ஆசார்யன் நியமனப்படி அனுஷ்டித்தல்.

(1) விஸ்வாமித்திரமுனிவர் தசரதச்சக்கரவர்த்தியாரிடஞ் சென்று, தான் செய்யும் யாகஸம்ரக்ஷணார்த்தம் " நின் சிறுவர் நால்வரினுங் கரியசெம்மல் ஒருவனைத் தந்திடுதி " என, இராமபிரானையாசித்தனர். அவ்வார்த்தையைக் கேட்டவுடன் சக்கரவர்த்தியார், புத்திரவாத்ஸல்யத்தால் ' இராமன் சிறியவன், யானே வந்து காக்கின்றேன் ' என்று சொன்னவுடன் கௌசிகர் பெருங்கோபங்கொள்ள, அதுகண்டு அருகிலிருந்த குலகுருவாகிய வஸிஷ்டமஹரிஷி 'இராமனை முனிவருடன் அனுப்புவது மிகவும் நல்லது. யோசனைசெய்யவேண்டாம்.' என தைரியம் சொல்லவே—

$ " குருவின் வாசகங்கொண்டு கோற்றவன்
திருவின் கேள்வனைக் கொணர்மின் சென்றென
வருகவென்றன னென்றலோடும் வந்
தருகுசார்ந்தன னறிவினும்பரான் "
" வந்த நம்பியைத் தம்பிதன்னொடு
முந்தை நான்மறை முனிக்குக் காட்டிநந்
நந்தைநீ தனித்தாயுநீ யிவர்க்
கெந்தை தந்தனனியைந்த செய்கென்றன். "

என்றபடி, அக்குருமொழிகொண்டு சக்கரவர்த்தியாரும் இராமபிரானை வரவழைத்து இலக்குமணனுடன் வந்து நின்ற அத்திருமகனை கௌசிகமுனிவர் கையில் ஒப்புவித்தனர்.

குலகுருவான வஸிஷ்டர் கட்டளையிட்டவுடன், தசரதச்சக்கரவர்த்தியார் தமக்கு பல்லாயிரம் ஆண்டுகளுக்குப்பின்னால் அஸ்வமேதயாகமும், புத்திரகாமேஷ்டியும் செய்ததின் பயனாகக்

$ பால-கா. கையடை 16, 17.

கிடைத்த ஜ்யேஷ்ட புத்திரனை ஸ்ரீராமச்சந்திரனை விஶ்வாமித்ரமுனிவரிடம் ஒப்புவித்ததினால் மிக்க ப்ரேமாஸ்பதமான வஸ்துவாக இருந்தாலும் ஆசார்யன் நியமனமானால், அதைக் கொடுப்பதில் கொஞ்சமும் சங்கிக்கக்கூடாதென்பது ஸூசிதம்.

(2) விஶ்வாமித்திரமுனிவர் ஸ்ரீராமபிரானுக்கு, தாடகாவனத்தின் வரலாறுமுழுதும் கூறிமுடித்து அவரைநோக்கி,

¶ " ஸ்வபாஹுபலமாஶ்ரித்ய ஜஹிமாம் துஷ்டசாரிணீம் /
மந்நியோகாதிமம் தேஶம் குரு நிஷ்கண்டகம் புந: // "

" ஸ்ரீராமா! மிகவும் கெட்டநடத்தையுடைய இத்தாடகையைக் கொலைசெய்து இத்தேசத்தை உபத்திரவமற்றதாகச் செய்யக்கடவை, யான் உனக்குக் கட்டளையிடுகின்றேன். என்றருளிச்செய்து பின்னும் தாடகையின் வரலாறு யாவற்றையும் கூறி

† " ஏநாம் ராகவதுர்வ்ருத்தாம் யக்ஷீம் பரமதாருணாம் /
கோப்ராஹ்மணஹிதார்த்தாய ஜஹி துஷ்ட பராக்ரமாம் // "

" ஸ்ரீராமா! ஸாதுக்களுக்கு ஹிதம் செய்யும்பொருட்டு, கெட்டநடக்கையுடையவளும், க்ரூரஸ்வபாவமுடையவளுமான இந்தத்தாடகையை நீ ஸம்ஹரிக்கக்கடவை" எனக்கட்டளையிட்டனர். ஸ்ரீராமபிரானும்

‡ " தாமாபதந்தீம் வேகேந விக்ராந்தாமஶநீமிவ /
ஶரேணோரஸி விவ்யாத ஸா பபாத மமார ச // "

இடிபோல ஸிம்ஹநாதஞ்செய்துகொண்டு அதிவேகமாய் ஓடிவரும் தாடகையின் மார்பில் ஒருபாணத்தை விடுத்தனர். உடனே அவள் இறந்து பூமியில் விழுந்தனள்.

குறிப்பு:— பெண்கொலையானது மிகுந்த பாபமான செய்கையென தருமசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இன்னும் யுத்தகாண்டத்தில் இந்திரஜித்து மாயாஸீதையைச் சேதிக்க யத்தனித்தபொழுது ஹனுமார் இந்திரஜித்தை நோக்கி

¶ வா-ரா. பா-கா. சரு 24. சு 30. † வா-ரா. பா-கா. சரு 25. சு 16.
‡ வா-ரா. பா-கா. சரு 26. சு 28.

○ " கோதில் குலத்தொரு நீகுணமிக்காய்
மாதையொறுத்தல் வசைத்திறமன்றே "
" பான்முகமுற்ற பெரும்பழியன்றே
மான்முகமற்றெரு மாதைவதைத்தால். "
" பெண்கொலைசெய்கை பெரும்பழியன்றே. "

" குற்றமற்ற புலஸ்த்ய பிரஹ்மாவின் குலத்தில் ஜனித்த நீ பெண் கொலைசெய்தல் தகுமோ? பெண்கொலைசெய்தால் பெரும்பழி நேருமன்றோ? மேலும் நீ மஹாபதிவிரதையான இந்த ஸீதையைக் கொலைசெய்யத்துணிவதால், இனி நீ வெகுநேரம் பிழைத்திருக்கமாட்டாய்."

$ " யே ச ஸ்திரீக்ா‌திநாம் லோகா வீரலேகேஷு குத்ஸிதா: /
இஹஜீவிதமுத்ஸ்ருஜ்ய ப்ரேத்யதாந் ப்ரதிபத்ஸ்யஸே // "

" இஹலோகத்தில் ஜீவித்திருப்பதை இழந்து ப்ரேததன்மை அடைந்து ஸ்திரீஹத்யைசெய்தவர்கள் எந்த நரகலோகங்களை அடைவார்களோ அந்த லோகங்களை நீயடையப்போகின்றாய். " என உரைத்திருப்பதால்

ஸ்திரீஹத்தி பெரும்பாதகமான செய்கையென ஏற்படுகின்றது. ஆனால் ஸ்ரீராமபிரானுக்கு ஸ்திரீஹத்தி பாபமான செய்கையென்பது தெரியாதோவெனில்

அயோமுகியென்னும் கொடிய அரக்கியைக் கொலைசெய்யாது அவளது நாசியைமாத்திரம் அறுத்துத் துரத்திய இளையபெருமாளை நோக்கி,

‡ " தொல்லிருடனைக் கொலத்தொடர்கின்றனையுங்
கொல்லலை நாசியைக்கொய்து நீக்கினாய்
வல்லைநீ மனுமுதன் மரபினோ யெனப்
புல்லினனுவகையிற் பொருமி விம்முவான். "

என்றபடி, ஸ்ரீராமபிரான் புகழ்ந்துரைத்து அவரை ஆலிங்கனஞ்செய்துகொண்டனர். இதனால் ஸ்திரீஹத்தி பாதகமான செய்கையென்பது ஸ்ரீராமபிரானுக்கு நன்குதெரியுமென்பதும், அச்செய்கை அவரது திருவுள்ளத்துக்கு உவப்பானதல்லவென்பதும் வெளிசகமாகின்றது. அவ்விதமாயின் ஸ்ரீராமபிரான் தாடகையை வதம்செய்ததின் காரணம் யாதெனில்

○ கம்-ரா. யுத்-கா. மாயாஸீதை 33, 34, 35.
$ வா-ரா. யுத்-கா. சரு 81. சு22. ‡ கம்-ரா ஆரணி-கா. அயோமுகி92.

விஸ்வாமித்திரமுனிவர் ஸ்ரீராமபிரானை நோக்கி—

‡ "ந ஹி தே ஸ்திரீவதக்ருதே க்ருணா கார்யா நரோத்தம /
தஸ்மாதேநாம் க்ருணாம் த்யக்த்வா ஜஹி மச்சாஸநாந்ந்ருப//"

○ "ஈறினல்லறம் பார்த்திசைத் தேனிவட்
சீறிநின்றிது செப்புகின்றேனலேன்
ஆறிநின்றதறனன்றரக்கியைக்
கோறியென்றெதிரந்தணன் கூறினான்."

"ஹே, நரஸ்ரேஷ்டா! பெண்கொலை எப்படிச் செய்யலாமென்று நீ கொஞ்சமும் வெறுப்புக்கொள்ளவேண்டியதில்லை. இத்தாடகையின் மீது எனக்குச் சிறிதும் துவேஷமில்லை. இராஜதருமத்தையனுசரித்து, ஸகலஜனங்களின் ஹிதத்தின்பொருட்டுக் கூறுகின்றேனாதலின், இவளிடத்தில் பரிதாபமாவது அருவருப்பாவது கொள்ளாமல் எனது ஆஜ்ஞாப்பிரகாரம் இவளை வதைசெய்யக்கடவை" எனக் கட்டளையிட்டனர். அந்தக்கட்டளையைக் கேட்டருளி ஸ்ரீராமபிரான் முனிவரைநோக்கி அஞ்சலிஹஸ்தராய்,

§ "பிதுர்வசந நிர்தேசாத் பிதுர்வசந கௌரவாத் /
வசநம்கௌஸிகஸ்யேதி கர்தவ்யமவிஸங்கயா //
அநுஸிஷ்டோஸ்ம்யயோத்யாயாம் குருமத்யே மஹாத்மநா /
பித்ரா தஸரதேநாஹம் நாவஜ்ஞேயம் ச தத்வச: //
ஸோஹம் பிதுர்வச: ஸ்ருத்வா ஸாஸநாத்ப்ரஹ்மவாதிந: /
கரிஷ்யாமி ந ஸந்தேஹஸ் தாடகாவதமுத்தமம் //"

○ "ஐயனங்கது கேட்டறனல்லவும்
எய்திறலது செய்க வென்றேவினல்
மெய்ய நின்னுரை வேதமெனக்கொடு
செய்கையன்றே வறஞ்செய்யுமாறென்றான்."

"ஸ்வாமி! அடியேனது பிதா அடியேனை நோக்கி, கௌஸிக மஹரிஷி கட்டளையிடும் காரியங்களையெல்லாம் சிறிதும் சங்கிக்காமல் உடனே செய்யக்கடவை என்று அயோத்தியில் வஸிஷ்டமஹாமுனிவர் முன்னிலையில் ஆஜ்ஞாபித்திருப்பதால் பிதாவின் வாக்கியத்தை கௌரவிக்கவேண்டியதிருப்பதாலும் தேவரீருடைய கட்டளை எவ்விதமிருந்தபோதிலும் அதை வேதமாகக்கொள்ளுதலே தருமமாதலாலும் தேவரீருடைய கட்

‡ வா-ரா, பா-கா. சரு25. சு18. ○ கம்-ரா. பா-கா. தாடகை.16,17
§ வா-ரா. பா-கா. சரு 26, சு 2, 3, 4.

டளைப்பிரகாரம் இப்பொழுதே தாடகையை வதம் செய்கின்றேன்" என அருளிச்செய்திருப்பதால் ஸ்ரீராமபிரான் குருவசன பரிபாலனமே ஶ்ரேஷ்டமாகக்கொண்டு தாடகையை வதம்செய்ய இசைந்தனர் என ஏற்படுகின்றது.

**இதனால் குரு ஆஜ்ஞைசெய்தால் அது தருமவிரோதமான காரியமாயினும் சீடன் சிறிதும் சங்கையின்றி அவஶ்யம் செய்துதீரவேண்டுமென்பது ஸூசிதம்.**



## VII. குலகுருவை விலக்குதல் கூடாது.

இக்ஷ்வாகு குலத்தைச் சேர்ந்த திரிசங்கு என்னும் அரசன் மனிதசரீரத்துடன் ஸ்வர்க்கத்தையடையும்படியான யாகம் ஒன்று நடத்தித்தரவேண்டுமென தனது குலகுருவான வஶிஷ்ட மஹாமுனிவரிடம் விண்ணப்பஞ்செய்ய, அதற்கு முனிவர் "அது சாஸ்திரவிரோதமான காரியமாதலால் அந்தக்காரியத்தில் யான் முயலேன்" என அருளிச்செய்தனர். பின்பு அவ்வரசன் வஶிஷ்ட மஹாமுனிவரின் நூறு புத்திரர்களிடமும் சென்று அவ்வேள்வியைச் செய்விக்குமாறு பிரார்த்தித்தனன். அப்புத்திரர்கள் யாவரும் அவ்வரசனை நோக்கி "அரசனே! எமதுபிதா முடியாதென மறுத்திருக்க நாங்கள் தானே யெவ்வண்ணம் நடத்திமுடிப்போம் ஆதலால் நீ உன்நகரம்சேர்ந்து வாழக்கடவை" என்றுரைத்தனர். அம்மொழிகளைச் செவியுற்று கடுஞ்சினங்கொண்டு குரு புத்திரர்களை நோக்கி,

† " ப்ரத்யாக்யாதோஸ்மி குருணா குருபுத்ரைஸ்ததைவ ச ।
அந்யாம் கதிம் கமிஷ்யாமி ஸ்வஸ்திவோஸ்து தபோதநா: ॥
ரிஷிபுத்ராஸ்து தச்ச்ருத்வா வாக்யம் கோராபிஸம்ஹிதம் ।
சேபு: பரமஸம்க்ருத்தாஸ் சண்டாலத்வம் கமிஷ்யஸி ॥ "

¶ " நினக்கொலாதகினைய நீணிலத்தியாவரேனும்
மனக்கினியாரை நாடிவகுப்பல்யான் வேள்வியென்னச்
சினக்கொடுந்திறலோய் முன்னர்த்தேசிகற்பிழைத்துவேறோர்
நினைத்தனுடி நின்றாய் நீசனாய் விடுதியென்றான். "

---

† வா-ரா. பா-கா. சரு 58. சு 8, 9. ¶ கம்-ரா. பா-கா. மிதிலை. 109.

"குருபுத்திரர்களே! எனது வேண்டுகோளை குருவும் மறுத்து குருபுத்திரர்களாகிய நீங்களும் மறுத்துவிட்டபடியால், யான் வேறொருவரைத் தேடி குருவாகவரித்து எனது வேள்வியை முடித்துக்கொள்ளுகிறேன்" என்றுரைத்தபொழுது, அந்த ரிஷி புத்திரர்கள் அரசனது அகந்தையையறிந்து சீற்றங்கொண்டு, 'அடா மதிகெட்டவனே! நீ நீசனுகக்கடவை' எனச்சபித்தனர்.

† "அத ராத்ர்யாம் வ்யதீதாயாம் ராஜா சண்டாலதாம் கத: /
நீலவஸ்த்ரதரோ நீல: பருஷோ த்வஸ்தமூர்தஜ: /
சித்யமால்யாநுலேபஸ்ச ஆயஸாபரணோऽபவத் //

¶ 'மலருளோன் மைந்தன்மைந்த வழங்கிய சாபந்தன்னால்
அலரியோன்றனும் நாணும் வடிவிழந்தரசர்கோமான்
புலரியங்கமலம்போலும் பொலிவெரீ இவதனம்பூவிற்
பலருமாங்கிகழ்தற்கொத்த படிவம்வந்துற்றதன்றே."

"காசொடுமுடியும் பூணுங்கரியதாங் கனகம்போன்று
தூசொடுமணியுமுந்நூல் தோற்றருந் தோற்றம்போன்று
மாசொடுசுருகிமேனி வனப்பழிந்திடவூர்வந்தான்
சீசியென்றியாருமெள்ளத் திகைப்பொடு பழுவஞ்சேர்ந்தான்."

அந்தச் சாபத்தால் திரிசங்குமன்னன் உடனே சண்டாளத் தன்மையையடைந்தனன். அவன் உடுத்தியிருந்த பட்டுவஸ்திரங்கள் கருத்தவஸ்திரமாகவும், பொன்னுபரணங்கள் இருப்பணிகளாகவும் பூனூல் தோல்வடமாகவும் கலவைச்சந்தனங்கள் மயானச்சாம்பலாகவும் மாறி, சரீரத்தின் காந்தி மழுங்கி குரூபியாய்விட்டனன். அவ்வரசனும் மறுநாள் தனது நகரம் அடைந்தபொழுது அவ்வரசனைக்கண்ணுற்ற அமைச்சர் முதலிய யாவரும் கிட்ட நெருங்காமல் ஓடிப்போயினர்.

உடனே அரசன் விஸ்வாமித்திரமுனிவர் தவஞ்செய்யும் இடத்தைத்தேடிப்போய் அம்முனிவரைக்கண்டு சரணமடைந்து தான் புலையனானதின் காரணத்தைத்தெரிவித்து, தான்விரும்பிய வேள்வியை முற்றுவிக்கவேண்டுமெனப் பணிந்துவேண்டினன். கௌஸிகமுனிவரும் அரசனுக்கு அபயமளித்து அரசனது வேண்டுகோளுக்கிணங்கி தாம் யாஜகராயிருந்துகொண்டு விதிப்

† வா-ரா. பா-கா. சரு 58. சு 12. ¶ கம்-ரா. பா-கா. மிதிலை 110,111.

பிரகாரம் யாகத்தை நடத்தினர். இவ்வியாகம் வேதோக்தமாய் இல்லாததினுல் அவிர்பாகம்வாங்க தேவர்கள் வாாமல் நின்று விடவே, முனிவர் வெகுண்டு நெய்த்துடுப்பை உயரவெடுத்துப் பிடித்து திரிசங்குவைநோக்கி,

‡ "பஶ்ய மே தபஸோ வீர்யம் ஸ்வார்ஜிதஸ்ய நரேஶ்வர |
ஏஷ த்வாம் ஸ்வஶரீரேண நயாமி ஸ்வர்க்கமோஜஸா ||
ஸ்வார்ஜிதம் கிம்சிதப்யஸ்தி மயா ஹி தபஸ: பலம் |
ராஜம்ஸ்த்வம் தேஜஸா தஸ்ய ஸஶரீரோ திவம் வ்ரஜ ||"

"அரசனே! என் தவத்தின் மகிமையால் யான் நின்னை இச் சரீரத்துடன்ஸ்வர்க்கலோகத்தையடையச்செய்கின்றேன். தவத்தின் சக்தி எனக்கிருப்பதுண்மையாயின் நீ தேவலோகம் அடையக்கடவை" என்றருளிச்செய்தவுடன், திரிசங்கு மேலெழுந்து ஸ்வர்க்கலோகத்தை அணுகினன். இவன் வருகையைக் கண்ணுற்று இந்திரன்,

‡ "த்ரிஶங்கோ கச்ச பூயஸ்த்வம் நாஸி ஸ்வர்க்ககৃதாலய: |
குருஶாபஹதோ மூட பத பூமிமவாக்ஶிரா: ||"

$ "ஆங்கவன்றுறக்கமெய்த வமரர்கள்வெகுண்டுநீசன்
ஈங்குவந்திடுவதென்னே யிருநிலத்திழிகவென்னத்
தாங்கலில் கவிழ்வான்மற்றுத் தாபதசரணமென்ன
ஓங்கினனின்னில்லென்ன வுரைத்துருமொக்க நக்கான்."

"அடா மூடா! நீ குருசாபத்தால் நீசனுனபடியால் இங்கு சிறிதிடமும் நினக்குக்கிடையா. நீ திரும்பவும் பூமிக்குச் செல்லக்கடவை." என தலைகீழாகத்தள்ளிவிட்டனன். திரிசங்குவும் "முனிவரே! உம்மைச் சரணமடைந்தேனுதலின் அடியேனைக் காப்பாற்றக்கடவீர்" என முறையிட்டுக்கொண்டு தலைகீழாக விழுந்தனன். முனிவரும் 'நில், நில்,' என்றுரைத்து பூமிக்கும் ஸ்வர்க்கத்திற்கும் மத்தியில் அரசனை நிறுத்திவிட்டனர்.

இதனுல் குருவை அதிகமாக நிர்பந்தம் செய்யலாகாதென்பதும், குலகுருவைவிட்டு வேறொருவரை ஆசிரியராக வரிக்கலாகாதென்பதும் ஸூசிதம்.



‡ வா-ரா. பா-கா. சரு 60 ச 13, 14, 17. $ கம்-ரா. பா-கா. மிதிலை 116.

## 2. ஸத் புத்திரரைப்பெறுதல்.

† " தஸ்ய த்வேவம் ப்ரபாவஸ்ய தர்மஜ்ஞஸ்ய மஹாத்மந: /
ஸுதார்த்தம் தப்யமாநஸ்ய நாஸீத் வம்ஶகர: ஸுத: // "

தசரதச்சக்கரவர்த்தியார் இப்படிப்பட்ட மகிமையுள்ளவராயும் தருமாத்துமாவாயுமிருந்தும் சந்தானத்துக்காக பலதவங்கள் செய்தும் அவருக்கு வம்சாபிவிர்த்திக்குரிய புத்திரன் உண்டாகவில்லை. அதனால் சக்கரவர்த்தியார் மிகவும் கவலையடைந்து வசிஷ்டர், வாமதேவர், ஜாபாலி முதலான குருமார்களை வரவழைத்து, அவர்களை நோக்கி,

○ " அறுபதினாயிர மாண்டு மாண்டுற
உறுபகை யொடுக்கி யிவ்வுலகை யோம்பினேன்
பிறிதொரு குறையிலை யெற்பின் வையகம்
மறுகுறுமென்பதோர் மறுக்கமுண்டரோ "

† " மம லாலப்யமாநஸ்ய புத்ரார்தம் நாஸ்தி வை ஸுகம் /
ததர்தம் ஹயமேதேந யக்ஷ்யாமீதி மதிர்மம // "

" ஓ, மஹரிஷிகளே! யான் அறுபதினாயிரம்வருஷம் நீதி தவறாமல் இராஜ்ஜியபரிபாலனஞ்செய்தேன். சகல சம்பத்திருந்தும், எனக்குப்பின் இராஜ்ஜியபாரத்தை வகிப்பதற்கும், எங்கள் குலத்தை விருத்திசெய்வதற்கும் தகுதியான புத்திரன் உண்டாகவில்லை. அதனால் எனது மனம் ஸதாகவலையுடனிருப்பதால் எனக்குக்கொஞ்சமும் சுகமுண்டாகவில்லை. ஆதலால் சந்தானமுண்டாகும்பொருட்டு அஸ்வமேதயாகஞ்செய்யவேண்டுமென எண்ணுகின்றேன். " என உரைத்தனர்.

சக்கரவர்த்தியாரின் வாக்கியங்களைக்கேட்ட ரிஷிசிரேஷ்டர்களும் அவ்விதஞ்செய்வது உசிதமெனக் கூறவே, சக்கரவர்த்தியார் வசிஷ்டமாமுனிவரின் அனுமதிபெற்று கலைக்கோட்டு மாமுனிவரை அழைத்துவந்து அஸ்வமேதயாகத்தை விதிப்பிரகாரம் நடத்தினார். அவ்வியாகம் நிறைவேறியபின் கலைக்கோட்டு மாமுனிவர் சக்கரவர்த்தியாரை நோக்கி,

† வா-ரா. பால-கா சரு8. சு 1, 8. ○ கம்-ரா. பால-கா. திருவவதார 3.

¶ " பவிஷ்யந்தி ஸுதாராஜந் சத்வாரஸ்தே குலோத்வஹா: / "

" அரசனே! கவலைப்படவேண்டாம் குலத்தை விருத்தி செய்யக்கூடிய நான்கு புத்திரர் உமக்கு உண்டாவார்கள். " என்றருளிச்செய்து புத்திரகாமேஷ்டியாகத்தையும் செய்வித்தனர். முனிவர் அருளிச்செய்த பிரகாரம்,

$ " ராஜ்ஞ: புத்ரா மஹாத்மாநஸ்சத்வாரோ ஜஜ்ஞிரே ப்ருதக்/
குணவந்தோऽநுரூபாஸ்ச ருச்யா ப்ரோஷ்டபதோபமா: // "

கௌஸல்யை, ஸுமித்திரை, கைகேயியென்னும் மூன்று பத்தினிமார்களிடத்து பூரட்டாதி, உத்திரட்டாதி நக்ஷத்திரங்களுக்கு நிகரானவர்களும் மிகுந்த ரூபவான்களும் நற்குணமுடையவர்களுமான நான்கு புத்திரர் தசரத மஹாராஜருக்கு அவதரித்தனர்.

(2) அயோத்திமாநகரில் ஸகரசக்கரவர்த்தியார் அரசுபுரிந்துவந்தனர். அவருக்கு கேசிநி, ஸுமதி என்ற இரண்டு பத்தினிகள் இருந்தனர். அவ்வரசன் பிள்ளையில்லாக் குறையினால் மிகவருந்தி,

‡ " தாப்யாம் ஸஹ ததா ராஜா பத்நீப்யாம் தப்தவாம்ஸ்தப: /
ஹிமவந்தம் ஸமாஸாத்ய ப்ருகு ப்ரஸ்ரவணே கிரௌ //
அத வர்ஷஶதே பூர்ணே தபஸாऽऽராதிதோ முநி: /
ஸகராய வரம் ப்ராதாத் ப்ருகு: ஸத்யவதாம்வர: //
அபத்யலாப: ஸுமஹாந் பவிஷ்யதி தவாநக / "

இரண்டு மனைவிமார்களோடு கூடி ஹிமயகிரியையடைந்து அங்கு ப்ருகுமஹரிஷி தவஞ்செய்துகொண்டிருந்த தபோவனத்தில் நூறுவருஷகாலம் தவஞ்செய்தனர். சக்கரவர்த்தியார் அபிப்பிராயத்தையறிந்து ப்ருகுமகாமுனிவர் 'ராஜனே! உமக்கு அநேகம் புத்திரர்கள் உண்டாவார்கள்.' என வரமளித்தனர். அவ்வாறே அரசனுக்கு கேசிநியென்பவளிடம் அஸமஞ்சனெனும் ஒரு புத்திரனும், ஸுமதியென்பவளிடம் அறுபதினாயிரம் புத்திரர்களும் உண்டானார்கள்.

¶ வா-ரா. பால-கா. சரு 14. சு 60. $ வா-ரா. பால-கா. சரு 18. சு 16.
‡ வா-ரா. பால-கா. சரு 38. சு 5, 6, 7.

(3) திலீபமஹாராஜனது புத்திரரும், ராஜரிஷியுமான பகீரதமஹாராஜர்,

† "அநபத்யோ மஹாதேஜா: ப்ரஜாகாம: ஸசாப்ரஜ: |
மந்த்ரிஷ்வாதாய தத்ராஜ்யம் கங்காவதரணே ரத: ||
ஸ தபோ தீர்க்கமாதிஷ்டத் கோகர்ணே ரகுநந்தந |
ஊர்த்வபாஹு: பஞ்சதபா மாஸாஹாரோ ஜிதேந்திரிய: ||
தஸ்ய வர்ஷஸஹஸ்ராணி கோரே தபஸி திஷ்டத: |

தமக்குப் புத்திரன் பிறவாமையால் இராஜ்ஜியத்தை மந்திரிகள்வசம் ஒப்புவித்து கோகர்ணமலைச்சாரலையடைந்து நான்கு பக்கத்திலும் அக்கினியை வளர்த்து அதன் மத்தியில் நின்று, மேலே சூரியனைப்பார்த்துக்கொண்டு தமது இருகரங்களையும் உயர்த்தி, மாதத்திற்கொருதரம் சிறிதுணவுண்டு, புலன்களை யடைக்கி அநேகமாயிரம் வருஷங்கள் தவம்புரிந்தனர். அப்பொழுது பிரம்மதேவர் பிரத்தியக்ஷமாகி 'அரசனே! வேண்டிய வரத்தைக் கேட்கக்கடவை.' என்றருளிச்செய்ய, பகீரதமஹாராஜரும் நான்முகக்கடவுளை வந்தனஞ்செய்து கைகூப்பிநின்று,

† "தேயா ச ஸந்ததிர்தேவ நாவஸீதேத்குலம் ச ந: |
இக்ஷ்வாகூணாம் குலே தேவ ஏஷ மே஽ஸ்து வர: பர: ||"

"ஓ ஸ்வாமி! இக்ஷ்வாகுவம்சம் அற்றுப்போகாமல் விருத்தியாகும்பொருட்டு அடியேனுக்குப் புத்திரன் உண்டாக அனுக்கிரகிக்கவேண்டும்" எனப்பிரார்த்தித்தனர். பிரம்மதேவரும்—

† "ஏவம் பவது பத்ரம் தெ இக்ஷ்வாகு குலவர்த்தந |"

"இக்ஷ்வாகு குலத்தை விருத்திசெய்பவனே! நீ கேட்டுக்கொண்டபடி உண்டாகும்." என அருளிச்செய்து அந்தர்த்தானமாயினர். அவ்வாறே மஹாராஜரும் ஸத்புத்திரனையடைந்தனர்.

இவைகளினால் உலகில் ஒருவன் வேண்டிய அளவு செல்வமும் கீர்த்தியும் பெற்றிருந்தாலும், மக்கட்செல்வமொன்றைப் பெறுவிடில் அவையனைத்தும் பயனில்லையென்பதும், விரதாதி சத்கர்மாக்களை யனுஷ்டித்தாவது சத்புத்திரரைப் பெறுவதற்கு முயற்சித்தலவசியமென்பதும் ஸூசிதம்.

† வா-ரா பால-கா சரு 42. சு 11, 12, 13, 14, 21, 23.

" பொன்னுடையரேனு புகழுடையரேனுமற்
றென்னுடையரேனு முடையரோ — இன்னடிசிற்
புக்களையுந் தாமரைக் கைப்பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங்கிலாதவர். " (நளவெண்பா)

" பெறுமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த
மக்கட்பேறல்ல பிற. " (குறள்)

" தபோ வாப்யத வா யஜ்ஞோ யச்சாந்யத்பாவநம் மஹத் /
தத்ஸர்வம் ந ஸமம் தாத ஸந்தத்யேதி ஸதாம் மதம்// "(பாரதம்)

" தவம், யஜ்ஞம், மற்றும் பெரிய புண்ணிய கர்மாக்கள் இவையெல்லாம் சந்ததிக்குச் சமானமல்லவென்று ஸாதுக்கள் நினைக்கின்றனர். "

" புத்ரேணைவ ஹி ஜய்ய: மனுஷ்யலோக: / "

மனுஷ்யலோகம் புத்திர சந்தானத்தினால் மாத்திரம் ஜயிக்கத்தகுந்தது. இந்த ஆதாரங்கள் இங்கு நோக்கத்தக்கன.

இவ்வாறு புதல்வரைப்பெறுதலின் சிறப்பும், பெறவேண்டியதின் ஆவசியகமும் கூறப்படுவதால் புதல்வரைப் பெறுதலாலடையும் பிரயோஜனம் யாது? எனில், இம்மைப்பலன்கள்- (1) தமது குழந்தைகளை எடுத்துக் கட்டியணைத்துக்கொள்ளுதலால் உடற்கின்பமும், (2) அவர்களது மழலைச்சொற்களைக் கேட்பதால் செவிக்கின்பமும், (3) அவர்களது சிறுகைகளாலளையப்பட்ட உணவுகளை உட்கொள்ளுதலால் நாவிற்கு அமிர்தமும், (4) அவர்களது விளையாடல்களைக் காணுதலால் கண்களுக்கு ஆனந்தமும் ஆகிய நான்கு.

" மக்கள் மெய்தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்டலின்பஞ் செவிக்கு. " (குறள்)

" அமிழ்தினுமாற்ற லினிதே தம்மக்கள்
சிறுகை யளாவியகூழ். " (குறள்

" சொன்னகலையின் றுறையனைத்துந் தோய்ந்தாலும்
என்னபயனுடைத்தா மின்முகத்து — முன்னங்
குறுகுதலைக் கிங்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச்செவி. (நளவெண்பா

" கல்லாமழலைக் கனியூறல்கலந்துகொஞ்சுஞ்
சொல்லாலுருக்கியமு தோடித்தொடர்ந்துபற்றி
மல்லார்புயத்தில் விளையாடு மகிழ்ச்சிமைந்த
ரில்லாதவர்க்கு மனைவாழ்வினினிமையென்னும். " (பாரதம்)

" இனியதே திருச்செவிக் கிளங்குதலையரின்சொல். "

"சகுந்தலை துஷ்யந்தமஹாராஜனை நோக்கி, " பொதியமலையிலுண்டான சந்தனம் மிகக்குளிர்ச்சியென்று சொல்லுகின்றனரே! அந்தச் சந்தனத்தைக்காட்டிலும் தன்குழந்தையைத் தழுவுவது மேற்பட்டதாகும். தன்பிள்ளை குழந்தைப்பருவத்தில் கட்டிக்கொள்ளும்போது அவனைத் தொடுவது எவ்வாறு இனிமையாக இருக்குமோ அவ்வாறு நல்ல வஸ்திரங்கள் படுவதும் ஸ்திரீகளைத் தழுவுவதும் ஜலத்தில் ஸ்நானஞ்செய்வதும் ஸுகமாகவிரா. புத்திரன் மேலே தொடுவதைப் பார்க்கிலும் அதிக இனியஸ்பர்சம் உலகத்தில் இல்லை" என உறைத்தனள். (பாரத-மொழிபெயர்ப்பு-ஆதிபர்வம்) இவை நோக்கத்தக்கன.

கண்ணபிரானுடைய இளம்பருவத்தின் திருவிளையாடல்களை அநுபவிக்கப்பெறுமற் இழந்துபோனதற்காக தேவகியார் அனுதாபப்பட்டதாக, குலசேகரப்பெருமான் அருளிச்செய்த,

" மருவும்நின்திரு நெற்றியில் சுட்டியசைதர
மணிவாயிடை முத்தம்
தருதலும் உன்தன் தாதையைப்போலும்
வடிவுகண்டுகொண்டு உள்ளம் உள்குளிர
விரலைச்செஞ்சிறு வாயிடைச்சேர்த்து
வெகுளியாய் நின்றுரைக்கும் அவ்வுரையும்
திருவிலேன் ஒன்றும் பெற்றிலேன் எல்லாம்
தெய்வநங்கையசோதைபெற்றாளே. "

" தண்ணந்தாமரைக் கண்ணனே! கண்ணு!
தவழ்ந்தெழுந்து தளர்ந்ததோர்நடையால்
மண்ணில்செம்பொடியாடிவந்துஎன்தன்
மார்வில்மன்னிடப்பெற்றிலேன் அந்தோ!
வண்ணச்செஞ்சிறு கைவிரலனைத்தும்
வாரிவாய்க்கொண்ட அடிசிலின் மிச்சில்
உண்ணப்பெற்றிலேன் ஓ! கொடுவினையேன்
என்னைஎன்செய்யப்பெற்றது எம்மோயே! "

என்ற பாசுரங்கள் இங்கு கவனிக்கத்தக்கன.

மறுமைப்பலன்கள், (1) ருணநிவர்த்தகத்வம் (2) நரகோத்தாரகத்வம் (3) உத்தமலோகப்ராபகத்வம் (4) வம்சாபிவிருத்திகரத்வம் என நான்கு.

(1) ருணநிவர்த்தகத்வமாவது, பிதுர்க்கடனிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளுதல்.

சந்ததியில்லாமையால் பெருந்துயரமடைந்த பாண்டுராஜன் தமது பத்தினியாகிய குந்திதேவியை நோக்கி,

† "பெண்ணே! பிதிர்க்கள், தேவர்கள், மனிதர்கள், ரிஷிகள் ஆகிய நால்வர் விஷயத்திலும் கடன்பட்டவனாகவே மனிதன் பூமியிற் பிறக்கிறான். எவன் தருமத்தையறிந்து அந்தந்தக்காலங்களில் இந்தக்கடன்களிலிருந்து தன்னை விடுவித்துக்கொள்ளாமலிருப்பனோ அவனுக்கு நல்ல லோகங்களில்லை என்று லோகங்களையறிந்தவர் நினைக்கின்றனர். தேவர்களை யஜ்ஞங்களினாலும், ரிஷிகளை வேதாத்தியயனம் செய்வதனாலும் தவம்செய்வதனாலும் பிதிர்க்களை புத்ரஸந்தானத்தை உண்டுபண்ணுவதனாலும் சிராத்தம்செய்வதனாலும், மனிதர்களை அன்பினாலும் (மனிதன்) ஆராதிக்கவேண்டும். நான் என் தர்மத்தைச்செய்து ரிஷிகள், தேவர்கள், மனிதர்கள் இவர்களுடைய கடன்களிலிருந்து என்னை விடுவித்துக்கொண்டேன். பிதிர்க்களின் கடனிலிருந்துமாத்திரம் விடுவித்துக்கொள்ளவில்லை. அந்தக்கடன் மற்றவற்றைவிடப்பெரிது. எனது தேகம் போகும்போது பிதிர்க்களுக்கே நாசம்வருமென்பது நிச்சயம். மற்றமூன்றுக்குமகெடுதல்வரும்போது தான்மட்டும் கெடுவன். ஆதலால், இந்த லோகத்தில் புத்திரஸந்தானம் கிடைப்பதற்காக உத்தமர்களான பிராம்மணர்கள் பிரவர்த்திக்கின்றனர்." என்று உரைத்திருப்பதால், சத்புத்திரனைப் பெறுவதினால் பிதிர்க்கடனிலிருந்து தன்னை விடுவித்துக்கொண்டவனாக ஆகிறான்.

"மென்பாலகரைப் பயவாதவர் மெய்ம்மையாகத்
தென்பாலவர்தம் பசிதீரனி தீர்க்கமாட்டார்." (பாரதம்)

(2) நரகோத்தாரகத்வம், அதாவது நரகத்தினின்றும் கரையேற்றப்படுதல்.

---

† ஸ்ரீமஹாபாரதம் மொழிபெயர்ப்பு ஆதிபர்வம்.

¶ " புந்நாம்நோ நாகாத்ராயத இதி புத்ர: / "
" புந்நாம்நோ நாகாத் யஸ்மாத் பிதரம் த்ராயதே ஸுத: /
தஸ்மாத் புத்ர இதிப்ரோக்த: பித்ருந் யத்பாதிவைஸுத://"

" பிள்ளையானவன் பிதாவையும், பிதிர்க்களையும், புத், என்னும் நரகத்தில் வீழ்ந்தழுந்தாமல் காக்கின்றமையால் புத்திரனெனப்படுகின்றனன். " இதனுல் சத்புத்திரனைப்பெறுவதால் பிதா நரகத்தில்வீழாமல் காப்பாற்றப்படுகின்றான்.

$ " ஒருசமயம் அகஸ்தியபகவான் தம்முடைய பித்ருக்கள் ஒருபள்ளத்தில் தலைகீழாகத் தொங்குவதைக்கண்டார். அவர், தொங்குகிற அந்தப் பித்ருக்களைப்பார்த்து, 'பகவான்களான நீங்கள் எதில்விருப்பமுள்ளவர்கள்? இந்தப்பள்ளத்தில் நீங்கள் தலைகீழாக எதற்காகத் தொங்குகிறீர்கள்?' என்று கேட்டார். பிரம்மவாதிகளான அவர்கள், 'ஸந்தானத்தின்பொருட்டு' என்று மறுமொழி கூறினுர்கள். அவர்கள், 'நாங்கள் உன்னுடைய சொந்தப் பித்ருக்கள். இந்தப்பள்ளத்தை அடைந்து ஸந்ததியை எதிர்பார்த்துக்கொண்டு தொங்குகிறோம். அகஸ்திய! எங்களுக்காக உத்தமமான பிள்ளையை நீ உண்டுபண்ணுவையாகில் எங்களுக்கு இந்த நரகத்தினின்று மோக்ஷம் உண்டாகும். புத்திரனே! நீயும் நற்கதியை அடைவாய்' என்று அவருக்குச்சொன்னுர்கள். தேஜஸுள்ளவரும் ஸத்யத்திலும் தர்மத்திலும் நிலைபெற்றிருப்பவருமான அவர் அவர்களைப்பார்த்து, 'பித்ருக்களே! (உங்களுடைய) விருப்பத்தைச்செய்வேன். உங்களுடைய மனத்திலுள்ள நோய் நீங்குக' என்று சொல்லிவிட்டு, அகஸ்தியர் விதர்ப்பதேசத்தரசனை அடைந்து, 'அரசனே! புத்திரனை அடைவதற்காக எனக்கு விவாஹம்செய்துகொள்வதில் எண்ணம் இருக்கிறது பூபாலனே! உன்னிடம் லோபாமுத்திரையை வரிக்கிறேன்; எனக்குக் கொடு' என்று சொன்னுர். அந்த விதர்ப்பராஜன் மஹாத்மாவான அகஸ்தியருக்கு லோபாமுத்திரையைச் சாஸ்திரவிதியைமுன்னிட்டுத் தானம்செய்தான். அகஸ்தியரோ லோபாமுத்திரையை மனைவியாக அடைந்து, அவளிடத்தில் த்ருடஸ்யு என்றபுத்திரனை உண்டுபண்ணினுர்." இந்த இதிஹாஸம் இங்கு நோக்கத்தக்கது.

¶ வா-ரா. அ-கா. சரு 107.
$ மகாபாரதம் மொழிபெயர்ப்பு வனபர்வம்.

(3) உத்தமலோகப்ராபகத்வம்:— அதாவது புண்ணியலோகம் சேருதல்.

" புத்ரேண லோகாந்ஜயதி/ " " புத்திரனால் லோகங்களை ஜெயிக்கிறான். "

" நாபுத்ரஸ்ய லோகோஸ்தி/ " " புத்திரனில்லாதவன் நல்லுலகையடையமுடியாது. " என்றதினால் சத்புத்திரனைப்பெறுதலால் சுவர்க்கலோகமடைகிறான்.

" கைதவந்தா னீக்கிக் கருத்திற்கறைபகற்றிச்
செய்தவந்தா னெத்தனையுஞ் செய்தாலும் — மைதீர்
மகப்பெற மானிடர்கள் வானவர்தம் மூர்க்குப்
புகப்பெறார் மாதராய் போந்து. " (நளவெண்பா)

" மெய்தானம்வண்மை விரதந்தழல் வேள்விநளுஞ்
செய்தாலுஞாலத்தவர் நற்கதிசென்று சேரார்
மைதாழ்தடங்கண் மகவின்முக மன்னுபார்வை
யெய்தாதொழியிற்பெறு மின்பமிவணுமில்லை. (பாரதம்)

இந்த ஆதாரங்களும்,

○ ஜரத்காரு என்பவரைநோக்கி, அவருடைய பிதிர்க்கள்கூறியது.

" நாங்கள் யாயாவரர்களென்று பெயருள்ள உக்கிரமான தவமுள்ள ரிஷிகள், பிராம்மணா! ஸந்ததி குறைந்துபோனதினால் பூமிக்குக்கீழே போய்க்கொண்டிருக்கிறோம். அதிர்ஷ்டமில்லாத எங்களுக்கு அதிர்ஷ்டஹீனனான ஜரத்காரு என்னப்பட்ட ஒருவன்தான் ஸந்ததியாயிருக்கின்றான். அந்த மூடன் தவம் ஒன்றையே பற்றியிருப்பதினால் புத்திரர்களைப் பெறுவதற்குக் காரணமான விவாஹத்தைச் செய்துகொள்ள விரும்பாமலிருக்கிறான்; அவனுக்குச் சந்ததியில்லாமற் போனதினால் எங்களுக்கு நாதனாக அவனிருந்தும், நாங்கள் பாபஞ்செய்தவர்களைப்போல நாதனற்று இந்தப்பள்ளத்தில் தொங்குகிறோம்; மனுஷ்யலோகத்தில் எவர்களுக்குச் சுகந்தரத்தகுந்த ஸந்ததி இல்லாமலிருக்கிறதோ அவர்கள் புண்ணியஞ் செய்தவர்களாயினும் அவர்களுக்கு ஸ்வர்க்கத்தில் ஸ்தானமில்லை. " என்றனர். ஜரத்காரு ரிஷியும் பிதிர்க்கள் சுவர்க்கமடைவதன்பொருட்டு விவாஹஞ்செய்துகொண்டு ஆஸ்திகரென்னும் புத்திரனைப்பெற்றனர்.

○ மஹாபாரத மொழிபெயர்ப்பு ஆதிபர்வம்.

‡ ஆத்மநிஷ்டரான மந்தபாலர் என்னும் மஹாரிஷி தவத்தின் கரையை அடைந்திருந்தும் அவர் தேகம்விட்டபிறகு சுவர்க்கலோகம் கிடைக்காததினால் தேவர்களை நோக்கி "என் தவத்தினால் சம்பாதிக்கப்பட்ட புண்ணியலோகங்கள் ஏன் மூடப்பட்டிருக்கின்றன?" என்று கேட்டனர். அதற்குத் தேவர்கள் "பிராம்மணரே! நீர் பிரம்மசாரிவிரதமும் இருந்தீர்; யாகங்களுஞ்செய்தீர்; ஆனால் உமக்குச் சந்ததிமட்டும் இல்லை. உமக்குச் சந்ததியில்லாமைபற்றி இந்த உலகங்கள் மூடப்பட்டிருக்கின்றன. ஆதலால், சந்ததியையுண்டுபண்ணும்; இந்த உலகங்களைப் பூர்ணமாக அனுபவிப்பீர். 'புத் என்னும் நரகத்திலிருந்து பிதாவைக் காப்பாற்றுகிறான்.' என்பதனால் புத்ரன் என்று பெயர். பிராம்மணச்ரேஷ்டரே! ஆதலால், புத்ரஸந்தானம் உண்டாக்குவதற்கு முயற்சிசெய்யும்." என்றனர். தேவர்கள்சொன்னதைக்கேட்டு மந்தபாலரிஷி சாரங்கபக்ஷி ரூபமெடுத்து ஜரிதையென்னும் பெயருள்ள பெண்சாரங்கியை மணந்து அதனிடம் நான்கு புத்திரர்களை உண்டாக்கினர் இந்த இதிஹாஸங்களும் நோக்கத்தக்கன.

(4) வம்சாபிவிருத்திகாத்வம்:— அதாவது சந்ததியைப் பெருகச்செய்தல்.

"ப்ரஜாதந்தும் மாவ்யவச்சேத்ஸீ: ||" (சுருதிவாக்கியம்)
"வம்சத்தின் தொடர்பை அறுத்துவிடாதே." என்றிருப்பதால் புத்திரனைப்பெறுவதனால் வம்சத்தை விருத்திசெய்தவனாகிறான். மேலும்

"ஸப்தாவராந்ஸப்த பூர்வாந் ஷடந்யாநாத்மஸப்தமாந் |
ஸத்புத்ரமதிகச்சாநஸ்தாரயத்யேநஸோ பயாத் |
தஸ்மாத்ப்ரஜாஸந்தாநமுத்பாத்ய பலமவாப்நோதி |"

என்றபடி "ஒரு சத்புத்திரனால் இருபத்தொரு தலைமுறைகளிலுள்ளவர்கள் நரகபயத்தினின்று காப்பாற்றப்படுகிறார்களாகையால், சந்தானத்தை விருத்திசெய்தது பலத்தையடைகிறான்." என்று ஆன்றோர் வசனமிருப்பதால் வம்சத்தை விருத்திசெய்யவேண்டியது அவசியமாகின்றது.

உதாரணம்:— விச்வாமித்திரமுனிவர் ஸ்ரீராமபிரானை நோக்கி,

"பகீரதோபி ராஜர்ஷிர்கங்காமாதாய யத்நத: |
பிதாமஹாந்பஸ்மக்ருதாநபச்யத்தீநசேதந: ||
அத தத்பஸ்மாநாம ராசிம் கங்காஸலிலமுத்தமம் |
ப்லாவயத்தூதபாப்மாந: ஸ்வர்கம் ப்ராப்தா ரகூத்தம ||"

‡ மஹாபாரத மொழிபெயர்ப்பு ஆதிபர்வம்.

"ரகுகுல சிரேஷ்டா! பகீரதன் என்னும் ராஜரிஷி, கபிலமுனிவரின் கோபத்தினால் தமது மூதாதையர்களான அறுபதினாயிரம் ஸகரர்களும் எரிந்து பஸ்மமாய் கிடப்பதைத்தெரிந்து, துயரமடைந்து கடுந்தவம்புரிந்து தேவலோகத்தினின்றும் கங்கையை பூலோகத்திற்குக் கொணர்ந்து, அந்த ஜலத்தினால் அப்பஸ்மத்தின் குவியல்களை நனைத்துப் புனிதமாக்கினான். ஸகரர்களும் பாபம் நீங்கப்பெற்று பரிசுத்தராகி சுவர்க்கமடைந்தனர்." என்ற ஸ்ரீராமாயணமும்,

"ஆளுநன்னெறிக்கமை வருமமைவினனாகி
நாளுநங்குலநாயகனறைவிரிகமலத்
தாளினல்கிய கங்கையைத்தந்து தந்தையரை
மீள்வில்லின்னுலகேற்றினனொரு மகன்மேனாள்."

என்ற கம்பராமாயணமும்.

"த்ரிஸப்தபி: பிதாபூத: பித்ருபி: ஸஹ தே஽நக |
யத் ஸாதோ஽ஸ்ய க்ருஹே ஜாதோ பவாந்வை குலபாவந:||"

"பகவான் (நரசிம்மமூர்த்தி) பிரஹ்லாதரை நோக்கி 'ஓ ஸாதுவே குலத்தைப் பரிசுத்தப்படுத்துகிறவனான நீ இந்த குலத்தில் ஜனித்தபடியால் உன்னுடையபிதா இருபத்தொருதலைமுறைகளுடன் சுத்தனானான்.' என அருளிச்செய்தனர். என்ற ஸ்ரீபாகவதமும் கவனிக்கத்தக்கன.



## 3. தந்தைதாயர் தருமம்.

அதாவது பிதாமாதாக்கள் தம் புத்திரர் விஷயமாய் அனுஷ்டிக்கவேண்டிய கடமை.

(1) ஜாதகர்மோத்ஸவம்:—

தசரதச் சக்கரவர்த்தியாருக்கு கௌஸல்யை, சுமித்திரை, கைகேயி என்னும் மூன்று பத்தினிமார்களிடத்தில் நான்கு புத்திரர்கள் அவதரித்தபொழுது,

† "ஜகு: கலம் ச கந்தர்வா நந்ருதுச்சாப்ஸரோகணா: |
தேவதுந்துபயோ நேது: புஷ்பவ்ருஷ்டிச்ச காச்யுதா |
உத்ஸவச்ச மஹாநாஸீத் அயோத்யாயாம் ஜநாகுலா: ||"

† வா-ரா. பா-கா. சரு 18, சு 17, 18.

கந்தருவர் மதுரமாகப் பாடினார்கள்; அப்ஸரஸ்திரீகள் நர்த்தனஞ்செய்தார்கள்; தேவவாத்தியங்கள் முழங்கின; ஆகாயத்தினின்று புஷ்பவருஷம் வருஷித்தது; அயோத்தியாபுரியி லுள்ள ஜனங்களுக்கு ஒரு பெரிய உத்ஸவமுண்டாயிற்று. அந்தக்காலத்தில்,

† " ப்ரதேயாம்ஸ்ச ததௌ ராஜா ஸூதமாகதவந்திநாம் /
ப்ராஹ்மணேப்யோ ததௌ வித்தம் கோதநாநி ஸஹஸ்ரஸ:||"

○ " ததா க்ராமஸஹஸ்ராணி ப்ராஹ்மணேப்யோ முதா ததௌ/
ஸுவர்ணாநி ச ரத்நாநி வாஸாம்ஸி ஸுரபி: ஸுபா|| "

$ " மாமுனிதன்னொடு மன்னர்மன்னவன்
ஏமுறப்புனல்படீஇ வித்தோடின்போநள்
தாமுறவழங்கிவெண்சங்கமார்ப்புறக்
கோமகர் திருமுகங்குறுகி நோக்கினான். "

சக்கரவர்த்தியார் உடனே ஸ்நானஞ்செய்துவந்து, ஸூதமாகதவந்திகளுக்கு வஸ்திரபூஷணாதிகளை வெகுமதிசெய்து பிராம்மணர்களுக்கு அநேகம் கிராமங்கள், ரத்தினங்கள், ஸுவர்ணங்கள், விதைகள், பசுக்கள், முதலான பலதானங்கள் தக்ஷிணைகளுடன் தானஞ்செய்தனர்.

இதனால் புத்திரன் பிறந்தவுடன் பிதா ஸ்நானஞ்செய்துவந்து, விதை, பசு, ஸுவர்ணம், முதலான தானங்கள் செய்யவேண்டியது அவசியமென்பது ஸூசிதம். ஏனெனில்,

" தேவாஸ்ச பிதரஸ்சைவ புத்ரே ஜாதே த்விஜந்மநாம் /
ஆயாந்தி தஸ்மாத்ததஹ: புண்யம் பூஜ்யம் ச ஸர்வதா ||
தத்ர தத்யாத்ஸுவர்ணம் ச பூமிம் காம் துரகம ரதம் /
சத்ரம் ச கந்தமால்யம் ச ஸயநம்சாஸநம் க்ருஹம் || "
(வியாஸர்)

என்றபடி, புண்ணியதினங்களில் திருவிழாவும், திருவிழாக் காலங்களில் புண்ணியகாலமும் எப்பொழுதும் சேர்ந்துவருவதில்லை. ஆனால் புத்திரன் ஜனித்தபொழுது அந்த கிருஹத்துக்கு தேவர்களும் பிதிர்க்

† வா-ரா. பா-கா. சரு 18. சு 20.
$ கம்-ரா. பா-கா திருவவ 112. ○ அத்யாத்ம ராமாயணம்.

களும் வருகிறார்களாதலால் அந்தத்தினம் புண்ணியதினமாகவும், திருவிழா நாளாகவும் ஏற்படுகிறது. ஆகையால் அந்தக்காலத்தில் தேவர்களையும், பிதிர்க்களையும் திருப்திசெய்விக்குமபொருட்டு பிதாவானவன் ஸ்நானஞ் செய்து தானங்கள் வழங்கவேண்டுமென்பது கருத்து.

இந்தவிதியையனுசரித்து, ஸ்ரீகிருஷ்ணபகவான் அவதாரயானவுடன் பிதாவான வசுதேவர் ஜெயிலில் அடைபட்டிருந்தும் " க்ருஷ்ணாவதாரோத்ஸவ ஸம்ப்ரமோஸ்ப்ருஸாம்முதா த்விஜேப்யோஸயுதமாப்லுதோ கவாம் | " என்றபடி சந்தோஷத்தில்மூழ்கி லக்ஷம் பசுக்களை பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தார் என்ற ஸ்ரீபாகவதமும்,

" நந்தஸ்த்வாத்மஜ உத்பந்நே ஜாதாஹ்லாதோமஹாமநா: |
ஆஹூய விப்ராந்தைவஜ்ஞாந்ஸ்நாத: ஸுசிரலம்க்ருத: ||
வாசயித்வா ஸ்வஸ்த்யயநம் ஜாதகர்மாத்மஜஸ்ய வை |
காரயாமாஸ விதிவத்பித்ருதேவார்சநம் ததா ||
தேநூநாம் நியுதே ப்ராதாத்விப்ரேப்ய: ஸமலம்க்ருதே |
திலாத்ரீந்ஸப்த ரத்நௌகஸாதகௌம்பாம்பராவ்ருதாந் || "

" கோகுலத்தில் நந்தர் தமக்குப் புத்திரன் ஜனித்ததைக்கண்டு மிகுந்த சந்தோஷமடைந்து உடனே ஸ்நானஞ்செய்துவந்து அலங்காரஞ் செய்துகொண்டு பரிசுத்தமுடன்கூடி வேதமந்திரங்களறிந்த பிராமமணர்களை அழைப்பித்து விதிப்பிரகாரம் குழந்தைக்கு ஜாதகருமம் செய்வித்து பிதிர்க்கள் தேவர்கள் இவர்களுடைய பூஜையையும் நடத்தி பிராம்மணர்களுக்கு, அலங்காரஞ்செய்யப்பட்ட லக்ஷம் பசுக்களையும் மற்றும் ஸுவர்ணம், ரத்நம், வஸ்திரம் முதலானவைகளையும், ஏழு திலபருவதங்களையும் தானஞ்செய்தனர் " என்ற ஸ்ரீபாகவதமும்,

" பிள்ளைவந்து பிறந்தனனென்றலும்
வள்ள லுள்ளமகிழ்ந்திரவோர்க்கெலாம்
அள்ளிநீரறையத்திறந்தேழுநாள்
கொள்ளைகொண்மினெனக்கொடுத்தானரோ. "

என்றபடி தமக்கு புத்திரன் ஜனித்ததைக் கேட்டவுடன் அரிச்சந்திர மஹாராஜன் மிக்கக்களிப்படைந்து தமது பொக்கிஷ துரையைததிறந்து ஜனங்கள் தங்கள் இஷ்டப்பிரகாரம் வேண்டும் திரவியங்களையெடுத்துக் கொள்ளும்படி அனுமதியளித்தனர் என்ற அரிச்சந்திர புராணமும், இங்கு கவனிக்கத்தக்கன.

(2) **நாமகரணம்முதலான ஸம்ஸ்காரங்கள்:—**

‡ “அதீத்யைகாதசாஹம் து நாமகர்ம ததாகரோத் /
ஜ்யேஷ்டம்ராமம் மஹாத்மாநம் பரதம் கைகயீஸுதம் /
ஸௌமித்ரிம் லக்ஷ்மண இதி சத்ருக்நமபரம் ததா //
வஸிஷ்ட: பரமப்ரீதோ நாமாநி க்ருதவாம்ஸ்ததா /
தேஷாம் ஜந்மக்ரியாதீநி ஸர்வகர்மாண்யகாரயத் //
ஸர்வே வேதவித: சூரா: ஸர்வே லோகஹிதே ரதா: /
ஸர்வே ஜ்ஞாநோபபந்நாச்ச ஸர்வே ஸமுதிதா குணை: // ”

¶ “இத்தகைமாநகரீரறுநாளும்
சித்தமுறுங்களியோடுசிறந்தே
தத்தமையொன்றுமுணர்ந்திலராவா
மெய்த்தவனும்மம் விதிப்பமதித்தான்.”

“சௌளமொடுபநயம் விதிமுறைதருகுற்
றிவளவெனவொருகரைபிறிதிலவா
உவன்தருமறையினொடொழிவறுகலையும்
தவன்மதிபுனையானிகர் முனிதரவே.”

“யானையுமிரதமுமிவளியமுதலா
ஏனையபிறவுமவ்வியல்பினினடையுற்
றானுறுபடைபல சிலையொடுபயிலா
வானவர்தனிமுதல் கிளையொடுவளர.”

புத்திரர்கள் நால்வரும் அவதரித்த பன்னிரண்டு தினங்கள் கழிந்தபின் சக்கரவர்த்தியார் கௌஸல்யாபுத்திரருக்கு இராமரென்றும், கைகேயி புத்திரருக்கு பரதரென்றும், சுமித்திரை குமாரர்களில் மூதத பிள்ளைக்கு இலக்ஷ்மணரென்றும், இளையவருக்கு சத்துருக்னனென்றும வசிஷ்டமாமுனிவரைக் கொண்டு நாமகரணஞ்செய்வித்து, அப்படியே உரியகாலங்களில் அன்னப்ராசந சௌள உபநயனம் முதலான ஸம்ஸ்காரங்களையும் செய்வித்து, அவர்கள் வேதாத்யயனம செய்யும்பொருட்டு தகுந்த குருவினிடம் ஒப்புவித்தனர்.

‡ வா-ரா. பா-கா. சரு 18. சு 21, 22, 23, 25, 27.
¶ கம்-ரா. பா-கா. திருவவ. 119, 127, 128.

*நால்வரும், சகலவேதங்களை அத்யயனஞ்செய்துப், தநுர் வேதம், யானையேற்றம், குதிரையேற்றம் முதலான சகல வித்தைகளில் தேர்ச்சியடைந்தும், சகலலோகஹிதங்களில்பிரீதி யுடையவர்களாகவும், ஜ்ஞானமுள்ளவர்களாகவும் ஆனார்கள்.*

இதனால் பிதாவானவன் புத்திரனுக்கு ஜாதகர்மமுதல் உப நயனபரியந்தமுள்ள ஸம்ஸ்காரங்களை உரியகாலங்களில் செய் வித்து அதன்பின் அவனை, "தந்தைமகற் காற்றும் நன்றி அவை யத்து, முந்தியிருப்பச் செயல்." என்றபடி நல்ல ஆசானிடம் ஒப்புவித்து ஸகல சாஸ்திரங்களிலும் தேர்ச்சியடையும்படி செய் விக்கவேண்டுமென்பது ஸூசிதம்.

(3) ஸமாவர்த்தநோசிதகாலம்:—

† "அத ராஜா தசரதஸ்தேஷாம் தாரக்ரியாம் ப்ரதி /
*சிந்தயாமாஸ தர்மாத்மா ஸோபாத்யாய: ஸ பாந்தவ: //"*

*பிறகு தசரதச்சக்கரவர்த்தியார் தமது புத்திரர் நால்வருக் கும், குலம், சீலம், வயது, ரூபம் முதலிய குணங்களில் ஏற்ற வர்களான கன்னிகைகளைத்தேடி விவாஹம் செய்விக்கும் பொருட்டு மந்திரிகள், புரோஹிதர், பந்துக்கள் முதலானோரை அழைப்பித்து ஆலோசனைசெய்தனர்.*

இதனால் புத்திரர் குருகுலவாஸம்செய்து வித்தைகளைக் கற்று முடிந்தபின்பு பிரம்மசரிய ஆச்சிரமத்தின் விரதங்களை முடிக் கும்படிசெய்து அவர்கள் கிருஹஸ்த தருமங்களையனுஷ்டிக்கும் பொருட்டு பிதாவானவர் அவர்களுக்கேற்ற கன்னிகைகளைத் தேடி விவாஹம்செய்துவைக்கவேண்டுமென்பது ஸூசிதம்.

*"வேதாநதீத்ய வேதௌ வா வேதம் வாபி யதாக்ரமம் /
அவிப்லுத ப்ரஹ்மசர்யோ லக்ஷண்யாம் ஸ்த்ரியமுத்வஹேத் //"*

*மூன்று வேதங்களையாவது, இரண்டுவேதங்களையாவது, கிரமப்படி ஓதி ஸமாவர்த்தனஞ்செய்து ஏற்றகன்னிகையை மணந்து கிருஹஸ்த தருமத்தை நடத்தவேண்டும்." என்ற ஸ்மிருதி வாக்கியம் இங்கு நோக்கத்தக்கது.*

† வா-ரா. பா-கா. சரு 18. சு 39.

(4) குடும்பத்தை ஒப்புவித்தல்:—

முதுமைப்பருவமடைந்தவரான தசரதச்சக்கரவர்த்தியார், தனது ஜ்யேஷ்ட புத்திரனும், ஸகல கல்யாணகுணாலங்கிருதனுமான ஸ்ரீராமச்சந்திரனுக்கு, இளவரசுபட்டங் கட்டுவிக்கக் கருதி மந்திரிகளுடன் ஆலோசித்து நிச்சயித்து, நகரத்தாரெல்லோரையும் வரவழைத்து ஸபைகூட்டி அவர்களை நோக்கி,

‡ "பரிச்ராந்தோஸ்மி லோகஸ்ய குர்வீம் தர்மதுரம் வஹந்/
லோகம் விச்ரமமிச்சாமி புத்ரம் க்ருத்வா ப்ரஜாஹிதே//
ஸந்நிக்ருஷ்டாநிமாந்ஸர்வாநநுமாந்ய த்விஜர்ஷபாந் /
அநுஜாதோ ஹி மாம் ஸர்வைர் குணைர் ஜ்யேஷ்டோ மமாத்மஜ://
புரந்தரஸமோ வீர்யே ராம: பரபுரஞ்ஜய:// "

○ "நங்குலக்குரவர் கணையினீங்கினர்
சங்குலட்புதல்வரே தரணிதாங்கப்போய்
செங்குலப்புலன்கெட வீடுநண்ணினர்
எங்குலப்புறவறனென்றெண்ணி நோக்குகேன்."

"மைந்தரையின்மையில் வரம்பில்காலமும்
நொந்தனெனிராமனென் னோவைநீக்குவான்
வந்தனனினியவன் வருந்தயான்பிழைத்
துய்ந்தனன்போவதோ ருறுதியெண்ணினேன்."

"ஆதலாலிராமனுக் கரசைநல்கியிப்
பேதைமைதாய்வரும் பிறப்பை நீக்குவான்
மாதவந்தொடங்கிய வனத்தைநண்ணுவேற்
கியாதுநுங்கருத்தென வினையகூறினான்."

"ஸபையோர்களே! எங்கள் குலத்து முன்னோர் குற்றமற அரசாக்ஷிசெய்து மூப்படைந்தபிறகு தமது புதல்வர் அரசாளத் தாம தவஞ்செய்து மோட்சமடைந்தனர். யானும் இதுவரை அறுபதினாயிரம்வருடம் நீதிவழுவாமல் அரசுபுரிந்து இளைப்புற்றவனாயினேன். இவ்வளவுகாலமும் புத்திரரையடையாததினால் மனம் வருந்தினேன். என் மனவருத்தத்தைத் தீர்க்கும

‡ வா-ரா. அ-கா. சரு 2. சு 9, 10, 11.
○ கம்-ரா. அ-கா. மந்திர 17, 27, 31.

பொருட்டு, இராமன் வந்து பிறந்தானனதால், எம்மருகிலிருக்கின்ற உங்களுடைய அனுமதியின்பேரில், எனது ஜ்யேஷ்ட குமாரனும், எல்லா குணங்களிலும் என்னையொத்தவனும், வீர்யத்தில் இந்திரனுக்குச் சமானமானவனுமான இராகவனுக்குப் பட்டங்கட்டி உலகாளச்செய்து யான் தவஞ்செய்யும்பொருட்டு அரண்ணியத்திற்குச் செல்லவிரும்புகிறேன். உங்கள் கருத்து என்ன?" என்று கூறினர்.

தசரதச் சக்கரவர்த்தியார் ஸ்ரீராமபிரானைநோக்கி,

¶ "தேவர்ஷிபித்ருவிப்ராணாமந்ருணோஸ்மி ததாऽத்மஜ: |
ந கிம்சிந்மம கர்தவ்யம தவாந்யத்ராபிஷேசநாத் ||"

"ஹே, ராமா! தேவர்கள், ரிஷிகள், பிதிர்க்கள், வைதியர்கள் இவர்களுடைய கடன்களை யான் தீர்த்துவிட்டேன். உனக்கபிஷேகம் செய்விப்பதொன்றுதவிர யான் செய்யவேண்டுவது வேறொன்றுமில்லை." என்றுரைத்தனர்.

இதனுல் புத்திரன் குடும்ப பாரத்தை வகிப்பதற்குரிய பருவமடைந்தவுடன், அவன்வசம் குடும்பத்தை ஒப்புவித்துவிட்டு பிதா மோக்ஷத்திற்குரிய மார்க்கத்தில் பிரவேசிக்கவேண்டுமென்பது ஸூசிதம்.

"அதீத்ய விதிவத் வேதாந் புத்ராநுத்பாத்ய தர்மத: |
இஷ்ட்வா ச ஶக்திதோ யஜ்ஞைர் மநோ மோக்ஷே நிவேஶயேத்||"

"வேதமோதுவதால் ரிஷிகளின் கடனையும், பிள்ளையைப்பெறுவதால் பிதிர்க்களின் கடனையும், யஜ்ஞத்தால் தேவர்களின் கடனையும் தீர்த்தபின்பு மோக்ஷத்திற்குபயோகமான வழியில் மனம்வைக்கவேண்டும்." என்ற மனுஸ்மிருதி இங்கு நோக்கத்தக்கது.

(5) மாதாபிதாக்களின் உரிமை:—

அயோத்தியாபுரியை அரசுபுரிந்த அம்பரீஷ மஹாராஜன் அசுவமேதயாகஞ்செய்ய ஆரம்பித்தனன். பொறுமையினுல் புரந்தரன் அவ்வியாகப்பசுவைக் கவர்ந்துசென்றமையால், அதற்குப் பிராயச்சித்தமாக நரமேதஞ்செய்யவேண்டுமென புரோஹிதர்சொல்லவே, நரபசுவாக ஒருவனை விலைக்குவாங்கும்பொருட்டு

¶ வா-ரா. அ-கா. சரு 4. சு. 14.

அரசன் புலவிடங்களிற்சென்றும் அகப்படாமல், பிருகுதுங்கமென்னும் மலையடிவாரத்தில் மூன்றுபுத்திரர்களோடும் பத்தினியோடும் கூடியிருந்த ரிசிகரென்னும் முனிவரைக்கண்டு வணங்கி 'ஸ்வாமி! அடியேன் அம்பரீஷன் என்னும் அயோத்தியாபுரி அரசன். யான் அசுவமேதயாகஞ்செய்கையில், யாகபசு தொலைந்துபோனமையால், நரமேதஞ்செய்யவேண்டியிருப்பதால் தேவரீர் நூறாயிரம் பசுக்களை அடியேனிடம் விலையாகப் பெறலுக் கொண்டு, இச்சிறுவர் மூவருள் ஒருவனை நரபசுவாகத் தந்தருளவேண்டும்" எனப் பிரார்த்தித்தனன். அதற்கு முனிவர் வேந்தனைநோக்கி,

† "நாஹம் ஜ்யேஷ்டம் நரச்ரேஷ்ட விக்ரீணீயாம் கதஞ்சந /"

'அம்பரீஷா! யான் மூத்த குமாரனை யொருபொழுதும் விலைக்குக் கொடேன்.' என்றுரைசெய்யவே, அவர்பத்தினி, 'அரசனே!

† "தஸ்மாத் கநீயஸம் புத்ரம் ந தாஸ்யே தவ பார்த்திவ /
ப்ராயேண ஹி நரச்ரேஷ்ட ஜ்யேஷ்டா: பித்ருஷு வல்லபா: /
மாத்ரூணாம் ச கநீயாம்ஸஸ்தஸ்மாத்ரக்ஷே கநீயஸம் //"

"யான் இம்மூவரில் இளையோனாகிய சுனகன் என்பவனைக் கொடுக்கமாட்டேன். மேலும், பெரும்பாலும் தகப்பனுக்கு மூத்தபிள்ளையிடத்தும், பெற்றதாய்க்குக் கடைசிப்பிள்ளையிடத்தும் அன்பு ஏற்படுவது இயல்பாதலின் கடைசிப்பிள்ளையை யான் கொடேன்" என்றனள்.

† "கவாம் சதஸஹஸ்ரேண சுந:சேபம் நரேச்வர: /
க்ருஹீத்வா பரமப்ரீதோ ஜகாம ரகுநந்தந //"

அம்பரீஷமஹாராஜன் இலக்ஷம் பசுக்களை முனிவருக்குக் கொடுத்துவிட்டு, நடுப்பிள்ளையாகிய சுனச்சேபனைப் பெற்றுக் கொண்டு மிகுந்த சந்தோஷத்துடன் சென்றனன்.

முற்காலத்தில் அயோத்திமாநகரில் அரசாண்டுவந்த ஸகரச்சக்கரவர்த்தி, பிள்ளையில்லாக்குறையினால் வருந்தி மிகுந்த தவஞ்செய்து, பிருகு மஹரிஷியின் அனுக்கிரகத்தின்பேரில், தனது

† வா-ரா. பா-கா. சரு. 61. சு, 15, 17, 18, 22.

ஜ்யேஷ்ட பத்தினியான கேசினி என்பவளிடம் அஸமஞ்சன் என்னும் ஒரு புத்திரனையும், இளைய பத்தினியான ஸுமதி என்பவளிடம் அறுபதினாயிரங் குமாரர்களையும் அடைந்தான். பட்டத்துக்குரிய, அஸமஞ்சனனவன், அறிவழிந்து

○ " பாலாங் க்ருஹீத்வா ஸலிலே ஸரய்வா ரகுநந்தன |
ப்ரக்ஷிப்ய ப்ரஹஸந்நித்யம் மஜ்ஜதஸ்தாந் ஸமீக்ஷ்யவை || "

தினந்தோறும் பட்டணத்திலுள்ள சிறுபிள்ளைகளை யெடுத்துச் சரயூநதியிலெறிந்து, அவர்கள் தண்ணீர்குடித்து மூழ்கி இறப்பதைக்கண்டு சிறித்துச் சந்தோஷித்துக்கொண்டு ஜனங்களுக்குத் துயரமுண்டாகச் செய்துவந்தமையால், ஸகரமஹாராஜர்,

○ " பௌராணாமஹிதே யுக்த: புத்ரோ நிர்வாஸித: புராத் | "

இந்தத் துஷ்டப்பிள்ளையை நாட்டினின்றும் காட்டிற்குத் துறத்திவிட்டனர்.

இந்த இரண்டு ஆதாரங்களினால் ஜ்யேஷ்ட புத்திரனை ஒருவருக்கும் கொடுக்கக்கூடாதென்பதும், புத்திரர்களை ஒருவருக்கு ஸ்வீகாரமாகவோ, கிரையமாகவோ கொடுக்கவும், புத்திரரை பரித்தியாகஞ்செய்யவும் மாதாபிதாக்களுக்கு உரிமையுண்டென்பது ஸூசிதம்.

" ந ஜ்யேஷ்டபுத்ரம் தத்யாத் க்ருண்ஹீயாத்வா
ஸ ஹி ஸந்தாநாய பூர்வேஷாம் || " (வஸிஷ்டர்)

" சோணிதசுக்லஸம்பவோ மாத்ருபித்ரு நிமித்தக:
தஸ்ய ப்ரதாந பரித்யாக விக்ரயேஷு மாதாபிதரௌ ப்ரபவத:||" (போதாயனர்)

" ஜ்யேஷ்ட புத்திரன் சந்தான அபிவிருத்திக்குரியவனாதலால், அப்புத்திரனை ஒருவருக்குக் கொடுக்கவாவது ஒருவரிடம் இருந்து வாங்கவாவது கூடாது. மாதாபிதாக்கள் புத்திரரை ஒருவருக்குத் தானமாகவோ கொடுக்கலாம் பரித்தியாகமும் செய்யலாம் " என்ற ஸ்மிருதிவசனம் இங்கு நோக்கத்தக்கது.



○ வா-ரா. பா-கா. சரு 38. சு 20, 21.

### (6) மங்களாசாசனம்.

‡ "க்ருதஸ்வஸ்த்யயநம் மாத்ரா பித்ரா தசரதேந ச /
புரோதஸா வஸிஷ்டேந மங்கலைரபிமந்த்ரிதம் //
ஸ புத்ரம் மூர்த்ந்யுபாக்ராய ராஜா தசரத: ப்ரியம் /
ததௌ குசிகபுத்ராய ஸுப்ரீதேநாந்தராத்மநா //"

"ஸ்ரீ வஸிஷ்டமஹாமுனிவரின் அருளிச்செயலுக்கிசைந்து தசரதச்சக்ரவர்த்தியார் லக்ஷ்மணருடன்கூடின ஸ்ரீராமபிரானையழைப்பித்துத் தாமும் கௌஸல்யாதேவியும் வஸிஷ்டருமாகச் சேர்ந்து பிள்ளைகளை உச்சிமோந்து மங்களவாழ்த்துகள் கூறி கௌசிகமுனிவர்கையில் ஒப்புவித்தனர்."

ஸ்ரீராமபிரான் வனவாஸஞ்செல்லப் புறப்பட்டபொழுது மாதாவை நோக்கி, "அன்னையே! எனக்கு வழியில் யாதொரு கெடுதலும் நேரிடாமல், நன்மையுண்டாகும்வண்ணம் "குரு ஸ்வஸ்த்யயநாநி மே /" ஆசீர்வாதஞ்செய்தருளக்கடவீர்." என வேண்டியுரைசெய்தபொழுது, கௌஸல்யாதேவி,

$ "யத்பாலயஸி தர்மம் த்வம் ப்ரீத்யா ச நியமேந ச /
ஸ வை ராகவசார்தூல தர்மஸ்த்வாமபிரக்ஷது //"

"யேப்ய: ப்ரணமஸே புத்ர தேவேஷ்வாயதநேஷு ச /
தே ச த்வாமபிரக்ஷந்து வநே ஸஹ மஹர்ஷிபி: //"

"அடா, ராமசசந்திரா! எந்த தருமத்தை நீ அன்புடனும், நியமத்துடனும் சிறிதும் வழுவாமல் காத்து வருகின்றனையோ, அந்தத் தருமம் உன்னைப் பாதுகாக்கக்கடவது. நீ தினந்தோறும் எந்தெந்தத்தேவதைகளை வணங்குகின்றனையோ அந்தத்தேவதைகள் உன்னை வனத்தில் ரக்ஷிக்கக்கடவன" எனப் பலவிதங்களாக, மங்களவாழ்த்துக்கூறிப் பின்னும் தன்மகனைநோக்கி,

¶ "யந்மங்களம் ஸுபர்ணஸ்ய விநதாகல்பயத்புரா /
அம்ருதம் ப்ரார்தயாநஸ்ய தத்தே பவது மங்களம் //
அம்ருதோத்பாதநே தைத்யாந்க்நதோ வஜ்ரதரஸ்ய யத் /
அதிதிர்மங்களம் ப்ராதாத்தத்தே பவது மங்களம் //"

‡ வா-ரா. பா-கா. சரு 22. சு 2, 3. $ வா-ரா அ-கா. சரு 25. சு 3, 4.
¶ வா-ரா. அ-கா. சரு 5. சு 33, 34, 35.

" அடா, மைந்தா! அமிருதம் கொண்டுவருவதற்காக கருடன் புறப்பட்டகாலத்தில் அவன்பொருட்டு விநதாதேவி பிரார்த்தித்த மங்களமும், அம்ருதமதனஞ்செய்யுங்காலத்தில் அஸுரர்களுடன் போர்செய்ய யத்தனித்த தேவர்களுக்கு அதிதிதேவி செய்த மங்களமும், உனக்கு உண்டாகக்கடவது " என ஆசீர்வாதஞ்செய்தும், சிரஸில் அக்ஷதையிட்டு மூலிகையை மந்திரித்து ரக்ஷைசெய்து ஸ்ரீராமபிரானது கையில்கட்டி உச்சிமோந்து 'க்ஷேமமாய்ப் போய்வருவாயாக' என்று ஆசீர்வதித்தனுப்பினள்.

இவைகளினால் புத்திரர் ஓர் காரியார்த்தமாக அயலிடஞ் செல்லப்புறப்படும்பொழுது மாதா பிதாக்கள் மங்கலவாழ்த்துக் கூறியனுப்பவேண்டுமென்பது ஸூசிதம்.

இதனால் பெற்றோர்களுடைய ஆசீர்வாதம் பெறாமல் சென்றால் காரியம் பலிதமாகாதென்பது ஸூசகமாகின்றது. உதாரணம்—

பாண்டவர்களுடன் போர்செய்யப் புறப்பட்டபொழுது ஜெயத்தை விரும்பிய துரியோதன மஹாராஜன் தனது தாயாரை நோக்கி, 'ஶிவமாஶம்ஸமே மாத: யுத்யமாநஸ்ய ஶத்ருபி: /' 'அம்மா! யான் யுத்தத்திற்காகப் புறப்படுகிறபடியால், ஜெயமுண்டாகும்வண்ணம் ஆசீர்வதித்தனுப்பக்கடவை' என வேண்டினபொழுது, மாதாவான காந்தாரி, 'யதோ தர்ம: ததோ ஜய:' 'எங்கே தருமமோ, அங்கே ஜெயம்' என்றுரைத்தனள். பின்பு துரியோதனனுக்கு விபரீதபலன் ஏற்பட்டகாலத்தில் புத்திரசோகத்தினால் பீடிக்கப்பட்ட காந்தாரி, பாண்டவர்களைச் சபிக்க விரும்பியபொழுது, அருகிலிருந்த வியாஸர் காந்தாரியைத் தடுத்து அவளைநோக்கி, " அம்மா! முன்பு யுத்தகாலத்தில் ஜெயத்தையனுக்கிரகிக்கும்படியாக உன்னை உனது புத்திரன் பிரார்த்தித்தபொழுது, நீ, 'எங்கே தருமமோ அங்கே ஜெயம்,' என்று சொன்னையன்றோ? ஆகையால் நீ கோபத்தைவிட்டு சாந்தியையடைவாயாக " என்று கூறினர். இந்த பாரத இதிஹாஸம் இங்கு நோக்கத்தக்கது.

## 4. புத்திரர் தருமம்.

1. தந்தைதாயருக்குப் பணிவிடைசெய்தல்.

† (1) " ஶுஶ்ரூஷமாணா: பிதரம் வர்தயந்தி நரர்ஷபா: / "

*ஸ்ரீராமலக்ஷ்மண பரதசத்ருக்கனர் நால்வரும் தாய்தந்தையர்கள் மனங்கோணாமல் பணிவிடைகள் செய்து வாழ்ந்திருந்தனர்.*

(2) *திருச்சித்திரகூடத்தில் ஸ்ரீராமபிரான் பரதாழ்வானை நோக்கி,*

○ " கச்சித் ஶுஶ்ரூஷஸே தாத பிதரம் ஸத்யவிக்ரமம் // "

*" அடா, தம்பி! மிகவும் சத்தியவாதியும், பராக்கிரமசாலியுமான தந்தையற்கு நீ பணிவிடை செய்கின்றனையா? " என வினவியருளினார்.*

(3) *கௌஸல்யாதேவி ஸ்ரீராமபிரானை நோக்கி,*

‡ " பித்ருஶுஶ்ரூஷயா புத்ர மாத்ருஶுஶ்ரூஷயா ததா /
*ஸத்யேந ச மஹாபாஹோ சிரஞ்ஜீவாபிரக்ஷித: // "*

*" அடா, புத்திர! நீ, மாதாபிதாக்களுக்கு மனங்கோணாமல், சிறிதும் குறைவின்றிப் பணிவிடைசெய்துவந்திருப்பதால் அந்தப்பலத்தாலும், சத்தியத்தாலும், ரக்ஷிக்கப்பட்டு நீ நெடுநாள் க்ஷேமமாக வாழ்வாயாக " என ஆசிர்வதித்தனள்.*

இந்த ஆதாரங்களினால், புத்திரன் பிதாவுக்கும் மாதாவுக்கும் பணிவிடைசெய்து போஷிக்கவேண்டியதே முக்கியமானதும் சிறந்ததுமான தருமமென்பது ஸூசிதம்.

*" தந்தைதாய் பேண். " என்ற ஆன்றோர்வாக்கியம் இங்கு நோக்கத்தக்கது.*

---

### (2) பெற்றோர் பணிவிடையின் பயன்.

*ஒரு ரிஷிகுமாரன் ஓர் வனத்தில், அந்தகரும், விருத்தாப்பியரும், மிகத் தளர்ந்தவர்களுமான தன் தாய்தந்தையர்களுக்கு மிக அன்பொடு பணிவிடைசெய்தும், அவர்களுக்கு ஆகாராதிகள்கொடுத்துப் போஷித்தும் வந்தனன். ஒருநாள் அந்த ரிஷி*

† *வா-ரா. பா-கா. சரு 77. சு 19.* ○ *வா-ரா. அ-கா. சரு 100. சு 7.*
‡ *வா-ரா. அ-கா. சரு 25. சு 6.*

குமாரன் தன் பெற்றோர்களுக்குத் தண்ணீர் கொண்டுவரும் பொருட்டு, சரயூநதியில் குடத்தில் நீரை மொள்ள, அத்தொனி, யானை நீர்குடிக்கும் தொனிபோல் ஒலித்தது. அதை யானை யென்றெண்ணி, அங்கு வேட்டைக்குச் சென்றிருந்த, தசரதச் சக்கரவர்த்தியார், அவ்விடத்தைக்குறிப்பிட்டு சரம்தொடுத்து விடுத்தனர். அச்சரம் ரிஷிகுமாரன் மார்பில் தைக்க, 'ஐயோ என்று கூவிவிழுந்தான். உடனே சக்கரவர்த்தியார் அங்கு சென்று பார்க்க, ரிஷிகுமாரன் என அறிந்து, தான் அறியாமை யால் செய்த தவறை மன்னிக்கும்படி பலவாறுவேண்டி, அந்தப் பாணத்தை யவன் மார்பினின்றுமெடுத்து, ரிஷிகுமாரன் கேட்டுக்கொண்டபடி அவனுடைய பெற்றோர்களுக்குத் தண்ணீர் கொண்டுபோய்க்கொடுத்து, அவர்களையும் அங்கு கொண்டுவந்து சேர்த்துத் தன்னை மன்னிக்கும்படிவேண்டினர். அத்தம்பதிக ளிருவரும் பிள்ளையைத் தடவிப்பார்த்து உயிர் நீங்கிக்கிடப்ப தைக்கண்டு வருந்தி அக்குமாரனுக்குச் செய்யத்தக்க கடன் களைச் செய்தனர். அப்பொழுது அக்குமாரன் திவ்யதேகம் பெற்று தேவேந்திரனுடன் திவ்ய விமானமேறி வானுலகம் செல்லமுயன்று தாய்தந்தையர்களை நோக்கி,

¶ " ஸ்தாந மஸ்மி மஹத்ப்ராப்தோ பவதோ: பரிசாரணாத் / "

" தந்தையர்களே ! தேவரீர்களுக்குப் பணிவிடைசெய்த புண்ணியத்தின் பலனால் அடியேன் உத்தமமான கதியடைந் தேன்; " என்றுரைத்து அம்முனிபுத்திரன் அவ்விமானத் துடன் தேவலோகம் போய்ச்சேர்ந்தனன்.

⊕ " உண்ணீர்வேட்கை மிகவேயுயங்கும் மெந்தைக்கொருநீ
தண்ணீர்கொடுபோயளித்தென் சாவும் முரைத்தும் புதல்வன்
விண்மீதடைவா னொருமுதானெனவும் மவர்பால்விளம்பென்
றெண்ணீர்மையினான் விண்ணோரெதிர்கொண்டிட வேகினனால்."

என்ற கம்பராமாயணம் நோக்கத்தக்கது.

¶ வா-ரா. அ-கா சரு 64. சு 49. ⊕ க-ரா. அ-கா. நகர்நீங்கு 81.

$ "புராயஷ்ருஷாள் ஜநநீம் புத்ர: ஸ்வக்ருஹே நியதோ வஸந் |
பரேண தபஸா யுக்த: காஸ்யப ஸ்த்ரிதிவம் க்த: || "

"காசியப மஹாமுனிவர் தமது கிருஹத்தில் வசித்துக் கொண்டு தமது தாய்க்குச் சுச்ருஷைசெய்துவந்து சுவர்க்கத்தை அடைந்தனர்.

என கௌஸலையார் ஸ்ரீராமபிரானைநோக்கிக் கூறினர்.

இவைகளினால் பெற்றோர்களுக்குப் பணிவிடைசெய்து அவர்கள் திருப்தியாகும்வண்ணம் போஷித்துவந்தால் சிறந்த தவஞ்செய்தோர் அடையக்கூடிய புண்ணியலோகங்களை அடையலாகுமென்பது ஸூசிதம்.

உதாரணம்:- (1) ஒரு மரத்தடியில் வேதாத்தியயனம் செய்துகொண்டிருந்த கௌசிகனென்னும் பிராம்மணோத்தமன் தன்மீது எச்சமிட்ட கொக்கைப் பார்வையினால் எரித்துவிட்டு பிக்ஷார்த்தம் ஒரு கிருஹத்திற்குச்சென்றபொழுது, பர்த்ரு சுச்ருஷையினால் சிறிது காமதித்து பிக்ஷையிடவந்த கிருஹிணியைப் பிராம்மணன் கோபத்துடன் பார்க்கவே,

கிருஹிணி "பிரம்மரிஷியே! நான் கொக்கல்லேன், உமது பார்வை என்னை ஒன்றுஞ் செய்யமாட்டாது. எனக்கு பர்த்ரு சுச்ருஷையே முக்கியம். அந்தப்பலனால் உம்மால் கொக்கு எரிக்கப்பட்ட விஷயம் என்னால் அறியப்பட்டது. தேவரீர் வேதாத்தியயனத்தில் சிறந்தவராயிருந்தும் தருமத்தின் சூக்ஷ்மத்தை உள்ளபடி அறியவில்லையென்பது என்னுடைய அபிப்பிராயம். ஆதலால் தேவரீர் மிதிலாபுரிக்குச்சென்று, அங்கு தாய்தந்தைகளையே தெய்வமாகக்கொண்டு சுச்ருஷைசெய்கிறவரும், ஜிதேந்திரியருமான தருமவியாதரைக் கண்டு தருமங்களின் சூக்ஷ்மங்களைக்கேட்பீராகில் உம்முடையசம்சயங்களைப்போக்குவார்" என அந்தப்பிராம்மணோத்தமன் அவ்விடம்விட்டுப்புறப்பட்டு மிதிலாபுரியையடைந்து அங்குஓரிடத்தில் மானிறைச்சிகளையும், எருமை இறைச்சிகளையும் விற்றுக்கொண்டு உட்கார்ந்திருந்த தருமவியா

$ வா-ரா. அ-கா. சரு 21. சு 24.

தனைக்கண்டனர். பிராம்மணனைக் கண்டதும் தருமவியாதர் பரபரப்புடன் எழுந்திருந்து வந்தனஞ்செய்து நல்வரவுகூறி 'பிராம்மணோத்தமரே! நீர் மிதிலைக்குப்போய் வியாதரிடம் தருமங்களின் இரகசியங்களைத் தெரிந்துகொள்ளுமென அந்தப் பதிவிரதையினால் சொல்லியனுப்பப்பட்டு வந்தீரன்றோ? நான் ஜாதியில் வேடன் ஆனதால் எனக்கேற்பட்ட பழமையான இந்தத்தொழிலைச் செய்துகொண்டு வயதுசென்றவர்களான எனது தாய்தந்தைகளுக்குச் சிரத்தையுடன் பணிவிடைசெய்கிறேன். தினந்தோறும் அவர்களை நீராட்டித் தேவையான ஆகாரங்களை நானே கொடுக்கிறேன். உலகத்தில் மனிதனுக்கு பிதாவும் மாதாவுமன்றோ சிறந்த தெய்வமாவார்கள். தாய்தந்தையருடைய பணிவிடை ரூபமான தவத்தின் பயனைப்பாரும். அந்தப்பதிவிரதையினால் உமக்குச் சொல்லப்பட்ட விஷயம் இங்கு என்னால் அறியப்பட்டது. உம்மால் தாயும் தந்தையும் நன்றாகப் பூஜிக்கப்படவில்லை. வயதுசென்றவர்களான அவ்விருவர்களும் சோகத்துடனிருப்பதால், நீர் விரைவாகச்சென்று, 'அதந்த்ருத: குரு க்ஷிப்ரம் மாதா பித்ரோர்ஹி பூஜநம் //' மாதா பிதாக்களையடைந்து செவ்வையாகப்பணிவிடைசெய்து அவர்கள் சந்தோஷம் அடையும்படியாகச் செய்வீராக. நீரும் நன்மையடைவீர். 'அத: பரமஹம் தர்மம் நாந்யம் பச்யாமி கஞ்சந //' இதைவிடச் சிறந்த தருமம் வேறில்லை. இதுவே தருமத்தின் சூக்ஷ்மம்' என்றுரைத்து மற்றுமநேகம் தருமங்களின் ஸ்வரூபங்களையும் கூறினர். கௌசிகரும் தருமவியாதரைநோக்கி, "ஓ, சாதுவே! 'மாதா பித்ருப்யாம் சுச்ரூஷாம் கரிஷ்யே வசநாத்தவ //' தாங்கள் உரைத்தவண்ணம் யான் இப்பொழுதே சென்று எனது மாதாபிதாக்களுக்குக் குறைவுதலின்றிச் சுச்ரூஷை செய்கின்றேன்." என்றுரைத்து அவரிடம் விடைபெற்றுச் சென்றனர். தருமவியாதோபாக்யானம் என்ற இந்த இதிஹாஸம் ஸ்ரீ மஹாபாரதம் வனபருவத்தில் பரக்கக் கூறப்பட்டிருக்கிறது.

(2) சந்திரபாகா நதிக்கும் திண்டிரவனத்துக்கும் மத்தியில் உள்ள பண்டரிபுரமென்ற ஊரில் புண்டரீகபக்தன் என்னும்

ஓர் பிராம்மணன் இருந்தான். அந்த பக்தன் தாய் தந்தையர்களுக்குப் பணிவிடை செய்வதில் சிரத்தையுடையவன். இவன் காவடிகட்டி வயதுசென்றவர்களான தாய் தந்தையரை அதிலிருக்கச்செய்து தோள்மேலேந்திச்சென்று காசியில் தாய் தந்தையர்க்கு கங்காஸ்நானஞ்செய்வித்து அவர்களைத் திரும்பக் காவடியில் ஏந்திக்கொண்டுவந்து பண்டரியில்சேர்த்து நாள்தோறும் அதிகாலையில் தாய் தந்தையரைச் சந்திரபாகாநதிக்குக்கொண்டுபோய் ஸ்நானஞ்செய்வித்து வீட்டிற்குக்கொண்டுபோய் அறுசுவையுண்டியளித்துப் போஷித்துவந்தனன். ஒருநாள் புண்டரீகபக்தன் தாய்தந்தையர்க்கன்பாய் பூஜைசெய்துகொண்டிருந்த சமயத்தில், பகவான் ஸ்ரீ ருக்மிணிகாந்தன் இந்த பக்தனுடைய வீட்டுவாயிலில்வந்து பக்தனுடைய குருபக்திக்குகந்து பக்தனை நோக்கி, "ஏ, பக்தா! நீ தாய்தந்தையருக்குச் செய்துவரும் உபசாரத்தைக்கண்டு மிகுந்த சந்தோஷங்கொண்டு உனக்கு அரிய சேவை தந்தேன். வேண்டிய வரங்கள் கேட்பாயாக" எனத் திருவாய் மலர்ந்தருளியதைக்கேட்ட புண்டரீகபக்தன், "ஓ, ஸ்வாமி! பரந்தாமா! யான் நினையாதிருக்கவும் காக்ஷிதந்தீரோ? வாசல் மிகவும் சேராயிருப்பதால் இதோ இச்செங்கல்லின்மேல் சற்று நேரம் நிற்பீராயின், மாதாபிதாக்களுக்குச் செய்யவேண்டிய பூசனையை முடித்துவந்து வேண்டும்வரங் கேட்டுக்கொள்ளுகிறேனென்றுரைத்து ஒருசெங்கல்லை ஆஸனமாக அளித்துவிட்டு அன்னைதந்தைகளுக்கு அன்புடன் பூஜைசெய்து ஆகாரங்கள்கொடுத்துவிட்டு வந்தனன். பகவானும் பக்தன் வருமளவும் அச்செங்கல்லின்மீது நின்றுகொண்டு பக்தனது வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தனர். புண்டரீகபக்தனும் பகவானை வணங்கி,கைகூப்பிநின்றுகொண்டு 'ஸ்வாமி! அடியேன் தேவரீரை இதுகாறும் காத்திருக்கும்படிசெய்த அபராதத்தை மன்னித்தருளி, அடியேனுக்கு தரிசனந்தந்ததுபோல இப்படியே நின்றுகொண்டு சகல ஜனங்களுக்கும் தரிசனந்தந்து காத்து ரக்ஷிக்கவேண்டுவதான வரம் தந்தருளவேண்டுமென்று' பிரார்த்தித்து ஸமாதி நிஷ்டைசேர்ந்து தன்னைமறந்து அசைவற்று நின்றனன்.

பகவானும் பக்தனது பிரார்த்தனைப்படி வரமளித்து ஸமாதி அடைந்த பக்தனைப்பார்த்தபடியே சிலாரூபமாய் நின்றனர்.

இது இந்தக்கலியுகத்தில் நடந்த விருத்தாந்தம்.

(3) மாதா பிதாக்களுடைய கைங்கரியத்தில் சிறந்தவரான குக்குட மஹரிஷிக்கு, கங்கை, யமுனை, ஸரஸ்வதி, நர்மதை, கௌதமியென்ற பஞ்சகன்னிகைகளும் பணிவிடைசெய்து வந்ததாக மஹா பக்தவிஜயத்தில் கூறப்பட்டிருக்கிறது.

இவை நோக்கத்தக்கன.

மாதாபிதாக்களை எதற்காக பணிவிடைசெய்து ஆராதிக்கவேண்டுமெனில்—

ஸ்ரீராமபிரான் வசிஷ்டமாமுனிவரை நோக்கி,

† "யந்மாதாபிதரௌ வ்ருத்தம் தநயே குருத: ஸதா /
ந ஸுப்ரதிகரம் தத்து மாத்ரா பித்ரா ச யத்க்ருதம் //
யதாஸக்தி ப்ரதாநேந ஸ்நாபநாச்சாதநேந ச /
நித்யம் ச ப்ரியவாதேந ததா ஸம்வர்தநேந ச //
ஸ ஹி ராஜா தஸரத: பிதா ஜநயிதா மம /
ஆஜ்ஞாபயந் மாம் யத்தஸ்ய ந தந்மித்யா பவிஷ்யதி //"

'ஹே, பகவன்! தாய்தந்தையர் புதல்வரைப் பெறுவதன்பொருட்டு, விரதாதிகளனுஷ்டித்துப்படும் சிரமமோ அளவில்லை; புதல்வரைப் பெற்றபின்பும் அவர்களை சீராட்டி நல்லாடையுடுத்தி ருசிகரமான உணவளித்து பிரியவசனமொழிந்து வளர்த்துவரும் விஷயத்திலும் மிகுந்த கஷ்டமடைகின்றனரன்றோ? இவைகளுக்கெல்லாம் புத்திரர் செய்யக் கூடிய கைம்மாறு யாதுளது? தசரதச்சக்கரவர்த்தியாரும் யாகாதிகள் செய்து என்னைப்பெற்று அன்னபானாதிகளளித்து நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாக வளர்த்து யாதொரு துன்பமும் நேரிடா வண்ணம் பாதுகாத்த தந்தையன்றோ? ஆதலால் அவர் எனக்கு எதை ஆஜ்ஞைசெய்கின்றாரோ அதைச்சிறிதும் தவறாமல் செய்துமுடிப்பேன்." என விண்ணப்பஞ்செய்தருளினர்.

ஸ்ரீராமபிரான் கைகேயியாரை நோக்கி,

○ "யதோமூலம் நர: பஸ்யேத் ப்ராதுர்பாவமிஹாத்மந: /
கதம்தஸ்மிந் ந வர்தேத ப்ரத்யக்ஷே ஸதி தைவதே //"

† வா-ரா. அ-கா. சரு 111. சு 9, 10, 11.
○ ௸ ௸ 18. சு 16.

" அம்மா! ஒருவன் இவ்வுலகில் பிறப்பதற்கு எவர் முதற்காரணமான வரோ ப்ரத்யக்ஷதெய்வமான அத்தந்தையை நன்றியறிதலுடையவன் என் பூஜையும் பணிவிடையும் செய்து ஆராதிக்கமாட்டான்? " என்றுரை செய்தனர்.

இந்த ஆதாரங்களினால் மிகுந்த சிரமத்துடன் ஒரு தேவதையை உபாஸனைசெய்து அடையக்கூடிய பயனை ஒருவன் தாய்தந்தையருக்குச் சுச்ரூஷை செய்வதினால் அடைகின்றபடியாலும், தேவதையைக் கண்க ளால் தரிசிக்கமுடியாதிருக்கத் தாய்தந்தையரைப் பிரத்யக்ஷமாகக் காண் கின்றபடியாலும், அவர்கள் புத்திரர்கள் விஷயமாயடைந்த சிரமத்திற்கு நன்றிசெலுத்தவேண்டுவது அவசியமாகையாலும், புத்திரர் தாய்தந்தை யரை 'அன்னையும் பிதாவும் முன்னறிதெய்வம்' என்றபடி தேவதா விசுவாசத்துடன் பணிவிடைசெய்து ஆராதிக்கவேண்டுமென்பது கருத்து.

புருஷோத்தமராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமது தாய்தந்தையரை நோக்கி,

" ஸர்வார்தஸம்பவோ தேஹோ ஜநித: போஷிதோ யத: /
ந தயோர்யாதி நிர்வேசம் பித்ரோர்மர்த்ய: சதாயுஷா //
யஸ்தயோராத்மஜ: கல்ப ஆத்மநா ச தநேந ச /
வ்ருத்திம் ந தத்யாத்தம் ப்ரேத்ய ஸ்வமாம்ஸம் காதயந்தி ஹி // "

" சகல புருஷார்த்தங்களுக்குஞ்சாதகமான சரீரத்தையுண்டுபண்ணி போஷித்து வளர்த்தவர்களான தாய்தந்தையர்க்குப் புத்திரன் நூறுவருஷ காலம் சுச்ரூஷைசெய்தாலும், அவர்கள் செய்ததற்கு ஈடாகமாட்டாது. ஆகையால் எவன் தாய்தந்தைகளைப் போஷிக்காமல் உபேக்ஷைசெய்கி றானோ, அவன் இறந்தபிறகு தன்னுடைய மாம்ஸத்தையேபுஜிக்கின்றான்." என அருளிச்செய்து, பின்னும் அவர்களைநோக்கி,

" தத்க்ஷந்துமர்ஹதஸ்தாத மாதர்நௌ பரதந்த்ரயோ: /
அகுர்வதோர்வாம் சுச்ரூஷாம் க்லிஷ்டயோர்துர்ஹ்ருதா ப்ருசம் // "

(இதுவரை நானும் அண்ணாவும் கோகுலத்தில் வசித்ததால்) " நித்தி யமும் கம்ஸனிடமிருந்து பயந்தவர்களான உங்களுக்கு சுச்ரூஷைமுதலிய வைகள் செய்யாமலிருந்ததைப்பற்றி வருந்துகின்றோம். எங்களை மன் னிக்கவேண்டும். " எனப்பிரார்த்தித்தனர்.

இந்த ஸ்ரீ பாகவதம் இங்கு கவனிக்கத்தக்கது.

" மதலையைப் பெறுநாள் துன்பம்; வளர்த்திடும் நாளும் துன்பம்
விதலைநோயடையில் துன்பம்; வியன்பருவத்தும் துன்பம்;
கதம் உறு காலர்வந்து கைப்பற்றில் கணக்கில் துன்பம்;
இதமுறல் எந்நாள் சேயால் என்றைக்கும் துன்பமானால்? "

" ஈன்றுவளர்த்த தாய்தந்தைக் கெவரேகைம்மாறியற்றிடுவர்
ஆன்றமதலை நூறுவயதளவு மடிமைத் திறம்பூண்டு
மூன்று புவனத்துள்ளபொருள் முற்றுங்கொணர்ந்து முறைமுறையே
என்று வழிபாடியற்றிடினும் ஒருநாள் வளர்த்தற்கியையாதே. "

" புதல்வர்க்குத் தெய்வம் தந்தையும் தாயும். "
" ஈன்றாளின் என்ன கடவுளுமில். "

" கடவுளை வருந்திச் சூலாய்க் கைப்புறையுண்டனந்த
மிடர்களுற் றுதரந்தன்னி லீரைந்து திங்கடாங்கிப்
புடவியிலீன்றுபன்னாள் பொற்றனப்பாலையூட்டித்
திடமுறவளர்த்துவிட்ட செல்வியை வணங்காய்நெஞ்சே. "

" மாதா பிதா ச பகவாநேதௌ மே தைவதம் பரம் |
யத்தைவதேப்ய: கர்தவ்யம் ததேவப்யாம் கரோம்யஹம் || "

" எனக்கு மாதாபிதாக்களே சிறந்ததெய்வம். தேவதைகளுக்குச் செய்யவேண்டிய பூஜைகளை யான் இவர்களுக்கே செய்கின்றேன். " என்பது தருமவியாதர் வசனம்.

இந்த ஆதாரங்கள் நோக்கத்தக்கன.



## (3) பிதாமாதாவை வணங்கல்.

(1) (அ) தசரதச்சக்கரவர்த்தியார், தாம் ஸ்ரீராமபிரானுக்கு மகுடாபிஷேகஞ்செய்ய நிச்சயித்திருப்பதை, அவரிடம் அறிவிப்பதற்காக, ஸ்ரீராமபிரானை உடனே அழைத்துவரும்படி சுமந்திரருக்கு ஆஜ்ஞைசெய்ய, சுமந்திரரும் விரைவிற்சென்று ஸ்ரீராமபிரானைத் திருத்தேர்மீதேற்றிக்கொண்டுவந்து அரண்மனைவாசலில் நிறுத்தினர். ஸ்ரீராமச்சந்திரரும் தேரினின்று இறங்கி பிதாவைக் காணும்பொருட்டு, மேல்மாடமீது ஏறி,

¶ " ஸ ப்ராஞ்ஜலிரபிப்ரேத்ய ப்ரணத: பிதுரந்திகே |
நாம ஸ்வம் ஸ்ராவயந் ராமோ வவந்தே சரணௌ பிது: || "

‡ "மாதவன்றனை வரன்முறை வணங்கி வாளுழவன்
பாதபங்கயம் பணிந்தனன் "

அஞ்சலிஹஸ்தராய் பிதாவின் சமீபஞ்சென்று, தமது குல கோத்திரங்களைச்சொல்லி பிதாவின் திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்து தெண்டம் சமர்ப்பித்தனர்.

(ஆ) சக்கரவர்த்தித் திருமகனார், திருத்தந்தையார் கூறிய அன்பான இதமொழிகளைத் திருச்செவி சார்த்தி,

¶ "அதாபிவாத்ய ராஜாநம் ரதமாருஹ்ய ராகவ: /
யயௌ ஸ்வம் த்யுதிமத் வேஸ்ம ஜநௌகைர்பிநந்தித: // "

தந்தையாரை வந்தனஞ்செய்து விடைபெற்றுக்கொண்டு, திரும்பவும் திருத்தேர்மேதேறி அங்குள்ள ஜனங்களால் கௌரவிக்கப்பட்டவராகி தமது திருமாளிகையையடைந்தனர்.

(இ) இராமபிரான் தமக்கபிஷேகமென்பதைத் தம்மைப் பெற்ற தாயார்முதலானோருடன் கூறவேண்டுமென்று கௌஸல்யாதேவியாரின் அரண்மனைக்குவந்து—

$ "ததா ஸந்நியதாமேவ ஸோபிகம்யாபிவாத்ய ச /
உவாச வசநம் ராமோ ஹர்ஷயம்ஸ்தாமிதம் ததா // "

வணக்கத்துடன் அவருகிற்சென்று பணிந்து பின்வருமாறு திருவாய்மலர்ந்தருளினர்.

$ (ஈ) "இத்யுக்த்வா லக்ஷ்மணம் ராமோ மாதராவபிவாத்ய ச /
அப்யநுஜ்ஞாப்ய ஸீதாம் ச ஜகாம ஸ்வம் நிவேஸநம் // "

இந்தப்பிரகாரம் இளையபெருமாளுக்குரைத்தும் கோசலையாரையும் சுமித்திரையாரையும் தெண்டம் ஸமர்ப்பித்து விடைபெற்றுக்கொண்டும், ஜானகியாருக்கு ஆக்ஞைசெய்தும், ஸ்ரீராமபிரான் மீளவும் தமது அரண்மனைவந்து சேர்ந்தனர்.

இந்த ஆதாரங்களினால் புத்திரர் மாதா பிதாக்களைக் காணச் சென்றவுடன் வணங்கவேண்டுமென்பதும், அவர்களிடம் விடைபெற்று வெளியே செல்லுகையிலும் வணங்கியே செல்லவேண்டுமென்பதும் ஸூசிதம்.

¶ வா-ரா. அ-கா. சரு 3. ச 32, 48. ‡ கம்-ரா. அ-கா. மந்திர 59
$ வா-ரா. அ-கா. சரு 4. ச 34, 45.

ஸ்ரீகிருஷ்ணபகவான் கோகுலத்திலிருந்து திருத்தமையனுருடன் மதுராபட்டணத்திற்கெழுந்தருளி கம்ஸனை வதஞ்செய்தருளிய பின்னர் தமது தாய்தந்தைகளைக் காணச்சென்று,

"மாதரம் பிதரம் சைவ மோசயித்வாத பந்தனாத் |
க்ருஷ்ணராமௌ வவந்தா தே ஶிரஸா ஸ்ப்ருஶ்ய பாதயோ: ||"

"இராமகிருஷ்ணர்களிருவர்களும் தாய்தந்தையர்களை விலங்கிலிருந்து விடுவித்து தங்களுடைய தலை அவர்களுடைய பாதத்தில் படும்படியாக சாஷ்டாங்கமாகத் தண்டம் ஸமர்ப்பித்தனர்." என்ற ஸ்ரீபாகவதம் இங்கு நோக்கத்தக்கது.

(2) தசரதச்சக்கரவர்த்தியார் தம்மை வந்தனஞ்செய்து வணக்கத்துடன் நிற்கும் இராமபிரானை,

† "தஸ்மை சாப்யுதிதம் ஸம்யங் மணி காஞ்சந பூஷிதம் |
திதேஶ ராஜா ருசிரம் ராமாய பரமாஸநம் ||
ததாஸந வரம் ப்ராப்ய வ்யதீப யத ராகவ: |"

"நவரத்தின கசிதமான ஓர் சிரேஷ்டமான ஆஸனத்தின் மீதிருக்கும்படி ஆஜ்ஞைசெய்ய சுவாமியும் அவ்வாஸனத்திலமர்ந்து அதைப்பிரகாசிக்கச் செய்தனர்."

இதனால் பிதாவின்சன்னிதானஞ்சென்றிருந்தால் பிதாவானவர் 'இருவென இருந்து' என்றபடி உட்காரும்படியாக ஆஜ்ஞை செய்தபிறகே புத்திரன் உட்காரவேண்டுமென்பது ஸூசிதம்.

"ஆஸ்யதாமிதிசோக்த: ஸந்நாஸீதாபிமுகே குரோ: |" (மனு)
என்ற ஸ்மிருதிவாக்கியம் நோக்கத்தக்கது.



## (4) ஏவாமக்கள் மூவா மருந்து.

சூரியவம்சத்தரசனான அம்பரீஷமஹாராஜன்,

¶ "நற்றவரிசிகன் வைகு நனைவரும் பழுவ நண்ணிக்
கொற்றவன் வினவலோடு மிசைந்தனர் குமரர்தம்முள்
பெற்றவ ளிளவலெற்கே யென்றனள் பிதாமுன்னென்றான்
மற்றையமைந்தனும் மன்னவன் றன்னைநோக்கி"

† வா-ரா. அ-கா. சரு 3. சு. 34, 35.
¶ கம்-ரா. பா-கா மிதிலை 121, 122.

" கொடுத்தருள் வெறுக்கைவேண்டிற் றேற்கமாம்விழுமங்தன்ற
எடுத்தெனைவளர்த்த தாதைக்கென்ற வற்றெழுது வேந்தன்
தடுப்பரும் தேரினேறித் தடையிலாப் படர்தலோடும்
சுடர்க்கதிர்க்கடவுள் வானத்துச்சியஞ் சூழல் புக்கான்.

○ " பிதா ஜ்யேஷ்டமவிக்ரேயம் மாதாசாஹ கநீயஸம் /
விக்ரீதம் மத்யமம் மந்யே ராஜந்புத்ரம் நயஸ்வ மாம்// "

ரிசீகமுனிவரிடஞ்சென்று, அவருடைய புத்திரர் மூவர்களில் ஒருவனை நரபசுவாகத் தனக்கு விலைக்குக்கொடுக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, முனிவர், மூத்த பிள்ளையையும், அவர் பத்தி, கடைசிப்பிள்ளையையும் கொடுப்பதில்லையெனச் சொன்னவுடன், இரண்டாவது மகனை சுனச்சேபன், தன் மாதாபிதாக்களின் கருத்தையுணர்ந்து, ' அரசனே! எனது பெற்றோர்கள் விருப்பத்தின்படி, அவர்களுக்கு வேண்டிய திரவியத்தைச் செலுத்திவிட்டு, என்னை நீர் நரபசுவாகக் கொண்டுபோகக் கடவீர். ' என்றுரைத்து அரசனுடன் சென்றனன்.

இதனால் உயிரைக் கொடுத்தாகிலும் மாதா பிதாக்களின் அபிப்பிராயத்தை அவர்கள்கூறுமுன்னமே குறிப்பாலறிந்து பூர்த்தி செய்துவைக்கவேண்டியது பிள்ளையின்தருமமென்பது ஸூசிதம்.

சந்திரகுலத்தரசனான சந்தனுமஹாராஜன் வேட்டையாடுவதற்காக வனத்திற்குச் சென்றிருந்தபொழுது, அங்கு ஒரு செம்படவப் பெண்ணைக் கண்டு விருப்பங்கொண்டு, அவள் தந்தையிடம் சென்று தனக்கு அவளை விவாஹஞ்செய்துகொடுக்கும்படி கேட்டார். அதற்கவன், ' அரசனே! இவளிடத்தில் பிறக்கும் புத்திரன் எவனோ அவனை உமக்குப்பின் ராஜாவாகச்செய்விப்பதாய் நீர் சத்தியம்செய்துகொடுத்தால் இக்கன்னிகையை உமக்குக் கொடுப்பேன் ' என்றுரைசெய்யவே, அரசன் அவ்விதம் பிரதிஜ்ஞைசெய்ய விரும்பாமல் அரண்மனையடைந்தனன். ஆனால்;

‡ "கங்கையாளிடத்திலாதரமெலிந்தகாலையிற் களிந்தவெற்பளித்த
மங்கையாமென்னநின்ற பூங்கொடிமேல்வைத்தபேராதரமலியப்
பங்கையானனந்தான்முறைமுறைதுறையும் பான்மதியெனவழகழிந்த
சங்கையான்மைந்தன் வினவலுநிகழ்ந்ததன்மையைச்சாரதிபுகன்
றன். "

○ வா-ரா. பா-கா. சரு 61 சு. 20.

"கேட்டவக்கணத்திற்கடற்புறத்தரசைக்கேண்மையோடடைந்திளவரசும்
பாட்டனீயெனுக்குப் பெற்றதாய்தானும பகீரதியல்லணின்மகளோ
நாட்டமின்றுனக்கியாதது நிலையிந்தஞாலமுமெம்பியர்ஞால
நீட்டமற்றின்றேதிருமண நேர்வாய்நீதிகூர்நிருபனுக்கென்ருன்."

அந்தப்பெண்ணை சதா சிந்தித்துக்கொண்டு கவலையுற்றிருந்ததினுல், அரசனுடைய சரீரம் நாளுக்குநாள் வெளுத்து மெலிந்துவருவதைக் கண்ணுற்ற அவருடைய புத்திரர் பீஷ்மர் அதன்காரணத்தைச் சாரதிமூலமாய் தெரிந்துகொண்டு அந்த செம்படவர்க்கரசனிடம் சென்று 'அரசனே, நீ என் தந்தையிடம் கேட்டவரத்தை நான் கொடுக்கச்சம்மதிக்கிறேன். இன்றுமுதல் நீ எனக்குப் பாட்டன், உன் மகள் எனக்குத்தாய், இனி இந்த பூமி நின்மகள் வயிற்றில்பிறக்கும் எனது தம்பியர்க்கே உரித்தானது; ஆகையால் உன் கன்னிகையை என்பிதாவுக்குக்கொடு.' என்று உரைத்துப் பின்னும்,

‡ "விரதமுற்றியவாறனைவருங்கேண்மின் மெய்யுயிர்வீடுமன்றளவுஞ்
சரதமுற்றிய மெய்த்தாதுவு மூலத்தழலுடன் மீதெழுந்ததைத்தே
யிரதமுற்றியசொன்மகப்பெறுதவருக்கில்லை யென்றியம்புநற்கதியுஞ்
சுரதமுற்றியவென்றந்தைதன்பொருட்டாற் பெறுவலென்றின்னதுஞ்
சொன்னுன்."

'இன்றுமுதல் என்னுயிர் எனது தேகத்திலிருக்கும்வரையில் நான் புத்திரோத்பத்திசெய்யேன்; நான் இராஜ்ஜியத்தையும் பெண்கலவியையும் என் பிதாவின் பொருட்டு முற்றிலும் விடுகின்றேன்;' என்று பிரதிஜ்ஞைசெய்தனர். பீஷ்மருடைய அந்தச்சொல்லைக் கேட்டு செம்படவர்க்கரசன் தன்மகளை அரசனுக்குக் கொடுப்பதற்கிசையவே, பீஷ்மர், அக்கன்னிகையை ரதத்தின்மீதேற்றிக்கொண்டு ஹஸ்தினபுரம்வந்து தமது பிதாவுக்குத் தெரிவித்தனர். அரசனும் அக்கன்னிகை சேதிராஜனாகிய உபரிசரவஸுவின் புத்திரியென்றும், செம்படவர்க்கரசனுல் வளர்க்கப்பட்டவளென்றும் அறிந்து ஸத்தியவதி யென்னும் அக்கன்னிகையைச் சாஸ்திரோக்தமாக விவாஹஞ்செய்துகொண்டனர்.

தமது புத்திரனுல் செய்யப்பட்ட 'அந்த செயற்கரிய செய்கையை' கண்டு சந்தோஷமடைந்து அரசன்,

‡ வில்லிபாரதம் - குருகுல - 96, 97, 98.

† " பரிமளவடிவப்பாவையையர்சன் பாலனென்றொருபுடைகிறுத்தி
யிருபதந்தொழுதுநின்றமாமகனை யிதயமோடிறுகுறத்தழுவித்
தருமணங்கமழுஞ்சென்னிமேல் வதனந்தாழ்ந்து மோந்துருகிமுன்றந்தைக்
குரியபேரிளமை கொடுத்தகோமகனுமுனக் கெதிரல்லனென்றுரைத்தான்.

" தந்தையர்க்குதவு முதவியினெனக்குச் சதமடங்குதவினையுனக்கு
மைந்தருக்குதவுமுதவியிற்சிறிது மாதவஞ்செய்திலேனுரவச்
சிந்தையிற்றுறக்கம்வேண்டு மென்றெண்ணிச் செல்லுமன்றல்லதுன்னுயிர்மேன்
முந்துறக்காலன்வரப் பெறுனென்றே முடிவிலா வொருவரமொழிந்தான். "

தன் புத்திரனாகிய பீஷ்மரை அன்புடன்தழுவி, 'புத்திரனே! தமது பிதாவின் விருப்பப்படி தமது இளமையைப் பிதாவுக்குக் கொடுத்த பூருவும் உனக்கிணையாகான். புத்திரன் தந்தையர்க்குச் செய்யவேண்டிய கடமையை நூறுமடங்கு செய்தனையாதலின், நீ எதுவரை பூமியில் ஜீவித்திருக்க விரும்புகிறாயோ அதுவரையில் உன் விஷயத்தில் யமனுக்கு அதிகாரமிராது. உன்னுடைய அனுமதிபெற்றபிறகுதான் யமன் அதிகாரியாவான்.' என வரமளித்தனர். என்ற பாரதமும்,

" உத்தமச் சிந்திதம் குர்யாத் ப்ரோக்தகாரீ து மத்யம: |
அதமோப்ரத்தயா குர்யாதகர்தோச்சரிதம் பிது: || "

" பிதாவின் மனத்திலிருப்பதைத் தெறிந்துகொண்டு செய்யும் புத்திரன் உத்தமன். பிதாவினால் செல்லியவண்ணம் நடப்பவன் மத்தியமன். சொல்லியும் அப்ரத்தையாக செய்பவன் அதமன். செய்யாதவன் அதமாதமன்." என்ற பாகவதமும் காணத்தக்கன.



## 5. பெற்றோரெல்லாம் பிள்ளைகளல்லர்.

சந்திரகுலத்தரசனான யயாதி என்பருக்கு, தேவயானி (சுக்ராசார்யருடைய புதல்வி)யெனவும், சர்மிஷ்டை (விருஷபர்வாவினது மகள்)யெனவும், இரண்டு மனைவியர் இருந்தனர். அவர்களில், தேவயானியிடம் யது, துர்வஸு என்கிற இரண்டு புத்தி

† வில்லிபாரதம் குருகுல 101, 102.

ரர்களும், சர்மிஷ்டையிடம் த்ருஹ்யு, அநு, பூரு என்கிற மூன்று புத்திரர்களும் யயாதிக்கு உண்டானார்கள். இவர்களில் இளையாள் மகனான பூரு சற்குணமுள்ளவனாயிருந்தமையால் அவனை அரசன் அதிகமாகப்பாராட்டிவரலாயினான். இதனைத் தனது புத்திரிமூலமாகக் கேள்வியுற்ற சுக்கிராசார்யார், அரசனை நோக்கி, "ஹே, நஹுஷபுத்திரா! நீ என்புத்திரியை அவமதித்தமையின் நீ ஜரையையடையக்கடவை." எனச் சபித்தனர். வேந்தன் அவரை வணங்கி வேண்டிக்கொள்ள, "எவனேனும் ஒருவன் உனது மூப்பை மாற்றிக்கொள்ள உடன்படுவானாயின், உனது மூப்பை அவனுக்குக்கொடுத்து, அவனது வயதை நீ பெற்று, உனக்கு வேண்டிய இன்பங்களை நுகரலாம்" என சுக்கிரர் சாபானுக்கிரகமும் அருளினர். அரசனும் யௌவனமொழிந்து மூப்பையடைந்தனன். யயாதிராஜன் யதுமுதலான புத்திரர்களையழைத்து ஒவ்வொருவரையும் நோக்கி, தனது மூப்பையேற்றுக்கொண்டு, அவனது யௌவனத்தை தனக்குக் கொடுக்கும்படி வேண்டினான். யது, துர்வஸு, த்ருஹ்யு, அநு என்கிற நான்கு புத்திரர்களும் பிதாவினது வேண்டுகோளுக்கிணங்காமல் மறுத்துரைக்கவே, யயாதி, பூருவையழைத்து,

‡ "இயம் ஜரா மஹாபாஹோ மதர்தம் ப்ரதிக்ருஹ்யதாம் / "

"ஹே, புத்திரா! நீ எனது ஜரையை யேற்றுக்கொண்டு, உனது யௌவனத்தை எனக்குத்தருக" என வேண்டினர். அதைக்கேட்ட பூருவானவன்,

‡ "நாஹுஷேணைவமுக்தஸ்து பூரு: ப்ராஞ்சலிரப்ரவீத் /
தந்யோஸ்மிஅநுக்ருஹீதோஸ்மி பாஸநே ஸ்மிதவதித: /
பூரோர் வசநமாஜ்ஞாய நாஹுஷ: பரயாமுதா /
ப்ரஹர்ஷமதுலமலேபே ஜராம் ஸம்க்ராமயச்சதாம் /
தத: ஸ ராஜா தருண: ப்ராப்ய யஜ்ஞாந் ஸஹஸ்ரஸ: /
பஹுவர்ஷ ஸஹஸ்ராணி பாலயாமாஸ மேதிநீம் //"

கைகளைக்கூப்பிக்கொண்டு 'அடியேன் தன்யனாயினேன்; அனுக்கிரகிக்கப்பெற்றவனாயினேன்; தேவரீரது நியமனப்படி நடக்கக் காத்திருக்கின்றேன்' என விடையளித்தனன். இவ்வாறு

‡ வா-ரா. உத்-கா. சரு 59. சு 6, 7, 8, 9.

பூருகூறியதைக்கேட்டு யயாதி அதிகசந்தோஷமடைந்து தனது வரத்தின் மகிமையினால் தானடைந்திருக்குமுப்பை மகனிடம் போகுமாறுசெய்து அவனது யௌவனத்தைத் தான் பெற்றுக் கொண்டனன். இந்தப்பிரகாரம் யௌவனமடைந்த யயாதி அனேகவருஷகாலம் இன்பங்களனுபவித்தும், யாகங்கள் பல செய்தும் அரசாக்ஷிசெய்து, பின்பு மறுபடியும் யௌவனத்தைப் பூருவசம்ஒப்புவித்து ஜரையை தான்பெற்றுக்கொண்டு பூருவுக்கு இராஜ்ஜியாபிஷேகம் செய்துவைத்தனன். பிதாவின் வார்த்தையை உல்லங்கனஞ்செய்த யது முதலான நான்கு புத்திரர்களும் ராஜ்ஜியவம்சத்தினின்றும் பஹிஷ்காரம் செய்யப்பட்டார்கள்.

○ " அந்தமன்னவன் மைந்தரையழைத்தெனக்குசரா
தந்தமூப்பைநீர் கொண்மினும் மிளமைதந்தென்ன
மைந்தர்யாவருமறுத்திடப் பூருமற்றவன்ற
னிந்தமூப்பினைக்கவர்ந்து தன்னிளமையுமீந்தான்.

விந்தைபூமகண்முதலிய மடந்தையர்விரும்ப
முந்தைமாமணம் யாவையும் பலபகன்முற்றிச்
சிந்தையாதரந் தணிந்தபின் சிந்தனையின்றித்
தந்தைமீளவுமிளமைதன் றனயனுக்களித்தான்.

இடியுமாறுகொண்டு மொழியயாதியன்றிவற்கே
முடியுமாலையுமுத்தவெண் கவிகையுமரசும்
படியும்யாவையும் வழங்கியெம்பணிமதிமரபிற்
கடியுநீயினியென மகிழ்ந்தளியுடனளித்தான். "

என்பது வில்லிபாரதம்.

இதனால் ‘ பெற்றோரெல்லாம் பிள்ளைகளல்லர் ’ என்பதும், ‘ ப்ரீணாதி ய: ஸுசரிதை: பிதரம் ஸபுத்ர: ’ எவன் பிதாவின் சொற்கேட்டுத் திருப்திகரமாக நடக்கிறானோ, அவனே ஸத்புத்திரன் என்பதும் ஸூசிதம்.



○ ஸ்ரீவில்லிபாரதம் குருகுல 23, 24, 25.

## 6. மாற்றாந்தாய் வழிபாடு.

(1) கைகேயி கூனியை நோக்கி,

† " யதாமே பரதோ மான்யஸ்ததா பூயோபி ராகவ: |
கௌஸல்யாதோதிரிக்தம் ச ஸோநு ஶுஶ்ரூஷதே ஹிமாம் |"

" அடி, கூனி! எனக்கு பரதனைவிட ஸ்ரீராகவனே அதிகமாக அபிமானிக்கத்தகுந்தவன்; ஏனெனில் அவன் கௌஸலையைவிட எனக்கே அதிகமாகப் பணிவிடைசெய்கின்றானன்றோ? எனவும்.

(2) தசரதச்சக்கரவர்த்தியார் கைகேயியை நோக்கி,

¶ " யதாதே ஜநநீ துல்யாம் வ்ருத்திம் வஹதி ராகவ: |
தஸ்யைவ த்வமநர்த்தாய கிம் நிமித்தமிஹோத்யதா || "

" அடி, கைகேயி! ஸ்ரீராமன் கௌஸலைக்குச் செய்வதைப் போலவே நினக்குப்பணிந்து நடக்கின்றானே, அவன்விஷயத்தில் நீ ஏன் கெடுதிசெய்ய முயற்சிக்கின்றாய்? " எனக்கூறியிருப்பதாலும்,

(3) ஸீதாப்பிராட்டியார் அநஸூயாதேவியைநோக்கி,

" யாம் வ்ருத்திம் வர்த்ததே ராம: கௌஸல்யாயாம் மஹாபல: |
தாமேவ ந்ருப நாரீணுமந்யாஸாமபி வர்த்ததே || "

" ஹே, தேவி! எனது பர்த்தாவானவர், தன்னைப்பெற்ற கௌஸலையாரிடத்திற்போலவே சக்கரவர்த்தியாரின் தேவிமாரெல்லோரிடத்திலும் அன்புடன் பணிவிடைசெய்து வணங்குபவர். " என உரைத்திருப்பதாலும்,

(4) அந்தப்புரத்திலுள்ள ஸ்திரீகளெல்லோரும் ஸ்ரீராமபிரானை நினைந்து,

X " கௌஸல்யாயாம் மஹாதேஜா யதா மாதரி வர்த்ததே |
ததாயோ வர்த்ததே஽ஸ்மாஸு மஹாத்மா க்வநுகச்சதி || "

† வா-ரா. அ-கா. சரு 8. சு 18. ¶ வா-ரா. அ-கா. சரு 12. சு 8.
❀ ஷை. ஷை. சரு 118. சு 5. X ஷை. ஷை. சரு 41. சு 4.

“ ஸ்ரீராகவன், நம்மெல்லோரையும் பெற்றதாயாரைப் போலவேகருதி பக்தியுடன் பணிவிடைசெய்துவந்தனனன்றோ? அவன் இப்பொழுது எங்கு செல்கின்றான்? என வருந்தியுரைத் திருப்பதாலும்,

(5) பரதாழ்வான் கைகேயியை நோக்கி,

$ “ வர்த்ததே குருவ்ருத்திஜ்ஞோ யதா மாதரிவர்த்ததே / ”

“ தருமாத்துமாவாகிய ஸ்ரீராமபிரான், உன்னை பெற்றதாயாராகவே கருதி உனக்கு வந்தனவழிபாடு செய்துவந்தன ரன்றோ? ” எனக் கூறியிருப்பதாலும்,

(6) பரதாழ்வான் சத்துருக்கனழ்வானை நோக்கி,

‡ “ ஹந்யாமஹமிமாம் பாபாம் கைகேயீம் துஷ்டசாரிணீம் /
யதிமாம் தார்மிகோராமோ நாஸூயேந்மாத்ருகாதகம் // ”

“ தம்பி! மகாபாவியும் கெட்டநடத்தையுள்ளவளுமான இந்தக்கைகேயியை யான் இப்பொழுதே கொன்றுவிடுவேன். ஆனால் தருமவானும் எனது தமையனுருமாகிய ஸ்ரீராகவன், என்னை மாத்ருஹத்திசெய்தவனென்று, கோபித்துத் தண்டிப்பானெனக்கருதியே யான் அவ்விதம் செய்யவில்லை, என உரைத் திருப்பதாலும்,

(7) ஸ்ரீராமபிரான் இளையபெருமாளை நோக்கி,

○ “ ஜாநாஸி ஹியதா ஸௌம்ய ந மாத்ருஷு மமாந்தரம் / ”

“ தம்பி, லக்ஷ்மணா! யான் எல்லா தாய்மார்களையும் சிறிதும் வேற்றுமையின்றி பெற்றதாயைப்போலவே கருதிப் பணிவிடை செய்துவந்திருப்பதை நீ அறிவாயன்றோ? ” என அருளிச் செய்திருப்பதாலும்,

(8) கங்கைக்கரையில் சுமந்திரருக்கு விடைகொடுத்தருளும்பொழுது, அவரைநோக்கி ஸ்ரீராமபிரான்,

¶ “ பரதஸ்சாபி வக்தவ்யோ யதா ராஜநி வர்தஸே /
ததா மாத்ருஷு வர்தேதா: ஸர்வாஸ்வேவாவிஸேஷத: // ”

$ வா-ரா. அ-கா. சரு 73. சு. 9. ‡ வா-ரா. அ-கா. சரு 78. சு 22.
○ வா-ரா. அ-கா. சரு 22 சு 17. ¶ வா-ரா. அ-கா. சரு 52. சு 34

"சுமந்திரரே! 'நீ மஹாராஜரிடத்தில் எவ்வண்ணம் விசுவாசத்துடன் நடந்துவருகின்றனையோ, அவ்வண்ணம் நம் மாதாக்கள் எல்லோரிடத்திலும் வேற்றுமையின்றி ஸமமாகவே அன்புடன் நடந்துவருவாயாக' என பரதாழ்வானிடம் உரை செய்யக்கடவீர்" என்றருளிச்செய்திருப்பதாலும்,

(9) சித்திரக்கூடபருவதத்தில் பரதாழ்வான் ஸ்ரீராமபிரானிடத்தில் தமது மாதாவாகிய கைகேயியைப்பற்றி இகழ்ந்துரை செய்தபொழுது, ஸ்ரீராமபிரான்

$ "ந சாபி ஜநநீம் பால்யாத் த்வம் கர்ஹிதுமர்ஹஸி |"

"அடா தம்பி பரதா! நீ சிறுபிள்ளைத்தன்மையால் உன் மாதாவை யிகழ்ந்துபேசாதே." என அருளிச்செய்தும், பின்னும் அவரைநோக்கி,

🌐 "காமாத்வா தாத லோபாத்வா மாத்ரா துப்யமிதம் க்ருதம் |
நதந்மநஸி கர்தவ்யம் வர்திதவ்யம் ச மாத்ருவத் ||"

"அடா பரதா! காமத்தினாலோ, ஆசையினாலோ உனது மாதா உன்பொருட்டுச்செய்த இந்தக்காரியத்திற்காக நீயவர்மீது சிறிதும் கோபங்கொள்ளாமல் முன்போலவே மாத்ருவிசுவாஸத்துடன் நடந்துவரக்கடவை" என அருளிச்செய்திருப்பதாலும்,

(9) இராவணவதானந்தரம் விமானத்தில் தோன்றிய தசரதச்சக்கரவர்த்தியாரைநோக்கி, ஸ்ரீராமபிரான்,

† "குரு ப்ரஸாதம் தர்மஜ்ஞ கைகேய்யா பரதஸ்ய ச |
ஸபுத்ராம்த்வாம் த்யஜாமீதி யதுக்தா கைகேயீ த்வயா ||
ஸ ஶாப: கேகயீம் கோர: ஸபுத்ராம் நஸ்ப்ருஶேத் ப்ரபோ ||"

X "ஆயினுமுனக்கமைந்த தொன்றுரைப்பெனவழகன்
தீயளென்றுநீ துறந்தவென்றெய்வமுமகனும்
தாயுந்தம்பியுமாம் வரந்தருகெனத்தாழ்ந்தான்
வாய்திறந்தெழுந்தார்த்தன வுயிரெலாம்வழுத்தி."

$ வா-ரா. அ-கா. சரு 104. சு 🌐 வா-ரா. அ-கா. சரு 112. சு 19.
† ஷை யுத்-கா. சரு 121. சு 24, 25. X கம்-ரா. யுத்-கா. மீட்சி 129.

"தந்தையே! 'உனது புதல்வன் பரதனோடு உன்னையும் துறந்தேன்' என தேவரீர் முன் கைகேயியாரை நோக்கியருளிச் செய்தீரன்றோ? அந்தக்கைகேயியாரிடத்திலும், பரதனிடத்திலும் தேவரீர் இப்பொழுது அருள்கொண்டு அந்தச்சாபமானது அவர்களைத்தீண்டாதிருக்குமாறு அனுக்கிரகஞ்செய்வதாக அடியேனுக்கு வரந்தந்தருளவேண்டும்" எனப்பிரார்த்தித்திருப்பதாலும், ஸ்ரீராமபிரான் ஸபத்னீமாதாக்களிடத்தில் மாத்ரு விசுவாஸமுடையவரென்பதும், மற்றவர்களும் அவ்வண்ணம் ஒழுகவேண்டுமென்பதே அவருடைய திருவுள்ளமென்பதும் தெளிவாகப் புலப்படுகின்றமையால்,

புத்திரர் மாற்றாந்தாய்மார்களைப் பெற்றதாயைப்போலவே கருதி வழிபாடுசெய்யவேண்டுமென்பது ஸூசிதம்.

பாண்டவர்கள் வனவாஸஞ்சென்று த்வைதவனத்தில் வஸித்தகாலத்தில், ஒரு பிராம்மணன் யுதிஷ்டிரரிடம்வந்து 'அரசனே! நான் மரத்தில் மாட்டியிருந்த அரணிக்கோலானது ஒரு மானினுடைய கொம்பில் மாட்டிக்கொள்ளவே, அம்மானானது அதையெடுத்துக்கொண்டு ஓடிவிட்டது; ஆகையால் அம்மானைத்தேடிச்சென்று அக்கோலைக் கொண்டுவந்து கொடுக்கவேண்டும், என வேண்டினன். பிராம்மணனுடைய வசனத்தைக் கேட்டு, யுதிஷ்டிரர் சகோதரர்களுடன்கூடி அம்மானைப் பின்தொடர்ந்து சென்றபொழுது, மான் மறையவே, அவர்கள் களைதது மிகுந்த தாகத்துடன் ஓர் ஆலமரத்தினடியில் உட்கார்ந்தனர். அப்பொழுது யுதிஷ்டிரர் நகுலனைப்பார்த்து 'அப்பா! நீபோய் தீர்த்தமிருக்குமிடத்தைத்தேடி அம்புப் பெட்டிகளிற் தீர்த்தம் கொண்டுவா' என்று சொன்னவுடன், நகுலனும் ஒரு மரத்திலேறிப் பார்த்து சமீபத்தில் ஒரு தடாகமிருப்பதாகக்கண்டு, தீர்த்தம்கொண்டுவருவதற்காக அங்குசென்று குளிர்ந்த தீர்த்தத்தைக் குடிக்கவே மரித்தனன். நகுலன் திரும்பிவாராததைக்கண்டு, அவனைத் தேடி ஸஹாதேவன் அத்தடாகத்திற்குச்சென்று, அங்கு இறந்துகிடக்கிற தமையனைக்கண்டும் தாகத்தால் பீடிக்கப்பட்டவனாகி நீரைப்பருகினன். உடனே மரித்துவிழுந்தான். அவ்விருவரையுந்தேடி அர்ஜுனன்சென்று ஜலத்தைப்பானம்பண்ணிக் கீழேவிழுந்தனன். அவ்வாறே பீமனும் அங்கு சென்று நீரைப்பருகி மரிக்கவே, யுதிஷ்டிரர் ப்ராதாக்களைத்தேடிச்சென்று தடாகத்தையடைந்து, இறந்துகிடக்கிற ப்ராதாக்களைக்கண்டு புலம்பியழுது

தானும் தண்ணீரைப்பருக முயன்றபோது, தருமதேவன் ஓர் யக்ஷரூபத்துடன் தோன்றித் தடுத்துத் தனது வினாக்களுக்கு விடையளிக்குப்படி சொல்ல, யுதிஷ்டிரர் விடையளிக்கவே, யக்ஷன் 'நான் கேட்டவினாக்களுக்கெல்லாம் உன்னால் உள்ளபடி விடைகளளிக்கப்பட்டன. ஆகையால்,

"நச்சுநீர்குடித்துயிர் நீத்தநால்வரி,
னுச்சமாமன்புடையோருவன்றன்னைநீ
யிச்சையானிம்மறையியம்பியெண்ணியோ,
ரச்சமற்றழையெனவருள் செய்தானரோ."

'இந்த விஷஜலத்தைஉண்டு இறந்துகிடக்கும் நான்குசகோதரர்களில் உனக்கு மிக்க அன்புடையவன் ஒருவனை அழை அவன் பிழைத்துவருவான்' என்றான். யுதிஷ்டிரர் 'நகுலன் உயிரோடெழுந்திருக்கவேண்டும்' எனக் கூறி அவனையழைத்தனர். அதைக்கேட்ட தருமதேவனாகிய யக்ஷன்,

"கண்டுநின்றறப்பெருங் கடவுள்வாயுவின்
றிண்டிறன்மாமகன்றேவர் கோமகன்
மண்டழல்விடத்தினான் மடியமாமருத்
தண்டர்நல்கிளவலை யழைத்ததென்னென்றான்."

'உனக்கன்பர்களான பீமஸேனன், அர்ஜுனன் இவர்கள் இறந்துகிடக்க,மாற்றாந்தாயின்புத்திரனான நகுலன் பிழைப்பதைவிரும்பி அழைத்த காரணம் யாது?' என்று வினவ, யுதிஷ்டிரர்

"யதா குந்தீ ததா மாத்ரீ விசேஷோ நாஸ்தி மே தயோ: /
மாத்ருப்யாம் ஸமமிச்சாமி நகுலோ யக்ஷ ஜீவது //"

"சுத்திரமிலாமொழிக் குந்திக்கியானொரு
புத்திரனுளனெனப் புரிந்துநல்கினாய்
மத்திரிக்கொரு மகவில்லையல்லவர்
சித்திரம்வருத்தெனத் திகழுமேனியாய்."

'ஹே, யக்ஷ! எனக்குக் குந்திதேவியார்எப்படியோ அப்படியே மாத்ரி தேவியாரும் மாதாவன்றோ? அவ்விரு தாய்மார்களுள் எனக்கு வேற்றுமையில்லை. குந்திக்கு யான் ஒரு புத்திரன் இருக்கிறேன். ஆதலின் மாத்ரிக்கும் ஒரு புதல்வன் வேண்டுமன்றோ? ஆதலால் இரண்டு தாய்மார்களிடமும் சமமாக இருத்தலை விரும்புகிறேன். ஆதலால் நகுலன் ஜீவிக்கட்டும்' என்றனர். யக்ஷன் தான் தருமதேவன் என்பதைத் தெரிவித்து, இறந்தவர் நால்வரையும் பிழைக்கச்செய்து மற்றும் வேண்டும் வரங்களையும் அளித்தனன். என்ற பாரத இதிஹாஸம் இங்கு நோக்கத் தக்கது.

## 7. பிதாவின் கட்டளைக்குக் கீழ்படிதல்.

¶ (1) " ஸேநாபதீந்பஞ்ச ஸ து ப்ரமாபிதாந்
ஹநூமதா ஸாநுசராந் ஸவாஹநாந் /
ஸமீக்ஷ்ய ராஜா ஸமரோத்ததோந்முகம்
குமாரமக்ஷம் ப்ரஸமைக்ஷதாக்ரத: // "

பஞ்சசேனுதிபதிகளும் ஸைன்யங்களும் மாருதிகையால் மாண்டனரென்பதைக்கேட்ட இலங்காதிபதி, தனது புத்திரனை அக்ஷனென்பவனைப்பார்த்து மாருதியுடன் யுத்தத்திற்குச் செல்லும்படியாகத் தனது கண்களினுல் ஜாடைசெய்து ஆஜ்ஞாபித்தான். அவ்வக்ஷகுமாரனும் பிதாவின் ஆஜ்ஞாப்பிரகாரம்—

† " ததோ மஹத்பாலதிவாகரப்ரபம்
ப்ரதப்தஜாம்பூநதஜாலஸந்ததம் / ·
ரதம் ஸமாஸ்தாய யயௌ ஸ வீர்யவாந்
மஹாஹரிம் தம் ப்ரதி நைர்ருதர்ஷப: "

மாருதியுடன் யுத்தஞ்செய்யும்பொருட்டு, பாலசூரியமண்டலம்போல பிரகாசிக்கும் ஓர் சுவர்ண மயமான ரதத்திலேறிக் கொண்டு யுத்தரங்கஞ்சென்றுன்.

$ (2) " ததஸ்ஸுரக்ஷோதிபதிர் மஹாத்மா
ஹநூமதாக்ஷே நிஹதே குமாரே /
மநஸ்ஸமாதாய ததேந்த்ர கல்பம்
ஸமாதிதேசேந்த்ரஜிதம்ஸரோஷம் // "

வாயுபுத்திரரான ஹநுமாரால் அக்ஷகுமாரனும் மடிந்தான் என்பதைக்கேட்டு இராவணன் புத்திரசோகத்தினுல் கலங்கிய தன்மனதை தைரியஞ்செய்துகொண்டு, பராக்கிரமத்தில் தேவேந்திரனுக்குத்துல்லியனுன தன்புத்திரன் இந்திரஜித்தை மாருதியுடன் யுத்தத்திற்குச்செல்லும்படியாக ஆஜ்ஞைசெய்து, அவனை நோக்கி—

$ " நிஹதா: கிங்கரா: ஸர்வே ஜம்புமாலீ ச ராக்ஷஸ: /
அமாத்யபுத்ரா வீராஸ்ச பஞ்ச ஸேநாக்ரயாயிந: //
பலாநி ஸுஸம்ருத்தாநி ஸாஸ்வநாகரதாநி ச /
ஸஹோதரஸ்தே தயித: குமாரோக்ஷஸ்ச ஸூதித: //
ந ஹி தேஷ்வேவ மே ஸாரோ யஸ்த்வய்யரிநிஷூதந //

† வா-ரா. சுந்-கா. சரு 47 சு. 1, 3.
$ ஷை ஷை சரு 48. சு. 1, 7, 8, 9.

"ஹே, இந்திரஜித்து! ஒரு வானரன் நமது நகரில்வந்து கிங்கரர்கள் யாவரையும் கொன்றதோடு ஜப்புமாலியையும், மந்திரி புத்திரரெழுவரையும், சேனாதிபதிகளைவரையும் ஸம்ஹரித்து விட்டான். இவ்வளவுமன்றி, உனது அருமை சகோதரனை அக்ஷனையும் கொன்றுவிட்டான். ஆகையால் அவனைத் தொலைப்பதற்குத் தகுதியான நீயே சென்று அவ்வானரனையொழித்து ஜயத்துடன் வரக்கடவை." என மாருதியின் பராக்கிரமத்தையுந் தெரிவித்து அனுப்பினான்.

தனது சகோதரன் அக்ஷகுமாரன் ஹநுமாரால் கொல்லப்பட்டான் என்பதையும், ஹநுமார் மிகுந்தபலபராக்கிரமமுடையவர் என்பதாகப் பிதாவினால் சொல்லக்கேட்டுத் தெரிந்தும் இந்திரஜித்தானவன்.

‡ "ததः பிதுஸ்தத்வசநம் நிசம்ய ப்ரதக்ஷிணம் தக்ஷஸுதப்ரபாவः |
சகார பர்தாரமதீநஸத்வோ ரணாய வீரः ப்ரதிபந்நபுத்திः ||

பிதாவினுடைய கட்டளைக்குக் கீழ்படிந்து யுத்தத்திற்குச் செல்ல மனமிசைந்து பிதாவைச் சுற்றி வலம்வந்து அவருடைய ஆசீர்வாதம்பெற்றுப் பிரயாணமாயினான்.

(3) ஸ்ரீராமபிரான் கௌஸல்யாதேவியாரை நோக்கி,

¶ "அஸ்மாகம் து குலேபூர்வம் ஸகரஸ்யாஜ்ஞயாபிதுः |
கநத்பிः ஸாகரைர் பூமிமவாப்தாःஸுமஹாந்வதः || "

○ "மகரவேலைமண்டொட்டவண்டாடுதார்ச்
சகரர்தாதை பணிதலைநின்று தம
புகரில் யாக்கையினின்னுயிர்போக்கிய
திகரின்மாப்புகழ் நின்றதன்றேவென."

"பூர்வம் நமது குலத்தைச்சேர்ந்த ஸகரச்சக்கரவர்த்தியால் ஆஜ்ஞைசெய்யப்பட்ட அவரது புத்திரர்களான அறுபதினாயிரம் ஸகரர்களும் காணமற்போன யாகக்குதிரையைத் தேடிப் பூமியைத்தோண்டிப் பாதலஞ்சென்று (கபிலமஹரிஷியால்) மரணத்தையடைந்தனர்." என விண்ணப்பஞ்செய்தனர்.

இவைகளினால் பிதா எவ்வளவு கஷ்டமான காரியத்தில் ஏவினாலும், புத்திரன் பிராணனைத் துரும்பாக நினைத்து பிதாவின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடத்தலவசியமென்பது ஸூசிதம்.

‡ வா-ரா. அ-கா. சரு 21. சு. 32. ¶ வா-ரா. சுந்-கா. சரு 48. சு 16.
○ கம்-ரா. அ-கா. நகர்நீங்கு 25.

## 8. பிதாவின் ஆணையை மறுத்துரைக்கும் புத்திரர் துன்புறுவர்.

அம்பரீஷமஹாராஜனுடன் நரபசுவாகச்செனற சுனச்சேபன் புஷ்கரக்ஷேத்திரமடைந்தவுடன் அங்கு தவஞ்செய்துகொண்டிருந்த தனது அம்மானாகிய விசுவாமித்திர முனிவரைக்கண்டு தெண்டம் சமர்ப்பித்துத் தனது விருததாந்தங்களையெல்லாம் தெரிவித்து, அரசனது வேள்வி குறைவின்றி நிறைவேறவும், தன்னுயிரை இரக்ஷிக்கும்படியாகவும் பிரார்த்தித்துச் சரணமடைந்தனன்.

$ " மைத்துனனேடிமுன்னேர் வழங்கியமுறைமைகேளாத்
தத்துறலொழிநீயானே தடுப்பனின்னுயிரையென்னுப்
புத்திரர்தம்மைநோக்கிப் போகவேந்தோடு மென்ன
அத்தகுமுனிவன்கூற வவர்மறுத்தகறல்காணு. "

† " யக்ருதே பிதா: புத்ராஞ்ஜநயந்தி ஹிதகாம்யயா: /
பரலோகஹிதார்தாய தஸ்ய காலோயமாகத: // "

முனிவர் சுனச்சேபனுக்கு அபயமளித்துத் தமது புத்திரர்களை நோக்கி, " புத்திரர்களே! பிதா சந்தோஷமடையும்வண்ணம் நடப்பது புத்திரர் கடமையன்றோ? அவ்விதம் நீங்கள் என்னை திருப்திசெய்துவைக்கவேண்டிய காலம் இதோ நேர்ந்திருக்கிறது. ஆதலின், யான் சுனச்சேபனுக்கு அபயமளித்திருப்பதால் உங்களில் ஒருவன் சுனச்சேபனுக்குப் பதிலாக நரபசுவாக அம்பரீஷராஜனுடன் செல்லக்கடவன் " எனக் கட்டளையிட்டனர். இதற்குடன்படாமல் புத்திரர்களெல்லாரும் மறுத்துச் சொல்லவே, முனிவர் சீற்றங்கொண்டு,

† " ஶ்வமாம்ஸபோஜிந: ஸர்வே வாஸிஷ்டா இவ ஜாதிஷு /
பூர்ணம் வர்ஷஸஹஸ்ரம் து ப்ருதிவ்யாமநுவத்ஸ்யத // "

$ " எழுங்கதிரவனு நாணச்சிவந்தனனிருகணெஞ்சம்
புழுங்கினன் வடவைதீய மயிர்ப்புறம்பொறியிற்றுள்ள
அழுங்கலில் சிந்தையீர் நீரடவிக்கேடாறுஞ்சென்றே
ஒழுங்கருபுளிஞராகியுறு துயருறுகவென்றான். "

$ கம்-ரா. பா-கா. மிதிலை. 125, 126.
† வா-ரா. பா-கா. சரு 62. சு 9, 17.

"நீங்களெல்லோரும் வஸிஷ்டபுத்திரர்களைப்போல் நாய் மாமிசந்தின்னும் புலையர்களாகி ஆயிரம் வருஷகாலம் பூமியில் காடுகள்தோறுந்திரிந்தலைந்து துன்பமுறக்கடவீர்" எனச்சபித்து விட்டுச் சுனச்சேபனுக்குத்தீங்குநேராவண்ணம் இரண்டுமந்திரங்களை உபதேசித்தருளினர்.

இதனால் பிதாவின் கட்டளையை உல்லங்கனஞ்செய்தால் புத்திரர் துன்பமடைவரேன்பது ஸூசிதம்.

" அச்சமுள்ளடக்கி யறிவகத்தில்லாக்
கொச்சமக்களைப் பெருதலிலைக்குடி
யெச்சமற்றேமாந்திருக்கைநன்றே."

என்ற ஆன்றோர் வசனம் நோக்கத்தக்கது.



## 9. பிதுருவாக்கிய மாதுருவாக்கிய பரிபாலனம்.

¶1 "ராமோ ராஜ்ஞ: ஸுதோ ஜ்யேஷ்டோ யௌவராஜ்யமதோர்ஹதி/"

"இராமன் வேந்தனுக்குத் தலைமையாகிய புதல்வனாதலால் அவனே யுவராஜனாவதற்குரியன்."

‡ " வெயின்முறைக் குலக்கதிரவன் முதலியமேலோர்
உயிர்முதற் பொருடிறம்பினு முறைதிறம்பாதோர்
மயின்முறைக்குலத்துரிமையை மனுமுதன்மரபைச்
செயிருறப்புலச்சிந்தையாலென்சொனாய்தீயோய்."

என்பது கூனியைநோக்கிக்கூறிய கைகேயியின் வசனம்.

¶ 2 " தஸ்மாஜ்ஜ்யேஷ்டே ஹி கைகேயி ராஜ்யதந்த்ராணி பார்திவா:/
ஸ்தாபயந்த்யநவத்யாங்கி குணவத்ஸ்விதரேஷ்வபி // "

"அடி, கைகேயி! அரசர்கள், ஜயேஷ்ட புத்திரனுக்கே பட்டங்கட்டுவது வழக்கம்; மற்றப்பிள்ளைகள் திறமையுள்ளவர்களாயினும், அவர்களுக்குப் பட்டங்கட்டுவதில்லை.

‡ " மூத்தவற்குரித்தரசெனு முறைமையினுலகம்
காத்தமன்னனிவிளையனன்றே கடல்வண்ணன்
ஏத்துநீண்முடிபுனைவதற்கிசைந்தனனென்றால்
மீத்தருஞ்செல்வம் பரதனை விலக்குமாறெவனோ."

என்பது கூனியின் வசனம்.

¶ வா-ரா. அ-கா. சரு 8. சு 14, 24. ‡ கம்-ரா. அ-கா. மந்தரை 64,69.

○ 3 " இக்ஷ்வாகூணும் ஹி ஸர்வேஷாம் ராஜா பவதி பூர்வஜ: / "

" இக்ஷ்வாகு குலத்திற்பிறந்தவர்களுள் மூத்தோனே அரசனாவது முறையன்றோ? "

என்பது வஸிஷ்டமஹரிஷி இராமபிரானைநோக்கிக் கூறிய வசனம்.

X 4 " வேத்தவையிருந்தநீர் விமலனுந்தியில்
பூத்தவன்முதலிய புவியுட்டோன்றினோர்
மூத்தவரிருக்கவே முறைமையானிலம்
காத்தவருளரேனிற் காட்டிக்காண்டிரால். "

என்பது ஸ்ரீராமபிரானைநோக்கிக்கூறிய பரதாழ்வானுடைய வசனம்.

இத்தியாதிவசனங்களினால், ஜ்யேஷ்டபுத்திரனே இராஜ்ஜியத்தையடைய அர்ஹதையுடையவனென்பது சொல்லப்பட்டதாயிற்று.

இன்னும் தசரதச்சக்கரவர்த்தியார் ஸ்ரீராமபிரானைநோக்கி,

† " ஜேஷ்டாயாமஸி மெ பத்ந்யாம் ஸத்ருஸ்யாம் ஸத்ருஸ: ஸுத:/
உத்பந்நஸ்த்வம் குணஸ்ரேஷ்டோ மம ராமாத்மஜ: ப்ரிய: //
தஸ்மாத்த்வம் புஷ்யயோகேந யௌவராஜ்யமவாப்நுஹி // "

"ஹே, ராமா! நீ என்னுடையஸவர்ணத்து முதல்பத்தினியினிடத்தில் நற்குணமுள்ள ஔரஸப்புத்திரனாகப் பிறந்தவனாயும் எனக்கு மிகப்பிரியமுள்ளபுத்திரனாகவுமிருக்கிறாய். ஆதலால் நீ பூச நக்ஷத்திரத்தில் இவ்விராஜ்ஜியத்தையடையக்கடவை " என உரைத்தனர்.

குறிப்பு:— இந்த சுலோகத்தில் (1) ஸவர்ணம், (2) முதல் (3) பத்நி, (4) நற்குணம், (5) ஔரஸன், (6) புத்திரன், (7) பிரியம். என ஏழு அடைமொழிகள் கூறப்பட்டிருக்கின்றன.

(1) ஸவர்ணம்—என்பது, நான்குவருணத்துப் புருஷர்களும், தங்கள்வருணத்திலும, தாழ்ந்தவருணத்திலும் பிறந்தபெண்களை விவாகம்

○ வா-ரா. அ-கா. சரு 110. சு 36. X க-ரா. அ-கா. ஆற்று 16.
† வா-ரா. அ-கா. சரு 3. சு 39, 40.

செய்துகொள்ளலாம் என சாஸ்திரமிருப்பதினாலும், அவர்களுள் ஸ்வஜாதி மனைவியே சிரேஷ்டமென்றும் அவளே புருஷனுடன்கூடி அக்னிஹோத்திர முதலான தருமகைங்கர்யங்கள் செய்யத்தகுந்தவளென்றும், சாஸ்திரமிருப்பதாலும், கௌஸலையின் மேன்மையைக் காண்பிக்கிறது.

(2) முதல்—என்றபதம், அரசர்கள் அனேகம் ஸ்திரீகளை விவாஹஞ் செய்துகொள்ளலாமாகையாலும் அவர்களுள் " ப்ரதமா தர்மபத்நீ ஸ்யாத் த்விதீயா ரதிவர்தநீ /" என்றபடி முதல்மனைவியே, தருமபத்தினி என்றும் பட்டமஹிஷியென்றும் அவளே சிரேஷ்டமென சாஸ்திரமிருப்பதால், முதல்மனைவிக்குப் பிறந்தவனுடைய (ஸ்ரீராமபிரானுடைய) சிரேஷ்டத் தன்மையைக் காண்பிக்கிறது. "வேந்தர்வைதம் முற்றந்தான் முதற் றேவி." என்றார் கம்பநாட்டாழ்வாரும்.

(3) பத்நீ—என்றபதம், அஷ்டவித விவாஹங்களுள், பாணிக்கிரஹணமுறைப்படி விவாஹஞ்செய்துகொள்ளப்பட்டவளே, பத்தினி என்று சொல்லப்படுவதாலும், அவளுக்குப்பிறக்கும் பிள்ளையே ஆட்சிக்குரியவனென்பதியாலும், ஸ்ரீராமபிரானுடைய, சுதந்தர சிரேஷ்டத்தைக் காண்பிக்கிறது.

நந்தனம்—என்றதினால், " ஜ்யேஷ்டாம்ஸம் ப்ராப்நுயாத்தஸ்ய யவீயாந் குணதோऽதிக: /" என்றபடி குணத்தில் உயர்ந்தவன் கனிஷ்டனுயிருந்தாலும் பூருவைப்போல ஜ்யேஷ்டாம்சம் பெறத்தகுந்தவனென்றும், ஜ்யேஷ்டன் துர்க்குணனுயிருந்தால் அஸமஞ்சனைப்போலதியஜிக்கத்தக்கவனென்றும் சாஸ்திரமிருப்பதால், ஸ்ரீராமபிரானுடைய யோக்கியதையைக் காண்பிக்கிறது.

(5) ஔரஸன்—என்றபதம், " ஸ்வக்ஷேத்ரே ஸம்ஸ்க்ருதாயாம் து ஸ்வயமுத்பாதயேத்ஹி யம் / தம் ஔரஸம் விஜாநீயாத் புத்ரம் ப்ரதம கல்பிதம் //" (மனு) என்றபடி, "சாஸ்திரோக்தமாய் விவாஹஞ் செய்துகொண்ட மனைவியினிடத்தில், தனக்குப்பிறந்தவனே, ஔரஸப் புத்திரன் என்று சொல்லுகிறார்கள் அவனே முதன்மையானவன்." என சாஸ்திரமிருப்பதால், இதுவும் ஸ்ரீராமபிரானுடைய மேன்மையைக் காண்பிக்கிறது.

(6) புத்ரன்—என்றபதம் " மநு: புத்ரேப்யோ தாயம் வ்யபஜத " என்றபடி புத்திரன் கிராமக்ஷேபமாய் ஆட்சி உரிமையையடையத்தகுந்தவனாகையால் ஸ்ரீராமபிரானுடைய உரிமையைக்காண்பிக்கிறது.

(7) **ப்ரியம்**—என்றபதம், "**யோ அஸ்ய புத்ர: ப்ரியஸ்யாத் தம் ப்ரதி பூர்ணமுந்நயேத் /**" என்றபடி எந்தப் புத்திரன் பிதாவுக்குப் பிரிய முண்டாகும்வண்ணம் நடக்கிருனே, அவனே ஸத்புத்திரனனபடியால், அவன்பொருட்டே ஸர்வமும் நயப்பிக்கத்தக்கன. ஆகையால் இதுவும் ஸ்ரீராமபிரானுடைய குணவிசேஷத்தைக் காண்பிக்கிறது. ஆகையால் இந்த எழு அடைமொழிகளும், ஸ்ரீராமபிரானே எல்லாவிதங்களிலும் இராஜ்ஜியத்தைப் பெறுவதற்கு அருஹதையுடையவரென்பதை விளக்கிக் காண்பிக்கின்றன.

இவ்வாறு ஸ்ரீராமபிரான், தந்தையின் இராஜ்ஜியத்தைப் பெறுவதற்குப் பூர்ணமான உரிமைகள் அடைந்திருந்தும், ஜ்யேஷ்டபுத்திரராகஇருந்தும், முடிசூட்டிக்கொள்ளாமல், இராஜ்ஜியத்தைத் தம்பி பரதாழ்வானுக்களித்துவிட்டு, ஸீதாப்பிராட்டியாருடனும், இளயபெருமாளுடனும் வனஞ்சென்றனர். போதுமான ஸாமர்த்தியமில்லாமலோவெனில்?:—

¶ "ஏகோஹ்யஹமயோத்யாம் ச ப்ருத்வீம்சாபி லக்ஷ்மண /
தபேயமிஷுபி: க்ருத்தோ நநு வீர்யமகாரணம் //
அதர்மபயபீதஸ்ச பரலோகஸ்யசாநக /
தேநலக்ஷ்மண நாத்யாஹமாத்மாநம பிஷேசயே //"

"லக்ஷ்மண! நான் கோபங்கொள்வேனுகில், நான் ஒருவனே பாணங்களால் அயோத்தியையும், இப்பூவுலகையுமே தபிக்கும்படி செய்வேன். அதர்மத்திற்கும், பரலோகத்திற்கும் அஞ்சி இப்போழுது யான் அபிஷேகஞ்செய்துகொள்ளவில்லையேயல்லாது திறமையின்மையாலன்று." என ஸ்ரீராமபிரானேயருளிச்செய்திருப்பதால், வீரியமின்மையாலன்றென்பது ஸ்பஷ்டம். பின்யாது காரணத்தாலெனில்:—

‡ "விரும்பெழிலெந்தையார் மெய்ம்மைவீயுமேல்
வரும்பழியென்றலான் மகுடஞ்சூடலேன்."

என்பது சுக்ரீவமஹாராஜனைநோக்கி இராமபிரானுடைய வசனம்.

¶ வா-ரா. அ-கா. சரு 53. சு. 25, 26. ‡ கம்-ரா. கிட்கி. கலன் 24.

○ "சிறந்த தம்பி திருவுற வேந்தையை
மறந்தும்பொய்யிலனுக்கிவனத்திடை
உறைந்துதீரு முறுதிபெற்றேனினிப்
பிறந்துயான்பெறும் பேறென்பதியாவதே."

என்பது கோஸலையாரைநோக்கி இராமபிரானுடைய வசனம்.

† "தயரதன்றொல்குலத்தலைவன்றப்பிலா
துயர்குலத்தன்னைசொலுச்சியேந்திறு
னயர்விலதிவ்வழியுறையுமன்னவன்
பெயரினைத்தெரிகுதிர் பெருமையீரென்றாள்."

என இராவண சந்நியாசியைநோக்கி பிராட்டியாரின் வசனம்.

$ "அன்னவன்சிறுவனுமிவ் வாண்டகையன்னையேவத்
தன்னுடையுரிமைச் செல்வந் தம்பிக்குத் தகவினல்கி
நன்னெடுங்கானஞ்சேர்ந்தா னுமழுமிராமனென்பா
னிந்நெடுஞ்சிலைவலானுக் கேவல்செய்யடியன்யானே."

என்பது அனுமானைநோக்கி இளையபெருமாளுடைய வசனம்.

❀ "குறிதுவானென்றுகுறைந்தில னெடுஞ்சினங்கொண்டான்
மறியும்வெண்டிரைமாகட லுலகெலாம்வழங்கிச்
சிறியதாய்சொன்ன திருமொழிசென்னியிற்சூடி
நெறியினின்றதன்றுயகன் புகழெனநிமிர்ந்தான்."

என்பது, இந்திரசித்து அனுமாருடம்பிலே அம்புகளை யெய்தபோது, திருவடியின் நிலைமையைப்பற்றிக் கவிக்கூற்று.

இந்த ஆதாரங்களினால் தமது தந்தை, சிற்றன்னை கைகேயிக்குக் கொடுத்திருந்த வரங்களை சத்தியம் தவறாமல் பாதுகாத்தற்பொருட்டும், தமது சிற்றன்னை கைகேயியின் கட்டளையைத் தலைமேற்கொண்டும், ஸ்ரீராமபிரான் முடிசூட்டிக்கொள்ளாமல் வனஞ்சென்றனர் எனச் சித்திக்கின்றது.

இனி சக்கரவர்த்தியார் கைகேயிக்களித்த வரங்கள் எவை? கைகேயியின் கட்டளை என்ன? என்பவை விளக்கத்தக்கன.

○ கம்-ரா. அ-கா, நகர்நீங்கு 17. † கம்-ரா. ஆரணி-கா, சடாயுயிர் 37.
$ கம்-ரா. கிஷ்-கா, அநும 31. ❀ ஷை சுந்-கா. பாச. 41.

சித்திரகூடத்தில் ஸ்ரீராமபிரான் பரதாழ்வானை நோக்கி,

$ "தேவாஸுரே ச ஸங்க்ராமே ஜநந்யை தவ பார்த்திவ: /
ஸம்ப்ரஹ்ருஷ்டோ தேதௌ ராஜா வரமாராதித: ப்ரபு: //
தத: ஸா ஸம்ப்ரதி ஸ்ராவ்ய தவ மாதா யசஸ்விநீ /
அயாசத நரஸ்ரேஷ்டம் த்வௌ வரௌ வரவர்ணிநீ //
தவ ராஜ்யம் நரவ்யாக்ர மம ப்ரவ்ராஜநம் ததா /
தச்சராஜா ததா தஸ்யை நியுக்த: ப்ரதேதௌவரௌ //"

"தேவாஸுரயுத்தத்தில், சக்கரவர்த்தியார் மகிழ்ந்திரண்டு வரங்கள் உனது மாதாவுக்களித்திருந்தனர். அவ்விரண்டுவரங்களையும் ஒன்றால் யான் காட்டில்வசிக்கும்படியாயும், மற்றொன்றால் நீயரசாளும்படியாயும் உன்மாதா இப்பொழுது கேட்டனர். சக்கரவர்த்தியாரும் ஸத்தியந்தவறாமைக்காக அவ்வண்ணம் வரமளித்தனர். ஆனால் நம்பிதா, என்மீதுள்ள புத்திரவாத்ஸல்லியத்தினால், அவ்வரங்களை நிறைவேற்றுமாறு என்னிடம் நேரில் சொல்லமாட்டாமல் துயரத்தில் மூழ்கியிருந்தனர். அப்பொழுது உன் மாதா என்னை வரவழைத்து, நடந்த விருத்தாந்தங்களைக்கூறி,

¶ "யதி ஸத்யப்ரதிஜ்ஞம் த்வம் பிதரம் கர்துமிச்சஸி /
ஆத்மானம் ச நரஸ்ரேஷ்ட மம வாக்ய மிதம் ஸ்ருணு //"

'ஸ்ரீராமா! தந்தையை ஸத்தியஸந்தராகச்செய்து, நீயும் ஸத்தியஸந்தனாகவிரும்புவாயாயின், என்சொற்படிகேட்டுத் தந்தையார் எனக்களித்த வரப்பிரகாரம்,

† "த்வயாரண்யம் ப்ரவேஷ்டவ்யம் நவவர்ஷாணி பஞ்ச ச /
பரதச்சாபிஷிச்யேத யதேதத்பிஷேசநம் //
த்வதர்தே விஹிதம் ராஜ்ஞா தேந ஸர்வேண ராகவ //

○ "ஆழிசூழுலகமெல்லாம் பரதனேயாள நீபோய்த்
தாழிருஞ் சடைகடாங்கித் தாங்கருந்தவமேற்கொண்டு
பூழிவெங்கானநண்ணிப் புண்ணியத்துறைகளாடி
ஏழிரண்டாண்டின் வாவென்றியம்பினனரசனென்றாள்."

$ வா-ரா. அ-கா. சரு 107. சு 4, 5, 6.
¶ ஷை ஷை சரு 18. சு 34.
† வா-ரா. அ-கா. சரு 18. சு 35, 36. ○ கம்-ரா. அ-கா. கைகேசி 107.

நீயும் பதினான்குவருடம் வனவாஸஞ்செய்யக்கடவை. உன் பொருட்டுச் சித்தஞ்செய்த இந்த அபிஷேகப் பொருள்களைக் கொண்டே பரதன் அபிஷேகம் கொள்ளக்கடவன்.' எனக் கூறினள்.

அம்மொழியைக்கேட்டு யானும் சிறிதேனும் மனக்கவலை கொள்ளாமல், உன் மாதாவைநோக்கி,

‡ " ஏவமஸ்து கமிஷ்யாமி வநம் வஸ்துமஹம் த்வித: /
ஜடாசீரதரோ ராஜ்ஞ: ப்ரதிஜ்ஞாமநுபாலயந் // "

⊛ " மன்னவன் பணியன்றாகினும்பணிமறுப்பனோவென்
பின்னவன்பெற்றசெல்வ மடியனேன்பெற்றதன்றோ
என்னினியுறுதியப்பாலிப்பணி தலைமேற்கொண்டேன்
மின்னொளிர்கானமின்றே போகின்றேன் விடையுங்கொண்டேன். "

'தாயே! உமதுகட்டளையை நிறைவேற்றவும் என்பிதாவின் பிரதிஜ்ஞையை பரிபாலனஞ்செய்யும்பொருட்டும் சடையும் மான் தோலும் தரித்து வனத்துக்குச்செல்கின்றேன்' என்றுரைசெய்தேன். அந்தப்பிரகாரம்,

$ " ஸோஹம் வநமிதம் ப்ராப்தோ நிர்ஜநம் லக்ஷ்மணாந்வித: /
ஸீதயாசாப்ரதித்வந்த்வ: ஸத்யவாதே ஸ்தித: பிது: // "

ஸத்தியஸந்தரான, பிதாவின் வாக்கியத்தைப் பரிபாலனஞ் செய்ய யானும்பதினான்குவருஷம் வனவாஸஞ்செய்யும்பொருட்டு, ஸீதாலக்ஷ்மணர்களுடனிங்கெய்தினேன்' என்றருளிச்செய்தனர்.

இவைகளினால் கைகேயிபெற்ற இரண்டுவரங்களும், கைகேயியின் கட்டளையும், விளக்கிக் காண்பிக்கப்பட்டனவாயிற்று.

" கலக்கியமாமனத்தனளாய்க் கைகேசிவரம்வேண்ட
மலக்கியமாமனத்தனனாய் மன்னவனுமறுதொழிய
குலக்குமராகாடுறையப் போவென்றுவிடைகொடுப்ப
இலக்குமணன்றன்னொடு மங்கேகியதோரமடையாளம். "

என்ற பெரியாழ்வார் திருமொழியும்,

‡ வா-ரா. அ-கா. சரு 19. சு 2. ⊛ கம்-ரா. அ-கா. கைகேசி. 110.
$ ஷை ஷை சரு 107. சு 8.

"பாராளும்படர்செல்வம் பரதநம்பிக்கேயருளி
ஆராவன்பிளையனேடு அருங்கானம் அடைந்தவனே!"

"சிற்றவைதன்சொற்கொண்ட சீராமா! தாலேலேலோ."

என்ற பெருமாள் திருமொழியும், நோக்கத்தக்கன.

மேற்கூறியவாறு பிதாவின்வாக்கியத்தைப் பரிபாலனம் பண்ணும்பொருட்டு வனஞ்செல்ல நிச்சயித்த ஸ்ரீராமபிரானை வனம்போகாமலிருக்கும்படி யாரும்தடைசெய்யாததினால்வனஞ் சென்றனரரவென்றும் அல்லது தடைசெய்தும் இணங்காமல் வனஞ்சென்றனராவென்றும் சிறிது ஆராய்வாம்.

(1) பிதுர்வாக்கிய பரிபாலனார்த்தம் வனவாஸஞ்செய்யப் போகின்றேனாதலின் ஆசீர்வதித்து விடைதரவேண்டுமென்று ஸ்ரீராமபிரான் தமது மாதாவான கோசலாதேவியாரிடம் அருளிச்செய்தபொழுது, கோசலையார் புத்திரவாஞ்சையினால் துயரமடைந்து பலவாறு புலம்பியழுது, பின் தன்புத்திரனை நோக்கி,

† "யதைவ ராஜா பூஜ்யஸ்தே கௌரவேண ததாஸ்ம்யஹம் /
த்வாம் நாஹமநுஜாநாமி நகந்தவ்யமிதோ வநம் //"

"அப்பா, மகனே! உன்னால் பிதா எவ்வண்ணம் பூஜிக்கத்தகுந்தவரோ, அவ்வண்ணம் யானுமுனக்கு மாதாவானபடியால் என்வார்த்தையையும் நீஉல்லங்கனஞ்செய்யலாகாதன்றோ? நான் உனக்கு வனம்போகும்படியனுமதியளிக்கமாட்டேன். நீவனம் போகக்கூடாது" என்று சொல்லித் தடைசெய்தனர். ஸ்ரீராமபிரானும் தமது மாதாவைநோக்கி,

† "ஜாமதக்ந்யேந ராமேண ரேணுகா ஜநநீஸ்வயம் /
க்ருத்தா பரஶுநாரண்யே பிதுர்வசந காரணாத் //
ஏதைரந்யைஶ்ச பஹுபிர் திவிதேவ ஸமை: க்ருதம் //"

○ "மான்மறிகரத்தான் மழுவேந்துவான்
தான்மறுத்திலன் றாதைசொற்றாயையே
யூனறச்குறைத்தானுரவோனருள்
யான்மறுப்பதென்றெண்ணுவதோவென்றான்."

† வா-ரா. அ-கா. சரு 21. சு 25, 33.
○ க-ரா. அ-கா நகர்நீங்கு 26.

"முன்னம் பரசுராமரும் தமது பிதாவின் கட்டளைப்பிரகாரம் மாதாவாகிய ரேணுகாதேவியைக் கோடாலியால் கொலைசெய்தனர். மற்றும் பலபெரியோர்கள் பிதிருவாக்கிய பரிபாலனார்த்தம் அநேகம் காரியங்கள் செய்திருக்கின்றார்கள். யான்மட்டும் பிதாவின் கட்டளையை மறுக்கலாமோ?" ஆதலால்

† "பூர்வைரயமபிப்ரேதோ கதோமார்கோ அநுகம்யதெ /"

"முன்னால் பெரியோர்கள் சென்றவழியே யானும் செல்லவேண்டுமேயன்றி விலகிநடத்தல்கூடாது."

¶ "பிதுர்ஹி வசநம் குர்வந் நகச்சிந் நாமஹீயதே /
பிதுர்வசநமக்லீபம் கரிஷ்யாமி பிதுர்ஹிதம் //"

"இவ்வுலகில் பிதாவின் வசனப்பிரகாரம் நடக்கின்ற எவனும் இகழ்ச்சியையடைமாட்டான். ஆதலால் பிதாவுக்கு ஹிதத்தைச்செய்யும்பொருட்டுஅவர்சொற்படியே நடப்பேன்." மேலும்,

‡ "இத்திறத்தினிடருறுவாடனைக்
கைத்தலத்தினெடுத்தருங் கற்பினோய்
பொய்த்திறத்தனனுக்குதியோ புகல்
மெய்த்திறத்துநம் வேந்தனைநீயென்றான்."

"நீயும் பதிவிரதையானபடியால் உனதுபர்த்தாவானவரும் ஸத்தியஸந்தருமான அரசரை ஸத்தியந்தவறினவராகச்செய்வது தகுமோ." என, பலநீதிகள் அருளிச்செய்து தமது மாதாவைச் சம்மதிக்கும்படியாகச் செய்தருளினர்.

குறிப்பு:— மனுதர்மசாஸ்திரத்தில்—

"உபாத்யாயாத் தசாசார்யா ஆசார்யாணாம் சதம்பிதா /
ஸஹஸ்ரந்து பிதுர்மாதா கௌரவேணாதிரிச்யதே //"

"உபாத்யாயரைவிட, பத்துமடங்கு ஆசார்யரும ஆசார்யரைவிட நூறுமடங்கு பிதாவும், பிதாவைவிட ஆயிரமடங்கு மாதாவும் கௌரவிக்கத்தக்கவர்" எனச்சொல்லப்பட்டிருக்கிறது.

இன்னும்— "பதிதா குரவஸ்த்யாஜ்யா நதுமாதா கதஞ்சந /
கர்பதாரண போஷணாப்யாம் தேநமாதா கரீயஸீ //"

† வா-ரா. அ-கா. சரு 21. சு 36.
¶ வா-ரா. அ-கா. சரு 21. சு 37, 34. ‡ க-ரா. அ-கா. நகர்நீங்கு 15.

" பிதா குரு இவர்கள் பதிதர்களானுல் அவர்களைத் தள்ளிவிடலாம். ஆனுல் மாதாவை ஒருபொழுதும் தள்ளக்கூடாது. தன்னுடைய உதரத்தில்வைத்துக் காப்பாற்றியவளாகையால் மாதாவே சிறந்தவள் " எனவும் கூறப்பட்டிருக்கிறது.

" தந்தைதாய்பணித்தல்செய்யுந் தவமலாற்றவம்வேறில்லை
மைந்தருக்கேதிகளேனும் வணங்குவர்தாயைத்தந்தை
யந்தமைந்தனையேபோற்றல் வேண்டுமற்ருதறன்ருற்
சிந்தையுற்றுணரிற்ருயே தந்தையிற் சிறந்தாண்மன்னே "
(காசிகாண்டம்)

" அன்னையானவடாதைக்கு மதிகமன்னையும்பிதாவு
முன்னையோர்தெய்வமென்ற மொழிக்கெவர் முதன்மைபூண்டார்
பின்ருெராச்சிரமத்தேகிப் பிதாவையும்வணக்கங்கொள்ளுஞ்
சன்னியாசிகளும் வந்தத்தாயரைத்தொழுவான்றே "
(மெய்ஞ்ஞான விளக்கம்)

யதிகளாயினேரும் தம்மை யீன்றெடுத்துவளர்த்த தாயைவணங்கல் வேண்டுமெனச் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இவ்வாறிருக்கும்போழுது ஸ்ரீராமபிரான் தமது மாதாவின்வார்த்தையையுல்லங்கனஞ்செய்து வனஞ்சென்றது உசிதமாமோவெனில்—

" பிதாரக்ஷதி கௌமாரே பர்த்தாரக்ஷதி யௌவனே /
ரக்ஷந்தி வார்த்திகே புத்ரா நஸ்திரீ ஸ்வாதந்த்ர்ய மர்ஹதி // "
(மனு)

" ஸ்திரீயானவள் பால்யத்தில் பிதாவினுடையவும், யௌவனத்தில் புருஷனுடையவும், மூப்பில புத்திரனுடையவும் பாதுகாப்பிலிருக்கவேண்டும். ஒருபொழுதும் ஸ்திரீ ஸ்வதந்தரமாயிருத்தல்கூடாது. " என்ற மனுவசனப்பிரகாரம் பர்தா இருக்கும்பொழுது அவரது கட்டளைக்குமாருக பார்யை கட்டளையிடுவது அனுசிதமாதலாலும்,

" பிதுராஜ்ஞா பரோதர்ம: ஸ்வதர்மோ மாத்ரு ரக்ஷணம் / "

என்றபடி பிதா ஸ்வதந்தரரானபடியால் ஆஜ்ஞைசெய்ய அதிகாரமுடைமையும, மாதா அஸ்வதந்தரையானபடியால் புத்திரனிடம் போஷணையும் கைங்கர்யமுமே பெற உரிமையையும் உடையவர்களானதாலும் ஆஜ்ஞாவிஷயத்தில் பிதாவுக்கு ப்ராபல்யமும், சுப்ரூஷை விஷயத்தில் மாதாவுக்கு ப்ராபல்யமும் ஏற்படுகின்றன.

ஆகையால் ஸ்ரீராமபிரான் பிதாவினுடைய கட்டளைப்பிரகாரம் வனஞ்சென்றது யுக்தமெனக்கொள்ளத்தக்கது.

"தந்தைசொன்மிக்கொருமந்திரமில்லை."

"தாயிற்சிறந்தொரு கோயிலுமில்லை."

"ஈன்றாளின் எண்ணக்கடவுளுமில்."

என்ற ஆன்றோர்வாக்கியங்கள் இங்கு கவனிக்கத்தக்கன.

(2) இளையபெருமாள் ஸ்ரீராமபிரான்மீதுள்ள பக்திவிசேஷத்தினால், அவர் வனஞ்செல்வதைத் தடைசெய்தபொழுது ஸ்ரீராகவன் இளையபெருமாளைநோக்கி,

† "குருச்ச ராஜாச பிதாச வ்ருத்த:
க்ரோதாத் ப்ரஹர்ஷாத் யதிவாபி காமாத் /
யத்வ்யாதிசேத் கார்யமவேக்ஷ்ய தர்மம்
கஸ்தந்நகுர்யாதந்ருசம்ஸ வ்ருத்தி: //"

"அடா, தம்பி! குருவும், அரசரும், பிதாவும், வயோதிகருமான ஒருவர் கோபத்தினாலாவது, மகிழ்ச்சியினாலாவது, ஆசையினாலாவது ஒரு தருமத்தைக் காப்பதின்னிமித்தம் ஒரு காரியத்தைச் செய்யும்படியாகத் தம்புத்திரனைக் கட்டளையிடுவாராயின், நன்னடக்கையுடைய எவன்தான் அந்தக்காரியத்தைச் செய்ய மறுப்பான்? மேலும்

$ "ஸத்ய: ஸத்யாபிஸந்தச்ச நித்யம் ஸத்யபராக்ரம: /
பரலோகபயாத்பீதோ நிர்பயோஸ்து பிதாமம //"

எப்பொழுதும் உண்மையே பேசுபவரும், சொன்னசொல் தவறாதவரும், சிறந்தபராக்கிரமமுடையவருமான, நமது தந்தை கைகேயிக்களித்த வரங்களைப் பூர்த்திசெய்யாவிடில் நரகம்நேரிடுமேயென்றடைந்திருக்கும்பீதியானது யான் வனஞ்செல்வதால் நீங்கப்பெற்று நிர்பயமாக மகிழ்ந்திருக்கக்கடவர்." என பற்பல நியாயங்களையெடுத்துரைத்து சமாதானஞ்செய்தருளினர்.

† வா-ரா. அ-கா. சரு 21. சு 59.
$ வா-ரா. அ-கா. சரு 22. சு 9.

(3) பின்பு திருச்சித்திரக்கூடத்தில் பெருமாள் இளைய பெருமாளுடனும் ஸீதாப்பிராட்டியாருடனும் எழுந்தருளி யிருந்த சமயத்தில், ஜாபாலிமுனிவர் ஸ்ரீராமபிரானை நோக்கி,

‡ " க:கஸ்ய புருஷோ பந்து: கிமாப்யம் கஸ்ய கேநசித் |
ஏகோஹி ஜாயதே ஜந்துரேகஏவ விநச்யதி ||
தஸ்மாந் மாதா பிதா சேதி ராம ஸஜ்ஜேத யோ நர: |
உந்மத்த இவ ஸஜ்ஞேயோ நாஸ்தி கச்சித் ஹி கஸ்யசித் ||
யதா க்ராமாந்தரம் கச்சந் நர: கச்சித் பஹிர் வஸேத் |
உத்ஸ்ருஜ்ய ச தமாவாஸம் ப்ரதிஷ்டேதாபரேஹநி ||
ஏவமேவ மநுஷ்யாணாம் பிதா மாதா க்ருஹம் வஸு |
ஆவாஸமாத்ரம் காகுத்ஸ்த ஸஜ்ஜந்தே நாத்ர ஸஜ்ஜநா: ||
பித்ர்யம் ராஜ்யம் ஸமுத்ஸ்ருஜ்ய ஸநார்ஹஸி நரோத்தம |
ஆஸ்த்தாதும் காபதம் து:கம் விஷமம் பஹுகண்டகம் ||
ஸம்ருத்தாயாமயோத்யாயாம் ஆத்மாநமபிஷேசய || "

" ஹே, ராம! யார் யாருக்கு பந்து? எவனுக்கு எவனால் என்ன பிரயோஜனம்? ஒவ்வொரு பிராணியும் தனியே பிறந்து தனியே இறக்கின்றது. ஆகையால் மாதா பிதாஎன்று பாசம் வைப்பவன் பைத்தியகாரனே தவிர வேறல்ல. ஒருவருக்கொருவர் யாதொரு சம்பந்தமுமில்லை. கிராமாந்தரம் செல்பவன் ஓர் இரவு ஒருகிருஹத்தில்தங்கி மறுநாள் அதைவிட்டு வேறிடம் செல்வதுபோல், மனிதனுக்கும் மாதா, பிதா, வீடு என்பதெல்லாம் தங்குமிடமே தவிர உண்மையல்ல. அறிவாளிகள் அவைகளை நம்பமாட்டார்கள். ஆதலால் உமக்குப் பரம்பரையாகக் கிடைத்த இராஜ்ஜியத்தைத் துறந்து மிக்கக்கொடியதும் துன்பம் தருவதுமான வனத்திற்குச் செல்வது தகாது. ஸமிருத்தியான செல்வம்பொருந்திய திருவயோத்திக்குத் திரும்பச்சென்று அபிஷேகங்கொள்க." என சாருவாகமதத்தையனுசரித்து அநேகயுக்திவாதங்களை போதித்துத் தம்மை அதருமத்தில் பிரவேசிக்கும்படியாகவுரைத்த ஜாபாலிமுனிவருடைய வசனத்தைக்கேட்ட பெருமாள் தாம் தருமத்தை நிலைநிறுத்தவே அவதரித்திருப்பதால், மிகவும் சீற்றங்கொண்டு முனிவரைநோக்கி—

‡ வா-ரா. அ-கா. சரு 108. சு 3, 4, 5, 6, 7, 8.

¶ " அதர்மம் தர்மவேஷேண யத்யஹம் லோகஸம்கரம் |
அபிபத்ஸ்யே ஶுபம்ஹித்வா க்ரியாம் விதிவிவர்ஜிதாம் ||
கச்சேதயாந: புருஷ: கார்யாகார்ய விசக்ஷண: |
பஹுமந்யேத மாம் லோகே துர்வ்ருத்தம் லோகதூஷணம் ||
கஸ்ய யாஸ்யாம்யஹம் வ்ருத்தம் கேநவா ஸ்வர்கமாப்நுயாம் |
அநயா வர்த்தமாநோஹம் வ்ருத்யா ஹீநப்ரதிஜ்ஞயா ||
யத் வ்ருத்தா: ஸந்திராஜாந: தத்வ்ருத்தா: ஸந்திஹிப்ரஜா: ||
ஸத்யமூலாநி ஸர்வாணி ஸத்யாந் நாஸ்தி பரம்பதம் ||
ஸோஹம் பிதுர்நிதேஶந்து கிமர்த்தம் நாநுபாலயே ||
கதம் ஹ்யஹம் ப்ரதிஜ்ஞாய வநவாஸமிமம் குரோ: |
பரதஸ்ய கரிஷ்யாமி வசோ ஹித்வா குரோர் வச: || "

" முனிவரே! தேவரீர் தருமம்போலக்கூறிய அதருமத்தை ஒப்புக்கொண்டு அறநூல்களிற்கூறிய ஸன்மார்க்கத்தைக்கடந்து யான் நடப்பேனாகில், இவ்விதம் லோகவிருத்தமானகாரியங்களைச்செய்த என்னை யார்தான் மதிப்பார்? யான்செய்த பிரதிஜ்ஞையைவிட்டு தேவரீருரைத்தவண்ணஞ்செய்தால் யாது பயனடைவேன்? எனக்கு நற்கதியெவ்வாறு கிடைக்கும்? அரசர்கள் எந்தமார்க்கத்தில் செல்லுகின்றனரோ அந்தமார்க்கத்திலேயே பிரஜைகளும்செல்வார்கள். ஸகலமும் ஸத்தியத்தையே காரணமாகவுடையன. ஸத்தியத்தைத்தவிர உயர்ந்த பதவி வேறொன்றுமில்லை. ஆனதால் எதற்காக பிரதிஜ்ஞையையனுஷ்டிக்காமலிருக்கவேண்டும்? யான் பிதுர்வாக்கியத்தைப் பரிபாலனஞ்செய்கிறேனென்று பிரதிஜ்ஞைசெய்துவிட்டு எவ்விதம் அதையனுஷ்டிக்காமல் பரதனுடைய வார்த்தைக்கிணங்கி அயோத்திக்குத் திரும்புவேன்? ஆகையால் தேவரீருரைத்த யுக்திவாதத்தையொருபொழுதும் ஏற்றுக்கொள்ளேன். பதினான்குவருஷம் வனவாஸஞ்செய்து பிதாவின் வாக்கியத்தை நிறைவேற்றியபின்பே அயோத்திக்குத் திரும்புவேனல்லது அதற்கு முன்பு ஒருபோதும் திரும்பேன்" என அருளிச்செய்தனர்.

¶ வா-ரா. அ-கா. சரு 109. சு 6, 7, 8, 9, 13, 15, 24.

(4) பின்பு குலகுருவாகிய வஸிஷ்டபகவான் பெருமானை நோக்கி—

† " புருஷஸ்யேஹ ஜாதஸ்ய பவந்தி குரவஸ்த்ரய: |
ஆசார்யஸ்சைவ காகுஸ்த பிதா மாதா ச ராகவ ||
பிதாஹ்யேநம் ஜநயதி புருஷம் புருஷர்ஷப |
ப்ராஜ்ஞாம் ததாதி ச ஆசார்யஸ்தஸ்மாத் ஸ குருருச்யதே ||
ஸதேஹம் பிதுராசார்யஸ்தவசைவ பரந்தப |
மம த்வம் வசநம் குர்வந் நாதிவர்த்தே: ஸதாங்கதிம் || "

○ " இதவியலியற்றிய குரவர்யாரினும்
மதவியல் களிற்றிஞய் மறுவில் விஞ்சைகள்
பதவிய விருமையும் பயக்கப்பண்பினுல்
உதவியயோருவனே யுயருமென்பரால்.

என்றலால் யானுனை யெடுத்து விஞ்சைகள்
ஒன்றலாதனபல வுதவிற்றுண்மையால்
அன்றெனுதின்றென தாணையையநீ
நன்றுபோந்தளி யுனக்குரியநாடென்றன். "

" ஸ்ரீராமா! புருஷர்களுக்கு ஆசார்யன், தந்தை, தாய் என்ற மூவர்களும் குருவாகின்றனர். தாய்தந்தையர் புத்திரரைப் பெறுகின்றனர். ஆசார்யன் ஞானத்தையளித்து, ஸத்கதியடையச்செய்கின்றனர். அதனுல் ஆசார்யனே மேலானவராகக் கருதுகின்றனர். யான் உன் தந்தைக்கும் மற்றும் உன் குலத்துள்ளோர்க்கும் ஆசார்யனுனதோடு உனக்குமாசார்யனுகி பலவித்தைகளையளித்திருக்கின்றேன். ஆனதால் நீ என்வாக்கியத்தின்படி செய்வாயாகில் ஸன்மார்க்கத்தைத் தவிர்ந்தவனுகாய் " என்றருளிச்செய்து பரதாழ்வான் வேண்டுகோளின்படியும் " இக்ஷ்வாகூணும் ஸர்வேஷாம் ராஜா பவதி பூர்வஜ: " என்ற குலமுறை தருமத்தையனுசரித்தும் திருவயோத்தியடைந்து மகுடஞ்சூட்டிக்கொள்ளும்படியருளிச்செய்தனர்.

---

† வா-ரா. அ-கா. சரு 111. சு 2, 3, 4.
○ கம்-ரா. அ-கா. கிளைகண்டு 123, 124.

அதற்கு ஸ்ரீராமபிரான்,

† " ஸஹிராஜா தஶரத: பிதா ஜநயிதாமம |
ஆஜ்ஞாபயந் மாம் யத் தஸ்ய நதந்மித்யா பவிஷ்யதி || "

○ " தாய்பணித்துவந்தன தந்தைசெய்கென
எயவெப்பொருள்களு மிறைஞ்சி மேற்கொளாத்
தீயவப்புலையனிற் செய்கைதேர்கிலா
நாயெனத்திரிவது நல்லதல்லதோ. "

" முன்னுறப்பணித்தவர் மொழியையானெனச்
சென்னியிற்கொண்டது செய்வேனென்றதின்
பின்னுறப்பணித்தனை பெருமையோவெனக்
கென்னினிச்செய்வதை யுரைசெயீங்கென்றான். "

" ஹே, பகவன்! என்னைப் பெற்றுவளர்த்த தந்தையாகிய சக்கரவர்த்தியார் அடியேனுக்கு ஒரு கட்டளையிட்டு அவர் முன்பாகவே அடியேனும் செய்வதாக பிரதிஜ்ஞைசெய்துகொடுத்து இங்கெய்தியபின் அதைப் பொய்யாகச்செய்து இப்பொழுது தேவரீர் அருளிச்செய்கிறபடி செய்வது உசிதமாமோவென தேவரீரே ஆலோசித்து அருளிச்செய்க " என விண்ணப்பஞ் செய்தருளினர்.

(5) தம்மைத் தெண்டம்சமர்ப்பித்து கைகூப்பி நிற்கும் பரதாழ்வானைநோக்கி, ஸ்ரீராமபிரான் " அப்பா, பரதா! நீ இப்பொழுது அரசாக்ஷிசெய்வதைவிட்டு ஜடாசீரதாரியாய் இவ்விடம் வந்த காரணம் யாது? " என வினவியருளியபொழுது,

‡ " ஸாம்த்விதா மாமிகாமாதா தத்தம் ராஜ்யமிதம் மம |
தத்ததாமி தவைவாஹம் புங்க்ஷ்வ ராஜ்யமகண்டகம் ||
துராவரம் த்வதந்யேந ராஜ்யகண்டமிதம் மஹத் |
கதிம் கரஇவாஶ்வஸ்ய தார்க்ஷ்யஸ்யேவ பதத்ரிண: ||
அநுகந்தும் நஶக்திர்மே கதிம்தவ மஹீபதே || "

" ஸ்வாமி! என் மாதா வரங்கள்பெற்று எனக்களித்த இந்த இராஜ்ஜியத்தை அடியேன் இப்பொழுது தேவரீரிடம் ஸமர்ப்

† வா-ரா. அ-கா. சரு 111. சு 11.
○ க-ரா. அ-கா திருவடிசூட்டு படலம் 117, 128.
‡ வா-ரா அ-கா. சரு 105. சு. 4, 5, 6.

பிக்கின்றேன்; தேவரீர் கிருபைகூர்ந்து இதனை ஒப்புக்கொண்டு பரிபாலனஞ்செய்தருள்க; மிகப் பெரிதாகிய இந்தவிராஜ்ஜியத்தை அரசாள்வது தேவரீரைத்தவிர மற்றவர்களுக்கு அசாத்தியமானது; குதிரையின்வேகத்தைக் கழுதையும், கருடனது வேகத்தை மற்றப்பறவைகளும் அனுசரிப்பது எப்படி அசாத்தியமானதோ, அப்படியே தேவரீருடைய சக்தியையனுசரிக்க அடியேன் ஆசக்தனாயிருக்கின்றேன்." எனப்பிரார்த்தித்தனர்.

அதற்கு ஸ்ரீராமபிரான் பரதாழ்வானை நோக்கி,

"அடா, பரதா! நான் பதினான்கு வருஷம் வனவாஸஞ் செய்யவேண்டுமென்றும் நீ நாடாளவேண்டுமென்றும உன்மாதா சக்கரவர்த்தியாரிடம் இரண்டுவரங்கள் கேட்டனர். அவரும் ஸத்தியவாதியாகையால் அவ்வண்ணமே வரமளித்தனர். அவருடைய கட்டளைக்கு மாறாக நாம் நடந்தால் அவர் ஸத்தியம் தவறியவராவார். ஆதலின்,

$ "தஸ்மாத்த்வஹி நரஶ்ரேஷ்ட பிதரம் நாகாத் ப்ரபோ /
அயோத்யாம் கச்ச பரத ப்ரக்ருதீருபாஞ்ஜய //
ஶத்ருக்ந ஸஹிதோவீர ஸஹஸர்வைர் த்விஜாதிபி: /
ப்ரவேக்ஷ்யே தண்டகாரண்யம் அஹமப்யவிலம்பயந் //
ஆப்யாம்து ஸஹிதோ வீர வைதேஹ்யா லக்ஷ்மணேந ச //
சத்வாரஸ்தநயவராவயம் நரேந்த்ரம் ஸத்யஸ்தம் பரத சராம மாவிஷாத //"

நீ, தந்தை நரகத்து விழாதவண்ணம் பாதுகாக்கக்கடவை. நீ உடனே திருவயோத்தியையடைந்து பிரஜைகளை சந்தோஷிக்கச்செய்துகொண்டு சத்ருக்கனனுடனும், பிராம்மணர்களுடனும் வாழ்ந்துவருவாயாக. யானோ ஜானகியுடனும், லக்ஷ்மணனுடனும் தண்டகாரண்யம் சேருவேன். இந்தப்பிரகாரம் நாம் நான்குபுத்திரர்களும் நம்தந்தையாகிய சக்கரவர்த்தியாரை ஸத்தியந்தவறாது பாதுகாத்து நடந்துவருவோம். நீ வீணாக சோகமடையாதே" என்றருளிச்செய்து பரதாழ்வானைத் தேற்றியருளினார்.

$ வா-ரா. அ-கா. சரு 107. சு 14, 15, 16, 19.

இந்தப்பிரகாரமாக ஸ்ரீராமபிரான்வனஞ்செல்வதை, மாதாவான கௌஸல்யாதேவியார், ப்ராதாக்களான ஸ்ரீபரதாழ்வான், இளையபெருமாள், குலகுருவாகிய வஸிஷ்டமுனிவர், ஜாபாலி முனிவர் முதலானவர்கள் தடைசெய்தும், திரும்பத்திருவயோத்திக்கு எழுந்தருளி முடிசூட்டிக்கொள்ளும்படியாக வேண்டியும், அவைகளையங்கீகரிக்காமல், எல்லோர்க்கும் தக்கவாறு பல நீதிகளையுரைத்துச் சமாதானஞ்செய்தருளி,

¶ " ஸ ஜகாம வநம் வீர: ப்ரதிஜ்ஞாமநுபாலயந் /
பிதுர்வசன நிர்தேசாத் கைகேய்யா: ப்பிரியகாரணாத் // "

ஸ்ரீராமபிரான், கைகேயியாருக்குப் பிரியத்தைச் செய்யும்பொருட்டும், பிதுர்வாக்கியபரிபாலனஞ் செய்யும்பொருட்டும் வனஞ்சென்றருளினார்.

இதனால் தாய்தந்தையரின் வசனங்களைப் பரிபாலனஞ் செய்யவேண்டியது, புதல்வரின் முக்கியமான தருமமென்பது ஸூசிதம்.

குறிப்பு:— இராவணவதானந்தரம் ஸ்ரீராமபிரானைக்காணவந்த தசரதச் சக்கரவர்த்தியாரின் திருவடிகளில் விழுந்து வணங்கிய ஸ்ரீராமபிரானை சக்கரவர்த்தியார் எடுத்தணைத்துக் கண்களில் ஆனந்த பாஷ்பம் பெருகக் கூறுகின்றார்—

† " தாரிதோஹம் த்வயா புத்ர ஸுபுத்ரேண மஹாத்மநா /
அஷ்டாவக்ரேண தர்மாத்மா கஹோளோ ப்ராஹ்மணோ யதா //"

" அப்பா, மகனே ! அஷ்டாவக்ரமஹரிஷி கஹோளனென்னும் பிராம்மணனை ஜனகமஹாராஜரது ஸபையில் வாதத்தினால் உய்வித்தது போல் மஹாநுபாவனும் ஸத்புத்திரனுமாகிய நீ, ஸத்தியமாகிற பாசத்தினால் கட்டுண்டிருக்கிற என்னை அஸத்திய தோஷத்தினின்று விடுவித்து கரையேற்றினை." எனக்கூறியிருப்பதால்

" தந்தையார் ஸத்தியந்தவறி நரகத்து வீழ்ந்தழுந்தாவண்ணம் அவருடைய வசனத்தைப் பரிபாலனம்பண்ணும்பொருட்டு யான் வனஞ்

¶ வா-ரா. பா-கா. சரு 1. சு 24.
† வா-ரா. யுத்-கா. சரு 121 சு 16.

செல்கின்றேன் " என், ஸ்ரீராமபிரான் முன்பு அருளிச்செய்திருப்பது, உண்மையானதென்பதற்கு இதுவே போதிய சான்றாம்.

(1) பாரதயுத்த சமயம் குந்திதேவி கர்ணனைநோக்கி,

‡ " பார்த்தன்வெஞ்சமரினின்னுடன்மலைந்தாற் பகைப்பெரும் பாந்தளம்பகழி
கோத்தலும் பிழைத்தான் மறித்துநீ விடுத்துக்கோடலேன்றெரு வரங்குறித்தாள். "

○ " வெஞ்சரங்கோத்தெய்து விறலழிக்குஞ்சன்மகனே
பஞ்சவரிற்பார்த்தனுடன் மலைந்தா — லஞ்சுதலை
நாகமிருகாற் றொடாதொழிக வென்றுரைத்தா
ளாகமுறத்தழுவியாங்கு. "

" மகனே, கர்ண! நீ அர்ஜுனனோடு பொருதால், ஐந்து தலைகளையுடைய நாகாஸ்திரத்தை நீ பிரயோகித்து அது தவறுமாயின் மறுமுறை அவ்வஸ்திரத்தைத் தொடுக்காமலிருப்பதான ஒருவரம்கொடு " என வேண்டினள். கர்ணனும் குந்தியைநோக்கி,

‡ " செறுகணையொன்றுதொடுக்கவுமுனைந்து செருச்செய்வோன்சென்னியோடிருந்தான்
மறுகணைதொடுப்பதாண்மையோ வலியோமானமோ மன்னவர்க்கறமோ
வுறுகணையொன்றேபார்த்தன்மேற்றொடுப்ப னெழிந்துளோருய்வரென்றுரைத்தான்
றறுகணாரலர்க்குந்தறுகணனவர்க்குந் தண்ணளிநிறைந்த செங்கண்ணன். "

○ " நாகமிருகாற் றொடாதொழிய வேண்டுமென்
றாகவுரைத்தீ ரதுகேண்மின் — வேக
மொருகாற்றொடுத்தா லதுபிழைத்தாற் பின்னை
யிருகாற்றொடாதொழிந்தேன் யான். "

" அன்னையே! யான் அர்ஜுனன்மீது ஒருதரம் எய்த நாகாஸ்திரம் தவறுமாயின் இரண்டாந்தரம் அதைப் பிரயோகிக்கமாட்டேன் " என வாக்களித்தனன்.

‡ வில்லிபாரதம்-உத்-பருவம். ○ பெருந்தேவனார் பாரதம்-உத்-பருவம்.

அவ்வாறே கர்ணனும் முன்பு பாரதயுத்தத்தில் அர்ஜுனனைக் கொல்லுவதாகச் சபதம்செய்திருந்தும், தன் மாதாவுக்களித்த வாக்கைப் பரிபாலனம்பண்ணும்பொருட்டு யுத்தத்தில் அர்ஜுனன்மீது ஒருதரம் விடுத்த பாணத்தை இரண்டாந்தரம் பிரயோகிக்காமலிருந்து உயிர்துறந்தான்."

என்ற பாரத இதிஹாஸமும்,

(2) பஞ்சபாண்டவர்கள், பாஞ்சாலநகரத்தில் ஒருகுயவன்வீட்டில் தங்கி பிராம்மணவிருத்தியனுசரித்து பிக்ஷையெடுத்துப்புஜித்துக்கொண்டு வஸித்திருந்தார்கள். அப்போது, திரௌபதியின் ஸ்வயம்வரத்தைக் கேள்விப்பட்டு, பாண்டவர்களும் ஸ்வயம்வரமண்டபஞ்சென்று, அங்கு லக்ஷியத்தையடித்து, அங்கிருந்த அரசர்களையும் யுத்தத்தில் ஜெயித்து திரௌபதியையழைத்துக்கொண்டு தாங்கள் தங்கியிருந்த கிருஹத்திற்குச் சென்று,

"அன்றிலக்கெய்தகோவுந் துணைவருமானவெம்போர்
வென்றுகொற்றவையோடொக்கு மின்னிடைப் பொன்னுந்தாமுஞ்
சென்றுமட்கலஞ்செய்கம்மி செழுமனைமுன்றிலெய்தி
யின்றுபெற்றனமோரையமேன் செய்வதிநனையென்றார்."

"உள்ளிருந்தன்னைமைந்தருரைத்தசொற்கேட்டுத்தேவர்
தெள்ளமுதென்னமக்காள் சேரநீருந்துமென்னப்
புள்ளினமொடுங்குமாலைப் பொழுதிவள்புறம்பரெய்திக்
கள்ளவிழ்கூந்தலாளைக் கரும்பெனவிரும்பிக்கண்டாள்."

குந்திதேவியிடம் 'இன்று ஒரு பிக்ஷைபெற்றோம்' என்று தெரிவித்தனர். குந்தியும், வந்தவர்களைப்பார்க்காமல் வீட்டுக்குள்ளிருந்தபடி 'புத்திரர்களே! நீங்களெல்லோரும் சேர்ந்துபுசியுங்கள்,' என்றுசொல்லிவிட்டுப் பின் வந்துபார்த்தபொழுது ஐவருக்கும் பக்கத்தில் நிற்கும் திரௌபதியைக் கண்டாள்.

உடனே குந்தி சிந்தையுற்று யுதிஷ்டிரரை நோக்கி—

"என்னினைந்தென்சொன்னேன் மற்றென்செய்தேனென்றுசோரு
மன்னையைவணங்கிநின்சொலாரணப்படியதாக
நின்னினைவன்றலெங்கணெஞ்சிலு நினைவுண்டென்றான்
றன்னிகரிலாதகேள்விசான்ற சீர்த்தருமனென்பான்."

"நான் கவனிக்காமல் 'சேர்ந்து புஜியுங்கள்' என்று சொல்லிவிட்டேன். இப்போது நான்சொன்னசொல் எவ்வாறு பொய்யாகாமல்

இருக்கமுடியும்? இவளும் தோஷமற்றவளாக எவ்வாறு பவிப்பாள்? சொல்" என்றான். தருமராஜாவும் தாயாரை நோக்கி, 'அன்னையே! உன்னுடைய வார்த்தை வேதம்போல ஸத்தியமுள்ளதாகவே பவிக்கும் நீ வருத்தப்படாதே' எனக்கூறினர்.

ஒரு ஸ்திரீயை ஐவர் விவாஹஞ்செய்துகொள்ளக்கூடாதென்று சாஸ்திரமிருந்தும் மாதாவினுடைய வசனம் பொய்யாகாமல் பாதுகாக்கும் பொருட்டுப் பாண்டவர்கள் ஐவரும் திரௌபதியைச் சாஸ்திரோக்தமாக விவாஹஞ்செய்துகொண்டனர். இந்தப்பாரத இதிஹாஸமும், இங்கு கவனிக்கத்தக்கன.



## (10) தந்தைக்கு அந்தியகருமஞ்செய்தல்.

(1) ஸ்ரீபரதாழ்வான் ஸ்ரீராமபிரானை நோக்கி, "ஸ்வாமி! நமது பிதா இறக்கும்பொழுது,

† "ஹாராகவ மஹாபாஹோ மமாயாஸநாஶந ||
ஹாபித்ருப்ரிய மேநாத ஹாமமாவிகத:ஸுத: ||"

'அந்தோ ராகவ! அந்தோ நீண்டதிருத்தோள்களையுடையவனே! என் துயரந்தீர்த்தருளவல்ல மகனே! பிதாவினிடத்தில் மிகப்பிரீதியுடையவனே! அந்தோ எனக்குத்தஞ்சமாகிய அருமை மகனே! நீ இப்பொழுது எங்கேயிருக்கின்றனை?' என்று புலம்பித்தேவரீரையேநினைந்துகொண்டுபிராணனைத்துறந்தனர்."

¶ "ப்ரியேண கலு தத்தம் ஹி பித்ருலோகேஷு ராகவ |
அக்ஷயம் பவதீத்யாஹு: பவாம்ஸ்சைவ பிது:ப்ரிய: ||"

"தேவரீர், பிதாவுக்கு மிகவும் பிரியமான புத்திரராதலால் தந்தைக்குத் தருப்பணஞ்செய்யக்கடவீர். பிரியமுடைய புத்திரனால் கொடுக்கப்பட்டதே பிதருலோகத்தில் பிதுருக்களுக்கு அக்ஷயமாகின்றதெனப் பெரியோர் கூறுகின்றனர்" என விண்ணப்பஞ்செய்தனர்.

இதனால் பிரியமுள்ள புத்திரனால் செய்யப்பட்ட கருமமே பிதாவுக்குத் திருப்தியையளிக்குமென்பது ஸூசிதம்.

† வா-ரா. சு-கா. சரு 64. சு 75, 76. ¶ வா-ரா. அ-கா. சரு 101. சு 8.

" புத்ராணாம் மத்யமோவாபி கநிஷ்டா ஜ்யேஷ்டா ஏவ வா |
பிதுர்யஸ்து ப்ரியதம: ஸர்வம் தேநைவகாரயேத் || "

" புத்திரர்களுள் ஜ்யேஷ்டனோ, கனிஷ்டனோ, மத்யமனோ, எவன் பிதாவுக்கு அதிகப்பிரியமானவனோ அவனாலேயே சகல கருமமும் நடத்தப்படவேண்டும். ' என்ற ருஷ்யசிருங்கர்வாக்கியம் நோக்கத்தக்கது.

(2) ஸ்ரீராமபிரான் பரதாழ்வானை நோக்கி,

$ " கிம்நு தஸ்ய மயா கார்யம் துர்ஜாதேந மஹாத்மந: |
யோ ம்ருதோ மமஶோகேந மயாசாபி ந ஸம்ஸ்க்ருத: ||
அஹோ பரத ஸித்தார்த்தோ யேந ராஜா த்வயாநக |
ஶத்ருக்நேந ச ஸர்வேஷு ப்ரேதக்ருத்யேஷு ஸத்க்ருத: || "

" அடா, தம்பி! என்னிமித்தம் மரணமடைந்த என்பிதாவுக்கு யான் சரமகைங்கரியஞ்செய்யாததனால் யான் நிந்திக்கத்தக்கவனாயினேன்; என்னால் மஹாத்மாவாகிய நமது தந்தையார் யாது பயனையடைந்தனர்? அஹோ, பரத! நமதுபிதாவுக்குச் சரமகைங்கரியங்கள்செய்துமுடித்த நீயும்சத்ருக்கனனுமல்லவோ ஸாபல்யமடைந்தீர்கள். " என்றருளிச்செய்தனர்.

இதனால் பிதாவுக்குச் சரமகைங்கரியஞ்செய்த புத்திரனே தன்னியனென்பது ஸூசிதம்.



## (11) மகன் செய்நன்றி.

(1) திருச்சித்திரக்கூடத்தில் ஸ்ரீராமபிரானும் பரதாழ்வானும் அன்பினால் பரஸ்பரம் ஸம்பாஷித்த ஸல்லாபங்களை, முன்னமே அங்குவந்து மறைந்திருந்து கேட்டுணர்ந்த மஹரிஷிகளும், ஸித்தர்களும் பரமஆச்சர்யமடைந்து,

‡ " தந்யோ யஸ்ய புத்ரௌ த்வௌ தர்மஜ்ஞௌ தர்மவிக்ரமௌ |
ஶ்ருத்வா வயம்ஹி ஸம்பாஷாமுபயோ: ஸ்ப்ருஹயாமஹே || "

$ வா-ரா. அ-கா. சரு 102. சு 9, 10.
‡ ஷை ஷை சரு 112. சு 3.

"இந்த ஸ்ரீராம பரதர்களைப்பெற்ற தசரதச்சக்கரவர்த்தியா ரன்றோ மிகவும் பாக்கியசாலி! இவர்களுடைய சம்பாஷணங்களைக் கேட்கையில் எங்களுக்கும் இவ்விருவர்கள்மீது அன்புண்டா கிறது" எனப்புகழ்ந்துரைத்தனர்.

(2) பரதாழ்வான் திருத்தமையனிடம் பாதுகைகளைப் பெற்று, திருவயோத்திக்குத்திரும்பிவரும்வழியில், பரத்துவாஜ முனிவருடைய ஆச்சிரமமடைந்து, அம்முனிபுங்கவரிடம் நடந்த விருத்தாந்தங்களை விண்ணப்பஞ்செய்தனர். பரத்துவாஜமுனி வர் மிகுந்த களிப்புடன் பரதாழ்வானைநோக்கி,

† "நைதச்சித்திரம் நரவ்யாக்ரே ஶீல வ்ருத்தவிதாம்வரே ।
யதார்யம் த்வயி திஷ்டேத்து நிம்நோத்ஸ்ருஷ்ட மிவோதகம் ॥
அம்ருத: ஸமஹாபாஹு: பிதா தஶரதஸ்தவ ।
யஸ்ய த்வமீத்ருஶ: புத்ரோ தர்மாத்மா தர்மவத்ஸல: ॥"

"அடா, மைந்தா! நல்லவம்சத்தில்பிறந்து நன்னடக்கை யுடைய உன்னிடத்தில் அகாதமான தடாகத்தில் திவ்வியமான தீர்த்தமிருப்பதுபோல நற்குணமிருப்பது ஆச்சரியமல்ல. சக்கர வர்த்தியாருக்கு இப்பேர்கொத்த ஸத்புத்திரனாகிய நீ இருக்கின் றனையாதலின் உனது பிதா இப்போதிறந்திலர்" எனப் புகழ்ந்துரைத்தனர்.

(3) ஸ்ரீ வஸிஷ்டபகவான் தசரதச்சக்கரவர்த்தியாரைநோக்கி,

○ "மனிதர்வானவர் மற்றுளாரறங்கள் காத்தளிப்பார்
இனியிம்மன்னுயிர்க்கிராமனிற் சிறந்தவரில்லை
அனையனுகலினரசஙிற்குறு பொருளறியிற்
புனிதமாதவமல்லதொன்றில்லெனப்புகன்றான்."

இவ்விராஜ்ஜியத்தை அரசாக்ஷிசெய்வதற்கு இராமனை ஒப்பா ரும், மிக்காரும் இல்லையாதலின் ஸ்ரீராமனுக்கு இப்பொழுதே முடிசூட்டுவது தகுதியானதென்று கூறியதைக்கேட்டுச் சக்கர வர்த்தியார்,

○ "மற்றவன்சொன்னவாசகங்கேட்டலுமகனைப்
பெற்றவன்றினும் பிஞ்ஞகன்பிடித்தவப்பெருவில்
இற்றவன்றினுமெறிமழுவாளவனிழுக்கம்
உற்றவன்றினும்பெரியதோருவகையனானான்."

† வா-ரா. அ-கா. சரு 113 சு. 16, 17.
○ கம்-ரா. அ-கா. மந்திரை 41, 42.

“அறுபதினாயிரம்வருஷம் பிள்ளையில்லாமலிருந்து ஸ்ரீராமபிரானவதரித்தவுடன் அடைந்த சந்தோஷத்தைப்பார்க்கினும், ஸீதாப்பிராட்டியாரின் சுயம்வரத்தில் சிவதனுசு, ஸ்ரீராமபிரான் வலிமைக்கு ஆற்றமாட்டாமல் முறிந்துபோயிற்றென்று கேள்விப்பட்டபொழுதுண்டான மகிழ்ச்சியைக்காட்டிலும், ஸ்ரீராமபிரான், பரசுராமரின் கருவத்தையடக்கியபொழுதேற்பட்ட ஆனந்தத்திற்கும், அதிகமாகவே களிப்படைந்தனர்.’ எனக் கூறப்பட்டிருக்கிறது.

(4) இராவண வதமானபின்பு, ஸ்ரீராமபிரானைக் காணும் பொருட்டுவந்த தசரதச் சக்கரவர்த்தியார், ஸ்ரீராமபிரானை நோக்கி,

‡ “மைந்தரைப்பெற்றுவானுயர்தோற்றத்துமலர்ந்தார்
சுந்தரப்பெருந்தோளினுயென்றுணைத்தாளின்
பைந்துகட்களுமொக்கிலராமெனப்படைத்தாய்
உய்ந்தவர்க்கருந்துறக்கமும்புகழும்பெற்றுயர்ந்தேன்.

பண்டுநான்முழுந்தேவருமுனிவரும்பராய்
கண்டுசண்டெனைக் கைத்தலங்குவிக்கின்றகாட்சி
புண்டரீகத்துப் புராதனன்றன்னொடும் பொருந்தி
அண்டமூலத்தொராசனத்திருத்தினையழக.”

எனக் களிப்புடன் புகழ்ந்துரைசெய்தனர்.

இவைகளினல் பிதா சந்தோஷமடையும்படியாகவும், பிதாவுக்கு புகழ்உண்டாகும்வண்ணமும் நடப்பது புத்திரனுடைய தருமமென்பது ஸூசிதம்.

“மகன் தந்தைக்காற்றும் உதவியிவன் தந்தை
யென்னோற்றான் கொல் லென்னுஞ் சொல்.” (குறள்)

என்பது நோக்கத்தக்கது.

தமக்கபிஷேகமென்பதை தமது மாதாவுக்குத் தெரிவிக்கும்பொருட்டு, கௌஸல்யாதேவியாரின் அரண்மனைசேர்ந்து ஸ்ரீராமபிரான் தமது மாதாவினருகிற் சென்று பணிந்து,

‡ கம்-ரா. யுத்தமீட்சி 119, 120.

$ " அம்ப பித்ரா நியுக்தோஸ்மி ப்ரஜா பாலநகர்மணி |
பவிதா ஸ்வோபிஷேகோ மே யதாமே ஸாஸநம்பிது: || "

" அம்மா! என் தந்தையார் நாளையதினம் எனக்கு பட்டாபிஷேகஞ்செய்கிறேனென்று, என்னையழைப்பித்து அருளிச்செய்தனர். " என மொழிந்தனர்.

இச்சந்தோஷச்செய்தியைச் செவியுற்றதும் கௌஸல்யா தேவி ஆனந்தபாஷ்பம்பெருகக்களிப்புக்கொண்டு, ஸ்ரீராமச்சந்திரனை நோக்கி,

$ " வத்ஸ ராம சிரம் ஜீவ ஹதாஸ்தே பரிபந்திந: |
ஜ்ஞாதீந்மே த்வம் ஸ்ரியா யுக்த: ஸுமித்ராயாஸ்ச நந்தய ||
கல்யாணே பத நக்ஷத்ரே மயாஜாதோஸி புத்ரக |
யேநத்வயா தஸரதோ குணைராராதித: பிதா ||
அமோகம் பத மே க்ஷாம்தம் புருஷே புஷ்கரேக்ஷணே ||"

" அப்பா, மகனே! நீ சிறஞ்சீவியாய் வாழக்கடவை; உன் சத்துருக்கள் தொலைந்தவர்களாகக்கடவர். நீ பட்டாபிஷேகங்கொண்டு என்னையும், எனது சுற்றத்தார்களையும், சுமித்திரையையும், அவள் சுற்றத்தார்களையும் சந்தோஷிப்பிக்கக்கடவை. உன்னுடைய குணங்களைக்கண்டு உன் தந்தை சந்தோஷமடைந்து, தானே முடிசூட்ட முயன்றதனால், நீ என்னிடத்தில் சுபதினத்தில் பிறந்தவனாகின்றாய். யான் புண்டரீகாக்ஷனை ஸ்ரீமந்நாராயணனைக்குறித்து அனுஷ்டித்த வ்ருதோபவாஸாதிதவங்களெல்லாம் ஸபலமாயிற்று. "

இதனால் மாதாவுக்கு மகிழ்ச்சியுண்டாகும்வண்ணம் புத்திரன் நற்குண நற்செய்கையுடையவனாயிருத்தலவசியமென்பது ஸூசிதம்.

" ஈன்றபொழுதிற்பெரிதுவக்குந்தன்மகனைச்
சான்றோனெனக்கேட்டதாய். " (குறள்)

" எதில் ஒருவனுடைய தந்தையும், பிள்ளையினுடைய முழு அன்பையும் காட்டுகின்றமாதாவும், சந்தோஷமடைகிறார்களோ, அதுவே தருமத்தின் பயனாகும். " (மஹாபாரத வசனம் உத்தியோக பருவம்.)

இவை நோக்கத்தக்கன.



$ வா-ரா. அ-கா. சரு ச. 35, 39, 40, 41.

# இராமாயண தருமம்.

## கர்மானுஷ்டானம்.

### 1. நித்திய கர்மம்.

ஜனகமகஹாராஜன் விச்வாமித்திர முனிவரை நோக்கி —

* "திருப்திராச்சர்ய பூதானாம் கதானாம் நாஸ்திமே, விபோ |
கர்மகாலோ முனிச்ரேஷ்ட லம்வதே ரவிமண்டலம் ||"

(இ - ள்) தேவரீருடைய ஆச்சர்யமான செயல்களை கேட்பதில் போதுமென்ற திருப்தி ஏற்படவில்லை. ஆயினும் நித்யகருமம் செய்ய வேண்டிய ஸந்த்யாகாலமாயினமையால் அடியேனுக்கு இப்பொழுது விடைகொடுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்து விடைபெற்று அரண் மனையடைந்தனர்.

T "தத: ப்ரபாதே விமலே க்ருதகர்மா நராதிப:
விச்வாமித்ரம் மஹாத்மாந மாஜுஹாவ ஸராகவம் ||"

(இ - ள்) அடுத்தநாள் வைகறையில் எழுந்து ஜனகப்பெருமான் நித்யகருமங்களை முடித்துக்கொண்டு கௌசிகமுனிவருக்கும் ஸ்ரீராம லக்ஷ்மணர்களுக்கும் வந்தனவழிபாடுசெய்தனர்.

இவைகளினால் ஜனகமஹாராஜன் நித்யகருமங்கள் தவறாமல் அனுஷ்டித்து வந்தாரென்பது நன்கு விளங்குகின்றது.

ஸ்ரீ கிருஷ்ணபகவானும் அர்ஜுனனை நோக்கி —

"கர்மணைவஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜனகாதய : |
லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யந் கர்து மர்ஹஸி ||
யத்யதாசரதி ச்ரேஷ்டஸ் தத்ததேவேதரோ ஜந : |
ஸயத்ப்ரமாணம் குருதே லோகஸ் தததநுவர்ததே ||
நமே பார்தாஸ்தி கர்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சந |
நாநவாப்த மவாப்தவ்யம் வர்த ஏவச கர்மணி ||"

(பகவத்கீதை)

---

* வா. ரா. பால - கா - சரு 65 சு 33.
T வா. ரா. பால - கா - சரு 66 சு 1.

(இ - ள்) ஹே! அர்ஜுநா! ஜனகர்முதலான ஞானிகளும், கர்ம யோகத்தாலேயே (மோக்ஷரூப) ஸித்தியடைந்திருக்கிறார்கள். ஜனங்களுடைய க்ஷேமத்தைக்கருதியாவது நீயும் கருமத்தைச்செய்யவேண்டும். ஏனெனில், பிரஸித்தபுருஷன் எந்தெந்தக்கருமத்தைச் செய்கிறானோ அவ்வவற்றையே இதரஜனங்களும் செய்கிறார்கள். அந்தச்ரேஷ்டன் எவ்வளவு அங்கத்தோடு செய்கிறானோ, இதரஜனங்களும் அவ்வளவு அங்கத்தோடுகூடியே அனுஷ்டிக்கின்றார்கள். எனக்குச்செய்யவேண்டிய கருமமில்லை. மூவுலகங்களிலும் அடையப்படாததும் அடையவேண்டுவதும் கொஞ்சமுமில்லை. அப்படியிருந்தும் கருமத்தையே அனுஷ்டிக்கிறேன்' என உபதேசித்தருளியிருக்கின்றார்.

இவைகளினால் மற்றவர்களும் அவர்களுக்குரிய கருமங்களைத் தவறாமல் அனுஷ்டிக்கவேண்டுவது அவசியமென்ற தருமம் சூசிதம்.

இராமபிரான் எவ்விதம் நித்தியகர்மானுஷ்டானம் புரிந்தனர் என்பதை ஆராய்வாம் —

\+ "ப்ரபாதகாலே சோத்தாய பூர்வாம் ஸந்த்யாமுபாஸ்ய ச /
ஸ்ப்ருஷ்டோதககௌசுசீ ஜப்யம் ஸமாப்ய நியமேந ச //
ஹுதாக்நி ஹோத்ரமாஸீநம் விச்வாமித்ரமவந்ததாம் ///"

(இ - ள்) இராமலக்ஷ்மணர்கள் மறுநாளுதையத்திலெழுந்திருந்து, ப்ராதசந்த்யாவந்தனங்களை முடித்துக்கொண்டு, பரிசுத்தர்களாய், நியமத்தோடு ஜபங்களைச் செய்துமுடித்தும் அக்நிஹோத்ரமும்செய்து வீற்றிருக்கின்ற விச்வாமித்ர முனிவரை வந்தனம்செய்தார்கள்.

‡ " ஏக யாமாவசிஷ்டாயாம் ராத்ரியாம் ப்ரதிவிபுத்யஸ : //
பூர்வாம் ஸந்த்யாமுபாஸீநோ ஜஜாப ஸுஸமாஹித : //

(இ - ள்) ஸ்ரீராமபிரான் பொழுதுவிடிய ஒருயாமப்பொழுதிருக்கும் நேரத்திலேயே, நித்திரைதெளிந்து, நித்தியகர்மானுஷ்டானஞ்செய்து முடித்தனர்.

இவைகளினால், யாவரும் பிரம்ம முகூர்த்தத்திலெழுந்திருந்து பகவத்யானஞ்செய்து காலை சந்த்யாவந்தனாதி நித்திய கர்மானுஷ்டானங்கள் செய்யவேண்டுமென்ற தருமம் சூசிதம்.

\+ வா. ரா. பால - கா - சரு 29 45 - 46.
‡ வா. ரா அ. கா. சரு 6 சு. 5 - 6.

" ப்ராஹ்மே முஹூர்த்தே சோத்தாய சிந்தயேதாத்மனோஹிதம் /
தர்மார்த்தகாமாந்ஸ்வே காலே யதாசக்தி ஹாபயேத் //"

என்ற (யாக்ஞவல்கியர்) வசனமும்.

" வைகறை யாமம் துயிலெழுந்து, தான் செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து, வாய்வதில்
தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே,
முந்தையோர் கண்ட முறை."

என்ற ஆசாரக்கோவையும்

" உயர்வற வுயர்நலனுடையவ னெவனவன்
மயர்வற மதிநலமருளின னெவனவ
னயர்வறு மமரர்களதிபதி யெவனவன்
றுயரறு சுடரடி தொழுதெழென் மனனே."

என்ற திருவாய்மொழிப்பாசுரமும் நோக்கத்தக்கன.

பிரம்ம முகூர்த்தமென்பது " ராத்ரேஸ்து பச்சிமே யாமே முஹூர்த்தோ ப்ராஹ்ம உச்யதே."

△ "ஸ தம் வ்ருக்ஷம் ஸமாஸாத்ய ஸந்த்யாமந்வாஸ்ய பஸ்சிமாம் /
ராமோ ரமயதாம் ச்ரேஷ்ட இதி ஹோவாச லக்ஷ்மணம் //"

(இ - ள்) ஸ்ரீராமபிரான் ஸீதாலக்ஷ்மணர்களுடன், கங்கையைத் தாண்டி மாலைப்பொழுதானவுடன், ஓர் மரத்தினடியில்தங்கி மாலைச்சந்திக் கடன்களைச் செய்தருளி, இளையபெருமாளை நோக்கியருளிச்செய்கின்றனர்."

⊙ " ததோஸ்தம் பாஸ்கரே யாதே விஸ்ருஜ்ய ந்ருபவாநராந் /
ஸந்த்யாமுபாஸ்ய விதிவத்ததா நரவரோத்தம : // "

(இ - ள்) சூரியன் அஸ்தமிக்கும் தருணமாகவே, தங்குள்ள அரசர்களுக்கும், வானரர்களுக்கும் விடைகொடுத்தனுப்பி ஸ்ரீராமபிரான் விதிமுறைப்படி சாயசந்த்யாவந்தனஞ்செய்தருளினார்.

△ வா. ரா. அ. கா. சரு 53 சு 1.
⊙ வா. ரா. உத். கா. சரு 41 சு 60.

P " ஆடினா னன்னமாயருமறைகள் பாடினா
னீடுநீர் முன்னைநா ளெறிமுறையி னேமிதாள்
சூடினான் முனிவர்தந்தொகுதிசேர் சோலைவாய்
மாடுதான் வைகினா னெரிகதிரும் வைகினான். "

என்றபடி ஸ்ரீராமபிரான் சூரியன் அஸ்தமிக்கும் தருணத்தில் நீராடி சாயசந்த்யாவந்தனஞ்செய்து,முனிவர்களதுகூட்டம் தங்கியதொரு சோலையில் தங்கியிருந்தனர்.

இவைகளினால் சாயங்காலத்திலும், ஸ்நாநம், ஸந்த்யாவந்தனாதிகள் செய்யவேண்டியது அவசியம் என்பது சூசிதம்.

X " ஸலிலம் பாஜனை: சுப்ரைருபதஸ்தஸ்து: ஸஹஸ்ரச: ||
க்ருதோதக: சுசிர்பூத்வா காலே ஹுதஹுதாசந: ||
தேவகாரம் ஜகாமாசு புண்யமிக்ஷ்வாகு ஸேவிதம் ||
தத்ரதேவாந் பித்ரூந் விப்ராந் அர்ச்சயித்வா யதா விதி ||
பாஹ்ய கக்ஷாந்தரம் ராமோ நிர்ஜகாம ஜனைர்வ்ருத: ||

(இ - ள்) ஸ்ரீராமபிரான், துயிலெழுந்தவுடன், பரிசாரர்கள், மிகப் பளபளப்பான பாத்திரங்களில், ஜலம் நிரப்பி யெடுத்துக்கொண்டு வந்து காத்துநின்றனர்கள். உடனே ஸ்ரீராகவனும் கைகால்கள் சுத்தி செய்து நீராடி சந்த்யாவந்தனமுதலான அனுஷ்டானங்களைச்செய்து முடித்து, ஔபாஸநமும்செய்தபின்னர், இக்ஷ்வாகுமுதலான பூர்வ ராஜாக்கள் பலரும் பூஜித்துவந்த, மிகுந்த பரிசுத்தமான தேவதாகிரஹத்தினுட்புகுந்து; அங்கு விதிப்படி தேவதைகளையும், பிதிருக்களையும், பிராமணர்களையும் பூஜித்தனர். பின்பு பரிஜனங்கள் புடைசூழ வெளியே இராஜசபைக்கு எழுந்தருளினர்.

Y "ததா பரிவ்ருதோ ராஜா ஸ்ரீமத்பிர் ரிஷிபிர் வரை: |
ராஜாபிஸ்ச மஹாவீர்யைர் வாநரைஸ்ச ஸராக்ஷஸை: |
தேஷாம் ஸமுபவிஷ்டாநாம் தாஸ்தா: ஸமதுரா: கதா: |
கத்யந்தே தர்மஸம்யுக்தா: புராணஜ்ஞை: மஹாத்மபி: |"

P க. ரா. கிட்கி. கா. படலை 37.
X வா. ரா. உத். கா. சரு 42 சு 12 - 14.
Y வா. ரா. உத். கா. சரு 42 சு 22 - 24.

அங்கு முனிச்ரேஷ்டர்களும் பராக்ரமசாலிகளான அரசர்களும், வானரர்களும், இராக்கதர்களும் புடைசூழ இராஜசபையில் வீற்றிருந்தனர். அனைவரும் வீற்றிருந்த பின்னர் புராணங்கள் யாவுமுணர்ந்த மகாத்மாக்களான முனிவர்கள், தருமங்களை விளக்குவனவாகிய பற்பல மதுரமான இதிஹாசங்களை எடுத்துக்கூறலாயினர்.

இவ்விதம் ஸ்ரீராமபிரான் பிரதிதினம் அதிகாலையில் பிரம்ம முகூர்த்தத்திலெழுந்திருந்து ஈஸ்வரத்தியானஞ்செய்தும், ஸ்நான சந்த்யாவந்தனாதிகள்செய்தும், ஔபாஸநம் அக்நிஹோத்ரம், தேவதாபூஜை, அதிதி சத்காரம் முதலியன செய்தும், பின்னர், மத்யான்னத்தில் புராணசிரவணம் செய்தும், அதன்பின், சூரியாஸ்தமன சமயத்தில் சாயங்கால ஸ்நான சந்த்யாவந்தனாதிகளும் செய்துவந்தனர். ஆகையால் மற்றவர்களும் அந்தப்பிரகாரம் நித்யகர்மானுஷ்டானம் செய்யவேண்டுமென்பது கூறப்பட்டனவாயிற்று.

குண்டமுனி யிவ்வகைகூற வெய்யோன் குடபாற்கடற் குளிப்ப
பண்டை மறைநூல் விதித்த விதிப்படியே சந்தித்தொழின்முடித்து
வண்டுமுரலுந் துழாய்முடியான் வாய்த்தவத்தோரொடுந் துயில்கொண்
டெண்டிசாமண்டல மூடி மிருணீங்கிய பின்னியைந் தெழுந்து
சந்திதொழுது தவத்தோன்றன் சரணவிணை கடாழ்ந்திறைஞ்சி
அந்தமுனிபாசிகள் கூறவம்பொற்றேரின் மிசையேறிச்,
சிந்தையுவத்து கொடிக்கட்டித் தெருவுதோறுமலங்கரித்து
வந்தநகரி யெதிர்கொள்ள வள்ளலயோத்தி நகர்புகுந்தான்.

என்றபடி, ஸ்ரீ ராமபிரான் பிரதிதினம் சந்த்யாவந்தனம் செய்து வந்தனர் என்ற உத்தரகாண்டச் செய்யுள்கள் நோக்கத்தக்கன.

" அஹரஹ: ஸந்த்யாமுபாஸீத " என்றபடி நித்தியமும் ஸந்தியை உபாஸிக்கவேண்டுமென்பது ச்ருதி.

" ஸந்த்யாஸ்நாநம் ஜபோ ஹோமோ தேவதாநாம் ச பூஜநம் /
ஆதித்யம் வைச்வதேவம் ச ஷட்கர்மாணி திநேதிநே //"
என்றபடி நித்யகர்மங்கள் ஆறு என பராசரர் கூறியிருக்கின்றார்.

சந்த்யாவந்தனாதி கர்மானுஷ்டானங்கள் செய்யுமுன் கைகால்களை நன்றாகக்கழுவி சுத்தஞ்செய்துகொள்ளவேண்டுவது அவசியம்.

"சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத்தான் கண்டு
புந்திமகிழப் புகுந்துகலி சிந்தையெலாந்
றன்வயமே யாக்கித் தமைய னுடனிருந்தான்
பொன்னசல மார்பற் புகைந்து."

என்றபடி சந்த்யாவந்தனஞ் செய்யுங்காலத்தில், கால்களை நன்றாய்க்கழுவாமலிருந்ததினால், நளச்சக்கரவர்த்தியை கலிபுருஷன் பிடித்துக்கொண்டான் என்ற நளவெண்பா நோக்கத்தக்கது.

"விதாயதேவதாபூஜாம் ப்ராதர்ஹோமாதநந்தரம்" என்றபடி தேவதாபூஜை அவச்யம் என மரீசி கூறியிருக்கின்றார்.

ஸ்ரீ பரதாழ்வான் கௌஸல்யாதேவியை நோக்கி "அன்னையே! எம்மைய்யர் வனஞ்சென்றதைத்தெறிந்து எவன் சந்தோஷித்தானோ அவன் —

XX "பாயஸம் க்ருஸரம் ச்சாகம் வ்ருதா ஸோ அச்நாது நிர்க்ருண: ।
குரூம்ஸ்சாப்யவ ஜாநாது யஸ்யார்யோ S நுமதே கத: ॥

பாயஸத்தையும், எள்ளோரையையும் மற்றுமுள்ள நல்லஉணவுகளையும் பகவானுக்கு நிவேதனம்செய்யாமல், புசிப்பவனது பாபத்தையடையக்கடவன் என்றுரைத்தனர்.

இதனால் பகவானுக்கு நிவேதனஞ்செய்யாத உணவுகளை புசிப்பது கூடாதாகையால், கிரஹத்தில், திருவாராதனம்செய்யவேண்டியது அவச்யம் என்பது சூசிதம்.

---

XX வா. ரா. அ. கா. சரு 75.

## (2) வைதிக கர்மா.

சக்கரவர்த்தியார் ஆஜ்ஞை பிரகாரம், வஸிஷ்டபகவான் ஸ்ரீராம பிரானுக்கு பட்டாபிஷேகஞ்செய்யவேண்டியதற்காக, விதிப்பிரகாரம் மந்திரபூர்வமாக உபவாஸ விரதம செய்வித்தனர்.

E "கதே புரோஹிதே ராம : ஸ்நாதோ நியதமாநஸ : |
ஸஹ பத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத் ||
ப்ரக்ருஹ்ய சிரஸா பாத்ரீம் ஹவிஷோ விதிவத்ததா |
மஹதே தைவதாயாஜ்யம் ஜுஹாவ ஜ்வலதே ऽநலே ||
சேஷம் ச ஹவிஷஸ்தஸ்ய ப்ராச்யா சாஸ்யாத்மந : ப்ரியம் |
த்யாயந் நாராயணம் தேவம் ஸ்வாஸ்தீர்ணே குச ஸம்ஸ்தரே ||
வாக்யத : ஸஹ வைதேஹ்யா பூத்வா நியதமாநஸ : |
ஸ்ரீமத்யாயதநே விஷ்ணோ : சிச்யே நரவராத்மஜ :"

(ஓ - ள்) 'வசிஷ்ட மஹாமுனிவர் எழுந்தருளியபின்பு, ஸ்ரீராம பிரான் நீராடி தெளிவுற்றமனமுடையவராய் தமது பத்நியான சீதா பிராட்டியுடன் ஸ்ரீமந்நாராயணனைத்தொழுது ஹவிஸ்நிறைந்த பாத்திரத்தைச் சிரத்திலெடுத்துவந்து அக்நியை வளர்த்து மிகுதியைப் புசித்து ஸ்ரீமன் நாராயணனை த்யானஞ்செய்துகொண்டு மௌனமாக சீதாதேவியுடன் விஷ்ணுவினுடைய ஆலயத்திலேயே நித்திரைசெய்தனர்.

இங்கு (1) 'ஸ்நாத:' என்றதினல் எந்தகர்மாவும் ஸ்நானஞ்செய்தபின்பு நடத்தவேண்டுமென்பது சூசிதம்.

"நஹிஸ்நாநம் விநா பும்ஸாம் ப்ராயத்யம் கர்மஸு ஸ்ம்ருதம் |
ஹோமே ஜப்யே விசேஷேண தஸ்மாத் ஸ்நாநம் ஸமாசரேத் ||"

என்பது வியாஸருடைய வசநம்.

(2) 'நியதமாநஸா' என்றதினல் எந்த கர்மாவையும் அந்தக் கரண சுத்தியுடன் செய்யவேண்டும் என்பது சூசிதம்.

---

E வா. ரா. அ. கா. சரு 6. சு. 1முதல் 4.

(3) ஸஹபத்ந்யா என்றதினால் எந்தகர்மாவைச் செய்தபோதிலும் பத்நியுடன் கூடசேர்ந்து செய்யவேண்டுமென்பது சூசிதம்.

" பாணிக்ரஹணாத்தி ஸஹத்வம் சர்மஸு ததா புண்யபலேஷு த்ரவ்ய பரிக்ரஹேஷு ச ! " என்பது ஆபஸ்தம்பர் வசநம்.

(4) 'ஜ்வலதே அநலே' என்றதினால் அக்நிஜ்வாலையுடனிருக்கும் பொழுதுதான் ஹோமம்செய்யவேண்டுமென்பது சூசிதம்.

" யதா லேலாயதே ஹ்யர்ச்சி : ஸமித்தே ஹவ்யவாஹநே /
ததாஜ்ய பாகாவந்தரேணாஹுதீ : ப்ரதிபாதயேத் //"
என்பது அதர்வண ஸ்ருதி :

(5) ஹோமஞ்செய்த மிகுதியை புஜிக்கவேண்டும்.
" ஹவிருச்சிஷ்டம் ஸர்வே ப்ராச்நீயு : " என்பது ஆச்வலாயனர் வசநம்.

(6) 'த்யாந் நாரா யணம் தேவம்' என்றதினால் சத்கர்மங்கள் செய்ய ஆரம்பிக்கும்பொழுது பகவானை த்யானஞ்செய்துகொள்ளவேண்டுமென்பது சூசிதம்.

" ஈச்வரோ நித்யகாலாத்மா சிந்தநீய : ஸுகர்மஸு / "
என்பது கோபாலகாரிகை.

" குலந்தரும் செல்வந்தந்திடும்
அடியார் படுதுயராயினவெல்லாம்
நிலந்தரஞ்செய்யும் நீள்விசும்பருளும்
அருளொடு பெருநிலமளிக்கும்
வலந்தரும் மற்றுந்தந்திடும்
பெற்றதாயினு மாயினசெய்யும்
நலந்தருஞ்சொல்லை நான் கண்டுகொண்டேன்
நாராயணாவென்னும் நாமம் "

என்றபடி பகவானை த்யானிப்பதால் சகல சம்பத்துமேற்படும் என்ற ஆழ்வார் பாசுரம் நோக்கத்தக்கது.

⊙ "மாவிரி நீர்க்கடல் சூழ்ந்த மண்ணுலகின் மனிதராய்ப் பிறக்கப் பெற்றும்
நாவிலரியோ நமோ நாராயணாய நம வென்ன மாட்டாப்
பாவியரும் பல தெய்வம் பழித்துரைக்கும் பாதகரும் பரந்து தங்கள்
வாய்வழியே புழுச்சொரிய மாநரகக்கும்பி யிடைமறுகக் கண்டான்"

என்றபடி நாராயண நாமோச்சாரணம் செய்யாதவர் மகா பாவியரென்றும், அவர்களுக்குக் கொடிய நரகமே ப்ராப்தி யென்றும் கூறியிருப்பது நோக்கத்தக்கது.

(7) 'ஸ்வாஸ்தீர்ணே குசஸம்ஸ்தரே' என்றதினால் விரத தினத்தில் தர்ப்பைப்புல் படுக்கையில் சயினிக்கவேண்டுமென்பது சூசிதம்.

(8) வாக்யத: என்றதினால் விரதகாலத்தில் மௌனமாகயிருத்தல் வேண்டுமென்பது சூசிதம்.

"ஜபகாலே நபாஷேத வ்ரதஹோமாதிகேஷு ச."
என்பது நோக்கத்தக்கது.

† "நண்ணி நாகணை வள்ளலை நான்மறைப்
புண்ணியப்புனலாட்டிப் புலமையோ
ரெண்ணுநல்வினை முற்றுவித்தேதற்றினன்
வெண்ணிறத்த தருப்பை விரித்தரோ."

என்ற கம்பராமாயணச்செய்யுள் இங்கு நோக்கத்தக்கது.

---

⊙ உத்தர - கா - திக்கு 57.
† க. ரா. அ. கா. மந்தரை 23.

## (3) ஸத்கர்மா.

### A. ஆவச்யகம்.

ஜபாலிமுநிவரை நோக்கி ஸ்ரீ ராமபிரான்

○ "கர்ம பூமிமிமாம் ப்ராப்ய கர்தவ்யம் கர்ம யச்சுபம் /"

"இந்த கர்மபூமியை யடைந்தவர்கள் சத்கர்மாவையே செய்ய வேண்டும்." என அருளிச்செய்தனர்.

இந்த பூவுலகம் கர்மபூமி என்று சொல்லப்படுகிறது இங்கு எவ்வித கர்மம் செய்யப்படுகிறதோ அதற்குத்தக்க பலனே மேலுலகத்திலடையப்படுகின்றது ஆகையால், பலஜன்மங்களில் செய்தபுண்ணியத்தின் பலனாக, இக்கர்மபூமியில் மானிடஜன்மம் வாய்த்திருப்பதால், ஒவ்வொரு மனிதனும் இங்கு சத்கர்மாவையே செய்யவேண்டுமென்ற தருமம் சொல்லப்பட்டிருக்கிறது,

"அத்ர ஜன்ம ஸஹஸ்ராணும் ஸஹஸ்ரைரபி ஸத்தம /
கதாசில்லபதே ஜந்துர் மாநுஷ்யம் புண்யஸம்சயாத் //"

என்ற விஷ்ணுபுராணமும்

"இஹ யத்க்ரியதே கர்ம தத்பரத்ரோபயுஜ்யதே /
கர்ம பூமிரியம் ப்ரஹ்மந் பலபூமிரஸௌ மதா //"

என்ற மஹாபாரதமும் நோக்கத்தக்கன.

### B. கர்மாவை அர்ப்பணம் செய்தல்.

(1) சரபங்கமுனிவர் ஸ்ரீ ராமபிரானைப்பார்த்து

Z "அக்ஷயா நரசார்தூல ஜிதாலோகா மயா சுபா: /
ப்ராஹ்மயாச்ச நாகப்ருஷ்ட்யாச்ச ப்ரதிக்ருஹ்ணீஷ்வ மாமகாந் //

"ஸ்ரீராமசந்த்ரரே ! யான் தவத்தினல் வென்ற பிரம்மலோகங்களையும், தேவலோகங்களையும் தேவரீருக்கு அர்ப்பணம்செய்வேன். ஏற்றுக்கொள்ளுக" என்றுரைத்து தவத்தினலடைந்திருந்த புண்ணியத்தை ஸ்ரீராமபிரானிடத்தில் அர்ப்பணம்செய்தனர்.

ஸ்ரீராமபிரான் அம்முனிவரை நோக்கி

Z "அஹமேவாஹரிஷ்யாமி ஸர்வாம் லோகாந் மஹாமுநே /"

"முனிவரே ! யானே தேவரீருடைய கர்மபலன்களை யந்தர்யாமியாயிருந்து அனுபவிப்பேன்." என்றருளிச்செய்தனர். உடனே சரபங்கமுநிவரும் அக்கினியை வளர்த்து விதிப்ரகாரம் நெய்யாகுதிசெய்து அதில் குதித்து எரிந்தனர். உடனே அத்தீயினின்று திவ்யரூபத்துடனெழுந்து பிரம்மலோகம்போய்ச் சேர்ந்தனர்.

---

○ வா. ரா. அ. கா. சரு 109. சு. 28.
Z வா ரா. ஆ. கா சரு 5 சு 31-33.

(2) சுதீக்ஷ்ணமுநிவர் ஸ்ரீராமபிரானைப்பார்த்து —
" ஸ்வாமி தேவேந்திரன் இங்குவந்து தேவரீர் இங்கு எழுந்தருளிய செய்தியையுரைத்து, யான் தவங்களினால் பற்பல புண்ணிய லோகங்களை படைத்திருக்கின்றேனெனவும், அவ்வுலகங்களுக்கு வரும்படிக்கும் அழைத்தனன்." ஆகையால்,

K " தத்ப்ரஸாதாத் ஸபார்யஸ்த்வம் விஹரஸ்வ ஸலக்ஷ்மண :"

தேவரீர் அடியேனிடத்தில் அருள்கொண்டு அந்தப்புண்ணிய லோகங்களில் சீதாலக்ஷ்மணர்களுடன் விஹாரஞ்செய்தருளுக."

என்றுரைத்து தம்முடைய கருமங்களை ஸ்ரீராமபிரானிடத்தில் அர்ப்பணம்செய்தனர்.

ஸ்ரீராமபிரான் அம்மஹா யோகியை நோக்கி
K " அஹமேவாஹரிஷ்யாமி ஸ்வயம் லோகாந் மஹாமுநே !"

முநிவரே ! யானே அந்தலோகங்களை அங்கீகாரஞ்செய்வேன்." என்றருளிச்செய்தனர்.

இவைகளினால் கர்மபலன்களை பகவதர்ப்பணம் செய்யவேண்டுமென்ற தருமம் சூசிதம்.

" யத்கரோஷி யதச்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸியத் யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்ப்பணம். ||"

என்ற பகவத்கீதை நோக்கத்தக்கது.

இப்பவும் ஒரு கர்மாவைச்செய்து முடித்தவுடன்

" காயேந வாசா மநஸேந்த்ரியைர்வா
புத்யாத்மநா வா ப்ரக்ருதே : ஸ்வபாவாத் !
கரோமி யத்யத்ஸகலம் பரஸ்மை
**நாராயணாயேதி** ஸமர்ப்பயாமி ||" என்று

வழக்கத்தில் அர்ப்பணம் செய்துவருவது கவனிக்கத்தக்கது.

K வா. ரா. சரு. 7. சு. 12-14.

## (4) அதிதிபூஜை.

ஸ்ரீராமபிரான், ஜாபாலிமுனிவரைப்பார்த்து அருளிச்செய்கின்றார்.

A " ஸத்யம் ச தர்மம் ச பராக்ரமம் ச பூதாநுகம்பாம் ப்ரியவாதிதாம் ச /
த்விஜாதி தேவாதிதிபூஜநம் ச பந்தாநமாஹுஸ்த்ரிதிவஸ்ய ஸந்த: // "

என்றபடி " வைத்தியம், தருமம், பராக்கிரமம், உயிர்களிடத்திலருள், இனியமொழி மொழிதல், இவைகளும், தேவர், பிராமணர், அதிதி, இவர்களை பூஜித்தல், இவைகளும் தேவலோகம் செல்வதற்கு வழியெனப் பெரியோர்கள் உரைக்கின்றனர். "

இதனால் அதிதிபூஜை கிரஹஸ்தர்களுக்கு அவசியமென்பது சூசிதம்.

சதாநந்தர் ஸ்ரீராமபிரானுக்கு விச்வாமித்திர மகரிஷியின் தபோமகிமையை உரைக்கின்றனர் —

ஸ்ரீரகுகுலதிலகா !

B " பூர்வாம் திசமநு ப்ராப்ய தபஸ்தேபே ஸுதாருணம் /
தஸ்ய வர்ஷஸஹஸ்ரஸ்ய வ்ரதே பூர்ணே மஹாவ்ரத: //
போக்து மாரப்தவாநந்நம் தஸ்மிந்காலே ரகூத்தம /
இந்த்ரோ த்விஜாதிர் பூத்வா தம் ஸித்தமந்ந மயாசத //
தஸ்மை தத்வா ததா ஸித்தம் ஸர்வம் விப்ராய நிஸ்சித: /
நி: சேஷிதேந்நே பகவாந புக்த்வைவ மஹாதபா: //
ததைவாஸீத் புநர் மௌந முச்வாஸம் சகார ஹ // "

இம்முனிவர், கீழ்திசையில் ஆயிரம்வருடம் மௌனவிரதம்தரித்து, கடுந்தபஞ்செய்து, அது பூர்த்தியானவுடன், விரதத்தை சமாபனஞ்செய்துவிட்டு தாம் அருந்துவதற்குச் சமைத்துவைத்த அன்னத்தை புசிக்கப்போகும் சமயத்தில் இந்திரன் அந்தணவுருக்கொண்டு அதிதியாகவந்து போஜனம்வேண்ட இம்முனிவர் அவ்வன்னத்தை அதிதிக்கிட்டு அதில் மிகுதிபெறாமையால் உண்ணாமலே மீளவும் விரதம்பூண்டு தவம்புரிந்தனர்.

A வ. ரா. அ. கா. சரு. 109. சு.
B வா. ரா. பால. கா. சரு 65 சு 1–5–6–7.

இதனால், தான் பட்டினியாக இருக்கநேரிட்டபோதிலும் தன் க்ரஹத்துக்குவந்த அதிதியை திருப்திபண்ணிவைக்க வேண்டியது அவசியமென்பது சூசிதம்.

" வைச்வதேவாந்திகே ப்ராப்த மதிதிம் யோ ந பூஜயேத் /
ஸசண்டாலத்வமாப்நோதி ஸத்ய ஏவ ந ஸம்சய : //
என்பது நோக்கத்தக்கது

C " அருந்துமெல்லட காரிடவருந்து மென்றழுங்கும்
விருந்துகண்டபோ தென்னுறுமோ வென்று விம்மு
மருந்துமுண்டு கொல்யான் கொண்டநோய்க்கென்று மயங்கு
மிருந்தமாநிலஞ் செல்லரித்திடவு மாண்டெழாதாள். "

ஸ்ரீராமபிரான் விருந்தினரை உபசரிப்பவராதலால், மனைவியைப் பிரிந்திருக்கிற ஸ்திதியில், இராமபிரானுக்கு விருந்தினரை உபசரித்தல் இயலாமைபற்றி சீதாப்பிராட்டி வருந்தினள்.

இதனால் ஸ்ரீராமபிரான் அதிதிபூஜை செய்பவரென்பது சூசிதம்.

D " எத்தினளெய்தலு மிருத்திரீண்டென
வேத்திரத்தாசனம் விதியினல்கினண்
மாத்திரி தண்டயல் வைத்த வஞ்சனும்
பூத்தொடர் சாலையினிருந்த போழ்தினே. "

கபடசந்நியாசியான இராவணன், பர்ணசாலையில், வாயிலில், வந்தவுடன் பிராட்டி கண்டு, எதிர்கொண்டுவந்து, முகமன்கூறி " இதில் வீற்றிருக்க" என்றுசொல்லி பிரம்பினாற் செய்யப்பட்டதோர், ஆசனத்தை முறைப்படி கொடுத்தாள்.

ஸ்ரீராமபிரானது செய்தி முழுவதையும் அநுமார் கூறக்கேட்டு சுயம்பிரபை,

---

C க. ரா. சுந்தர. கா. காட்சி 15.
D க. ரா. ஆரணி சடாயு 34.

H “ கேட்டவனும்மென்னுடைய கேடிறவமின்னே
காட்டியது வீடென விரும்பினனி கானீ
ராட்டியமிழ்தன்னசுவை யின்னடி சிலன்போ
டூட்டிமனனுள்குளிர வின்னுரையுரைத்தாள் ”

“ என்னுடைய கெடுதலில்லாத தவம் இப்பொழுதுதான் சாப விமோசனத்தையுண்டாக்கிற்று.” என்றுசொல்லி அவ்வானரவீரரிடத்து அன்புகொண்டு, நறுமணமுள்ள நீரினால் நன்றாக நீராடச்செய்து, தேவாமிருதம்போன்ற உருசியை யுடைய இனிய உணவை அன்போடு உண்பித்து அவர்களது மனம் உள்ளூரக்குளிரும்படி இன்சொற்களைக்கூறினாள்.

இதனால், அதிதிகளைக்கண்டவுடன் நல்வரவுகூறி, அர்க்கிய பாத்ய ஆசமனாதி உபசாரங்கள்செய்து அன்புடன் உணவு அளிக்கவேண்டுமென்ற அதிதி சத்காரம் சூசிதம்.

“ ஒப்புடன் முகமலர்ந்து உபசரித்து உண்மைபேசி
உப்பிலாக் கூழிட்டாலும் உண்பதே அமிர்தமாகும்
முப்பழமொடு பாலன்னம் முகங்கடுத்திடுவாராயின்
கப்பியபசியினோடு கடும்பசியாகுந்தானே.”

“ இருந்தோம்பி யில்வாழ்வதெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற்பொருட்டு.” (குறள்)

“ ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவாராற்றலிற் பின்.” (குறள்)

“ அகன் அமர்ந்து செய்யாள் உறையும் முகன் அமர்ந்து
நல்விருந்தோம்புவான் இல்.” (குறள்)

“ மோப்பக்குழையும் அனிச்சம்! முகம் திரிந்து
நோக்கக்குழையும் விருந்து.” (குறள்)

என்பன நோக்கத்தக்கன.

ஸ்ரீராமபிரான் சுக்ரீவமஹாராஜரை நோக்கி யருளிச்செய்கின்றார்:—

⊙ “ச்ரூயதே ஹி கபோதேந சத்ரு: சரணமாகத: /
அர்சிதஸ்ச யதா ந்யாயம் ஸ்வைஸ்ச மாம்ஸைர் நிமந்த்ரித: //
ஸஹிதப்ரதி ஜக்ராஹ பார்யாஹர்தார மாகதம் /
கபோதோ வாநர ச்ரேஷ்ட கிம்புநர் மத்விதோ ஜந: //”

H க. ரா. கிட்கி. பில. 56.
◯ வா. ரா. யுத்த. கா. சரு. 18. சுலோ. 24–25.

‡ "பேடையைப்பிடித்துத்தன்னைப் பிடிக்கவந்தடைந்த பேதை
வேடனுக்குதவிசெய்து விறகிடை வெந்தீமூட்டிப்
பாடுறு பசியைநோக்கித் தன்னுடல் கொடுத்த பைம்புள்
வீடுபெற்றுயர்ந்த வார்த்தை வேதத்தின் விழுமிதன்றே."

என்றபடி தர்மத்தில் அதிகாரமில்லாத பகுத்தறிவில்லாப்பிறவி யெடுத்திருந்த புறாக்கள், தம்மைப்பிரித்து உண்ணவந்த பகைவனாகிய வேடனை, விருந்தினனாகப்பாவித்து, அவனைக்குளிர்காயச்செய்து, அவன் பசிப்பிணியைப் போக்குமாறு தங்களுடைய சரீர மாம்ஸத்தையும் கொடுத்து,ஆராதித்து பரமபதம்பெற்றன வென்றால்.மனிதர்கள், தங்கள் கிரகங்களுக்குவரும் அதிதிகளை பூஜிக்கவேண்டியது அவசியமெனக் கூறவும்வேண்டுமோ ?

## விருந்தினர்க்குச் செய்யும் உபசாரம்.

" முறுவல் இனிதுரை கானீர் மணைபாய்
கிடக்கையோ டிவ்வைந்தும் என்ப தலைச்சென்றார்க்
கூடுணுடு செய்யும் சிறப்பு."

என்பது ஆசாரக்கோவை.

" விருந்தினனாக ஒருவன் வந்தெதிரின்
வியத்தல்நன் மொழியினி துரைத்தல்
திருந்துற நோக்கல் வருகென வுரைத்தல்
எழுதல்முன் மகிழ்வன செப்பல்
பொருந்துமற் றவன்தன் அருகுற விருத்தல்
போமெனிற் பின்செல்வ தாதல்
பரிந்துநன் முகமன் வழங்கலிவ் வொன்பான்
ஒழுக்கமும் வழிபடு பண்பே."

" தவிசுதாள் விளக்கப் புனல்தமக் கியன்ற
அடிசில்பூந் தண்மலர்ப் பாயல்
உவகையின் உறையுள் இடன்நுகர் தெண்ணீர்
ஒண்சுடர் எண்ணெய்வெள் ளிலைகாய்
இவைகளொன் பதுந்தன் மனைவயின் அடைந்தோர்
மகிழ்வுற இனிதினில் அளித்தல்
நவையற இல்வாழ் வடைந்துளோன் பூண்ட
கடனென நான்மறை நவின்ற."

என்பன காசிகாண்டம்.

இவைகள் நோக்கத்தக்கன.

‡ க. ரா. உயுத்த. கா. விபீடண. 112.

தவத்தின் பெருமையால், பிரம்மலோகமடைந்த, சுவேதமஹாராஜன் நாடோறும் பூலோகத்தில் ஓர் அரண்யத்தில் ஒரு பொய்கையில் விமானத்துடன் வந்திறங்கி தனது பிரேத சரீரத்தின் மாம்ஸத்தை வயிராரவுண்டு திரும்பவும் விமானமேறி பிரம்மலோகம்செல்வது வழக்கம்: ஒருநாள் அதன்காரணத்தை அகஸ்தியமுனிவர்கேட்க, அந்த சுவேதராஜன் கூறுகின்றான்.

△ "தத்தம் ந தேஸ்தி ஸூக்ஷ்மோபி தபஏவநிஷேவஸே /
தேந ஸ்வர்க கதோ வத்ஸ பாத்யஸே க்ஷுத்பிபாஸயா //"
ஸ்வாதூநி ஸ்வாநி மாம்ஸாநி தாநி பக்ஷய நித்யச: //

ஹே சுவேத ! பூர்வம் நீ ஒரு அதிதிக்கும் அன்னமிடாமற்போயினை! அதனால் இங்கு உன்னைப்பசியும் தாகமும் வருத்துகின்றன. நீகொடுத்துவைத்தது ஒன்றுமிலதாதலின், நீபோஷித்துவைத்த உனது சரீரத்தின் மதுரமான மாம்சங்களையே நாடோறும் அருந்தி உன் பசிப்பிணியைத்தீர்த்துக்கொள்க." என பிரம்மதேவன் தனக்குரைத்திருப்பதாகக்கூறினன்.

இதனால் அதிதிக்கு அன்னமிடாவிடில், பரலோகத்தில் பசி தாகங்களால் மிகவும் வருத்தமடைய நேரிடுமென்பது சூசிதம்.

"பெருதற்கரிய விவ்வுலகம் பெற்றும் பெருந்தாகமும் பசியும்
உறுதற்கென் காரண மினி யானும்பகதே தென்றிட நெஞ்சில்
இறுகத்தனத்தா லிரப்போருக் கிடுணுதேயுன் வயிறும்
பறியைத்தூர்த்து வளர்த்ததனாற் பசி நோய் நின்னைப்பற்றிய
தால்'

"பன்னு மறையின் பொரு டெறிந்து படைத்தோன் பின்னு மிவைபகருட்
பின்னுந்தருவாரவ்வனத்துன் பிணத்தை நீயே பசிதீரத்
தின்ன் மாளாதது வளருஞ்சென்று தின்னிற் குண்டமுனி
தன்னைக் கண்டானின் பசியுந்தாகமும் போமென வுரைத தான்"

என்ற உத்தரகாண்டச் செய்யுள்கள் நோக்கத்தக்கன.

▽ வா. ரா. யுத். கா. சரு 95. சு. 14–16.

# ஏகபத்நி விரதம்.



ஏகபத்நி விரதமாவது, பிறர்மனைவிகளைக் கனவிலும் விரும்பாமல் தன் மனைவி மீது மிக்க அன்புடன் கூடியிருத்தல்.

(1) ஏகபத்நி விரதத்தினாலடையும் பயன்—

தசரத சக்ரவர்த்தியின் பாணத்தினால் அடிபட்டு இறந்து கிடக்கிற ரிஷிபுத்திரனுடைய சரீரத்தைத் தடவிக்கொண்டு அவனுடைய தந்தை—

† "யாகதி:..................ஏகபத்நீவ்ரதஸ்ய ச/
...............தாம் கதிம் கச்ச புத்ரக //"

"அடா மைந்தா! ஏகபத்நி விரதமுடையவர் எந்தலோகத்தையடைகின்றனரோ அந்தலோகத்தை நீயடையக்கடவை" என்றுரைத்தனர்.

**இதனால் ஏகபத்நி விரதமுடையவர் உத்தமலோகத்தையடைவரென்பது சூசிதம்.**

(2) தன் மனைவியைத்துறப்பதும், பிறர்மனைவியை விரும்புவதும் நரகத்துக்கு ஏதுவானது என்பது:—

ஸ்ரீ பரதாழ்வான் கோஸலையாரை நோக்கிக் கூறுகின்றார்—

"அன்னையே! தேவரீர் திருக்குமாரர் வனவாஸமெழுந்தருளியதை எவன் ஒருவனறிந்துகந்தானோ அவன்,

‡ "ருது ஸ்நாதாம் ஸதீம் பார்யாம் ருதுகாலாநு ரோதிநீம்/
அதிவர்த்தேத துஷ்டாத்மா யஸ்யார்யோऽநுமதே கத://
தர்ம தாராந் பரித்யஜ்ய பரதாராந் நிஷேவதாம்/
த்யக்த தர்மரதிர்மூட: யஸ்யார்யோऽநுமதே கத://

† வா. ரா. அ - கா. சரு. 64. சு. 43, 44.
‡ வா. ரா. அ - கா. சரு. 75. சு. 52, 55.

"கற்புடைய தன்மனையாள் ரிதுஸ்நானஞ்செய்து அருகி லிருக்கையில் அவளைச்சேராமல் தீர்ப்புத்தியுடையவனாகி அவளை விடுகின்றவனது பாபத்தையும், தம் தரும பத்நியைத் துறந்து பிறர்மனைவிகளைச் சேர்ந்தவனது பாபத்தையும் அடையக் கடவன்."

"பிறன் கடைநின்றவன் ......................நண்ணுநத்
தீஎரி நரகத்துக் கடிது செல்கயான்."

என்ற கம்பராமாயணச் செய்யுள் இங்கு நோக்கத்தக்கது.

**இவைகளினால் தன்னுடைய மனைவியை அனு தரவாக விட்டுவிடுவதும், பரஸ்திரீகமனஞ் செய்வதும் மஹத்தான நரகத்தை யடையச் செய்யும் என்பது சூசிதம்.**

"ருது ஸ்நாதாம் து யோ பார்யாம் ஸந்நிதௌ நோபகச்சதி|
கோராயாம் ப்ரூணஹத்யாயாம் யுஜ்யதே நாத்ர ஸம்சய://"

"ருதுஸ்நானம் செய்துள்ள மனைவியை அனாதரவு செய் பவர் பயங்கரமான நரகத்தையடைவார்."

என்ற யாஜ்ஞவல்கியர் வசனமும்.

"தீண்டாநாள் முந்நாளும் நோக்கார் நீராடியபின்
ஈராறுநாளும் இகவற்க என்பதே
பேரறிவாளர் துணிவு." (ஆசாரக்கோவை)

"பூப்பின் புறப்பா டீராறு நாளும்,
நீத்தகன் றுறையார், என்மனார் புலவர்,
பரத்தையிற் பிரிந்த காலை யான." (தொல்காப்பியம்)

"மனைவியர்க்கு மாதப்பூப்புத் தோன்றிய மூன்றுநா ளுங்கழிந்து தலைமுழ்கினபின் பனனிரண்டு நாளளவும் அவரைப் பிரிதலாகாது." (என்பது கருத்து)

"செம்மையொன் றின்றிச் சிறியாரினத்தராய்க்
கொம்மை வரிமுலையா டோண்மரீஇ—யும்மை
வலியாற் பிறர்மனைமேற் சென்றாரே யிம்மை
யலியாகி யாடியுண் பார." (நாலடியார்)

"முற்பிறப்பில் பிறர்மனைவிகளைச் சேர்ந்தவரே மறுபிறப்பில் பேடிகளாகி நடனஞ்செய்வார்கள்." (என்பது கருத்து)

"அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்." (குறள்)

"பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்." (குறள்)

என்ற ஆன்றோர்வாக்கியங்களும் நோக்கத்தக்கன.

## ஸ்ரீராமபிரான்ஏகபத்நிவிரதம் அநுஷ்டித்தனனென்பது

(1) கைகேயி ஸ்ரீ பரதாழ்வானை நோக்கி—

† "ந ராம: பரதாராம்ஸ்ச சக்ஷுர்ப்யாமபி பச்யதி/"

"அடா மைந்தா! இராகவன் பரஸ்திரீகளை கண்களாலுங் கூட பார்த்திருப்பதில்லை." என உரைசெய்தனள்.

(2) ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானை நோக்கி—

‡ "குதோபிலக்ஷணம் ஸ்த்ரீணும் பரேஷாம் தர்மநாசநம்/
தவநாஸ்தி மநுஷேந்த்ர நசாபூத்தே கதாசந//
மநஸ்யபி ததாராம நசைதத் வித்யதே க்வசித்/
ஸ்வதார நிரதஸ்சைவ நித்யமேவ நருபாத்மஜ//"

"ஹே! நாதா! தேவரீர் பிறர் மனைவிகளைக் கனவிலும் விரும்பியதில்லை. இனிமேலும் விரும்பீர். எப்பொழுதும் ஸ்வ பாரியை யிடத்திலேயே ப்ரீதியுடனிருக்கின்றீர்." என விண்ணப்பஞ் செய்தனள்.

---

† வா. ரா. அ. கா. ஸ. 72. ஸ. 49.
‡ வா. ரா. ஆ. கா. ஸ. 9. ஸ. 5. 6.

(3) இராவணனால் காண்பிக்கப்பட்ட மாயாராமஸிரஸைக் கண்டு ஸீதாப்பிராட்டியார்—

╤ "கல்யாணைருசிரம் காத்ரம் பரிஷ்வக்தம் மயைவது"/

"முன்பு மங்களத்ரவ்யங்களுக்கு உரித்தான இந்தச்சரீரம் என்னொருத்தியால் மாத்திரமே ஆலிங்கனஞ்செய்யப்பட்டது." எனப்புலம்பினள்.

(4) அசோகவனத்தில் ஸீதாப்பிராட்டியார் இராவணனுடையவும், ராக்ஷஸிகளுடையவும், ஹிம்சைகளைப் பொருக்க முடியாமல் தன்னை இரக்ஷிப்பார் ஒருவரையும் காணாததால் பிராணனை யொழித்துவிடத் தீர்மானித்து—

× "மோகம்ஹி தர்மஸ்சரிதோ மமாயம்
தவைக பத்நீத்வ மிதம் நிரர்தகம் //"

"ஹே! பிராணநாதா! யான் செய்த தருமங்களெல்லாம் வியர்த்தமாயின. அவ்விதம் ஏகதாரன் என்கிற தேவரீருடைய விரதமும் வியர்த்தமே." என தனியே புலம்பினள்.

(5) ஸீதாப்பிராட்டியார் அநுமானை நோக்கி:- ஹே!மாருதி!

╤ "வந்தெனைக்கரம் பற்றிய வ்வைகல்வா
யிந்தவிப்பிறவிக் கிருமாதரைச்
சிந்தையாலுந் தொடேனென்ற செவ்வரந்
தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்."

"என்னை ஸ்ரீராமபிரான் பாணிக்கிரகணம் செய்து கொண்ட அந்நாளில், இந்தப்பிறப்பில் என்னையன்றி இரண்டாவதான ஒருத்தியை மனத்தினாலும் எண்ணேன் என்ற நல்ல வரத்தை எனக்குக் கொடுத்தருளியிருப்பதை, ஸ்ரீராமபிரானது திருச்செவியில் நீர் சொல்லி ஞாபகப்படுத்துவீராக." என உரைத்தனள்.

╤ வா. ரா. யுத்த. கா. சரு. 32 . சு. 23.
× வா. ரா. சுந். கா. சரு. 28. சு. 13.
╤ க. ரா. சுந். கா. சூளாமணி 34.

மேலும் சீதாப்பிராட்டியார் பூமிக்குள் சென்ற பின்பும்—

† "நஸீதாயா: பராம் பார்யாம் வவ்ரே ஸரகுநந்தந:/
யஜ்ஞே யஜ்ஞே ச பத்ந்யர்தம் ஜாநகீ காஞ்சநீ பவத்//
தசவர்ஷ ஸஹஸ்ராணி வாஜிமேதாநதாகரோத்/

இராமபிரான் வேறொரு ஸ்திரீயை மணப்புரிய விரும்பவில்லை. ஆதலால் பொற்சீதையை பத்நியாக வைத்துக்கொண்டு பதினாயிரம் வருஷங்கள் அஸ்வமேதமுதலிய யாகங்கள் செய்தருளினர்.

**இந்த ஆதாரங்களினால் ஸ்ரீராமபிரான், பிறர் மனைவிகளை கனவிலும் கருதாமல், ஏக பத்நிவிரதத்துடன் தமது தரும பத்நியான ஸீதாப்பிராட்டியினிடத்தில் மிகுந்த ஆதாரவுடனும் அன்புடனுங் கூடியமித்து வந்தனரென்பது சித்திக்கப்பெற்றது.**

ஒருசமயம் தேவஸ்திரீகள் இராமபிரானுடைய அழகில் மோகங்கொண்டு, பாதிஇராத்திரிவேளையில் இராமச்சந்திரரைப் பார்க்கவந்தார்கள். அந்தச்சமயம் ஸீதாப்பிராட்டி இல்லை. ரஜஸ்வலையாயிருந்தாள். இராமபிரான் அவர்களைப்பார்த்து, "நீங்கள் இங்கு வந்த காரணம் யாது?" என்று வினவினர். அந்த ஸ்திரீகள் "ஸ்வாமீ! தேவரீர் சகலமும் அறிந்தவராயிற்றே." என்று சொல்லி லஜ்ஜையினால் மௌனமாகவிருந்தார்கள். அவர்கள் மனத்தில் கொண்டிருக்கும் எண்ணத்தை இராமபிரான் அறிந்து "தேவபத்நிகளே! உங்கள் எண்ணத்தையானறிவேன். இந்த ஜன்மத்தில் ஏகபத்நி விரதம் அநுஷ்டித்து வருகிறேன். ஆகையால் உங்கள் மனோபீஷ்டத்தை நிறைவேற்ற முடியாது. ஆனால் நான் துவாபரயுகத்தில் கிருஷ்ணனாக அவதரித்து நந்தகோபனால் பரிபாலிக்கப்பட்டு இடைச்சேரியில்வஸிக்கப்போகிறேன். அப்பொழுது இனி நான் கொடுக்கப்போகிறவரத்தினால், தேவர்கள் கோபாலர்களாகவும். இந்திரன் நந்தனாகவும்

† வா. ரா. உத். கா. சரு. 111. சு. 7, 8.

அவதரிக்கப்போகிறார்கள். அப்போது நீங்கள் கோபஸ்திரீகளாக அவதரிப்பீர்கள். உங்கள் இஷ்டத்தை அக்காலத்திலே நிறைவேற்றுகிறேன்." என்று சொல்லி அவர்களை அனுப்பிவிட்டார். தேவஸ்திரிகளும் அவரை நமஸ்கரித்து தங்களிருப்பிடம் சென்றார்கள்.

ஆனந்த ராமாயணம் விலாஸகாண்டத்திலுள்ள இந்த இதிஹாஸமும்

"உரைதரு தீயன வொழிந்து பாறின
பருவு நல்லற மெலாம் வளர்ந்த மாமழை
இருவளஞ் சுரந்தன வேகதாரனும்
கரியவன் கடற்புவி காவல் செய்யவே"

ஸ்ரீ ராமபிரானை ஏகதாரன் என கூறியுள்ள ஸ்ரீ பாகவதச் செய்யுளும் இங்கு நோக்கத்தக்கன.

ஸ்ரீராமபிரான் வாலியைநோக்கி யருளிச்செய்கின்றார்—

† "ஔரஸீம் பகினீம் வாபி பார்யாஞ்சாப்யனுஜஸ்ய ய:|
ப்ரசேரத நர: காமாத் தஸ்ய தண்டோ வத: ஸ்ம்ருத:||"

(இ - ள்) யாவனொருவன் காமத்தினால் மகளையும், தங்கையையும், தம்பிமனைவியையும் சேருவானோ அவனுக்குக் கொலைசெய்வதே சிக்ஷையாக விதிக்கப்பட்டிருக்கின்றது.

இதனாலுன்னைக் கொலைசெய்தது இராஜதருமமாகும்.

‡ "துஹிதா பகினீ ப்ராதுர்பார்யா சைவ தத ஸ்நுஷா|
ஸமா யோ ரமதே தாஸாம் ஏகாமபி விமூடதீ:||
பாதகீ ஸது விஜ்ஞேய: ஸ வத்யோ ராஜபி: ஸதா|
த்வம்து ப்ராது: கநிஷ்டஸ்ய பார்யாயாம் ரமஸே பலாத்||
அதோ மயா தர்மவிதா ஹதோஸி வநகோசர||"

(இ - ள்) எவன் ஒருவன் உடன் பிறந்தவள், உடன் பிறந்தவன் மனைவி, தன்பெண், தன்மகன்மனைவி இவர்களுள் எவளையேனும் இரமிக்கிறானோ அவன் மூடப்புத்தியுடையவன்.

† வா. ரா. கிட்கி. கா. சரு. 18. சு. 22.
‡ அத். ரா. கிட்கி. கா. சரு. 2. சு. 30, 31, 32.

அவன் மஹாபாதகன். அவன் அரசர்களால் வதைசெய்யத் தகுதியானவன். நீ உன்னுடைய தம்பியின் மனைவியை பலாத்காரமாக அடைந்து ரமித்ததினால், இராஜ தருமங்களையறிந்த நான் உன்னைக்கொன்றேன். என ஸ்ரீராமபிரான் வாலியைநோக்கியருளிச்செய்தனர்.

**இவைகளினால் ஸ்ரீராமபிரான் பரஸ்த்ரீகமனஞ் செய்பவரைத் தண்டிக்கும் சுபாவமுடையவரென்பது நன்கு விளங்குகின்றது.**

இந்த விஷயத்தில் இளையபெருமாளின் தன்மையை ஆராய்வாம்.

ஸ்ரீராமபிரான் இளையபெருமாளை நோக்கி:—

\+ "பச்ய லக்ஷ்மண வைதேஹ்யா ஸம்த்யக்தம் ஹ்ரியமாணய/
உத்தரீயமிதம் பூமௌ சரீராத் பூஷணாநி ச//
சாத்வலின்யாம் த்ருவம் பூம்யாம் ஸீதயா ஹ்ரியமாணயா/
உத்ஸ்ருஷ்டம் பூஷணமிதம் ததாரூபம்ஹி த்ருச்யதே//"

"அடா லக்ஷ்மணா! இராவணனால் எடுத்துப்போகும் பொழுது, வைதேஹியினால் இந்த வஸ்திராபரணங்கள் பூமியிலெறியப்பட்டன. இவைகள் பசும் புன்னிலத்தில் விழுந்தன போலும்; அதனால் பச்சை நிறமுள்ளதாகவிருக்கின்றன. இவைகளைப்பார்! ஸீதையணிந்திருந்தவைகளல்லவோ?" என வினவியருளினர்.

அதற்கு இளையபெருமாள் இராமபிரானைநோக்கி—

○ "நாஹம ஜாநாமி கேயூரே நாஹம் ஜாநாமி குண்டலே/
நூபுரேத்வபி ஜாநாமி நித்யம் பாதாபி வந்தநாத்//"

ஸ்வாமி! அடியேன் கேயூரங்களையாவது குண்டலங்களையாவது அறியேன். தினந்தோறும் திருவடிகளில் தெண்டம் ஸமர்ப்பித்து வந்ததினால், நூபுரங்களைமாத்திரம் நன்றாக

\+ வா. ரா. கிட்கி. கா. சரு. 6. சு. 20, 21.
○ வா. ரா. கிட்கி. கா. சரு. 6. சு. 22, 23.

அறிகின்றேன். இவைகள் பிராட்டியார் அணிந்திருந்தவைகளே." என விண்ணப்பஞ் செய்தனர்.

ஸ்ரீராகவனுடைய ஆக்ஞாப்பிரகாரம், இளையபெருமாள், பிராட்டியை வான்மீகியினாச்சிரமத்தருகில் தனியே விட்டுத் திரும்பும்பொழுது, பிராட்டி கூறுகின்றாள்; "லக்ஷ்மணா முன்ப நான் பட்ட துயரமெல்லாம் போதாமல் இப்பொழுது அதனினும் கொடியதான துன்பம் அனுபவிக்க நேர்ந்ததே!"

† "நிரீக்ஷ்ய மாத்ய கச்ச த்வம் ரிதுகாலாதி வர்திநீம்/"

"இப்பொழுது ருதுகாலம் நீங்கி கர்பம் தரித்தவளாக இருக்கிறேனாதலின் என்னை நன்றாகவுற்றுப்பார்த்துத் தெரிந்து கொண்டு செல்லுக" என்றுரைத்தனள்.

(திரும்பவும் தன்மீது அபவாதம் ஏற்படாதிருத்தற்காக) என்பது கருத்து.

† "ஏவம் ப்ருவத்யாம் ஸீதாயாம் லக்ஷ்மணோ தீனசேதந:/
சிரஸாவந்த்ய தரணீம் வ்யாஹர்தும் ந சசாக ஹ/
ப்ரதக்ஷிணம் சதாம் க்ருத்வா ருதந்நேவ மஹாஸ்வந:/
த்யாத்வா முகூர்தம் தாமாஹ கிம்மாம் வக்ஷ்யஸிசோபநே//
த்ருஷ்டபூர்வம் ந தே ரூபம் பாதௌ த்ருஷ்டௌ தவாநகே/
கதமத்ர ஹிபச்யாமி ராமேண ரஹிதாம் வநே//
இத்யுக்த்வா தாம் நமஸ்க்ருத்ய புநர் நாவ முபாருஹத்//"

"பிராட்டியின் வசனத்தைக் கேட்டதும் இளையபெருமாள் மனங்கலங்கி பேசநாவெழாமல் அழுதுகொண்டே தரையில் விழுந்து பிராட்டியை நமஸ்கரித்து பிரதக்ஷிணம்செய்து சிறிதுநேரம் யோஜனைசெய்து அவரை நோக்கி "ஹே! பூஜயே! தேவரீர் அடியேனை நோக்கி இவ்வாறு உரைத்தல் தகுமோ? இதுவரை அடியேன் தேவரீர் திருவடிகளைத்தவிர திருமேனியை ஒருபொழுதும் பார்த்தவனல்லேன். ஸ்ரீராமபிரானைவிட்டுப்

† வா. உத். கா. சரு. 57. சு. 19, 22.

பிரிந்து இவ்வரண்யத்தில் தனித்திருக்குந் தருணத்தில் தேவரீர் திருமேனியை அடியேன் எவ்வாறு நோக்குவேன்?" என விண்ணப்பஞ்செய்து மறுபடியும் அவரை தெண்டம் ஸமர்ப்பித்து விடைபெற்றுத் திரும்பவும் படகேறினர்.

"இளையோனே யிருதுவாயீரிரண்டு திங்களுள
வளையாழியுலகத்தை வாய்மூட வொண்ணாது
விளைவேதாய் முடியுமென வறியேனான் மேனியினை
உளையாத சிந்தையனா யுற்றது நோக்கெனவுரைத்தாள்"

† "என்றினையவவள்கூற விருகண் கணீர் சொரிய
வன்றிறலோன் மனமயங்கி வாய்விட்டுக் கதறுதலோ
டின்றிந்தவுரைகேட்க வென்னகுறை செய்தேனென்
றோன்றிய வெந்துயரிளையோ னுறுதுயராட் கிவையுரைத்தான்"

"கன்றிய சிந்தையினா யுன்கணவனுனைக் கைப்பிடித்த
அன்றுமுதலின்றளவு முன்னுடைய வடிபணிந்தே
நின்றபொழுதினுந் தாயோய் நின்மேனி கண்டறியேன்
இன்றுதானுனைக் காணவல்லேனோ வெனவுரைத்தான்"

என்பன நோக்கத்தக்கன.

இந்த ஆதாரங்களிலிருந்து இளையபெருமாள் ஸீதாப் பிராட்டியாரை மாதாவாகப்பாவித்து அவருடைய திருவடிகளில் தினந்தோறும் தெண்டம் ஸமர்ப்பித்து வருபவர் என்பதும், ஆனால் பிராட்டியாரின் திருவடிகளைத்தவிறத் திருமுகத்தைக் கூடப் பார்த்திருப்பதில்லை என்பதும் நன்கு விளங்குகின்றன.

இளையபெருமாளின் சீற்றத்தைத் தணிக்கும் பொருட்டு, சுக்ரீவ மஹாராஜாவினாலேவப்பட்டு, தாரை இளையபெருமாளருகிற் சென்று வணங்கி நின்றனள்.

× "ஸ தாம் ஸமீக்ஷ்யைவ ஹரீசபத்நீ தஸ்தாவுதாஸீநதயா மஹாத்மா |
அவாங்முகோபூந் மநுஜேந்த்ர புத்ர: ஸ்த்ரீஸந்நிகர்ஷாத் விநிவ்ருத்தகோப: ||"

---

† கம். ரா. உத். கா. சீதை வனம் 78, 79, 80.

× வா. ரா. கிஷ். கா. சரு. 33. சு. 39.

இளையபெருமாளும் அந்தத் தாரையைக்கண்டு பரஸ்த்ரீகளைப் பார்ப்பதும் பாவமெனக்கருதித் தலைகுனிந்து, ஸ்த்ரீயின் ஸமீபத்திலிருப்பதினால் கோபந்தணிந்து உதாஸீனமாக நின்றனர்.

\+ " ஆர்க்கு நூபுரங்கள் பேரியல் குலாந்தடந்தே ரொத்த
வேற்கண் வெம்புருவம் போர்வின் மெல்லியர்வளைந்தபோது
பேர்கருஞ் சீற்றம்பேர முகம் பெயர்ந்தோதுங்கிற்றல்லால்
பார்க்கவுமஞ்சினனப் பணையினு முயர்ந்த தோளான்,

" தாமரை வதனஞ்சாய்த்துத் தனுநெடுந் தரையினூன்றி
மாமியர் குழுவின் வந்தானெனமைந்தனிற்ப
பூமியிலணங்கனார்தம் பொதுவிடைப்புகுந்து பொற்றோள்
தூமன நெடுங்கட்டாரை நடுங்குவாள்இனைய சொன்னாள்."

என்ற கம்பராமாயணச் செய்யுள்கள் இங்கு நோக்கத்தக்கன.

இவைகளினால் இளையபெருமாள் பிறர் மனைவிகளைக் கண்ணாற்கூட பார்ப்பவரல்லற் என்பது நன்கு விளங்குகின்றது.

**ஆகையால் கிரஹஸ்தர் ஏகபத்நி விரதம் அனுஷ்டிக்கவேண்டுவது அவசியமென்பது கூறியவாறாயிற்று.**

\+ க. ரா. கிட். கா. கிடகி 47, 48.

# கார்ஹஸ்த்யம் அல்லது இல்லறம்.

இல்லறமாவது கற்புடைய மனைவியோடுகூடி தருமவழி யில் செய்யப்படும் இல்வாழ்க்கை.

## 1. இல்லறத்தின் மேன்மை.

பரதாழ்வான் சித்திரகூடபர்வதத்தில் ஸ்ரீ ராமபிரானை நோக்கி—

† " சதுர்ணா மாச்ரமாணாம் கார்ஹஸ்த்யம் ச்ரேஷ்டமாச்ரமம்/
ஆஹுர் தர்மஜ்ஞ தர்மஜ்ஞாஸ்தம் கதம் த்யக்து மிச்சஸி//"

(இ - ள்) " நான்காச்சிரமங்களுள் இல்லறமே சிறந்த தெனத் தருமமறிந்தோர் கூறுகின்றனர். தருமங்கள் யாவும் நன்குணர்ந்த ஸ்வாமீ! தேவரீர் அதனைத் துறக்கவிரும்புவது தகுமோ? " என விண்ணப்பஞ்செய்தனர்.

இன்னும் இல்லறமே சிறந்ததெனை,

" யஸ்மாத்ரயோப்யாச்ரமிணோ ஜ்ஞாநேநாம்நேநசாந்வஹம்/
க்ரஹஸ்தைரேவ தார்யந்தே தஸ்மாத் ச்ரேஷ்டாச்ரமோ க்ரஹீ//

" யதா வாயும் ஸமாச்ரித்ய ஸர்வே ஜீவந்தி ஜந்தவ: /
ததா க்ரஹஸ்தமாச்ரித்ய வர்தந்த இதராச்ரமா: // "

(இ - ள்) " ஸர்வ ஜீவராசிகளும் எவ்விதம் ப்ராணவாயுவை ஆச்ரியித்து ஜீவிக்கின்றனவோ அவ்விதம் க்ருஹஸ்தனை ஆச்ரயித்து மற்ற மூன்றாச்ரமிகளும் ஜீவிக்கின்றார்கள். ஆகலால் க்ருஹஸ்தாச்ரமமே ச்ரேஷ்டமானது" என கௌதமர் கூறியிருக்கின்றார்.

---

† வா. ரா. அ. கா. சரு. 106. சு. 22.

"யதா மாதர மாச்ருத்ய வர்தந்தே ஸர்வ ஜந்தவ: /
தத்தைவ க்ருஹிணம் ஸர்வே வர்தந்த இதராச்ரமா://"

(இ - ள்) "எவ்விதம் ஸகலப்பிராணிகளும் மதாவையாச் ரயித்து ஜீவிக்கின்றனவோ அவ்விதம் க்ருஹஸ்தனை ஆச்ரயித்து மற்ற மூன்றாச்ரமிகளும் ஜீவிக்கின்றனர்."

(மஹாபாரதம்)

"பிக்ஷாபுஜச்ச யே கேசித் பரிவ்ராட் ப்ரஹ்மசாரிண: /
தேசாப்யத்ரைவ திஷ்டந்தி கார்ஹஸ்த்யம் தேநவைபரம்//
வேதாஹரணகார்யேண தீர்தஸ்நாநாய வை ப்ரபோ/
அடந்தி ப்ருதிவீம் விப்ரா: ப்ருதிவீ தர்சநாய ச//
அநிகேதா ஹ்யநாஹாரா யத்ர ஸாயங்க்ருஹாஸ்து யே/
தேஷாம் க்ருஹஸ்த: ஸர்வேஷாம் ப்ரதிஷ்டா யோநிரேவ ச//"

(விஷ்ணு புராணம்)

"வேதங்களைக் கிரகிப்பதற்காகவும் தீர்த்த க்ஷேத்திர யாத்திரைக்காகவும் பூமியைப் பார்ப்பதற்காகவும் பிராமணர் சுதேசம்விட்டுத் திரிந்துக் கொண்டிருக்கிறார்கள். சிலர் ஓரிட மென்றில்லாமலும் ஆதாரமில்லாமலும் அஸ்தமயமாகுமிடமே வீடாகக்கொண்டு நிற்கிறவர்களாகவும் திரிந்துகொண்டிருக்கிறார் கள். இப்படிப்பட்ட ஸகலமானபேருக்கும் கிருஹஸ்தரே சார்பா கவும் போஷணமாகவுமிருக்கிறார்கள்." (விஷ்ணுபுராண வசனம்)

இவைகளில் கூறப்பட்டிருக்கின்றன.

மேலும் பிறக்கும்பொழுதே மனிதர்க்கு ஏற்பட்டுள்ள நால்வகைக் கடன்களில், பிதுர்க்கடனிலிருந்து விடுவித்துக்கொள் வதும், நரகத்தினின்று விடுதலையடைவதும், நல்லுலகடை வதும், வம்சாபிவிருத்தி செய்வதுமான இந்நான்கும் புத்திர சந் தானத்தினால்தான் ஆகுமாதலாலும் புத்திரனை உண்டுபண்ணு வது கிருஹஸ்தருக்கே உரியதாதலாலும் கிருஹஸ்தாச்ரமம் மேலானதாகிறது. (புத்ரதர்மம் பார்க்க)

பீஷ்மர் யுதிஷ்டிரரை நோக்கி—

" ஓ! யுதிஷ்டிரனே! பெருந்தவத்தால் வெளிவந்ததும் மஹாநுபாவர்களான முனிவர்கள் சொல்லுவதும் பெரும் பொருள் அடங்கியதும் பகவான் நாராயணன் கூறியதுமான இவ்வசனத்தைச் சொல்லுகிறேன்; தெரிந்துகொள், உலகத்தில் ஸத்யமும் ஆர்ஜவமும் அதிதிபூஜையும் தர்மமும் தனமும் தன்தாரத்துடன்கூடி இன்புறுதலுமாகிய இந்தச்சுகங்கள் யாவும் உயர்ந்த கிருஹஸ்தாச்ரமத்தில் அடையத்தக்கவையாகையால் இஃது உத்தமமென்பது என்கருத்து." என்றுரைத்தனர்.

(ஸ்ரீ மஹாபாரதம் மொழிபெயர்ப்பு சாந்தி ராஜதர்மம் அத் 60)

" ஏசலன்றி யியம்பிய நாள்களின்
மாசில் கற்பின் மனையவட் சேர்ந்திடிற்
பேசுகின்ற பிரமசரியமென்
றுசில்வேதங்களியாவு மொழியுமால். "

" அரியபூம்புனலாடிய நாண்முதன்
மருவுபன்னிரு நாளுமணந்திட
லொருவனிற்பிழையாமலொழுகுதற்
பெருமைசான்ற பிரமச்சரியமே. "

" தனதில்லாளொடு முத்தழல் வேள்விசெய்
தினிதில்லற மாற்றியிருப்பனேன்
மனைவியோடும் வனத்திடைவைகிய
புனிதர்தம்மிற் புகழினனுவனால். "

" பெற்றவைக்கொண்டருந்திப் பெறுதன
மற்றியாவு மனத்தில் விழைந்திடா
திற்றிறம்பிலராகி யிருக்குநர்
முற்றுநீத்தவர்தம்முளுமுந்தினோர். " (காசிகாண்டம்)

(இ-ள்) " பிறர்தாரம் விரும்பாமல், தன்மனைவியுடன் கூடி விதிப்ரகாரம் இல்வாழ்க்கை நடத்தும் கிருஹஸ்தன், மற்ற மூன்று ஆச்சிரமிகளைவிட சிறந்தகதியினை அடைகிறான்."

" இல்லறமல்லது நல்லறமன்று " (ஔவையார்)

" இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை " (குறள்)

" துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை." (குறள்)

" இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவனென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை " (குறள்)

**இவைகளினால் இல்லறமே சிறந்ததென்பது சூசிதம்.**

## 2. மனை மாட்சி.

### (1) கிருஹஸ்தரியல்பு.

" நிவாபேந பித்ரூநர்ச்சயேத் யஜ்ஞைர் தேவாம்ஸ்ததாதிதீந்|
அந்நைர்முநீம்ச்ச ஸ்வாத்யாயைரபத்யேந ப்ரஜாபதிம்||
" பலிகர்மணா ச பூதாநி வாத்ஸல்யேநாகிலம் ஜகத்|
ப்ராப்நோதி லோகாந் புருஷ: நிஜகர்ம ஸமார்ஜிதாந்|| "
(விஷ்ணு புராணம்)

(இ - ள்) "பருவகாலங்களில் பிண்டமிடுவதினாலும் எள்ளோடு கூடின தண்ணீரினாலும் பிதுர்க்களையும், யாகங்களினாலே தேவர்களையும், அன்னங்களினாலே அதிதிகளையும், வேதாத்தியயனத்தினாலே இருஷிகளையும், சந்ததியினாலே பிரமதேவனையும் மேலும் பூதபலிகருமத்தினாற் பூதங்களையும், வாச்சலியமென்கிற அன்பினாலே ஸகலலோகங்களையும், திருப்தி படுத்திக்கொண்டிருக்கவேண்டும். இப்படி செய்துவருகிற கிருஹஸ்தன் தன் சுயகருமங்களினாலே சம்பாதிக்கப்பட்ட அனேக புண்ணியலோகங்களையடைவான்." (விஷ்ணுபுராண வசனம்)

கிருஹஸ்தாச்ரமத்திலிருக்கும் கிருஹஸ்தனுக்கு "ஐந்து யஜ்ஞங்களைச்செய்வது ஸ்நானசௌசம்செய்வது, தன் மனைவியோடு திருப்தியாயிருக்கை சோம்பாமை ருதுகாலத்தில் புணர்வது தானம் யாகம் தவம் தேசம்விட்டுப்போகாமை வேதாத்தியயனம் அக்நிஹோத்திரம் அதிதிகளிடம் கண்ணோட்டம், கூடியவரையில் வேண்டியவர்களைப் புசிப்பித்தல், மனத்தினாலும் சொல்லினாலும் செய்கையினாலும் எல்லாரையும் ஆதரிப்பது," இவை இருக்கவேண்டியவை. "இவைபோன்ற மற்ற நற்கருமங்களையும் ஜீவனத்திற்குக் கஷ்டமில்லாத கிருஹஸ்தன் செய்யக்கடவன். இவ்வாறு நடக்கும் கிருஹஸ்தனுக்குப் புண்ணியலோகங்கள் உண்டென்பதில் ஸந்தேகமில்லை." என மஹேச்வரர் உமாதேவிக்குரைத்தனர்.

(ஸ்ரீ மஹாபாரதம் மொழிபெயர்ப்பு அநுசாஸனபருவம் அத் 208.)

† " இல்லறம் பூண்டவர்க் கெண்ணெயேமுதல்
நலலன மருவுதனவை யின்றுமரோ
சொல்லியநாட்களிற் றுணைவிமார்முலை
புல்லலுமுரித்தெனப் புகலுநூல்களே."

‡ " நித்தியநைமித்திகஞ்சேர் நிந்தையில் காமியவினைகள்
பத்தியொடு புரிந்துவரும் பயன்விழையார் பசுந்துளவோன்
சித்தமகிழ்தரவுகவித்திருமால் சீர்சொலக்கேட்கின்
முத்திநெறி பொருந்துதற்கு முந்துநெறிவேறின்றால்."

' பாவகனை வழுத்தியறைபகர்ந்தினியவுண்டியினைத்
தேவர்நரர் பூதமொடு தென்புலத்தோர் தமக்குதவித்
தாவில்கிளைஞோர்களொடு சார்ந்துநுகர்ந்தாரளிசேர்
காவிமலர் புரைமேனிக் கடவுளுலகடைகுவரால்."

† ஸ்ரீ பாகவதம் கந்தம் 7 அத். 3 பா 13.
‡ " " அத். 4 பா 3, 4.

"பிச்சையு மையமுமிட்டுப் பிறன்றார
நிச்சலு நோக்காது, பொய்யொரீஇ,— நிச்சலுங்
கொல்லாமை காத்துக், கொடுத்துண்டு வாழ்வதே,
இல்வாழ்க்கை யென்னு மியல்பு." (அறநெறிச்சாரம்)

"அலைபுனல் படிதல் சந்திவந்தனை நல்லருமறை செவித்தல் தீக்கரும
மலர்தருசாகை மறையினைநவிறல் மலர்கடியிறைவனை வணங்க
விலகொளியழலில் வயிச்சுவதேவ மதிதிபூசனையிறந்தோருக்
குலவுநீர்வழங்கலில்லுறைவோரிவ் வொன்பதுந் தினஞ்செயலுரித்தாம்"
(காசிகாண்டம்)

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லொனென்றாங்
கைம்புலத்தா றோம்பறலை." (குறள்)

"பழியஞ்சிப்பாத் தூணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்றுமில்." (குறள்)

இவைகளினால் கிரஹஸ்தரது ஒழுக்கங்கூறியவாறாயிற்று.

## (2) இல்வாழ்கைக்கு மனையாள் அவசியமென்பது.

"புத்ரபௌத்ர வதூ ப்ருத்யை ராகீர்ணமபி ஸர்வத:|
பார்யா ஹீநம் க்ருஹஸ்தஸ்ய சூந்யமேவ க்ருஹம் பவேத்||"

"ந க்ருஹம் க்ருஹமித்யாஹு: க்ருஹணீ க்ருஹமுச்யதே|
க்ருஹந்து க்ருஹணீ ஹீநம் அரண்ய ஸத்ருசம் மதம்||"
(ஸ்ரீ மஹாபாரதம் ஆபத் தருமம்)

"வ்ருக்ஷமூலேபி தயிதா யஸ்ய திஷ்டதி தத்க்ருஹம்|
ப்ராஸாதோபி தயாஹீந: காந்தாரமிதி நிச்சய:|
தர்மார்த்தகாம காலேஷு பார்யா பும்ஸ: ஸஹாயிநீ|
யஸ்ய பார்யா க்ருஹே நாஸ்தி ஸாத்வீச ப்ரியவாதிநீ|
அரண்யம் தேந கந்தவ்யம் யதாரண்யம் ததாக்ருஹம்||"

(ஸ்ரீ மஹாபாரதம் ஆபத் தருமம் வேடன் புறா உபாக்யானம்)

கிருஹஸ்தனுடைய வீடானது புத்திரர் பௌத்திரர் மருமக்கள் வேலைக்காரர்களோடு கூடியிருந்தாலும் மனைவியில்லாவிடில் அது சூன்யமாய்விடும். அறிந்தவர்கள் வீட்டை வீடென்று சொல்வதில்லை. கிருஹணியையே வீடென்று சொல்லுகிறார்கள், மனைவியில்லாத வீடானது காட்டிற்குச் சமானமானது. மனைவியிருக்குமிடம் மரத்தினடியானாலும், அவனுக்கு அதுவே வீடாகும். அரண்மனையானாலும் மனைவி இல்லாவிடில் அது காடாகும். அறம் பொருளின்பம் ஆகிற திரிவர்க்கமடைவதற்கு சகாயஞ்செய்யக்கூடியவள் மனைவியே. எவனுடைய வீட்டில் அன்பும் இன்சொல்லுமுடைய மனைவி இல்லையோ அவன் அரண்யம் செல்லக்கடவன். அவனுக்குக் காடும் வீடும் ஒன்றுதான்.

" நன்மாண்புடைய மனையாள் மனைதன்னில் நண்ணிற்
சொன்மாண்பனைத்துந் தொகுமாங் கவளெய்திலாளே
லின்மாண் புறுதென்றுயர் வேதமிசைந்தவாற்றா
லன்னார் வடிவங்குணஞ் செய்தியறையலுற்றேன்."

(காசிகாண்டம்)

" இல்லாளகத்திருக்க யில்லாத தொன்றில்லை
இல்லாளுமில்லாளே யாமாயி னில்லாள்
வலிகிடந்தமாற்ற முறைக்குமே லவ்வில்லம்
புலிகிடந்த தூறாய்விடும்."

(வாக்குண்டாம்)

" நீரில்லாநெற்றிபாழ் நெய்யில்லாவுண்டிபா
ழாறில்லாவூருக் கழகுபாழ் — மாறி
லுடப்பிறப்பில்லா வுடம்புபாழ் பாழே
மடக்கொடியில்லா மனை.

(நல்வழி)

இவைகளினால் இல்வாழ்கைக்கு மனையாளது துணை இன்றியமையாததென்பதாயிற்று.

† " ஆத்மாஹிதாராஸ்ஸர்வேஷாம் தாரஸங்க்ரஹவர்த்திநாம்/
ஆத்மீயமிதிராமஸ்ய பாலயிஷ்யதிமேதினீம்.//

† வா. ரா. அ. கா. சரு. 37. சு. 24.

" இல்லறம்பூண்ட யாவர்க்கும் பத்னியானவள் ஆத்மாவாகிறாள்." என வஸிஷ்டபகவான் கூறியிருப்பது இங்குநோக்கத்தக்கது.

## (3) இல்லாளியல்பு.

○"ஸ்திரீணாம் ச பதிதேவாநாம் தச்சுச்ரூஷாநுகூலதா/
தத்பந்துஷ்வநுவ்ருத்திச்ச நித்யம் தத்வ்ரததாரணம்//
ஸம்மார்ஜநோபலேபாப்யாம் க்ருஹமண்டல வர்தனை:/
ஸ்வயம் ச மண்டிதா நித்யம் பரிம்ருஷ்ட பரிபச்சதா//
காமைருச்சா வசை: ஸாத்வீ ப்ரச்ரயேண தமேந ச/
வாக்யை: ஸத்யை: ப்ரியை: ப்ரேமணா காலே காலே பஜேத் பதிம்//"

" பர்த்தாவையே தைவமாக நினைப்பது, புருஷனுக்குச் சுச்ரூஷைசெய்வது, அவருக்கு அநுகூலையாகவிருப்பது, பர்த்தாவைச்சார்ந்த பந்துக்களை அனுசரிப்பது, புருஷனுக்கு க்ஷேமத்தைக் கொடுக்கும் வ்ரதத்தையனுஷ்டிப்பது, வீட்டைப் பெருக்குவது, மெழுகுவது முதலியவைகளால் அலங்கரித்துக்கொண்டு வீட்டிலேயே இருப்பது, பாத்ரம், வஸ்திரம் முதலியவைகளை சுத்தமாக வைத்துக்கொள்வது, தான் அலங்கரித்துக்கொள்வது, பர்த்தாவிற்கு பிரியமான பலவகையான காமங்களாலும், வணக்கத்தாலும், மனத்தை அடக்குவதாலும், உண்மை பேசுவதாலும், பிரியமான வார்த்தைகளாலும், ஒவ்வொரு ஸமயத்திலும் புருஷனை ஸந்தோஷப்படுத்துவது, பதிவ்ரதையாகவிருப்பது, ஆகிய இவைகள் ஸ்திரீகளுடைய தருமங்கள்."
(ஸ்ரீ பாகவதம் மொழிபெயர்ப்பு)

× " மடந்தைமார்க் கறன்மனைத்தொழில் பணிகிலாதியற்றி
அடைந்ததெய்வ நற்பதியெனவன்பொடுவணங்கிக்
கடந்திடாதவன் பணித்தவா புரிந்தவன்காதல்
தொடர்ந்ததாரைத் தாயேவலுந்தொழுது செய்குவதே."
(பாகவதம்)

---

○ ஸ்ரீ பாகவதம் ஸ்கந்தம் 7 அத் 11 சு 25, 26, 27.
× — ஸ்கந்தம் 7 அத் 3 பா. 6.

" கொண்டான் குறிப்பொழுகல், கூறிய நாணுடைமை,
கண்டது கண்டு விழையாமை — விண்டு
வெறுப்பன செய்யாமை, வெஃகாமை நீக்கி
உறுப்போ டுணர்வுடையாள் பெண்." (அறநெறிச்சாரம்)

" மடப்பதூஉம் மக்கட் பெறுவதூஉம் பெண்பால்
முடிப்பதூஉம் எல்லாருஞ் செய்வர் — படைத்ததனுல்
இட்டுண்டில் வாழ்க்கை புரிந்துதாம் நல்லறத்தே
நிற்பாரே, பெண்டிரென் பார்." (அறநெறிச் சாரம்)

" வழிபாடுடையளாய், வாழ்க்கை நடாஅய்,
முனியாது சொல்லிற்றுச் செய்தாங் — கெதிருரையா
தேத்திப் பணியுமேல் இல்லாளை ஆண்மகன்
போற்றிப் புனையும் புரிந்து" (அறநெறிச் சாரம்)

" மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற்கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத்துணை." (குறள்)

இவைகளினுல் இல்லாளியல்பு கூறியவாறுயிற்று.

## ஸ்ரீ ராமபிரான் அனுஷ்டித்த கிரஹஸ்த தருமம்.

பட்டாபிஷேகம் கண்டருளியபின் ஸ்ரீராமபிரான்,

† " ஏவமாஸ்தே மஹா பாஹு ரஹந்யஹநி ராகவ: /
ப்ரசாஸத் ஸர்வகார்யாணி பௌரஜாநபதேஷு ச //"

என்றபடி, பிரதிதினமும் தமது இராஜ்யத்திலுள்ள குடிகளின் சகலகாரியங்களையும் நன்கு விசாரணைசெய்து நீதியாக இராஜ்யபரிபாலனஞ்செய்து வந்தனர்.

‡ "எழுவகையிசைக் காரணமுடைப் பண்ணுக்கிசைந்தன தாளவாத்தியங்கள்
தழுவிடவைத்துச் சராசரமுருகத் தாளத்தின்வழி யுருவெடுத்து
விழிபுருவந் தோண்மிடறுகள் சலித்து வேறுபாடுறு வகையிசைநூல்
வழுவுதலின்றி வயங்கியம் வீணைமயங்கிட மாகதர்பாட."

† வா. ரா. உத். கா. சரு 47. சு. 1.
‡ க. ரா. உத். கா. சீதை. வனம். 25, 26.

"அன்ன சங்கீத மினிதுகொண்டாடி யருந்தி யாடையாபரணம்
மன்னவனிராமன் மாசதர்க்களித்து மாதொடுங் கோயிலின்வைகிப்
பன்மலர்பறித்து நீர்விளையாட்டிற்பரிந்து பின்னமுதினிதுண்டு
நன்னுதலாருந்தானு மப்பொழிலினூடொரு மாடுறு நாளில்"

◯ " ஏவம் ராமோ முதா யுக்த: ஸீதாம் ஸுரஸுதோபமாம்|
ரமயாமாஸ வைதேஹீ மஹந்யஹநி தேவவத் ||"

" ஸ்ரீ ராமபிரான் தினந்தோறும் ஓழிந்தவேளைகளில் உத்தியான வனத்திற்குச் சென்று ஸீதாப்பிராட்டியுடன் பல விதங்களாக விளையாடியும், அங்கு ஆட்டம் பாட்டுகளில் தேர்ச்சி பெற்றவர்களான அழகிய இளம் பெண்களுடைய நடனங்களைக் கண்ணுற்றும் பாடல்களைக் கேட்டும் அகமகிழ்ந்து பொழுது போக்கிவந்தனர்."

இந்தப்பிரகாரமாக—

" பூர்வாந்ஹே தர்மகார்யாணி க்ருத்வா தர்மேண தர்மவித்|
சேஷம் திவஸபாகார்தம் அந்த:புர கதோபவத்||
ஸீதாபி தேவகார்யாணி க்ருத்வா பௌர்ண்ஹிகாநிவை|
ச்வச்ருணா மகரோத் பூஜாம் ஸர்வாஸா மவிசேஷத:||

× அப்யாகச்சத் ததோ ராமம் விசித்ராபரணாம் பரா|
த்ரிவிஷ்டபே ஸஹஸ்ராக்ஷ முபவிஷ்டம் யதா சசீ||
த்ருஷ்ட்வாது ராகவ: பத்நீம் கல்யாணேந ஸமந்விதம்|
ப்ரஹர்ஷ மதுலம் லேபே ஸாதுஸாத்விதி சாப்ரவீத்||"

ஸ்ரீ ராமபிரான் பிரதிதினமும் முற்பகலில் நித்யகர்மானுஷ்டானமுதலான தேவகார்யங்களைச் செய்துமுடித்துப் பின்னர் ராஜாங்க சம்மந்தமான சகலகாரியங்களையும் நீதிமுறை தவறாது நிறைவேற்றி, பின்பு அந்தப்புரஞ்சென்று ஸீதாப்பிராட்டியாருடன் ஆனந்தமாகவிருப்பார். ஸீதாப்பிராட்டியாரும் ஒவ்வொருநாளும் காலையில் தாம் செய்யவேண்டியதான தேவகார்

◯ வா. ரா. உத். கா. சரு. 51. சு. 24, 25.
× வா. ரா. உத். கா. சரு 51. சு. 27முதல் 30.

யங்களனைத்தையும் இனிதுசெய்துமுடித்து மாமிமார்களெல்லோ ரையும் தக்கபடி பூஜித்தும், பிறகு விசித்திரமான வஸ்திராபர ணங்களணிந்து, தேவலோகத்தில் இந்திராணி தேவேந்திரனை உபசரிப்பதுபோல, தம் பிராணநாதனை ஸ்ரீ ரகுநாதனை அடை வாள். விசேஷமாக அலங்கரித்துவரும் தம் பிராணநாயகியைக் கண்ணுற்று ஸ்ரீ ராகவனும் அழகழகெனச் சிலாகித்துச் சந்தோஷமடைவார்.

ǂ " ஏகபத்நீவ்ரதோ ராமோ ராஜர்ஷி: ஸர்வதா சுசி: /
க்ருஹமேதீய மகிலமாசரந் சிக்ஷயந் ஜநாந் //
ஸீதா ப்ரேம்ணாநுவ்ருத்யா ச ப்ரச்ரயேண தமேந ச /
பர்துர்மநோஹரா ஸாத்வீ பாவஜ்ஞா ஸா ஹ்ரியாபியா//"

(இ - ள்) ஏக பத்நி விரதரான ஸ்ரீ ராமபிரான் தமது தருமபத்தினியான ஸீதாப்பிராட்டியுடன் கூடி சகல க்ருஹஸ்த தருமங்களையும் நடத்திக்காட்டி ஜனங்களையும் அவ்வாறு அனுஷ் டிக்கும்படியாகவும் செய்துவந்தார். ஸீதாப்பிராட்டியாரும் பதிவ்ரதா தருமத்துடன் தமது பர்த்தாவினிடம் மிகுந்த அன்பு கொண்டு அவருடைய அபிப்பிராயத்தையறிந்து பணிவிடையா லும், பயத்தாலும், வெட்கத்தாலும், மனமடக்கத்தாலும், பர்த் தாவை சந்தோஷிக்கச்செய்து, பர்த்தாவுக்கனுகுணமாக நடந்து வந்தனர்.

என்ற அத்யாத்ம இராமாயணமும்.

× " ஏக பத்நீ வ்ரததரோ ராஜர்ஷிசரித: சுசி: /
ஸ்வதர்மம் க்ருஹமேதீயம் சிக்ஷபந் ஸ்வய மாசரந் //
ப்ரேம்ணாநுவ்ருத்யா சீலேந ப்ரச்ரயாவநதா ஸதீ /
தியா ஹ்ரியா ச பாவஜ்ஞா பர்து: ஸீதாஹரந் மந: //

என்ற ஸ்ரீ பாகவதமும் இங்கு நோக்கத்தக்கன.

ǂ அ ரா. உத். கா. சரு. 4. சு. 30, 31.
× ஸ்ரீ பாகவதம் ஸ்க. 9. அத். 10. சு. 55.

## மனையாளைப் பரிவுடன் ஆதரித்தல்.

(1) தசரதச் சக்கரவர்த்தியார் கைகேயியை நோக்கி:—

† "யதா யதா ஹி கௌஸல்யா தாஸீவச்ச ஸகீவச /
பார்யாவத் பகிநீவச்ச மாத்ருவச்சோபதிஷ்டதி ||
ஸததம் ப்ரியகாமா மே ப்ரியபுத்ரா ப்ரியம் வதா ||
ந மயா ஸத்க்ருதா தேவி ஸத்காரார்ஹா க்ருதே தவ ||
இதாநீம் தத்தபதி மாம் யந்மயா ஸுக்ருதம் த்வயி /
அபத்ய வ்யஞ்ஜநோபேதம் புக்தமந்நமிவாதுரம் ||"

(இ-ள்) "அடி கைகேயி! கௌஸல்யை என்னிடத்தில் அடியாள் போலவும், தோழியைப்போலவும், மனைவியைப்போலவும், சகோதரியைப்போலவும். தாயைப்போலவும் அந்தந்தக் காலத்திற் கேற்றவாறு காரியங்கள் செய்தும், எப்பொழுதும் என்மீது அன்புடன் இனியவசனங்கள் மொழிந்து உபசரித்துப் பணிவிடை செய்துவருபவளாயிருந்தும், நான் அவளை சற்றும் உபசரணை செய்யாமல் உன்னிமித்தம் உபேக்ஷைசெய்து வந்ததையும், உன் மீதுள்ள காதலினால் இதுவரை உனக்குச் செய்துவந்த உபசாரத்தையும், இப்பொழுது நினைக்கும்பொழுது என் மனமானது அபத்யம்செய்த நோயாளியைப்போலத் தவிக்கின்றது."

என மிக வருந்தி உரைத்தனர்.

இதனால் சக்கரவர்த்தியார் தமது பட்டமஹிஷியான கௌஸலாதேவியை (கைகேயிமீதுள்ள காதலினால்) கௌரவப் படுத்தாமல் உபேக்ஷைசெய்து வந்தனரென்பதும், அதற்காக இப்பொழுது பச்சாத்தாபப்படுகின்றனரென்பதும் ஸூசிதம்.

(2) ஸ்ரீராமபிரான் வனவாஸம்போகிறேனென்று தமது மாதாவிடம் திருவாய் மலர்ந்தருளினபொழுது கோஸலையார் தமது திருக்குமாரரை நோக்கி—

---

† வா. ரா. அ. கா. சரு 12. சு. 69, 70, 71.

† ந த்ருஷ்டபூர்வம் கல்யாணம் ஸுகம் வா பதிபௌர்ஷே /
அபி புத்ரேபி பச்யேயமிதி ராமாஸ்திதம் மயா //
ஸா பஹூந்யமநோஜ்ஞாநி வாக்யாநி ஹ்ருதயச்சிதாம் /
அஹம் ச்ரோஷ்யே ஸபத்நீநாமவராணாம் வரா ஸதீ //"

"அடாமைந்தா! ராமா! எனது பர்த்தா சிறப்புடனிருக்கும் பொழுது நான் ஒருவித மேன்மையாவது ஸுகமாவது இதுவரை காணவில்லை. நீ பிறந்தபின் உன் மூலமாயாவது ஸகல பெருமைகளையும் பெற்று மகிழ்வடையலாமென எதிர்பார்த்திருந்தேன். இப்படியிருக்கின்ற நான், பட்டமகிஷியாயிருந்தும் சக்களத்திகளிடம் மனதைப் புண்படுத்தக்கூடிய மிகவும் இழிவும் கொடுமையுமான வார்த்தைகளைக் கேட்கப்போகிறேன்." என வருந்தி உரைத்தனள்.

கௌஸல்யையினுடைய இவ்விதமான வசனத்தினால், சக்கரவர்த்தியார் கோஸலையாரை சற்றும் கௌரவிக்காமல் உபேக்ஷை செய்துவந்தனரென்பது நன்குவிளங்குகின்றது.

(3) ஸ்ரீ ராமபிரான் சக்கரவர்த்தியாரை நோக்கி—

$ "இயம் தார்மிக கௌஸல்யா மம மாதா யசஸ்விநீ /
வ்ருத்தா சாக்ஷுத்ர சீலா ச நச த்வாம் தேவகர்ஹதே //
மயாவிஹீநாம் வரத ப்ரபந்நாம் சோகஸாகரம் /
அத்ருஷ்டபூர்வ வ்யஸநாம் பூய: ஸம்மந்துமர்ஹஸி //

"தந்தையரே! என் தாயாகிய இந்தக் கோஸலை வயது முதிர்ந்தவள் கபடமற்றவள்; இதுவரை தேவரை இகழாமல் மகிழ்ந்திருந்த பதிவிரதை; ஆதலால் என்னைப் பிரிவதனால் இவள் சோகமடைந்து வருந்தாவண்ணம் தேவர் இவளை முன்னினும் அதிகமாகக் கௌரவப்படுத்தி தேற்றியருளக்கடவீர்." என விண்ணப்பஞ்செய்தருளினார்.

---

† வா. ரா. அ. கா. சரு. 20. சு. 38, 39.
$ வா. ரா. அ. கா. சரு. 38. சு. 13, 14.

இதனால் சக்கரவர்த்தியார் இதுவரை கோஸலையாரை உபேக்ஷைசெய்து வந்தனரென்பதும், இனி அவ்விதமிருந்தால் தம்மை விட்டுப்பிரிந்திருக்கும் ஸமயத்தில் தமது மாதா சோக முற்று வருந்துவளாதலால் அவள் சோகமுறுவண்ணம் பெருமைப்படுத்தி தேறுதல் சொல்லவேண்டுமென பிரார்த்தித்தன ரென்பதும் ஸூசிதம்.

இந்த மூன்று ஆதாரங்களினால் கற்புடை மனையாளை பர்த்தா பரிவுடனாதரித்தல் அவசியமென்பது பெற்றும்.

மேலும்:—

‡ “ கச்சித் ஸ்த்ரிய ஸாந்த்வயஸி தாச்சஸுரக்ஷிதா: / ”

‡ “ கச்சித்தே ஸபலா தாரா: / ” என்றபடி, ஸ்ரீ ராமபிரான் பரதாழ்வாரை நோக்கி—

“ மனைவியர்களை அன்புடன் பாதுகாக்கின்றனையா? உனது மனைவிகள் பயன்பட்டனரா? ” என வினவியருளினர்.

இவைகளினால்,

× “ இல்வாழ்பவர்க்கு மடவாரலதியாவரின்ப
நல்வாழ்வு தேசுபுகழ்யாவு நடத்துகிற்பார்
தொல்வானவரின் மறையோரிற்றுறக்க பூமி
செல்வார் பெறும்பேறினி நீயருள் செய்தியென்றான்.

என்றபடி, கிருஹஸ்தனுக்கு சகலவித இன்பமும் கீர்த்தியும் கற்புடை மனையாளாலேயே ஏற்படுகின்றமையால், அவளை மிகுந்த பரிவுடன் உபசரணைசெய்து பாதுகாத்து, அவள் பயன்படுமாறு செய்யவேண்டுவது புருஷனுடைய கடமையென்பது சொல்லப்பட்டதாயிற்று.

‡ வா ரா. அ. கா. சரு. 100. சு. 49, 72.
× மஹாபாரதம். ஆதி. சம்பவ. 62.

இவ்வாறே மஹாபாரதத்தில் நாரதமகாரிஷி யுதிஷ்டிரரை நோக்கி—

" கச்சித்தே ஸபலா தாரா: | "

" உனது மனைவிகள் பயன்பட்டனரா ? " என வினவிய பொழுது, யுதிஷ்டிரர் " மனைவியர் பயன்படுவதெப்படி ? " என்று கேட்க,

நாரதர்—

" ரதிபுத்ர பலாநாரீ | "

" புருஷனிடமிருந்து இன்பத்தையும், சந்தானத்தையும் பெறுவது மனைவியடையும் பயன். " என விடையளித்திருப்பது இங்கு நோக்கத்தக்கது.

இன்னும்:—

† " மாதாபிதாப்ராத்ருபிச்சாபி ச்வசுரைரத தேவரை: |
பூஜ்யா பூஷயிதவ்யாஸ்ச பஹுகல்யாண மீப்ஸுபி: |
யதி வை ஸ்த்ரீ ந ரோசேத புமாம்ஸம் ந ப்ரமோதயேத் |
அப்ரமோதாத் புந: பும்ஸ: ப்ரஜநோ ந ப்ரவர்ததே || "

‡ பூஜ்யா லாலயிதவ்யாஸ்ச ஸ்த்ரியோ நித்யம் ஜநாதிப |
ஸ்த்ரியோ யத்ர ச பூஜ்யந்தே ரமந்தே தத்ர தேவதா: |
அபூஜிதாய யத்ரைதா: ஸர்வாஸ்தத்ராபலா: க்ரியா: |
ததா சைதத் குலம் நாஸ்தி யதா சோசந்தி யாமய: |
யாமீ சப்தாநி கேஹாநி நிக்ருத்தாநீவ க்ருத்யயா |
நைவ பாந்தி ந வர்தந்தே ஸ்ரீயா ஹீநாநி பார்த்திவ ||

(இ - ள்) " விசேஷமான மங்களங்களை விரும்புகிற தாய் தந்தையரும், சகோதரர்களும், மாமிமாமன்களும், மைத்துனர்களும் கன்னிகைகளைக் கௌரவிக்கவும் அன்புபாராட்டவும் வேண்டும். பெண் ஸந்தோஷமடையாவிட்டால் அவள் அந்தப்

† மஹாபாரதம் அநுசாஸநபர்வம்.

‡ மஹாபாரதம் அநுசாஸநபர்வம்.

புருஷனை ஸந்தோஷப்படுத்தமாட்டாள். புருஷனுக்கு ஸந்தோஷமில்லாவிடின் ஸந்ததி விருத்தியாவதில்லை. அரசனே! மாதர்களைக் கௌரவிக்கவும் அன்பு பாராட்டவும் வேண்டும். எந்த வீட்டில் மங்கையர் கௌரவிக்கப்படுகின்றனரோ அந்த வீட்டில் தேவர்கள் ஸந்தோஷிக்கின்றனர். எந்த வீட்டில் மங்கையர் கௌரவிக்கப்படவில்லையோ அந்தவீட்டில் எல்லாக் கிரியைகளும் வீண். எப்போது பெண்கள் கண்ணீர் விடுகின்றனரோ அப்போதே அந்த வீடு இல்லை. அரசனே! பெண்களினால் சபிக்கப்பட்ட வீடுகள் பேயினால் பீடிக்கப்பட்டவைபோல அழகில்லாமலும் விளங்காமலும் விருத்தியாகாமலும் போகின்றன." என பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு கூறியிருப்பதும்; ×

◯"அபி கீடபதங்காநாம் ம்ருகாணாம் சைவ சோபநே /
ஸ்த்ரியோ ரக்ஷ்யாஸ்ச போஷ்யாஸ்ச ந த்வேவம் வக்துமர்ஹஸி /
தர்மகாமார்த கார்யாணி சுச்ரூஷா குலசந்ததி: /
தாரேஷ்வதீநோ தர்மஸ்ச பித்ரூணாமாத்மநஸ்ததா /
ந வேத்தி கர்ம்மதோ பார்யாரக்ஷணே யோZக்ஷம: புமாந் /
அயசோ மஹதாப்நோதி நரகாம்ஸ்சைவ கச்சதி /"

H (இ - ள்) "அழகியவளே! புழுக்களுக்கும் பறவைகளுக்கும் விலங்குகளுக்கும் கூடப் பெண்டிர்கள் ரக்ஷிக்கப்படவும் போஷிக்கப்படவும் தக்கவர்களாக இருக்கின்றனர். நீ இவ்விதம் சொல்வது தகுதியன்று. அறம்பொருள் இன்பங்களைப்பற்றிய காரியங்களும் பணிவிடைகளும் குலவிருத்தியும் பித்ருக்களுக்கும் தனக்குமுள்ள தருமமும் மனைவியை அடுத்திருக்கினறன. மனைவியை ரக்ஷிக்கத் திறமையற்று (அதற்கு வேண்டிய) காரியத்தைத் தெரிந்துகொள்ளாத புருஷன் பெரிய அபகீர்த்தியையும் நரகங்களையும் அடைவான்." என ஒரு உஞ்சவிருத்தி பிராம்மணன் தனது மனைவிக்குக் கூறியுள்ளதும்;

× மஹாபாரதம் மொழிபெயர்ப்பு அநுசா-அத் 81.
◯ மஹாபாரதம் அச்வமேதபர்வம்.
H ஷ்டி மொழிபெயர்ப்பு அத் 92.

"அனை தந்தையில்லத்துஞ் சுகமில்லை நமக்குரியா ளான பின்னர்
மனை தாங்கல் சூதகஞ்சூல் சேய்பெறுதல் வளர்த்தலொடு மாமன் மாமி
யினையவரையுபசரித்தல் விருந்தோம்பனம் பணிகளியற்ற லென்னும்
வினைகளினாலயர் மனையைப் பரிவுடனுதரவு செய்யவேண்டு நேந்சே."
என்ற நீதிநூலும்.

"க்ருஹஸ்த: பாலயேத் தாராந் |"
இல்லறத்தான் மனைவியை போஷித்தல்வேண்டும்.

"ஸத்வ்ருத்தசாரிணீம் பத்நீம் த்யக்த்வா பததி தர்மத |"
நல்லொழுக்கமுடைய மனையாளை உபேக்ஷைசெய்கிற கணவன் தருமத்திலிருந்தும் பதிதனுகிறன்,

"நிஸ்நேஹஸ்ஸ்வபார்யாயாம் களகண்டீ பவேந்நர: |"
குணவதியான தன் மனைவியிடத்தில் பிரியமன்னியிலிருப்பவன் கண்டமாலை என்னும் ரோகத்தை அடைவான்.
என்ற ஆன்றோர் வாக்கியங்களும் நோக்கத்தக்கன.

## புருடபாரியர் அன்னியோன்னியபாவம்.

### (A) பரஸ்பர அன்பு

‡(1)"ராமஸ்து ஸீதயா ஸார்தம் விஜஹார பஹூந்ருதூந் |
மநஸ்வீ தத்கதஸ்தஸ்ய நித்யம் ஹ்ருதிஸமர்ப்பித: ||
ப்ரியாது ஸீதா ராமஸ்ய தாரா: பித்ருக்ருதா இதி |
குணாத் ரூபகுணாச்சாபி ப்ரீதிர்பூயோப்யவர்த்த ||
தஸ்யாச்ச பர்த்தா த்விகுணம் ஹ்ருதயே பரிவர்ததே |
அந்தர்ஜாதமபி வ்யக்தமாக்யாதி ஹ்ருதயம் ஹ்ருதா ||
தஸ்ய பூயோ விசேஷேண மைதிலீ ஜநகாத்மஜா |
தேவதாபி: ஸமாரூபே ஸீதா ஸ்ரீரிவ ரூபிணி ||"

(இ ள்) "ஸ்ரீராமபிரான் ஸ்ரீதாப்பிராட்டியாரிடத்து மிருந்த ஆஸக்தியுடன்கூடி ஸதா அவரையே மனதில் சிந்தித்துக்கொண்டும், தமது பெற்றோர்கள் தமக்கு ஜானகியை விவாஹம் செய்

‡ வா. ரா. பால-கா. சரு 77. சு 24-27.

வித்தனரே என, அவர்களைப் புகழ்ந்துகொண்டும், பிராட்டியாரின் வடிவழகையும் அவரது ஒழுக்கத்தையுங்கண்டு மிகப்பிரீதியுடைந்து அந்தந்தக் காலோசிதமான க்ரீடைகளினால் அவரைத் திருப்திசெய்துகொண்டு அனேக ருதுக்கள் (வருஷங்கள்) பிராட்டியாருடன் கூடி இன்புற்று மகிழ்ந்திருந்தனர். இவ்வாறு பர்த்தாவின் ஆதரவாலும் அன்பாலும் சந்தோஷமடைந்த ஸ்ரீ மஹாலக்ஷ்மிபோன்ற ரூபமுடைய ஸீதாப்பிராட்டியாரும பர்த்தாவின் அதிஸௌந்தர்ய ரூபத்தையும், ஆதரவையும் கண்டு இவர் தமக்கு பர்த்தாவாக வாய்த்தனரே என வியந்து அவர்மீது இருமடங்கு காதலுடன் கூடி ஸதா அவரையே மனதில் தியானித்துக்கொண்டு பர்த்தாவின் கருத்தறிந்து அதற்கனுகுணமாகப் பணிவிடையாலும், பிரீதியினாலும் அவரைத் திருப்திசெய்து மகிழ்ந்திருந்தனர்."

(2) ஸ்ரீராமபிரான் இளையபெருமாளை நோக்கி—

† "மயிபாவஸ்துவைதேஹ்யா ஸ்தத்வதோவிநிவேசித: |
மமாபிபாவஸ் ஸீதாயாம் ஸர்வதா விநிவேசித: ||"

(இ - ள்) "வைதேஹிக்கு என்னிடத்திலும், எனக்கு அவளிடத்திலும் உண்மையான அன்பு எப்பொழுதும் உண்டு." என அருளிச்செய்தனர்.

(3) ஸீதாப்பிராட்டியார் ஆஞ்சநேயரை நோக்கி—

‡ "நசாஸ்யமாதா நபிதா நசாந்ய:
ஸ்நேஹாத்விசிஷ்டோஸ்தி மயாஸமோவா" |

(இ - ள்) "ஸ்ரீராகவன் மாதா பிதா பந்துவர்க்கங்களிடத்தில் வைத்திருக்கும் அன்பைக் காட்டிலும் என்மீது மிகுந்த அன்போடு கூடியவர்." என உரைத்தனள்.

(4) ○ "சுத்தாத்மந் ப்ரேமபாவாத்ஹி பவிஷ்யாமி விகல்மஷா |
பர்தாரமநுகச்சந்தீ பர்தா ஹி மம தைவதம்||"

† வா. ரா. கி. கா. சரு 1. சு 52.
‡ வா. ரா. சு. கா. சரு 36. சு 30.
○ வா. ரா. அ. கா. சரு. 29, சு 16.

(இ - ள்) " பரிசுத்தமான மனதுடையவரே! யான் தேவரிடத்தில் ஸ்வாபாவிகமாகவே உள்ளன்போடு கூடியிருக்கின்றேன் அல்லவோ; ஆகையால் தேவருடன் பின்சென்று பாபமில்லாதவளாக ஆகவேண்டும். பர்த்தாவன்றோ எனக்கு தெய்வம். "

என ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானை நோக்கி விண்ணப்பஞ்செய்தனர்.

(5) † " அஹம் து ராம த்வயி ஜாதகாமா சிரம்விநாசாய நிபத்த பாவா | "

" ஹே! ராகவா! அதிர்ஷ்டஹீனையான நான் இதுபரியந்தம் தேவரீரையே உள்ளன்போடு நேசித்தேன். இத்தனைகாலமும் உம்முடைய வரவை ஆவலுடன் எதிர்பார்த்தேன். எனக்குப் பயன்படவில்லை. " என ஸீதாப்பிராட்டியார் துக்கித்தனள்.

(6) ஹனுமார் பிராட்டியாரை நோக்கி—

‡ " த்வத்வியோகேந துக்கார்த: ஸத்வாம் கௌசலமப்ரவீத் |
நித்யம் ஸ்மரதி தே ராம: ஸஸுக்ரீவ: ஸலக்ஷ்மண: || "

" ஹே! தேவி! அந்த ரகுகுலஸ்ரேஷ்டன் தேவரைப் பிரிந்தது முதல் பரமதுக்கிதராய் மனம் நொந்து, தேவருடைய க்ஷேமத்தை அறிந்துவர என்னையனுப்பினர். லக்ஷ்மண ஸுக்ரீவருடன் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீராமபிரான் ஸதாகாலமும் தேவரையே ஸ்மரித்துக்கொண்டிருக்கிறார். " என விண்ணப்பஞ்செய்தனர்.

(7) சீதாப்பிராட்டியார் ஆஞ்சநேயரை நோக்கி—

× " கச்சிந்நவிகதஸ்நேஹோ விவாஸாந்மயி ராகவ: | "

" ஹே! ஹனுமன்! யான் இப்பொழுது தூரதேசவாஸியாய் விட்டபடியால் என் பிராணநாதன் என்மீதுள்ள ஸ்நேகத்தை மறந்துவிடாமலிருக்கின்றனரா? " என வினவியருளினர்.

† வா. ரா. சுந்தர கா. சரு 28. சு 15.
‡ ஷை ஷை 34. சு 34, 36.
× ஷை ஷை 36. சு 20, 37.

(8) மாருதி பிராட்டியாரை நோக்கி—

"தவாதர்சநஜேநார்யே சோகேந பரிபூரித: /

"ஹே! பூஜ்யே! தேவரைப் பிரிந்ததினாலுண்டான சோகத்தினால் ஸதா தேவரை ஸ்மரித்துக்கொண்டிருக்கிறார்." என விண்ணப்பஞ்செய்தனர்.

இந்த ஆதாரங்கள், ஸ்ரீராமபிரானுடையவும், ஸீதாப் பிராட்டியாருடையவும் பரஸ்பர அன்பைக்காண்பிக்கின்றன.

இவ்வாறே கம்பராமாயணத்திலும்;—

(1) ஸீதாப்பிராட்டியார், அநுமானை நோக்கி—

† "ஈண்டு நானிருந்தின்னுயிர் மாயினும்
மீண்டுவந்து பிறந்து தன் மேனியைத்
தீண்டலாவதோர் தீவினை தீர்வரம்
வேண்டினாளொழு தென்று விளம்புவாய்"

"ஹே! மாருதி! இங்கு இருந்தே யானிறந்து போவேனாயினும் திரும்பவும் உலகத்திலே உற்பவித்து அந்த ஸ்ரீராமபிரானுடைய திருமேனியை அடையும்படியான ஓர் நல்ல வரத்தை அருளும்படி யான் அவரை தெண்டம் ஸமர்ப்பித்து வேண்டினதாக தெரிவிக்கக்கடவீர்." என்றுரைசெய்தனர்.

இதில் "இன்னுயிர்." என்பது ஸ்ரீ ராமபிரானுக்குப் பிரியமான உயிரென்பது தாத்பர்யமாதலால் ஸ்ரீராமபிரான் பிராட்டியார் மீது மிகுந்த பிரியமுடையவரென்பதும், மறுபடி பிறந்தாவது ஸ்ரீராமபிரானுடைய திருமேனியை திரும்பவும் அடைவதற்கு பிராட்டியார் விரும்பி பிரார்த்தித்திருப்பதால் ஸ்ரீராமபிரான்மீது பிராட்டியார் சிறந்த அன்புடையவரென்பதும் ஸித்திக்கின்றது.

(2) "மானவண் மெய்யிறை மறக்க லாமையி
னானதோ வன்றெனி னரக்கர் மாயமோ
கானகமுழுவதுங் கண்ணி னோக்குங்காற்
சானகியுருவெனத் தோன்றுந் தன்மையே."

† கம். ரா. சுந்தர-கா. சூளாமணி. 35.

‡ "கருங்குழற் சேயரிக் கண்ணிற் கற்பினோர்க்
கருங்கல மருங்குவந் திருப்ப வாசையா
லொருங்குறத் தழுவுவா னென்றுங் காண்கிலென்
மருங்குல்போ லானதோ வடிவு மெல்லவே."

இங்கு, பிராட்டியாரைப் பிரிந்திருக்கும் நிலைமையில், ஸ்ரீராமபிரானுடைய நேத்திரங்களுக்கு வனம் முழுவதும் ஸீதாப்பிராட்டியாரின் ரூபம்போல காணப்படுவதாகவும், பிராட்டியார் பக்கத்தில் வந்திருப்பதாகத்தோன்ற ஆலிங்கனஞ்செய்த பொழுது பிராட்டியாரின் உருவம் மறைந்து போனதாகவும் வர்ணிக்கப்பட்டிருப்பதால் ஸ்ரீ ராமபிரான் பிராட்டியாரின் மீது சிறந்த அன்புடையவரென்பது ஸித்திக்கின்றது.

(3) திருவடி (ஆஞ்சநேயர்) மகேந்திரகிரியினின்றும் இலங்கை சென்று அசோகவனத்தில் பிராட்டியாரைக்கண்டு ஸ்ரீ ராமநாமாங்கிதமான கணையாழியை பிராட்டியாரிடம் ஸமர்ப்பித்து ஸ்ரீராமலக்ஷ்மணர்களுடைய க்ஷேமத்தைத் தெரிவித்துத் தேர்தல் சொல்லிப் பிராட்டியாரிடமிருந்து சூடாமணியை வாங்கிக் கொண்டு திரும்ப ஸ்ரீராமபிரானிடம் வந்து சேர்ந்து தெண்டம் ஸமர்பித்து, ஸீதாப்பிராட்டியாரின் நிலைமையைப்பற்றி விண்ணப்பஞ் செய்கின்றார்.

† "கண்ணினு முளைநீ தையல் கருத்தினு முளைநீ வாயின்
எண்ணினு முளைநீ கொங்கை யிணைக்கு வைதன்னி னெவ்வா
தண்ணல்வெங் காம னெய்த வலரம்பு தொளைத்தவாறுப்
புண்ணினுமுளைநீ நின்னைப் பிரிந்தமை பொருந்திற்றோமோ."

† "ஒருகணத்திரண்டுகண்டே னொளிமணி யாழியான்ற
திருமுலைத்தடத்து வைத்தாள் வைத்தலுஞ் செல்வநின்பால்
விரகமென்பதின் வந்த வெங்கொழுந்தீயினால் வெந்
துருகியதுடனேயாறி வலித்தது குளிர்ப்புள்ளூற."

"வாங்கிய வாழிதன்னை வஞ்சனூர் வந்ததாமென்
றோங்குயர் மழைக்கண்ணீராலாயிரங்கலசமாட்டி
ஏங்கின ளிருந்ததல்லா லியம்பலளெய்த்த மேனி
வீங்கினள் வியந்ததல்லா லிமைத்திலளுயிர்ப்பு விண்டாள்."

‡ கம. ரா. ஆ. கா. அயோமுகி. 96, 97.
† கம. ரா. சுந்தர-கா திருவடி 63, 77, 78.

ஸ்ரீராமபிரானைப் பிரிந்த துயரத்தினால் ஸீதாப்பிராட்டியார் ஸதா ஸ்ரீராமபிரானையே தியானஞ்செய்துகொண்டிருந்தன ளென்பதும், கணையாழியைப் பெற்ற மாத்திரத்தில் மிகுந்த சந்தோஷமடைந்தனளென்பதும் இவைகளின் கருத்து.

இதனால் பிராட்டியாருக்கு ஸ்ரீராமபிரான்மீதுள்ள அன்பு அளவிடமுடியாதென்பது ஸூசிதம்.

(4) ஆஞ்சநேயர் ஸ்ரீராமபிரானிடம் சூடாமணியை ஸமர்ப்பித்த பொழுது.

‡ "பைப்பையப் பயந்த காமம் பரிணமித்துயர்ந்து பொங்கி
மெய்யுற வெதும்பியுள்ள மெலிவுறு நிலையைவிட்டான்
ஐயனுக்கங்கிமுன்னரங்கையாற் பற்றுநங்கை
கையெனலாயிற்றன்றேகைபுக்க மணியின்காட்சி."

"பொடித்தனவுரோமம்போந்து பொழிந்தன கண்ணீர்பொங்கித்
துடித்தன மார்புந்தோளுந் தோன்றின வியர்வின்றுள்ளி
மடித்தது பணிவாய்ஊவிவருவது போவதாகித்
தடித்தது மேனியென்னே யாருளர் தன்மைதேர்வார்."

பிராட்டியாரின் பிரிவினால் மிகுந்த தாபமடைந்திருந்த ஸ்ரீராமபிரானது மனமானது சந்தோஷமடைந்தது என்பதும், சூடாமணியைப் பெற்றவுடன் ஸ்ரீராமபிரான் மயிர்சிலிர்த்தவ ராகி கண்களில் ஆனந்தபாஷ்பம் பொழிய திருமேனி பூரித்தனர் என்பதும், இவைகளின் கருத்து.

இதனால் ஸ்ரீராமபிரான் பிராட்டியார்மீது பூர்ணமான அன்புடன் கூடியவரென்பது ஸூசிதம்.

இதுகாறும் கூறியவாற்றால் ஸ்ரீராமபிரானும், ஸீதாப் பிராட்டியாரும் பரஸ்பரம் மிகுந்த அன்புடையரேன்பது விசத மாகின்றது.

---

‡ கம். ரா. சுந்தர-கா. திருவடி 82, 83.

† "அபிவாத்யாபிவாத்யாம்ச்ச ஸர்வா ராஜஸுதாஸ்ததா /
ரேமிரே முதிதா ஸர்வா பர்த்ருபி: ஸஹிதாரஹ:
க்ருததாரா: க்ருதாஸ்த்ராச்ச ஸதநா: ஸஸுஹ்ருஜ்ஜநா: /
சுச்ரூஷமாணா: பிதரம் வர்தயந்தி நரர்ஷபா: //"

(இ - ள்) இராஜகுமாரிகளான (ஸீதை, ஊர்மிளை, மாண்டவி, ச்ருதகீர்த்தி) நான்குபேர்களும் வணங்கத்தக்கவர்களான மாமிபார் முதலான பெரியோர்களை வணங்கி தம்தம் கணவருடன் கூடி ஸுகித்து மகிழ்ந்திருந்தனர். இராமலக்ஷ்மண பரதசத்ருக்னர்களும் தம்தம் மனைவியருடன் கூடி ஸுகித்து ஸகல சாஸ்திரங்களைக் கற்று தந்தைதாய் குருமுதலியோர்களுக்கு முறைப்படி பணிவிடைசெய்துப் பூஜித்து எல்லோர்க்கும் பிரியமுள்ளவர்களாகிச் சந்தோஷமாக வாழ்ந்திருந்தனர்கள்.

இதனால் ஸ்ரீராம லக்ஷ்மண பரதசத்ருக்னர் நால்வரும் அவர்களது தேவிமார்களும் பரஸ்பரம் மிகுந்த அன்புடன் கூடி வாழ்ந்திருந்தனரென்பது ஸூசிதம்.

இதனால் கிருஹஸ்ததம்பதிகள் பரஸ்பரம் மிக்கஅன்புடன் கூடிவாழ்தலவசியமேன்பது கூறியவாறாயிற்று.

"தந்தைதாய் சோதரருற்றாரையெலாங் கைவிடுத்துத் தன்னைச்சார்ந்த
பைந்தொடியை யனையவர்போ லாதரிக்கக் கணவனுக்கே பரமாமாதி
யந்தமிலான் முதற்றெய்வம் பதியிரண்டாந் தெய்வமென வன்பினோடு
சிந்தைதனினினைந்துருகுஞ் சேயிழை பூவையர்க்கெல்லாந் தெய்வமா
மால்."
(நீதிநூல்)

‡ "ஏதத் ச்ருஹாண ப்ரதமம் ஸ்வதர்மம் க்ருஹமேதிநாம் /
யோ பர்த்தா வாஸிதா துஷ்டோ பர்த்ரு துஷ்டாச வாஸிதா //
யஸ்மிந்நேவம் குலே ஸர்வம் கல்யாணந் தத்ர வர்ததே //"

(இ - ள்) "கணவன் தன் மனைவியிடம் மகிழ்ந்திருப்பதும், அம்மனைவியும தன் கணவனிடம் மகிழ்ந்திருப்பதும், கிருஹஸ்தர்களுக்கு முதன்மையான தருமமென்று

† வா. ரா. பா. கா. சரு. 77. சு. 14, 15.
‡ மஹாபாரதம் அநுசாஸன பர்வம்.

தெரிந்துகொள்ளும். இவ்விதம் நடக்கும் குடும்பத்தில் ஸகல நன்மைகளும் உண்டாகும்." என வியாசர் மைத்திரேயரை நோக்கிக் கூறியிருப்பதும்;

"அந்யோந்யஸ்யா வ்யபிசாரோ பவேதாமரணாந்திக: /
ஏஷதர்ம: ஸமாஸேந ஜ்ஞேய: ஸ்த்ரீபும்ஸயோ: பர: //"

கணவனும் மனைவியும் மரணபரியந்தமும் பரஸ்பரம் வ்யபிசாரமற்ற அன்புடன் இருத்தல்வேண்டும் இது ஸ்திரீபுருஷர்களுடைய சிறந்த தருமமென அறியத்தக்கது.

"ததா நித்யம் யதேயாதாம் ஸ்த்ரீபும்ஸௌ து க்ருதக்ரியௌ
யதா நாபிசரேதாம் தௌ வியுக்தாவிதரேதரம் //"

"அவ்வாறே, ஸ்திரீயும் புருஷனும் பிரிந்திருக்கையிலும், ஒருவரையொருவர் வ்யபிசரிக்காமலிருக்கவேண்டும்."

(அன்பு வ்யபிசரித்தலாவது, புருஷனுக்கு பரஸ்த்ரீகள் மீதும், மனைவிக்கு பரபுருஷர்கள்மீதும் ஆசைகொள்ளுதல்.)

"ஸந்துஷ்டா பார்யயா பர்த்ரா பர்த்ரா பார்யா ததைவ ச /
யஸ்மிந்நேவ குலேநித்யம் கல்யாணம் தத்ர வைத்ருவம்//"

"எந்தக் குடும்பத்தில் மனைவியினிடத்தில் கணவனும் கணவனிடத்தில் மனைவியும் எப்பொழுதும் சந்தோஷத்துடனிருக்கிறார்களோ அந்தக் குடும்பத்தில் நிச்சயமாக நன்மைகளுண்டாகும்." என்பன நோக்கத்தக்கன.

## (B) புருஷனும் ஸ்த்ரீயும் மனமொத்து இருவருமாக இல்லறம் நடத்தலின் அவசியம்.

1) ஸீதா விவாஹ கட்டத்தில் ஜனகமஹாராஜன் ஸ்ரீராமபிரானை நோக்கி—

† "இயம் ஸீதா மமஸுதா ஸஹதர்மசரீ தவ /
ப்ரதீச்ச சைநாம் பத்ரந்தே பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா//"
"பதிவ்ரதா மஹாபாகா ச்சாயேவாநுகதா ஸதா /
இத்யுக்த்வா ப்ராக்ஷிபத்ராஜா மந்த்ரபூதம் ஜலம் ததா //"

† வா. ரா. பா. கா. சரு 73 சு. 33, 34.

(இ - ள்) "என்னுடைய திருமகளான இந்த ஸீதாதேவி எப்போழுதும் இணைபிரியாமல் நீர்செய்யும் தருமகாரியங்களைத் திற்கும்துணையாக நின்றுசெய்து முடிக்குங்குணமுடையவள். ஆகையால் உம்முடைய திருக்கையால் இவளது திருக்கையைப் பிடித்துத் திருமணஞ் செய்துகொள்ளக்கடவீர். மேலும், இவள் நிழலைப்போல எப்பொழுதும் உம்முடன் துடர்ந்துசென்று பதிவ்ரதா தருமத்தைச் சிறிதும் வழுவாமல் நடத்தும் இயல்பினள்." என்றுரைத்து உதகபூர்வமாக கன்னிகாதானஞ்செய்தனர்.

(2) ஸ்ரீராமபிரான் வனவாஸம் புறப்படும்பொழுது, ஸீதாப் பிராட்டியாரை நோக்கி—

□ "ஸாஹி திஷ்டாநவத்யாங்கி. வநாய மதிரேக்ஷிணே /
அநுகச்சஸ்வமாம் பீரு ஸஹதர்மசரீபவ //"

"அடி ஸீதே! என்னுடன் வனவாசஞ்செய்ய நீ உறுதி கொண்டிருக்கின்றனையாதலால், நீயும் என்னைப் பின்தொடர்ந்து வந்து, வனத்தில் நான்செய்யும் தருமகாரியங்களுக்குச் சஹாயஞ் செய்யக்கடவை." என ஸ்ரீராமபிரான் அருளிச்செய்தனர்.//

(3) தண்டகாரண்யத்தில் ஸ்ரீராமபிரான், சீதாப்பிராட்டியை நோக்கி—

$ "ஸதர்மசாரிணீ மேத்வம் ப்ராணேப்யோபிகரீயஸீ /"

"ஹே ஸீதே! நீ தரும மார்க்கம் சிறிதும்வழுவாமல் என்னுடன் கூடி நடக்கின்றமையின், எனக்குப் பிராணனைக் காட்டிலும் பிரியமுடையவளாகின்றனை." என்றருளிச்செய்தனர்.

□ வா. ரா. அ. கா. சரு 30. சு. 40.
$ வா. ரா. ஆ. கா. சரு. 10. சு. 21.

(4) அத்திரிமஹரிஷியின் ஆச்சிரமத்தில் ஸீதாப்பிராட்டியார் அநுசூயாதேவியை நோக்கி—

‡ " ஏவம் தத்தாஸ்மி ராமாய ததா தஸ்மிந் ஸ்வயம்வரே /
அநுரக்தாஸ்மி தர்மேண பதிம் வீர்யவதாம் வரம் // "

" தேவியாரே ! ஸ்வயம்வரகாலத்தில் நான் ஸ்ரீராமபிரானுக்குப் பத்தினியாக அளிக்கப்பட்டதுமுதல் அவரிடத்தில் மிகுந்தபக்தியும் அன்புமுடையவளாகிப் பதிவ்ரதாதருமம்பிசகாமல் எனது நாதன் புரிந்துவரும் கிருஹஸ்ததருமங்களுக்குத் துணையாக நின்று பணிவிடைசெய்துவருகின்றேன்."

என மொழிந்தருளினார்.

இந்த பிரகாரம், ஸீதாப்பிராட்டியார் விவாஹமானது முதல் ஸ்ரீராமபிரானைவிட்டுச்சற்றும்பிரியாமல்,அவர் எங்குசென்றாலும் நிழலைப்போல கூடவேசென்று, அவர்புரியுந் தருமகாரியங்களுக்கு அனுகுணமாக இருந்து பர்த்தா மனம் சிறிதுங்கோணாமல் பணிவிடைசெய்து வந்திருப்பதால், மற்ற ஸ்திரீகளும் அவரவர் பர்த்தாவுடன் மனமொத்து இல்லற வாழ்க்கைக்குத் துணையாக இருந்து பணிவிடைசெய்துவரவேண்டுமென்பது ஸூசிதம்.

¶ " இல்லியல்புடைய நீரளித்த வின்சொலாம்
வல்லிய வரக்கர்தம் மனையுளாளெனச்
சொல்லினன் மலையெனச் சுமந்த தோணியென்
வில்லினென் செல்வனோ மிதிலைவேந்தன்பால். "

ஸீதாப்பிராட்டியார், தம்மைப் பார்த்து, மகளிர்யாவரும் பின்பற்றும்படியான, இல்லறத்திற்குரிய மேலான குணங்களையுடையவர் என்னும் கருத்துடன் " இல் இயல்பு உடைய நீர் அளித்த இன் சொல்ஆம் வல்லி " என ஸ்ரீராமபிரான் அருளிச்செய்திருப்பது, இங்கு நோக்கத்தக்கது.

‡ வா. ரா. அ. கா. சரு 118. சு 54.
¶ க. ரா. ஆ. கா. கவந்த 26.

(1) ஸீதா விவாஹ ஸமயத்தில்—

* "ஸபார்யோ ஜநக: ப்ராயாத்ராமம் ராஜீவலோசநம் |
பாதௌ ப்ரக்ஷால்ய விதிவத்தத்தோ மூர்த்ந்யதாரயத்||

"ஜனகமஹாராஜன் பத்தினியுடன்கூடி ஸ்ரீராமபிரானுடைய திருவடிகளை விதிப்பிரகாரம் தீர்த்தத்தால் விளக்கஞ் செய்து அந்தத் தீர்த்தத்தை ஸிரஸில் ப்ரோக்ஷித்துக்கொண்டு ஸீதாப்பிராட்டியாரை ஸ்ரீராமபிரானுக்குக் கன்னிகாதானஞ் செய்தனர்."

(2) பட்டாபிஷேகத்திற்காக ஸ்ரீராமபிரான் விரதங்கொண்ட பொழுது—

† "ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத் |
வாக்யத: ஸஹவைதேஹ்யா பூத்வா நியதமாநஸ: |
ஸ்ரீமத்யாயதநே விஷ்ணோ: சிச்யே நரவராத்மஜ: ||"

தமது பத்தினியான ஸீதாப்பிராட்டியாருடன் ஸ்ரீமந்நாராயணனைத் தொழுதும் மௌனமாக பிராட்டியாருடன் விரதம் பூண்டும் ஸ்ரீரெங்கநாதர் சன்னதியிலேயே துயில்கொண்டனர்.

(3) ஸ்ரீராமபிரான் அச்வமேதயாகம்நடத்தினபொழுது, ஸீதாப்பிராட்டியார் வால்மீகியின் ஆச்சிரமத்திலிருந்ததினால்—

‡ "தேவர்கள் செல்லநீர்த்தவிராமன்முன்செய்த செம்பொற்
பாவையைத் தனுவகத்துப் பாரியாச்சங்கற்பித்தும்
பூவையையனையதன்மைப் புரோகிதன் சடங்குகாட்டத்
தூவருந்தவர்களோடுந் தொடங்கினன் வேள்வியென்ன."

⊛ "பொன்னிறச் சீதையுருவமொன்றமைத்துப் புரவியின்வேள்விபத்தாற்றும்
கன்னியந்துளவ முகுந்தனென்றுரைக்குங் கரியவன் சாலையிலடைந்து
தன்னெறிற் சரிதமுனிவரனருளாற்றநயர்கள் பாடுதல்கேளாப்
பன்னருமுவகைப் பரவையின் மூழ்கிப்பல்பொருள் பெறுதிரென்றிசைத்தான்."

---

* அ. ரா. பால-கா. சரு 6. சு. 51.
† வா. ரா. அ. கா. சரு. 6. சு. 1, 4.
‡ கம். ரா. உ.த். கா. அசுவமேத 141.
⊛ ஸ்ரீபாகவதம். கந்தம் 9. அத் 10. பா. 8.

பிராட்டியாருக்குப் பதிலாக பொற்சீதை யுருவமொன்று அமைத்துப் பத்தினியாகவைத்துக்கொண்டு யாகஞ்செய்தருளினர்.

ஸீதாப்பிராட்டியார் பூமிக்குள் சென்றபின்பு—

× "யஜ்ஞே யஜ்ஞே ச பத்ந்யர்தம் ஜாநகீ காஞ்சநீபவத் /
தசவர்ஷஸஹஸ்ராணி வாஜிமேதாநதாகரோத் //"

ஸ்ரீராமபிரான் பொற்சீதையைப் பத்தினியாக வைத்துக்கொண்டு பதினாயிரம் வருஷங்கள் அச்வமேதமுதலிய யாகங்கள் செய்தருளினர்.

(4) மஹாபலிச் சக்கரவர்த்தி ஸ்ரீவாமனமூர்த்திக்கு மூன்றடிபூமி தானமளிக்கும்பொழுது—

∴ "விந்த்யாவளி ஸ்ததாகத்ய பத்நீ ஜாலகமாலிநீ /
ஆநிந்யே கலசம் ஹைம மவநேஜந்யபாம்ப்ருதம் /
எஜமாந: ஸ்வயம் தஸ்ய ஸ்ரீமத்பாதயுகம்முதா /
அவநிஜ்யாவஹந்மூர்த்நி ததபோவிச்வபாவநீ: //"

○ "விந்தியாவலியென்று விளம்புபேர்
வந்தவோர் மனையாள் புனல் வார்த்திடச்
சந்தநாண்மலர் தாளினிற்பெய்துபின்
கந்தமாமலர்க்கையினும் பெய்தனன்."

மஹாபலியின் பத்தினியாகிய விந்தியாவலி முத்துஹாரங்களால் அலங்கரிக்கப்பட்டவளாகி, தங்கக்குடத்தில் தீர்த்தம் எடுத்துக்கொண்டுவந்து வார்த்தாள். மஹாபலி வாமன மூர்த்தியின் திருவடிகளை அலம்பி உலகத்தைப் பரிசுத்தப்படுத்தும் அத்தீர்த்தத்தை தலையில் ப்ரோக்ஷித்துக்கொண்டான்.

இந்த ஆதாரங்கள், ஸகல கருமங்களும் பத்தினியுடன் கூடியே செய்யவேண்டுமென்பதற்குப் போதிய சான்றும்.

"பாணிக்ரஹணாத்தி ஸஹத்வம் கர்மஸு
ததாபுண்யபலேஷு த்ரவ்ய பரிக்ரஹேஷு ச //"

என்ற ஆபஸ்தம்பர் வசனம் இங்கு நோக்கத்தக்கது.

---

× வா. ரா. உத். கா. சரு 111 சு. 8.
∴ ஸ்ரீபாகவதம். ஸ்கந்தம். 8. அத். 20. சு. 17.
○ ஷை ஷை 8. அத. 7. பா. 62.

இன்னும் புருஷனும் ஸ்திரீயும் மனமொத்து இருவருமாக இல்வாழ்க்கை புரியவேண்டுமென—

$ " தம்பத்யோ: ஸமசீலத்வம் தர்ம: ஸ்யாத் க்ருஹமேதிந:/"

" இல்லறம் நடத்தும் கணவனும் மனைவியும் மனமொத்தொழுகுவதுதான் முக்கியகடமை." என உமாமஹேச்வர ஸம்வாதத்தில் கூறப்பட்டிருப்பதும்;

" ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றுங்
காதலிருவர் கருத்தொருமித் — தாதரவு
பட்டதே யின்பம் பரனைநினைந்திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு." (ஔவையார்)

இதில் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு புருஷார்த்தங்களில் இன்பமாவது " எஞ்ஞான்றும் காதலிருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்டதே" என கூறியிருப்பதும்.

" தருமமெனும் பண்டமிடுஞ் சகடமா மனவாழ்க்கை
கருமநுகம் பிணித்து மனைக்காதலியுந்தானுமென
விருவராய் முறைசெலுத்தி னெத்துணைத்தூரமுஞ் செல்லு
மொருவராய்ப் பூண்டிழுப்பினோரிறையுஞ் செல்லாதால்."
(திருக்குற்றால புராணம்.)

" மருவிய காதல் மனையாளுந் தானும்
இருவரும் பூண்டுய்ப்பி னல்லால் — ஒருவரால்
இல்வாழ்க்கை யென்னு மியல்புடைய வான்சகடம்
செல்லாது தெற்றிற்று நின்று." (அறநெறிச்சாரம்)

" காதன்மனையாளுங் காதலனுமாறின்றித்
தீதிலொரு கருமஞ்செய்பவே — வோதுகலை
யெண்ணிரண்டு மொன்றுமதி யென்முகத்தாய் நோக்கருன்
கண்ணிரண்டுமொன்றையே காண்." (நன்னெறி)

---

$ பாரதம் அநுசாஸனம்.

" மானவர்களாயுளோர் மண்மீது புண்யநதி
மாலறன் சன்னதிக்கு
மணந்தவர்களிருவரும் மனமொத்து செலவென்னும்
மறைபுகல் கேட்டதிலையோ
ஆனபடி யாலென்னை அழைத்தேக முறையுண்டு
அடியேன் மொழிதடுத்தால்
ஆன நுன்காரியம் ஆகாது வபலமென
அரசனுஞ்சம்மதித்து
மானுனியை தன்னுரைக்கச் சையால் சேர்த்திருக
மனமகிழ்ந்தே பிணித்து
மகிமைமிகு கவனக்குளிகையின் ஆற்றலால்
மாருதம்போற் பறந்து
வானவர் முனிமார்தர் வாழ்த்தித் துதித்தேத்தும்
வாரணசியையடைந்து
வாழ்வருளும் கங்கையில் நீராடி விச்வேசன்
வளர்கோவிலுட்புக்கரே."

(தென்காசி க்ஷேத்திரபுராண சங்க்ரஹ விருத்தம்) என்ற ஆன்றோர் வாக்யங்களும் நோக்கத்தக்கன.

இவைகளினால் க்ரஹஸ்தன் தினந்தோறும் † நித்திய கர்மானுஷ்டானம், அதிதிஸத்காரம் முதலியன செய்தும், தரும வழியில் பொருள் சம்பாதித்தும், தன் பத்நியிடத்தில் அன்பு கொண்டு ¶ ஏகபத்நிவிரதமாக பத்நியுடன் கூடி க்ரஹஸ்த தருமத்தை நடத்தவேண்டுமென்பதும், + க்ரஹணியானவள் தன் பர்த்தாவினிடம் ப்ரீதியுடன்கூடி, கற்புநிலை தவறாமல் பர்த்தா சந்தோஷமடையும்படியாகப் பணிவிடைகள்செய்து, அவருக்கு அனுகூலமாக இருந்து இல்வாழ்க்கையைச்செவ்வனே நடத்திவரவேண்டுமென்பதும் ஸூசிதம்.

† பக்கம் 1 பார்க்க. ¶ பக்கம் 17 பார்க்க.
+ ஸ்திரீ தருமம் பார்க்க.

# ஸ்திரீ தருமம்.

உலகத்தில் ஸகல ஜீவராசிகளிலும் 'ஆண்பெண்' என்ற இரண்டு பிரிவுகள் ஏற்பட்டிருக்கின்றன. இப்பொழுது நாமெடுத்துக்கொண்ட **ஸ்திரீதருமம்** என்னும் விஷயம் மானிடஜாதிப் பெண்களைப்பற்றியது.

பெண் என்னுஞ்சொல்லுக்கு வடமொழியில் அபலாவென்றும் தமிழில் பேதை யென்றும் சொல்லுவதுண்டு. அபலாவென்றால் பலமில்லாதவளென்றும், பேதையென்றால் அறிவில்லாதவளென்றும் பொருள்படும். ஆகவே பெண்கள் ஸ்வாபாவிகமாக மடமையுடன் கூடினவர்களும், தனது கற்பைக்காத்துக்கொள்ளுந் திறனற்றவர்களுமாக இருக்கிறார்களெனக் கூறவேண்டியிருக்கிறது. ஆகையாற்றான் பெரியோர்கள், பெண்களுக்குச் சுதந்திரமளிக்காமல்

" பால்யே பிதுர்வசா நாரீ தத்தா பர்த்ருவசா பவேத் /
வ்ருத்தா புத்ரவசா நாரீ ந ஸ்த்ரீ ஸ்வாதந்த்ரியமர்ஹதி//"

" மங்கையை வாழுநாளில் வளமொடு பிதாவே காப்பன்
பொங்கிய யவ்வனத்திற் பொருந்துபத்தாவேகாப்பன்
தங்கிய மூப்பிற்றங்கள் தனையரே காக்குமன்றிச்
சங்கையா மொருகாலத்துஞ் சுதந்தர மில்லைதானே "

(நீதிசாரம்.)

என்றபடி ஒரு பெண் சிறுவயதில் பிதாவின் வசத்திலும், யௌவனப்பிராயத்தில் கணவன் வசத்திலும், முதுமைப் பிராயத்தில் புத்திரர் வசத்திலுமிருந்து அடங்கி நடக்கவேண்டுமென்றும், ஒருபொழுதும் பெண்கள் சுதந்திரமாயிருக்கக் கூடாதென்றும் விதி யேற்படுத்தியிருக்கிறார்கள்.

(1) ஸ்ரீராமபிரான் வனவாஸத்திற்காக ஸீதாப்பிராட்டியாருடனும் இளையபெருமாளுடனும் புறப்பட்டுக் கங்கையின்

தென்கரைசேர்ந்து வனஞ்செல்லப் புறப்பட்டபொழுது, இளைய பெருமாளை நோக்கி—

$. " அக்ரதோ கச்ச ஸௌமித்ரே ஸீதா த்வாமநுகச்சது /
ப்ருஷ்டதோநு கமிஷ்யாமி ஸீதாம் த்வாம் சாநுபாலயந் //"

" லக்ஷ்மணா! நீ முன்னால் செல்லக்கடவை; உனக்குப் பின்னால் ஸீதை செல்லக்கடவள்; உங்களிருவரையும் பாதுகாத்துக் கொண்டு நான் பின்னால் வருகின்றேன்." என்று அருளிச்செய்தனர்.

(2) தண்டகாரண்ணியத்தில் ஸ்ரீராமபிரான் ரிஷிகளின் ஆச்சிரமத்திற்குச் செல்லும்பொழுது—

‡ " அக்ரத: ப்ரயயௌ ராம: ஸீதா மத்யே ஸுசோபநா /
ப்ருஷ்டதஸ்து தனுஷ்பாணிர் லக்ஷ்மணோநுஜகாமஹ // "

முன்னால் ஸ்ரீராமபிரானும் மத்தியில் ஸீதாப்பிராட்டியாரும் பின்னால் வில்லுடன் கூடிய இளையபெருமாளுமாகச் சென்றனர்.

3. கரதூஷணாதிகளுடன் போர்செய்ய ஸ்ரீராமபிரான் புறப்பட்டபொழுது, இளையபெருமாளை நோக்கி—

† " தஸ்மாத் க்ருஹீத்வா வைதேஹீம் சரபாணிர் தநுர்தர: /
குஹாமாச்ரய சைலஸ்ய துர்காம் பாதபஸம்குலாம் //"

🌐 " நெறிக்கொண்மா தவர்க்கு முன்னே நேர்ந்தன நிருத ராவி
பறிக்குவென் யானே யென்ற பழமொழி பழுதுறுமே
வெறிக்கொள் பூங்குழலினாளை வீரநீ வேண்டினேன்யான்
குறிக்கோடு காத்தி யின்னே கொல்வெனிக் குழுவையென்னா."

" லக்ஷ்மணா! நான் துஷ்டர்களான அரக்கர்களை ஹதஞ் செய்கின்றேனென, முனிவர்களிடம் வாக்குத்தத்தஞ் செய்த

$ வா. ரா. அயோ. கா. சரு 52. சு. 95.
‡ வா. ரா. ஆரணி-கா. சரு. 11 சு. 1.
† வா. ரா. ஆரணி-கா. சரு 24. சு. 12.
🌐 கம்ப-ரா. ஆரணி-கா, கரன்வதை 61.

பிரகாரம், இவ்வரக்கர் கூட்டத்தை யானே கொல்வேன். நீ வைதேஹியையழைத்துக்கொண்டுபோய் இம்மலையின் குகையினுட் புகுந்து பாதுகாத்தளிக்கக்கடவை." என்றருளிச்செய்தனர்.

(4) ஸ்ரீராமபிரான் மாரீசமானைப் பிடிக்கத் திருவுளங் கொண்டு புறப்பட்டபொழுது இளையபெருமாளை நோக்கி—

* " ப்ரதக்ஷிணேனாதிபலேநபக்ஷிணா
ஜடாயுஷா புத்திமதாச லக்ஷ்மண |
பவாப்ரமத்த: ப்ரதிக்ருஹ்ய மைதிலீம்
ப்ரதிக்ஷணம் ஸர்வத ஏவ சங்கித: || "

‡ " போனவள் புலவி நோக்கிப் புரவலவன் பொலன்கொ டாராய்
மானிது நானே பற்றி வல்லையின் வருவெ னன்றே
கானியன் மயிலன்னாளைக் காத்தனை யிருத்தி யென்னா
வேனது சாமும் வில்லும் வாங்கினன் விரையலுற்றன்."

" நான் இம்மானைப்பிடித்துக்கொண்டு வருகின்றேன்; நீ, மிக ஸமர்த்தரும் புத்திமானுமாகிய ஜடாயுவுடன் கூடி சற்றும் அஜாக்ரதையாயிராமல் நாற்புறங்களையும் பார்த்துக் கவனித்துக் கொண்டு மைதிலியைப் பாதுகாத்திருக்கக் கடவை." என்றருளிச்செய்தனர்.

இந்தப்பிரகாரங்களாக ஸ்ரீராமபிரான் ஸீதாப்பிராட்டியார் தனித்திராவண்ணம் தானும் இளையபெருமாளுமாகப் பாதுகாத்தனர்.

ஸ்ரீராமபிரான் மாரீசமானைப் பிடிப்பதற்காகத் தொடர்ந்து சென்று அம்மானை ஒரு பாணத்தாலடித்தபொழுது, அது ஸ்ரீராமபிரானது குரலைப்போல, அந்தோ! ஸீதா! அந்தோ! லக்ஷ்மணா! என்று கூச்சலிட்டு மரணமடைந்தது.

---

‡ வா. ரா. ஆரணி-கா. சரு. 43. சு. 51.
* கம்ப-ரா. ஆரணி-கா. மாரீசன்வதை 238.

மாரீசனிட்ட கூக்குரலைக்கேட்டதும் அது பெருமாளின் தொனியெனச் சங்கைகொண்டு ஸீதாப்பிராட்டியார் இளையபெருமாளை நோக்கி—

¶ "நஹி மே ஜீவிதம் ஸ்தாநே ஹ்ருதயம் வாவதிஷ்டதே |"

"உம்முடைய ப்ராதாவின் தீனமான தொனியைக் கேட்டபின் என்னுயிர் என்னிதயத்திலில்லை. ஆதலின் நீர் உடனே சென்று ¶ "ப்ராதரம் த்ராதுமர்ஹஸி!" உம்முடைய திருத்தமயனைப் பாதுகாத்தருள்க." எனக்கூறினள்.

மாரீசனுடைய கபடத்தன்மையையறிந்தவரான இளையபெருமாள் பிராட்டியாரை நோக்கி—

¶ "பந்நகாஸுர கந்தர்வ தேவதாநவ ராக்ஷஸை: |
அசக்யஸ்தவ வைதேஹி பர்தா ஜேதும் நஸம்சய: ||
தேவி தேவமநுஷ்யேஷு கந்தர்வேஷு பதத்ரிஷு |
ராக்ஷஸேஷு பிசாசேஷு கிந்நரேஷு ம்ருகேஷு ச ||"
"தாநவேஷுச கோரேஷு நஸவித்யேத சோபநே ||"

"அன்னையே! பன்னகாஸுர கந்தர்வ தேவமானுஷ ராக்ஷஸாதிகளெல்லோரும் ஒருங்குகூடி எதிர்த்துப் போர்செய்யினும், உமது பர்த்தாவை வெல்வதற்குச் சக்தர்களாகார். இதில் சந்தேகமில்லை. யுத்தத்தில் என்னையரை எதிர்த்து நிற்பவன் தேவர்களிலாவது, மனிதர்களிலாவது, கந்தர்வர்களிலாவது, பறவைகள் மிருகங்களிலாவது, ராக்ஷஸ பிசாச கின்னரர் தானவர்களிலாவது, ஒருவரும் கிடையாது.

⊛ "எண்மையா ருலகினி னிராமற் கேற்றமோர்
திண்மையா ருளரெனச் செப்பற் பாலதோ"

---

¶ வா. ரா. ஆரணி கா. சரு. 45. சு. 2, 3, 10 to 12.
⊛ கம். ரா. ஆரணி-கா. ஜடாயுயி. 5.

"இவ்வுலகத்தில் ஸ்ரீராமபிரானைப் பார்க்கிலும் மிகுதியான பராக்கிரமமுடையவர்களிருக்கின்றார்களென்று சொல்லுவதற் குறியதோ?"

❀ "மாற்றமென் பகர்வது மண்ணும் வானமும்
போற்றவன் றிரிபுர மெரித்த புங்கவ
னேற்றினின் றெய்தவில் லிற்ற தெம்பிரா
ஞற்றலி னமைவதோ ராற்ற லுண்மையோ."

"திரிபுரமெரித்தருளிய பரமசிவனது வில்லானது ஸ்ரீராமபிரானுடைய தோள்வலிக்காற்றாது முறிந்ததென்றால் அவருடைய வல்லமையைப்போல் வேறொருவருக் கேற்படுவது கூடுமோ?" மேலும்—

† "நத்வாமஸ்மிந்வநே ஹாதுமுத்ஸஹே ராகவம் விநா /"

"இராமபிரானின்றித் தனித்திருக்கும் உம்மை விட்டு விட்டு நான்செல்வது உசிதமில்லை."

† "நஸதஸ்யஸ்வரோ வ்யக்தம் நகஸ்சிதபி தைவத:"

"இப்பொழுது கேட்டதொனியும் அவருடையதல்ல. யான் நன்றாயறிவேன். வேறொருவன் மாயையால் அவ்வண்ணம் கூறியிருக்கிறான்." என பலபடியாகப் பிராட்டியாருக்குத் தேறுதல்சொல்லியுங்கூட, பிராட்டியார் மனந்தேறாமல் இளைய பெருமாளை, நிஷ்டூரமான வார்த்தைகள் மொழிந்து, போகும்படி சொல்லவே இளையபெருமாளும்—

† "ரக்ஷந்து த்வாம் விசாலாக்ஷி ஸமக்ரா வநதேவதா: /"

"வனதேவதைகளெல்லோரும் உம்மைப் பாதுகாத்தளிக்கக்கடவர்கள்." என்றுரைத்துவிட்டு இராமபிரானெழுந்தருளியிருக்குமிடநோக்கிச் சென்றனர்.

❀ கம். ரா. ஆரணி-கா. ஜடாயுயிர் 9.
† வா. ரா. ஆரணி-கா. சரு 45, சு 14, 16, 34.

மாரீசனது கூச்சலைக்கேட்ட பிராட்டியார் இளையபெருமாளைப் போகும்படிசொல்லியதின் காரணமென்ன ?

பெருமாளுடைய புஜபலபராக்கிரமம் பிராட்டியார் அறியாதவரா ?

பெருமாள் விராத காதூஷணாதிகளை வதஞ்செய்த காலத்தும் கூடவேயிருந்து அறிந்தவரன்றோ ?

வனவாஸத்திற்குப்புறப்படும்பொழுது பெருமாள் வனத்திலேற்படும் பலவகையான கஷ்டங்களையெடுத்துரைத்துப்பிராட்டியாரைத் திருவயோத்தியிலேயே தங்கியிருக்கும்படியாக அருளிச்செய்தபொழுது பிராட்டியார்—

‡ "ந ச மாம் த்வத்ஸமீபஸ்தாமபி சக்நோதி ராகவ |
ஸுராணாமீச்வர: சக்ர: ப்ரதர்ஷயிது மோஜஸா ||"

"ஹே! நாதா! வனத்தில் உம்முடைய ஸமீபத்திலிருப்பவளான என்னைத் துன்பப்படுத்தத் தேவேந்திரனாலும் முடியாது" என்றுரைத்திருப்பதாலும்—

அசோகவனத்தில் இராவணனை நோக்கி—

$ "மேருவையுருவல்வேண்டின் விண்பிளந்தேகல்வேண்டின்
ஈரெழுபுவனம்யாவு முற்றுவித்திடுதல் வேண்டின்
ஆரியன்பகழிவல்லதறிந்திருந்தறிவிலாதாய்
சீரியவல்லசொல்லித் தலைபத்துஞ் சிந்துவாயோ."

"அடா! இராவணா! மஹாமேரு பர்வதத்தைத் துளைத்துக்கொண்டு செல்லவிரும்பினாலும், ஆகாயத்தைக் கிழித்துக்கொண்டு செல்லவிரும்பினாலும், இப்பதினாலு லோகங்களை அழியச்செய்ய விரும்பினாலும் ஸ்ரீராமபிரானுடைய பாணமானது வல்லமையுள்ளதென்பதை நீ தெரிந்திருந்தும், புத்திகெட்ட

‡ வா. ரா. அ. கா. சரு. 29. சு. 6.
$ கம். ரா. சுந்தர நிந்தனை 40.

வனே! அயோக்கியமாயுள்ளவைகளைச் சொல்லி, உனது பத்துத் தலைகளுஞ் சிதறிப்போகும்படியாகச் செய்துகொள்ளுவாயோ?"

† "ஆயிரந் தடக்கையா னின்னைநான்கு கரமும்பற்றி
வாய்வழிகுருதிசோரக் குத்திவான் சிறையில்வைத்த
தூயவன் வயிரத்தோள் கடிணித்தவன் றொலைந்தமாற்றம்
நீயறிந்திலையோவேகு நெறியறிந்திலாத நீசா."

"அடே! சண்டாளா! உன்னுடைய இருபது கைகளையும் பிடித்து உன் வாயின்வழியே ரத்தமொழுக உன்னையடித்துச் சிறையில்வைத்த, ஆயிரங்கைகளையுடைய கார்த்தவீரியார்சுனனின் தோள்களையெல்லாம் சிதைத்த பரசுராமன் எனது நாதனால் தோல்வியடைந்த சமாசாரம் நீயறியாயோ." என்றுரைத்திருப்பதாலும்.

பிராட்டியாருக்கு ஸ்ரீராமபிரானுடைய வல்லமை நன்கு தெரியுமென ஏற்படுகின்றது.

தவிர, இளையபெருமாளும் பெருமாளின் வல்லமையை நன்றாயெடுத்துரைத்துமிருக்கின்றார்.

அப்படியிருந்தும் மனம் தேறுதலடையாமல் இளையபெருமாளைப் போகும்படி சொல்லியதின் காரணம்:—

‡ "பெண்மையா லுரைசெயப் பெறுதி ராலெனை
வுண்மையா னெனயவட் குணரக் கூறினை."

பிராட்டியார் பெண்தன்மையால், மாரீசனுடைய வார்த்தையினால் மயக்கமடைந்து உரைசெய்ததாய் இளையபெருமாள் அருளிச்செய்திருப்பதும்

‡ "துண்ணெனு மவ்வுரை தொடரத் தோகையும்
பெண்ணெனும் பேதைமை மயக்கப் பேதுறு
லுண்ணிறை சோருமென் றாச லாடுமக்
கண்ணனு மிளவலைக் கண்ணுற்றனரோ."

† கம். ரா. சுந்தர. நிந்தனை. 58.
‡ ஆரணி. சடாயுவுயிர் 5, 150.

"பெண்மையென்கிற அறியாத்தன்மையினது மயக்கமாகிய வேறுபாட்டினால் பிராட்டி" உள்ளத்தின் நிறைவுதளர்வாள்.

என ஸ்ரீராமபிரான் நினைத்ததாய்க் கூறப்பட்டிருப்பதாலும்

† "பிடித்து நல்கிவ் வுழையெனப் பேதையேன்
முடித்த னென்முதல் வாழ்வென மொய்குழல்
கொடிப்ப டிந்த தெனநெடுங் கோளரா
விடிக்கு டைந்த தெனப்புரண் டேங்கினான்."

"அறிவில்லாத நான் இந்த மானைப் பிடித்துத் தருவீராக வென்றுகூறி எனது முதன்மையான வாழ்க்கையைத் தீர்த்து விட்டேன்." என பிராட்டியாரே "பேதையேன்" என்று கூறியிருப்பதாலும்

இளையபெருமாள் இராமபிரான் எழுந்தருளியிருக்குமிடம் நோக்கிச்சென்றபின்னர், பிராட்டியார் பர்ணசாலையில் தனித்திருந்தமையால், இராவணன் கபட சன்னியாசிவேடம் பூண்டு வந்து பிராட்டியாரையபகரித்துச் செல்லும்பொழுது, வழியிற் றடுத்துப் போர்செய்த ஜடாயுவின் சிறகுகளையறுத்துத்தள்ள, ஜடாயு மூர்ச்சித்து விழுந்ததைக் கண்டு பிராட்டியார்—

¶ "பின்னவ னுரையினை மறுத்துப் பேதையே
னன்னவன் றனைக்கடி தகற்றினேன் பொரு
மன்னவன் சிறையற மயங்கி னேன்வினை
யின்னமு மெவ்வினை யியற்று மோவென."

"அறிவிலியாகிய நான் இளையபெருமாளின் வார்த்தையைத் தடுத்து அவரை என்னைவிட்டு நீங்கும்படி செய்தேன் அதனால் கஷ்டத்திற்குள்ளாயினேன். எனக்குத் துணையாய்வந்த ஜடாயு ராஜன் சிறகுகளும் அறுபட்டன. இனி எனக்குத் துணையொருவருமில்லாததினால் மயக்கமடைகின்றேன். இன்னமும் என் ஊழ்வினை என்னென்ன கஷ்டங்களைக் கொடுக்குமோ?" எனப்பிராட்டியாரே 'பேதையேன்' எனக் கூறியிருப்பதாலும்.

† கம். ஆரணி. சடாயுவுயிர் 3.
¶ கம். ரா. ஆரணி-கா. சடாயுவுயிர் 132.

அசோகவனத்தில் ராக்ஷஸிகளின் உபத்திரவத்தைப் பொறுக்கமாட்டாமல், ஸீதாப்பிராட்டியார்—

† "நூநம் ஸ காமோ ம்ருகரூபதாரீ மாமல்பபாக்யாம் லுலுபே [ததாநீம் /
யத்ரார்யபுத்ரௌ விஸஸர்ஜ மூடா ராமாநுஜம் லக்ஷ்மண [பூர்வஜம் ச//"

"அஹோ! நான் அறிவில்லாதவளானேன்; அல்ப பாக்கியமுடையவளான என்னைக் கெட்டகாலமானது மாயமான் ரூபமாக வந்து வஞ்சித்துவிட்டது. ஆர்யபுத்திரர்களான ஸ்ரீராம லக்ஷ்மணர் இருவரையும் நான் மூடத்தனமாக என்னைவிட்டு நீங்கும்படியாகச் செய்துகொண்டதனால் இந்த ஆபத்தையடைந்தேன்." எனத் தன்னை 'மூடை' என உரைத்திருப்பதாலும், பிராட்டியார் பெண்தன்மையினால் கூறினர் என்பது சித்திக்கின்றது.

ஸீதாப்பிராட்டியார் இளமைப் பருவத்தில் பிதாவின் ஆளுகைக்குள்ளிருந்தும், விவாஹமானபின் பர்த்தாவுடன்கூடி மாமனார் கிருஹத்தில் வாஸஞ்செய்தும், வனவாஸகாலத்திலும் பர்த்தாவினால் பாதுகாக்கப்பட்டிருந்ததனால் பெண்கள் ஒருபொழுதும் சுதந்திரமாயிருக்கக் கூடாதென்பதும், பிராட்டியார், பெருமாளையும் இளையபெருமாளையும் விட்டுத் தனித்திருந்தபொழுது இராவணனால் அபகரிக்கப்பட்டமையால், பெண்கள் தனித்திருந்தால் பெருந்துன்பமடைவார்களென்பதும், பிராட்டியாரே, தம்மை, அறிவில்லாதவரென்று கூறியிருப்பதால் பெண்கள் எப்பொழுதும் மந்தமதியுள்ளவர்களென்பதும், பெற்றாம்.

இவ்வாறு பெண்ஜென்மமானது

"நுண்ணறிவுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே."

† வா-ரா. சுந்தர-கா. சரு. 28. சு. 10.

" பெண்புத்தி பின்புத்தி."

என்றபடி அறியாமையுடனும், பாரதந்திரியத்துடனும் கூடியதால்

ஆன்றோர்

"ந்ருஜந்ம ஜந்தோரதிதுர்லபம் விதுஸ்ததோபி பும்ஸ்த்வம்/"

"ஜந்தூநாம் நரஜந்ம தூர்லபமத: பும்ஸ்த்வம்/"

" அரிதரிது மானிடராதலரிது
மானிடராயினுங் கூன் குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்தலரிது."

பிராணிகளுக்கு மானிடப்பிறவி வாய்ப்பதரிதென்றும் அது கிடைப்பினும் புருஷஜென்மம் கிடைப்பதரிதென்றும் கூறியுள்ளார். பெண்ஜென்மத்தை சிறந்ததாகக் கூறவில்லை.

பெண்ஜென்மம் புருஷஜென்மத்தைவிட தாழ்ந்ததென்பதற்குறிய இதிஹாஸம்.

ஒரு சமயம் பரமேச்வரர் உமாதேவியை மகிழ்விக்கும்பொருட்டு ஓராரண்யஞ்சென்று, அவ்வாரண்யத்திலுள்ள பசு பக்ஷி மிருகாதிகளின் ஆணினங்களைப் பெண்ணுருவமாக மாற்றி, தாமும் ஸ்திரீ ரூபம தரித்து உமாதேவியுடன் கூடி ரமித்துக்கொண்டிருந்தனர். அந்தச்சமயம் கர்த்தம பிரஜாபதியின் புத்திரனாகிய இளமஹாராஜன் தனது சேனை பரிவாரங்களுடன் கூடி அவ்வரண்ணியத்திற்கு வேட்டையாடிக்கொண்டு வந்தனன். உடனே

† " ஆத்மாநம் ஸ்திரீக்ருதம்சைவ ஸாநுகம் ரகுநந்தந /
தஸ்யது:கம் மஹச்சாஸீத் த்ருஷ்ட்வாத்மாநம் ததாகதம்//"

தானும், தனது பரிஜனங்களும் பெண்களாக மாற்றப்பட்

† வா-ரா. உத்தர-கா. சரு. 99. சு. 16.

டமைகண்டு, மன்னன் மிகவும் துக்கமடைந்து, இது பரமசிவனது மாயச்செய்கையென்றுணர்ந்து, பரமேச்வரனைத் தியானித்துச் சரணமடைய, பரமசிவன் பிரசன்னமாகி—

† "புருஷத்வம்ருதே ஸௌம்ய வரம் வரய ஸுவ்ரத ॥"

'அரசனே! நீ புருஷனாக மாறுவதைவிட்டு, வேறு யாது வரம் வேண்டினும் வேண்டுக.' என்றருளிச்செய்ய—

† "ஸ்திரீ பூதோஸௌ ந ஜக்ராஹ வரமந்யம் ஸுரோத்தமாத்।
ததः சோகேந மஹதா சைலராஜ ஸுதாம் ந்ருபः ॥"

பெண்ரூபமடைந்த தான் புருஷ ரூபம் பெறுவதைவிட வேறு வரம் வேண்டத்தக்கதில்லை என்றெண்ணிச் சிவபிரானிடம் ஒருவரமும் வேண்டாமல், மஹத்தான வியாகூலமடைந்து பார்வதிதேவியைப் பிரார்த்தித்து, ஒருமாதம் புருஷனாகவும் ஒருமாதம் ஸ்திரீயாகவுமிருக்குமாறு வரம் பெற்று, பெண்ரூபமடைந்த சமயத்தில் அங்கு புதனைச்சேர்ந்து புரூவனென்னும் புத்திரனைப்பெற்றாள். ஒருவருஷத்திற்குப்பின்னால் கர்த்தமப் பிரஜாபதி பல முனிவர்களுடனாலோசித்து, அச்வமேதயாகஞ் செய்யவே அதனால் பிரீதியடைந்த பரமசிவன் பிரஸன்னராகி, 'யாதுவரம் வேண்டு' மென்றருளிச்செய்தனர்.

‡ "ப்ரஸாதயந்தி தே வேசம் யதாஸ்யாத் புருஷஸ்த்விளா।
ததः ப்ரீதோ மஹாதேவः புருஷத்வம் ததௌ புநः ॥
இளாயை ஸுமஹாதேஜா தத்வாசாந்தரதீயத ॥"

ஸமஸ்தப்பிராமணர்களுமொன்றுகூடி, இளன் என்றும் புருஷனாகவேயிருக்க அருள்புரிய வேண்டுமெனப் பிரார்த்தித்தார்கள். பரமசிவனுமங்ஙனமருள்புரிந்து, இளமஹாராஜன் ஸ்திரீ ரூபம் மாறி என்றைக்கும் புருஷனாகவே விளங்குமாறு வரமளித்து அந்தர்த்தானமாயினார்.

---

† வா-ரா. உத்தர-கா. சரு. 99. சு. 20, 21.
‡ வா-ரா. உத்தர-கா. சரு. 102. சு. 19, 20.

இதனால் ஸ்திரீஜென்மத்தைவிட புருஷஜென்மம் ச்ரேஷ்ட மென்பதாயிற்று.

அசோகவனத்தில் ராக்ஷஸிகளால்மிகவும் பீடிக்கப்பட்டு ஸீதாப்பிராட்டியார் மனவருத்தத்துடன்—

† "திகஸ்துகலு மாநுஷ்யம் திகஸ்துபரவச்யதாம் /
ந சக்யம் யத்பரித்யக்து மாத்மசந்தேந ஜீவிதம் //"

"இராக்ஷஸிகளுடைய ஹிம்ஸையோ பொறுக்கமுடியவில்லை என்னுதனோ இதுவரை வந்து இரக்ஷிக்கவில்லை: ஆகையால் பிராணனை விட்டாவது இத்துயர்க்கடலைத் தாண்டலாமென்றால், என் பிராணன் என்னுடைய ஸ்வாதீனமன்றே. அது பர்த்தாவின் ஸ்வாதீனமாயிற்றே. ஆகையால் பராதீனமாயுள்ள இந்த (ஸ்திரீ) மனுஷ்ய ஜென்மத்தைச் சுடவேணடும்."
எனப் புலம்பியிருப்பது இங்கு நோக்கத்தக்கது.

2. பெண்ணைப்பெறுவதாலடையும் கவலை:—

(1) சுமாலி என்பவன், தன் மகளான கைகஸி என்பவளை நோக்கிக் கூறுகின்றான். மகளே!

† "கந்யா பித்ருத்வம் து:கம் ஹி ஸர்வேஷாம் மாநகாம்க்ஷிணாம்/
ந ஜ்ஞாயதேச க:கந்யாம் வரயேதிதி கந்யகே //
மாது: குலம் பித்ருகுலம் யத்ர சைவ ச தீயதே /
குலத்ரயம் ஸதா கந்யா ஸம்சயே ஸ்தாப்ய திஷ்டதி //"

கன்னிகைக்குத் தந்தையாகுதல், மானத்தை விரும்புகின்றவர் எல்லோருக்கும் துயரமன்றோ? ஏனெனில் தன் பெண்ணுக்கு வரன் இன்னானெனத் தெரிவதில்லை. விவாஹமான பின்னுமவளது ஒழுக்கத்தைப்பற்றி, அவளது தாய்குலம், தந்தை

† வா-ரா. சுந்தர-கா. சரு. 25. சு. 20.
† வா-ரா. உத்தர-கா. சரு. 9; சு. 10, 11.

யின் குலம், பர்த்தாவின் குலம் ஆகிய மூன்று குலத்தவரும் எப்பொழுதும் கவலையுடனிருக்கின்றனர்.

மேலும்—

(2) "வரம் வரயதேகந்யா மாதாவித்தம் பிதாச்ருதம் /
பாந்தவா: குலமிச்சந்தி மிஷ்டாந்நமிதரேஜநா: //"

என்றபடி

$ "குலம்வேண்டுமென்றிருப்பார் குலத்துள்ளார் கல்வியினுற்குறையா [ஞானம்
பலம் வேண்டுமென்றிருப்பார் தந்தைமார் பரந்தபெருஞ்செல்வமுள்ள
தலம்வேண்டுமெனறிருப்பார் தாய்மார்கள் யவ்வனமு மழகுஞ்சார்ந்த
நலம்வேண்டுமென்றிருப்பார் நாறுகுழற்கன்னிமார் நலத்தின்மிக்கார்"

" பண்புடைய குடிப்பிறப்பும் பழிப்பில்லாப் பேரழகும் பரந்தகேள்வி
நுண்பொருளை நீரொழியப்பாலு கருமன்னம் போனேக்கித் தீரும்
ஒண்பொருளு மிந்நான்கு முடையாரைக் கிடையாதிவ்வுலகந்தன்னில்
பெண்பெறுகை போலிந்தப் பெரியதுயர்தானுண்டோ பேசுங்காலே"

" ஒரு கன்னிகைக்கு வரன் தேடுவதில் தந்தை தாயாரும் அக்கன்னிகையும் மற்றுமுள்ள பந்துக்களும் ஒவ்வொருவர் ஒவ்வொரு முக்கிய குணத்தைக்கருதி நாடுவது உலக இயல்பு. ஆனால் தனம், வித்தை, அழகு, உயர்குலம், முதலிய குணங்கள் எல்லாம் ஒருங்குடையவர்களிவ்வுலகத்தில் கிடைப்பதரிது. ஆகையால் பெண்ணைப் பெறுதலைப்போல மிகுந்த துன்பந்தருவதானது வேறொன்றுமில்லை." என்று மயன் இராவணனை நோக்கிக்கூறினன்.

(3) ஜனகமஹாராஜன் விச்வாமித்திர முனிவரை நோக்கி " அடியேனது புத்திரியான ஸீதாதேவிக்குச் சரியான வரனை யடையவேண்டி வீர்யசுல்கமாகச் சிவதனுவை ஏற்படுத்தினேன். ஸீதாதேவியின் அதிரூபலாவண்யத்தைக் கேழ்விப்பட்ட வேந்தர்களனேகர் வந்து, சிவதனுவை யசைப்பதற்குஞ் சக்தியற்றவராய், எல்லோருமொன்றுசேர்ந்து மிதிலாபுரியைச்சுற்றி முற்றுகை போட்டனர்.

$ கம்-ரா. உத்தர-கா. இராவணன் பிறப்பு 60, 61.

† " ரோஷேண மஹதாவிஷ்டா: பீடயந் மிதிலாம் புரீம் /
ததஸ் ஸம்வத்ஸரே பூர்ணே க்ஷயம் யாதாநி ஸர்வச: //
ஸாதநாநி முநிச்ரேஷ்ட ததோZஹம் ப்ருச து : கித : // "

" இவ்வாறு ஒருவருஷம் வரையில் தடுத்து இம்சைசெய்தமையால், ஜனங்களடைந்த கஷ்டத்தைக்கண்டு அடியேன் மிகுதியும் மனவருத்தமடைந்தேன். " என்று விண்ணப்பஞ்செய்தனர்.

‡ " வல்வில்லுக்காற்றுர்கள் மாரவேள் வளைகருப்பின்
மெல்வில்லுக்காற்றுராய்த்தா மெம்மை விளிகுற்றுர்
கல்வில்லோடுலகீந்த கணங்குழையைக் காதலித்துச்
சொல்வில்லாலுலகளிப்பாய் போர் செய்யத் தொடங்கினர்."

என்ற கம்பராமாயணச் செய்யுள் இங்கு நோக்கத்தக்கது—

(4) ஸீதாப்பிராட்டியார் அநஸூயாதேவியை நோக்கி—

† " பதிஸம்யோக ஸுலபம் வயோ த்ருஷ்ட்வா து மே பிதா /
சிந்தாமப்யகமத் தீநோ வித்த நாசா திவாதந: //
ஸதருசாச்சாபக்ருஷ்டாச்ச லோகே கந்யா பிதா ஜநாத்
ப்ரதர்ஷமவாப்நோதி சக்ரேணாபி ஸமோ புவி //
தாம்தர்ஷணமதூரஸ்தாம் ஸத்ருச்யாத்மநி பார்த்திவ: /
சிந்தார்ணவகத: பாரம் நாஸஸாத ப்லவோயதா //
அயோநிஜாம்ஹி மாம் ஜ்ஞாத்வா நாத்யகச்சத் ஸசிந்தயந் /
ஸத்ருசம்சாநுரூபம் ச மஹீபால: பதிம் மம // "

" யான் விவாஹத்திற்குரிய பருவமடைந்திருப்பதைக் கண்டு, எனது பிதா, பொருளையிழந்த தரித்திரனைப்போல, மிகுந்தவியாகூல மடைந்தனர்.

---

† வா-ரா. பா-கா. சரு. 66. சு. 22, 23.
‡ பா-கா. கா. 21.
† வா-ரா. அ-கா. சரு. 118. சு. 34, 35, 36, 37.

இவ்வுலகில் கன்னிகைக்குத் தந்தையாயிருப்பவன், இந்திரனுக்குச் சமானனாயினும், மேலோர், தாழ்ந்தோர், சமானோர் முதலான ஸகல ஜனங்களிடத்தினின்று மிகழ்ச்சியை யடைவானன்றோ? அவ்விதம் நிந்தை தமக்கும் மற்ற அரசர்களிடமிருந்தேற்படுமென, என்பிதா சிந்தாஸாகரத்தில் மூழ்கிக்கரைகாணாத குடம்போலத் தவித்தனர். அயோநிஜையான எனக்கேற்றவனும், அனுரூபனுமான பதியைச் சம்பாதிப்பதில் விசாரமாய் ஆலோசனையுடனிருந்தனர்." என உரைத்தனர்.

இவைகளினால் புத்திரியினிடமாகப் பிதாவுக்கு அதிகக் கவலையேற்படுமென்பது ஸூசிதம்.

"ஜாதேதி கந்யா மஹதீ ஹி சிந்தா கஸ்மை ப்ரதேயேதி மஹாந் விதர்க: /
தத்தா சுகம் யாஸ்யதி வா நவேதி கந்யாபித்ருத்வம் கலு நாம கஷ்டம் //

(இ - ள்) "பெண்குழந்தை பிறந்திருக்கின்றதெனக்கேட்டமாத்திரத்திலே அளவற்ற மனக்கவலை ஏற்படுகின்றதன்றோ? எந்தப் புருஷனுக்கிவளை விவாஹஞ்செய்து கொடுப்பதெனப் பெரியதான ஒரு சங்கை ஏற்படுகின்றது. விவாஹஞ்செய்து கொடுத்தபின்னும் தன்பெண் புருஷன் வீட்டில கஷ்டமின்றிச் சுகமாயிருக்கிறாளோ, அல்லவோ என்ற விசாரமு மேற்படுகின்றது. ஆதலால் ஒரு கன்னிகைக்குத் தகப்பனாயிருப்பது ஸதா கஷ்டத்தையே அனுபவிக்கவேண்டியதிருக்கிறது."

என ஒரு பெரியவா கூறியிருப்பது இங்கு நோக்கத்தக்கது



## 3. ஸ்திரீஜன்மாவின் விசேஷம்.

இந்தப் பிரகாரமாக, பெண்பிறவி பேதைமையுடன் கூடி பராதீனமாகவும், பெற்றோர்களுக்குக் கவலையை யளிக்கக்கூடிய தாகவுமிருந்தபோதிலும்,

'ஸ்த்ரீமூல: ஸ்வதர்ம:' என்றபடி கிருஹஸ்தனுடைய ஸகல தருமங்களும ஸ்திரீயின் மூலமாகவே நடைபெற வேண்டியிருக் கின்றன.

மேலும், உலகத்தில்

"ப்ரஜநார்தம் ஸ்த்ரிய: ஸ்ருஷ்டா: ஸந்தாநார்தம் ச மாநவா: |"

"அபத்யம் தர்மகார்யாணி சுச்ரூஷா ரதிருத்தமா |
தாராதீநஸ்ததாஸ்வர்க: பித்ரூணா மாத்மநஸ்ததா ||"

(இ - ள்) "கர்ப்பத்தையுண்டுபண்ணப் புருஷர்களும், கர்ப்பத் தைத்தரித்துப் பிரஜையையுண்டுபண்ண ஸ்திரீகளும ஸ்ருஷ்டிக் கப்பட்டிருக்கிறார்கள். ஒருவனுக்குப் புத்திரன், தர்மகாரியங்கள், பணிவிடை, ஆனந்தம், தனக்கும் பிதுர்க்களுக்கும் மோக்ஷம், இவைகளெல்லாம் விவாஹஞ்செய்துகொண்ட ஸ்திரீயினால்தான் ஏற்படவேண்டும்."

"அர்த்தோ வா ஏஷ ஆத்மநோ யத்பத்நீ |" என்றபடி,

புருஷன் பாதி சரீரமென்றும், இடபாதிஸ்தானத்திற் குரியவளான ஸ்திரீயும் சேர்ந்துதான் முழுச்சரீரமென்றும் சாஸ் திரங்களின் கொள்கை.

ஸ்திரீயையிழந்த பிராமணன் சிரார்த்தாதிகளில் வரிக்கப் பட அருகதையில்லையென்றும், பத்தினி பேஷ்டையாயிருந் தாலுங்கூட பிராம்ஹணார்த்தத்திற்கு வரிக்கக்கூடாதென்றும், தரும சாஸ்திரம் கூறுகின்றது.

பத்தினீரஹிதனுக்கு யாகாதிதருமங்களையனுஷ்டிப்பதற்கு அதிகாரமில்லையாதலால் அதன்மூலமாகவுண்டாகும் சுவர்க்காதி

களும் ஸ்திரீயின் நிமித்தமாகத் தானடையக்கூடியதாயிருக்கின்றது.

மேலும்—

† " கற்புமேய கனங்குழை மாதரைப்
பெற்றுளோர்தம் மரபும் பெருந்தவக்
கற்பினர் கொண்ட காதலருயிர்ச்
சுற்றம்யாவுந் துறக்கத்தி னெய்துமால் "

*'பெண்பிறக்கத்தந்தைகுலமுந் தாய்குலமும்,புக்ககுலமுமிவை விளங்கும்'

" குடும்பத்தில் ஒருபெண் பிறந்தால் அவளால் அவளுடைய தந்தையின் மரபும், தாயின் மரபும், அவளது புருஷனின் மரபுமாகிய மூன்று குலங்களும் மேன்மையடையும். "

(உதாரணம்:- ஸாவித்திரி உபாக்கியானம்.)

ஸ்திரீயினுடைய ஆசாரத்தினாலேயே குலம் பரிசுத்தியடைகின்றது.

"ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ணஸம்கர: /"

' ஸ்திரீகளின் கெட்டநடத்தையால் ஜாதிநிலை சீர்குலைந்து விடுகின்றன.' என்று பகவத்கீதையும்;

" பொருவில் கற்பின் வழீஇய புன்மங்கைய
ருரியமூன்று மரபினுள்ளோரையும்
வெருவந்தேங்கி விழுங்கியுமிழ்கிலா
வெரியுந் தீநரகிற் குடியேற்றுவார். "

" கற்புத்தவறிய பெண்ணினிமித்தமாய் மூன்றுகுலத்தவரும் கொடிய நரகத்தை யடைகின்றனர். " என்று காசிகாண்டமும்.

---

† காசிகாண்டம். * உத்தர ராமாயணம்.

" செங்கோல் கொடியோ செய்தவம் பிழைத்தோ
கோங்கவிழ் குழலார் கற்புக்குறைபட்டோ
நலத்தகை நலலாய் நன்றெடெல்லாம்
அலத்தற்காலை யாகியதறியேன். "

'ஸ்திரீகளின் கற்புக்குறைபட்டால் தேசமே கெட்டுவிடு மென.' மணிமேகலையும் கூறுவதால் தேசம் செழித்தோங்க லும், குலம் சிறப்படைதலும் கற்புடைய ஸ்திரீகளால்தான் ஏற்படவேண்டியிருக்கின்றன.

இத்யாதிகாரணங்களால் ஸ்திரீஜென்மமும் ச்ரேஷ்டமெனச் சித்திக்கின்றது.

உமாதேவியானவள் பரமசிவனை நோக்கி—

† "பிரபுவே! ஜென்மங்களுள் ஸ்திரீஜென்மம் சிறந்ததென்று யான் நினைப்பது. புருஷன் (தவமுதலிய) பெரிய காயக்லேசத்தி னலடையும் பலன்களெல்லாவற்றையும் பெண், பதிசுச்ரூஷையி னல் எளிதிலடைகிறாள். கணவனுள்ள பெண்ணுக்கு, கணவ னுக்கு அனுகூலஞ்செய்வதினாலேயே எல்லா ஸௌக்யமுமுண்டா கிறது. பெண்ணுக்கு இவ்வகையாகத் தர்மம் பூர்ணமாகிவிடு கிறது." எனக் கூறியிருப்பது, மேற்கூறியதை வலியுறுத்து கின்றது.

## 4 பெண்களின் விவாஹ வயது.

ஸீதாப்பிராட்டியார் அநஸூயா தேவியை நோக்கி—

‡ " பதிஸம்யோக ஸுலபம் வயோ த்ருஷ்ட்வாது மே பிதா /
சிந்தாமப்யகமத் தீநோ வித்தநாசா திவாதந: //

" யான் விவாஹத்திற்கு யோக்கியமான வயதடைந்திருப் பதைக் கண்டு, எனது தந்தை மிக்கக் கவலையுற்றனர். " என உரைத்தனர்.

† பாரத மொழிபெயர்ப்பு அநுசாஸநம் அ். 250.
‡ வா - ரா. அயோ - கா. சரு 118, சு 34.

இங்கு பிராட்டியார் 'விவாஹத்திற்கு யோக்கியமான வயது' எனக் கூறியிருப்பதால், பிராட்டியாருக்கு விவாஹமாகும் பொழுது வயது என்னவென்பதை ஆராய்வாம்.

விச்வாமித்ர மஹரிஷி யாகஸம்ரக்ஷணார்த்தம் சக்கரவர்த்தியாரிடம் ஸ்ரீராமபிரானை யாசித்தபொழுது, சக்கரவர்த்தியார் மஹரிஷியை நோக்கி—

× " ஊநஷோடச வர்ஷோ மே ராமோ ராஜீவ லோசந: / "

" எனது மைந்தன் இராமன் பதினாறுவயதுக்குங் குறைவான பாலனன்றோ. "

என்ற தசரதர் வாக்கியத்தினாலும்;

○ " ஊந த்வாதச வர்ஷோயம் அக்ருதாஸ்த்ரச்ச ராகவ: / "

(தாடகாவதம் செய்யும்பொழுது) இராமபிரானுக்கு வயது பன்னிரண்டு நிரம்பவில்லையென்று இராவணனிடம் கூறிய மாரீச வசனத்தினாலும்;

இராவண ஸந்நியாஸியை நோக்கி ஸீதாதேவி—

$ " உஷித்வா த்வாதச ஸமா இக்ஷ்வாகூணாம் நிவேசநே /
புஞ்ஜாநா மாநுஷாந் போகாந் ஸர்வகாம ஸம்ருத்திநி //
தத்ர த்ரயோதச வர்ஷே ராஜாऽமந்த்ரயத ப்ரபு: /
அபிஷேசயிதும் ராமம் ஸமேதோ ராஜமந்த்ரிபி: //

" யான் ஸ்ரீராமபிரானைத் திருமணஞ்செய்துகொண்டபின்னர், திருவயோத்தியில் பன்னிரண்டாண்டு பதியுடன்கூடிச் சகலபோகங்களையும் குறைவின்றியனுபவித்துக்கொண்டு வாழ்ந்திருந்தேன். பதின்மூன்றாவது வருஷத்தில் என் மாமனார் என் பர்த்தாவுக்கு இராஜ்யாபிஷேகஞ்செய்வதற்கு ஆலோசனை செய்தனர். "

× வா - ரா. பால - கா. சரு. 20. சு. 2.
○ வ - ரா. ஆரணி - கா. சரு. 38. சு 6.
$ வா - ரா. ஆரணி - கா. சரு. 47. சு. 4, 5.

அப்பொழுது—

¶ " மம பர்தா மஹாதேஜா வயஸா பஞ்ச விம்சக: /
அஷ்டதசாஹி வர்ஷாணி மம ஜந்மநி கண்யதே // "

" என் பர்த்தாவுக்கு வயது இருபத்தைந்து, எனக்கு வயது பதினெட்டு. "

என கூறியிருப்பதாலும்;

ஸீதாப்பிராட்டியாருக்கு விவாஹமாகும்போழுது வயது ஆறு எனவும், ஸ்ரீராமபிரானுக்கு வயது பன்னிரண்டு எனவும், ஸித்திக்கின்றது.

மேலும்,

ஸ்ரீராமபிரான் வனவாஸஞ்செய்ய புறப்படுங்காலத்தில் ஸீதாப்பிராட்டியாரை அயோத்தியிலேயே இருக்கும்படியாக அருளிச்செய்தபொழுது, பிராட்டியார் இராமபிரானைநோக்கி—

† " ஸ்வயம் து பார்யாம் கௌமாரீம் சிரமத்யுஷிதாம் ஸதீம் /"

"குமாரியாயிருக்குங்காலத்திலேயே உமக்குப்பாரியையாகி நெடுநாளாக உம்முடனேயே வஸித்துக்கொண்டிருப்பவளும் பதிவிரதையுமான என்னை." என உரைத்தனர்.

இங்கு 'கௌமாரீம்' என்றிருப்பதால் கன்னிப்பருவமாகின்றது. 'பிதாரக்ஷதி கௌமாரே பர்த்தா ரக்ஷதி யௌவநே.' என்றபடி பெண்கள் கௌமாரபருவத்தில் தகப்பனுடைய ஆளுகைக்குள்ளும் யௌவனப்பிராயத்தில் புருஷனுடைய ஆளுகைக்குள்ளும் இருக்கவேண்டுமென்று சாஸ்திரமிருப்பதால் 'கௌமாரீம்' என்றதினால் ஸீதாப்பிராட்டியார் பிதாவின் ஆளுகைக்குள்ளிருக்கும்பொழுது சிறுவயதிலேயே விவாஹஞ்செய்யப்பட்டவளாகஏற்படுகின்றமையால், இதுவிவாஹமாகும்பொழுது பிராட்டியாருக்கு வயது 'ஆறு' என்பதை உறுதிப்படுத்துகின்றது.

¶ வா - ரா. ஆரணி - கா. சரு. 47. சு. 10, 11.
† வா - ரா. அயோ - கா. சரு. 30. சு. 8.

## பெண்களின் விவாஹ வயதைப்பற்றிய பிரமாணங்கள்.

" உபாய நோதித: கால: ஸ்த்ரீணு முத்வாஹகர்மணி /
ஸ்த்ரீணுமுபநயநஸ்தாநே விவாஹம் மநுரப்ரவீத் // "
(வ்யாக்ரபாத:)

புருஷர்களுக்கு உபநயனஞ்செய்வதற்குக் குறிப்பிட்டிருக்கும் காலத்தையே ஸ்திரீகளுடைய விவாஹத்திற்கும் எடுத்துக் கொள்ளவேண்டும். (ஏனெனில்) மனுவானவர் ஸ்திரீகளுக்கு விவாஹத்தையே உபநயனஸ்தானமாக சொல்லியிருக்கிருர்.

இன்னும்,

" வைவாஹிகோ விதி: ஸ்த்ரீணும் ஸம்ஸ்காரோ வைதிக: ஸம்ருத: /
பதிஸேவா குரௌளவாஸோ க்ருஹார்தோக்நி பரிக்ரியா//"

உபநயனத்திற்குப் பதிலாக விவாஹமானது ஸ்திரீகளுக்கு மந்திரவத்தான ஸம்ஸ்காரமாக விதிக்கப்பட்டிருக்கிறது. ஸ்திரீகளுக்குப் பதிஸேவையே குருகுலவாஸம்; வீட்டுவேலைசெய்வதே, ஸமிதாதானம்; என்று மனுகூறியிருக்கிருர்.

" விவாஹம் சோபநயனம் ஸ்த்ரீணுமாஹ பிதாமஹ: /
தஸ்மாத்கர்பாஷ்டம: ச்ரேஷ்ட: ஜந்மதோ வாஷ்டவத்ஸர://
தஸ்மாத் விவாஹயேத் கந்யாம் யாவந்நர்துமதீபவேத் / "
(பிதாமஹர்)

பிதாமஹர் ஸ்திரீகளுக்கு விவாஹமென்கிற ஸம்ஸ்காரத்தையே உபநயனமாகக் கருதுகிருர். ஆகையால் கர்ப்பகாலத்திலிருந்தும் எட்டாவது அல்லது பிறந்து எட்டாவதுவயதிலாவது ஸ்திரீகளுக்கு விவாஹத்தை நடத்தவேண்டும். அதுதான் முக்கியமானகாலம். ஆகையால் ருதுவாவதற்குமுன்பு கன்னிகையை விவாஹஞ்செய்விக்கவேண்டும்.

" விவாஹோஹ்யஷ்டவர்ஷாயா: கந்யாயாஸ்து ப்ரசஸ்யதே/ "
(ஸம்வர்த:)

ஸ்திரீகளுக்கு விவாஹமென்பதை எட்டாவது வயதில் செய்வது முக்கியகாலமாகுமென்று,ஸம்வர்த்தரும் சொல்லுகிறார்.

" விவாஹச்சாஷ்டவர்ஷாயா: கந்யாயாஸ்து ப்ரசஸ்யதே/
தசவர்ஷா பவேத் கந்யா அதஊர்த்வம் ரஜஸ்வலா //
யஸ்தாம் விவாஹயேத் கந்யாம் ப்ராஹ்மணோ மதமோஹித:/
அஸம்பாஷ்யோஹ்யபாங்க்தேயஸ்ஸவிப்ரோ வ்ருஷளீபதி://"

கன்னிகைகளுக்கு விவாஹத்திற்கு 8-வயதுதான் முக்கியமானகாலம். 10-வயதுவரை கௌணகாலம். அதற்குமேல் ருதுகாலம். ருதுவானபிறகு, மதமோஹிதனாய் எந்தப்பிராமணன் கலியாணம் செய்துகொள்ளுகிறானோ, அவன் சூத்திரஸ்திரீயின் பதியாகிறான். அவனுடன் விவகாரம் பந்திபோஜனம் முதலானவை கூடாது.

" யாவந்நலஜ்ஜதே கந்யா யாவத்க்ரீடதி பாம்ஸுநா,
யாவத்திஷ்டதி கோமார்கே தாவத்கந்யாம் விவாஹயேத்//"

ஒருகன்னிகை எதுவரை வெட்கமடைகிறதில்லையோ, எதுவரை ஆடுமாடுகள் செல்லக்கூடிய வீதியில் நின்று பூதூளிகளில் விளையாடுகிறாளோ, அந்தவயதிற்குள் விவாஹஞ் செய்விக்கக் கடவள்.

" வருமுலையெழுந்த பின்மகட்கொடுப்பின் மரபழிந்திடு மயிர்தோன்றுந்
தெரிவையை யளிப்பின் மணந்தவனிறசகுந் தெருண்டபினளிப்பினுங் [கவளை
யருளியதந்தை யிறந்திடுமதனு லாய்பிழிக்குறுந்துளி பிலிற்று
முருகவிழ்கூந்த லனையவர்முயக்க முறையலவென மறைமொழியும் "
(காசிகாண்டம்)

இத்யாதி பிரமாணங்களை யனுசரித்து ஸீதாப்பிராட்டியாருடைய விவாஹமானது கன்னிப்பருவத்திலேயே நடந்தேறியிருப்பதால மற்றவர்களும் அவ்விதம் தங்கள் பெண்களைக் கன்னிப்பருவத்திலேயே தக்கவரனைத்தேடி விவாஹஞ்செய்விக்க வேண்டுமென்பது ஸூசிதம்.

சன்னிப்பருவமாவது—

" அஷ்டவர்ஷா பவேத்கந்யா நவவர்ஷது ரோஹிணி /
தசவர்ஷாபவேத் கௌரீ அதஊர்த்வம் ரஜஸ்வலா // "
(ஸம்வர்த்தர்)

என்றபடி, எட்டுவயதுவரை சன்னி என்றும், ஒன்பதாவது வயதில் ரோஹிணி என்றும், பத்தாவது வயதில் கௌரி என்றும் அதற்குப்பின்னுல் ரஜஸ்வலை என்றும் சாஸ்திரம் கூறுகின்றது.

## (5) விவாஹத்தைப்பற்றிய ஆலோசனை

ஜனகமஹாராஜருடைய ஆஜ்ஞாப்பிரகாரம் தூதர்கள் திருஅயோத்தியடைந்து தசரதச்சக்கரவர்த்தியாரிடம், ஜனகமஹாராஜன் சொல்லியனுப்பிய திருமணச்செய்திகள் யாவுந் தெரிவித்தனர்.

† " தூதவாக்யம் து தச்ச்ருத்வா ராஜா பரமஹார்ஷித: /
வஸிஷ்டம் வாமதேவம் ச மந்த்ரிணோந்யாம்ச்ச ஸோப்ர
[வீத் // "

தூதர்கள் கூறிய மங்களச் செய்தியைச் சக்கரவர்த்தியார் கேட்டுச் சந்தோஷங்கொண்டு வஸிஷ்டவாமதேவாதி ரிஷிகளையும், சுமந்திரர் முதலிய மந்திரிகளையும் பந்துக்களையும் வரவழைத்து அவர்களை நோக்கி—

" இராமலக்ஷ்மணர்கள் கௌசிக முனிவரால் பாதுகாக்கப்பட்டு மிதுலாபுரி சேர்ந்து சிவதனுவை முறித்தகாரணமாக ஜனகராஜன் தமதருமைப்புதல்வியாகிய ஸீதையை நமது செல்வச்சிறுவனுகிய ஸ்ரீராமனுக்குத் திருமணஞ்செய்து கொடுக்க விரும்பி, அதற்காக நம்மெல்லோரையும் சீக்கிரமாக வரவேண்டுமென்று தூதனுப்பியிருக்கின்றார்.

† வா-ரா. பால-கா. சரு. 68. சு. 15.

† " யதி வோ ரோசதே வ்ருத்தம் ஜநகஸ்ய மஹாத்மந: /
புரீம் கச்சாமஹே சீக்ரம் மாபூத்காலஸ்ய பர்யய: // "

ஆதலால் ஜனகராஜனுடைய குலமும் நமது குலமுஞ் சம்மந்தஞ்செய்யத் தகுந்ததென உங்களுக்குச் சம்மதமாயின், நாமெல்லோரும் சீக்கிரம் மிதிலாபுரிக்குச் செல்லுவோம்; காலதாமதஞ்செய்யலாகாது." என்றுரைத்தனர். அதுகேட்டுச் சபையோர் யாவரும் கலந்தாலோசித்து,

† " மந்த்ரிணோ பாடமித்யாஹு: ஸஹ ஸர்வைர்மஹர்ஷிபி: // "

" சம்மந்தஞ்செய்யத் தகுதியுள்ளது " என எல்லோரும் ஒருமித்துக்கூறினர்கள். சபையோர்கள் சம்மதம் கொடுக்கவே, சக்கரவர்த்தியார் மறுநாள் மிதிலாநகரத்திற்குப் பிரயாணப் படத் தீர்மானித்தனர்.

இதனால் புரோஹிதர், பந்துக்கள் முதலியோர்களுடன் ஆலோசித்து மக்களுக்குத்திருமணஞ்செய்யும் விஷயம் தீர்மானஞ் செய்யப்படவேண்டுமென்பது ஸூசிதம்.
எனெனில்—

" பாந்தவா : குலமிச்சந்தி / "

" குலம்வேண்டு மென்றிருப்பார் குலத்துள்ளார். "

என்றபடி, பந்துக்கள் குலத்தையே முக்கியமாக நாடுவாராதலின், சம்மந்தஞ்செய்யுங் குலத்தைப்பற்றி, பந்துக்களுடன் ஆலோசித்தல் அவசியமாயிற்று.

## 6. வதூவரா பொருத்தம்.

ஸீதாப்பிராட்டியார் அநஸூயாதேவியை நோக்கி—

† " அயோநிஜாம்ஹி மாம் ஜ்ஞாத்வா நாத்யகச்சத் ஸசிந்தயந் /
ஸத்ருசம்சாநுரூபம்ச மஹீபால: பதிம் மம // "

† வா-ரா. பால-கா. சரு 68. சு. 18, 18½.
† வா-ரா. அயோ-கா. சரு 118. சு. 37.

" யதன் அயோநிஜையானதால் எனக்கு ஏற்றவனும் அநுரூபனுமான கணவனை எனது பிதா தெரிந்துகொள்ளமுடியவில்லை." என உரைத்தனள்.

இதனால் கன்னிகைக்கு ஏற்றவனும் அநுரூபனுமான புருஷனைத் தெரிந்துகொள்வதில் மிகுந்த சிரமமேற்படுமென்பது ஸூசிதம்.

வஸிஷ்ட மஹரிஷி ஸ்ரீ ஜனகருக்கு மனுகுலத்தோர் குலமுறை யுரைத்து, அவரை நோக்கி—

ǂ " ராமலக்ஷ்மணயோரர்த்தே த்வத்ஸுதே வரயே ந்ருப /
ஸத்ருசாப்யாம் நரச்ரேஷ்ட ஸத்ருசே தாதுமர்ஹஸி // "

" மஹாராஜனே! ஸ்ரீ ராமலக்ஷ்மணர்களுக்கு உம்முடைய பெண்களிருவரையும் கேட்கின்றேன். இவ்விரண்டு பிள்ளைகளுக்கும் தகுதியாயுள்ள உமது இரண்டு பெண்களையும் விவாஹஞ் செய்து கொடுக்கக்கடவீர்." என அருளிச்செய்தனர்.

வஸிஷ்ட விச்வாமித்திரர்களிருவரும் ஜனகமஹாராஜனை நோக்கி—

● " ஸத்ருசோ தர்மஸம்பந்தஃ ஸத்ருசோ ரூபஸம்பதா /
ராம லக்ஷ்மணயோ ராஜந ஸீதா சோர்மிலயா ஸஹ // "

" ஸ்ரீராமபிரானுக்கு ஸீதாப்பிராட்டியும், இளையபெருமாளுக்கு ஊர்மிளாதேவியும் குலரூபாதிகளில் தகுதியுள்ளவர்களாக இருக்கின்றார்கள்." என அருளிச்செய்தனர்.

இவைகளினால் எவ்வளவு சிரமமடைந்தபோதிலும், குலம், ரூபம், வயது, குணம் முதலானவைகளில் ஏற்ற வரனைத்தேடி அவனுக்குக் கன்னிகையை அளிக்கவேண்டுமென்பது ஸூசிதம்.

ǂ வா-ரா. பால-கா. சரு. 70. சு. 45.
● வா-ரா. பால-கா. சரு 72. சு. 3.

நவவ்யாகரணமும் மற்றும் சாஸ்திரங்களும் நன்கு சற்றுணர்ந்தவரான அநுமான் அசோகவனத்தில் ஸீதாப்பிராட்டியாரைப்பார்த்தபொழுது.

† “ துல்யசீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணம் /
ராகவோர்ஹதி வைதேஹீம் தம்சேயமஸிதேக்ஷணு//”

“ சீலத்திலும், குலத்திலும், வயதிலும், ஒழுக்கத்திலும், அழகிலும், ஸ்ரீராமபிரானும் ஸீதாப்பிராட்டியாரும் ஒத்தவர்களாயிருப்பதால் ஸ்ரீராமபிரானையடைவதற்கு வைதேஹியும், பிராட்டியாரைப் பெறுவதற்கு ஸ்ரீராமபிரானுமே தகுதியுள்ளவர்கள் ” எனச் சிந்தித்தனர்.

இதனால் ஸீதாராமர்களுடைய தாம்பத்தியம் மிக்கச் சிறந்ததென ஏற்படுகின்றமையால் அவர்களுடைய பொருத்த விசேஷத்தை கவனிப்போம்.

(1) ஜாதிப்பொருத்தம்.

ஸ்ரீராமபிரானும் ஸீதாப்பிராட்டியாரும் க்ஷத்திரியஜாதியைச் சேர்ந்தவர்கள். ஆதலின் ஜாதிப்பொருத்தம் சரியாயிருக்கின்றது.

ஸ்ரீராமபிரான் சூர்ப்பணகையை நோக்கி—

‡ “ நிந்தனையரக்கி நீதிநிலையிலாள் வினைமற்றென்னி
வந்தனளாகுமென்றே வள்ளலுமனத்துட்கொண்டான்
சுந்தரீ மரபிற்கேர்த்த தோண்மையின்றுணிவிற்றன்றால்
அந்தணர் பாவைநீயானரசரில் வந்தேனென்றன் ”

“ அழகியவளே! உன்னுடைய சம்பந்தம் புராதனமான ஜாதிமுறைமைக்கு ஏற்றதன்று. நீ பிராம்மணஜாதிப்பெண். நான் க்ஷத்திரியன். ” என அருளிச்செய்தனர்.

† வா-ரா சுந்த-கா. சரு 16. சு. 5.
‡ கம்-ரா. ஆரணி-கா. சூர்ப்பணகை 49.

இதனால் அவரவர்கள் ஜாதியில் விவாஹஞ்செய்துகொள்வது உத்தமமென்பதும், மேற்பட்ட ஜாதிமகளிரை மணக்கலாகாவென்பதும் ஸூசிதம்.

“ ஸவர்ணாக்ரே த்விஜாதீநாம் ப்ரசஸ்தா தாரகர்மணி /” (மனு)

“ த்விஜர்கள் அவரவர்கள் ஜாதியில் விவாஹஞ்செய்து கொள்வதுதான் சிறந்தது.” என மனுகூறியிருப்பது நோக்கத்தக்கது.

(2) குலப்பொருத்தம்.

ஸ்ரீராமபிரான் அவதரித்த சூரியகுலத்தின் பெருமை.

¶ “ ஆதிவம்சவிசுத்தாநாம் ராஜ்ஞாம் பரமதர்மிணாம் /
இக்ஷ்வாகு குலஜாதாநாம் வீராணாம் ஸத்யவாதிநாம் //”

“ சூரியகுலத்தவர் தொன்றுதொட்டு பரிசுத்தமுள்ளவர்களாயும், சிறந்த தர்மிஷ்டர்களாயும், பராக்கிரமசாலிகளாயும், ஸத்தியஸந்தர்களாயும் இருக்கின்றனர்கள்.” என வஸிஷ்ட பகவான் அருளிச்செய்தனர்.

† “ ந ஹ்யர்திந: கார்யவசாதுபேதா: ககுத்ஸ்தவம்சே விமுகா: ப்ரயாந்தி /”

“ சூரியகுலத்தில் ககுத்ஸ்தவம்சத்தாரிடத்து வந்த யாசகர் தங்களிஷ்டத்தைப் பெறாமற்போனதில்லையன்றோ?” என மாந்தாதா சக்கரவர்த்தியைநோக்கி ஸௌபரிமுனிவர் அருளிச்செய்தனர். இதனால் சூரியகுலத்தவர் தானஞ்செய்வதில் சிறந்தவரென்பது கருத்து.

¶ வா-ரா. பால-கா. சரு 70. சு. 44.
† விஷ்ணுபுராணம் ஸௌபரி உபாக்கியானம்.

தசரதச் சக்கரவர்த்தியார் ஸ்ரீராமபிரானை விச்வாமித்திர முனிவருடன் அனுப்ப மறுத்தபொழுது, முனிவர் சக்கரவர்த்தியாரை நோக்கி—

丅 " பூர்வமர்த்தம் ப்ரதிச்ருத்ய ப்ரதிஜ்ஞாம் ஹாது மிச்சஸி/
ராகவாணுமயுக்தோயம் குலஸ்யாஸ்ய விபர்யய: // "

" நீர் ஒருகாரியத்தைச் செய்வதாக ப்ரதிஜ்ஞைசெய்து, பின்பு அதைத் தவற நினைக்கிறீர்; ரகுகுலத்தில் பிறந்தோர்க்கு இது தகாது." என்றருளிச்செய்தனர்.

இதனால் சூரியகுலத்தவர் ஸத்தியஸந்தர் என்பது கருத்து.

⊕ " வேதநூலிற், சோல்லறந்துறந்திலாத சூரியன்மரபு."

⊕ " கோவியற்றருமமுங்கள் குலத்துதித்தோர் கட்கெல்லாம்
மோவியத்தெழுத வொண்ணு வுருவத்தாய் உடைமையன்றே."

என ஸ்ரீராமபிரானைநோக்கி வாலி கூறினன். இதனால் சூரியகுலத்தவர் சிறிதும ராஜதருமத்தைவிட்டு விலகாதவரென்பது கருத்து.

$ " கங்கனென்றுதன்னருகிருந்தருளிய கடவுட்
டுங்கமாமுனி சொற்படி தோள்வடநெகிழ்த்துச்
சிங்கமன்னவத்திகத்தனைச் செல்கேனவிடுத்தா
னங்கமாமதிலயோத்திமன்றேரு மோன்றளித்தே."

(தக்ஷிணகோகர்ணத்தில்) அயோத்தி மன்னனை விராடராஜன் கங்கபட்டராகிய தருமபுத்திரர் சொற்படி, தேர்க்காலில் கட்டியிருந்த திரிகர்த்தராஜனை, கயிற்றையவிழ்த்து, ஒரு தேரையும் கொடுத்து உயிருடன் செல்லும்படி விடுத்தனன்.

விராடராஜன் சூரியகுலத்தைச் சேர்ந்தவனாதலால், இதுவும் சூரியவம்சத்தின் ஏற்றத்தைக் கூறியவாறாயிற்று.

丅 வா-ரா. பால-கா. சரு. 21. சு. 2.
⊕ கம்-ரா. கிட்கி. வாலிவதம்.
$ வில்லிபாரத நிரைமீட்சி 22.

†"அசிந்த்யாநி்யப்ரமேயாணி குலாநி நரபுங்கவ /
இக்ஷ்வாகூணாம் விதேஹாநாம் நைஷாம் துல்யோஸ்தி கச்சந //"

"இக்ஷ்வாகு குலமும் நிமிகுலமும் எண்ணுதற்கரிய அளவிறந்த சிறந்தகுணங்களோடு கூடியதாக இருக்கின்றன. இவ்விரண்டு குலங்களுக்குச் சமானமான குலம் வேறொன்றுமில்லை." என வஸிஷ்ட விச்வாமித்திரர்களிருவரும் ஜனகமஹாராஜனை நோக்கியருளிச்செய்தனர்.

இதனால் விதேஹகுலமும் இக்ஷ்வாகுகுலம்போல சிறந்ததென ஏற்படுகின்றமையால் குலப்பொருத்தம் தகுதியாயிருக்கின்றது.

(3) வயது.

‡ ஸ்திரீபுருஷர்களின் விவாஹவயது எப்படியிருக்கவேண்டுமென சாஸ்திரம் கூறுகின்றதோ அவ்விதமான வயதுடையவர்கள் (ஸ்ரீராமபிரானும் ஸீதாப்பிராட்டியாரும்.)

(4) ஸம்பத்து.

தசரதர் அயோத்தியாபுரி மன்னர். ஜனகர் மிதிலாபுரிக்கிறைவன். ஆதலின் ஸம்பத்து விஷயமும் தகுதியாயிருக்கின்றது.

(5) சீலம் அதாவது குணம்.

சித்திரகூடபர்வதத்தில் ஸ்ரீராமபிரானும் ஸீதாப்பிராட்டியாரும் ஏகாந்தமாயிருந்த சமயத்தில்,

╤ ஆஸுரப்ரக்ருதியான ஜயந்தன் காகரூபத்தைக்கொண்டு வந்து ஜனனிபக்கலிலே அக்ருத்யப்ரவ்ருத்தனாக,

"ஸ: க்ரீடதி ஸரோஷேண பஞ்சவக்த்ரேணபோகினா. /"

என்று பெருமாளவன்மேலே சிறி தலையையறுப்பதாக ப்ரஹ்மாஸ்த்ரத்தை ப்ரயோகிக்க

† வா-ரா. பால-கா. சரு 72. சு. 2.
‡ விவாஹவயது 76 பக்கம் பார்க்க.
╤ ஸ்ரீவசன பூஷணம் ஜீயர்வ்யாக்யானம்.

" ஸபித்ராச பரித்யக்தஸ்ஸுரைச்சஸமஹர்ஷிபி:|
த்ரீன்லோகான் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணங்கத: ||"

" என்கிறபடியே எங்கும் சுத்தித் திரிந்தவிடத்திலும் ஒரு புகலிடமில்லாமையாலே போக்கற்று சரணம்புக

" ஸதம நிபதிதம் பூமௌ சரண்யச் சரணாகதம் |
வதார்ஹமபி காகுத்ஸ்த்த: க்ர்பயா பர்ய பாலயத்|| "

சரணாகதவத்ஸலரான ஸ்ரீராமபிரான், மஹாஅபராதம் பண்ணின காகத்தையும், சரணாகதிபண்ணினதால், கொல்லாமல் ரக்ஷித்தனர். காகாசுரனை ஜயந்தனும் ஸ்ரீராமபிரானுடைய அஸ்த்திரத்திற்கு தனது வலதுகண்ணைக் கொடுத்துவிட்டு பிராணனுடன் தன திருப்பிடமடைந்தான்.

இதனால் ஸ்ரீராமபிரான் பரமகாருண்யமூர்த்தியென ஸித்திக்கின்றது.

○ " மாகம்பிலந்திக்கிமை யோருலகமழுவுடையோ
னாகநன்னுடளவாகப் பன்னகநடுங்கவம்பு
வேகங்கொடுதொடரப் பறந்தோடியுமீண்டுவந்து
காகஞ்சரணென்ன நம்பெருமானுயிர்காத்தனரே."

‡ " சித்திரகூடத் திருப்பச் சிறுகாக்கை முலைதீண்ட,
அத்திரமே கொண்டெறிய வனைத்துலகுந் திரிந்தோடி
வித்தகனே யிராமாவோ நின்னபயமென்றழைப்ப
அத்திரமே யதன்கண்ணை யறுத்ததுமோரடையாளம்."

† " ஐயநின் சரணஞ் சரணென்றவனஞ்சி
வையம்வந்து வணங்கிட வள்ளன் மகிழ்ந்தே
வெய்யவன் கணிரண்டொடு போகெனவிட்ட
தெய்வவெம்படையுற்றுள தன்மை தெரிப்பாய்."

என்பன இங்கு நோக்கத்தக்கன.

---

○ திருவரங்கத்துமாலை. 40.
‡ பெரியாழ்வார் திருமொழி. 4–1–6.
† கம்-ரா. சுந்தர-கா. சூடாமணி. 80.

இராவணவதாநந்தரம் பிராட்டியாரிடம் திருவடி (அநுமான்) சோபனஞ்சொல்லவந்த ஸமயம், அசோகவனத்தில் பிராட்டியாரை ஹிம்ஸைபண்ணின ஏகாக்ஷி, ஏககர்ணீ முதலான எழுநூறு ராக்ஷஸிகளையும் சித்திரவதம்பண்ண அநுமதியளிக்கும்படி திருவடியானவர் விண்ணப்பஞ்செய்ய, பிராட்டியார்—

¶ "பாபாநாம்வா சுபாநாம்வா வதார்ஹாணாமதாபிவா |
கார்யம் காருண்ய மார்யேண நகச்சிந் நாபராத்யதி ||"

"ஹே! ஆஞ்சநேய! இந்த ராக்ஷஸிகளிடத்தில் யாதொரு குற்றமுமில்லை. இராவணனுடைய உத்திரவின்பேரில் என்னை இம்சித்தனரேயன்றி சுயமாகச் செய்தவர்களல்ல. துன்பஞ் செய்தவர்களாயினும், இன்பஞ்செய்தவர்களாயினும், வதஞ்செய்யத்தக்கவர்களாயினும் அவர்கள்மீது உயர்ந்தோர்கள் கிருபை செய்யவேண்டும். குற்றஞ்செய்யாதவர்களொருவருமில்லை. ஆதலால் இவர்களையொன்றுஞ்செய்யவேண்டாம்." என அருளிச்செய்து இரக்ஷித்தனர்.

அதைக்கேட்ட திருவடி பிராட்டியாரைநோக்கி—

¶ "யுக்தராமஸ்ய பவதீ தர்மபத்நீ குணாந்விதா |"

"இவ்விதமான குணத்துடன்கூடியிருப்பதால் தேவரீர் ஸ்ரீராமபிரானுக்கு ஏற்ற தருமபத்தினியாகின்றீர்."
என உரைத்தனர்.

இதனால் ஸீதாப்பிராட்டியாரும் ஸ்ரீராமபிரானைப்போலவே தயாமூர்த்தியென ஸித்திக்கின்றது.

இப்படியே கம்பராமாயணத்திலும்,

‡ "எனவுரைத்துத் திரிசடையாளெம்மோய்
மனையினிற் சுடர்மாமுக மாட்சியா
டனையொழித் திவ்வரக்கியர்தங்களை
வினையினிற் சுடவேண்டுவென்யானென்றான்."

¶ வா-ரா யுத்த-கா. சரு 115 சு. 43, 46.
‡ கம்-ரா. யுத்த-கா. மீட்சி. 31, 32.

" உரையிலாவுரையுன்னையுரைத்துராய்
விரையவோடி விழுங்குவமென்றுளார்
வரைசெய்மேனியை வள்ளுகிருர் பிளந்
திரைசெய்வேன்மறலிக்கினி யென்னுமால்."

என்றபடி அநுமார் திரிசடையல்லாவரக்கியரைச் சுட விரும்புகிறேனென்று சொல்ல, அரககியர் பிராட்டியாரைச் சரணமடையவே, பிராட்டியார்

‡ " அன்னையஞ்சன்மினஞ் சன்மினீரெனு
மன்னுமாருதி மாமுகநோக்கிவே
றென்னதீமையிவரிழைத்தாரவன்
சொன்னசொல்லினதல்லது தூய்மையோய்."

" எனக்குநீயருள்வ்வரந்தீவினை
தனக்குவாழ்விடமாயசழக்கியர்
மனக்குநோய் செயலென்றனண்மாமதி
தனக்குமாமறுத் தந்தமுகத்தினள்." என்றபடி,

அவ்வரக்கியர்களுக்கு அபயமளித்து, அவர்களை யாதொரு துன்பமுஞ்செய்யவேண்டாமென அநுமாரைநோக்கிக்கூறியிருப்பது நோக்கத்தக்கது.

இவைகளினல் குணப்பொருத்தமும் சரியாயிருக்கின்றது.

(6) ரூபம்.

ஸீதாப்பிராட்டியாரின் ரூபம்—

† " இழைகுலா முலையினளை யிடையுவா மதியுநோக்கி
மழைதுலா வோதிநல்லார் களிமயக் குற்று நின்ருர்
உழைகுலா நயனத்தார்மாட் டொன்ருேன்றே விரும்பற்கொத்த
தழகெலா மொருங்கேகண்டால் யாவரே யாற்றவல்லார்."

" (குணம், செய்கை, வடிவு, நடை, சாயல் முதலிய) அழகுகளெல்லாம் ஒருங்கே சேர்ந்துள்ள பிராட்டியைப் பார்த்து, சிறந்த அழகினராகிய மாதர்களும் மயங்கி நின்ருர்கள். என்பது கருத்து.

‡ கம்-ரா.யுத்த-கா.மீட்சி. 34, 36.
† கம்-ரா. பால-கா. கோயிங்காண். 20, 29.

¶ " சமைத்தவரை யின்மைமறை தானுமெனலாமச்
சுமைத்திரண் மூலத்தெரிவை துய்வடிவுகண்டார்
அமைத்திரள்கோ டோளியரு மாடவருமெல்லாம்
இமைத்தில நுயிர்த்திலர்கள் சித்திர மெனத்தாம். "

" சாதாரணப் பெண்களைப்போல கர்ப்பவாசமின்றி பூமியி னின்றும் ஸ்வயம்புவாய் அவதரித்த, ஸீதாப்பிராட்டியாரைத் திருக்கலியாண மண்டபத்தில் பார்த்தவர்களான சிறந்தமாத ரும் ஆடவரும் இமைக்கொட்டாமலும், மூச்சுவிடாமலும் சித்தி ரப் பாவைகள்போல இருந்தனர். "

○ " பண்புற நெடிது நோக்கிப் படைக்குநர் சிறுமையல்லா
லெண்பிறங் கழகிற் கெல்லையில்லையா மென்று நின்றாள்
கண்பிற பொருளிற் செல்லா கருத்தேனி னஃதே கண்ட
பெண்பிறந்தேனுக் கென்ற லெங்படும் பிறருக்கென்றாள்."

ஸீதாப்பிராட்டியாரைப் பார்த்த சூர்ப்பநகை " இவளைப் பார்த்தவுடன், பெண்ணாகப் பிறந்த எனக்கு கண்களும், மன மும் வேறுவஸ்துவினிடத்திற் செல்லமாட்டாவென்றால், ஆட வர்க்கு யாதுநிலைமையையடையும்? " என்று பிராட்டியாரின் ரூபத்தை வியந்து கூறியிருப்பதால், ஸீதாப்பிராட்டியார், சிறந்த மாதர்களும் கண்டு மோஹிக்கும்படியான பேரெழில்வாய்ந்தவ ரென்பது ஸித்திக்கின்றது.

ஸ்ரீராமபிரானுடைய ரூபம்—

† " சூடக வரவுறழ் சூலக் கையினள்
காடுறை வாழ்க்கையள் கண்ணிற் கர்ண்பரோல்
ஆடவர் பெண்மையை யவாவுந் தோளினாய்
தாடகை யென்பதச் சழக்கி நாமமே. "

¶ கம்-ரா. பால. கோலங்காண். 20, 29.
○ கம்-ரா. ஆரணி-கா. சூர்ப்பண. 60.
† கம்-ரா. பால-கா. தாடகை. 24.

விச்வாமித்திரமுனிவர் ஸ்ரீராமபிரானை "கண்களால் காண்பார்களாயின் ஆண்மக்களும் பெண்தன்மையை இச்சிக்கும்படியான புயங்களையுடைய ஸ்ரீராமபிரானே!" என அழைத்தனர்.

சுமந்திரர் ஸ்ரீராமபிரானைத் தேர்மீதேற்றிக்கொண்டு ராஜவீதியில் வருகையில், சக்கரவர்த்தியார் தமது அரண்மனையிலிருந்து—

‡ " சந்த்ரகாந்தாநநம் ராமமதீவ ப்ரியதர்சனம் /
ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்//"

"சந்திரனைப்போன்று, தம்மைப்பார்ப்பவர்களுக்குமகிழ்ச்சியளிக்கும்படியான திருமுகமண்டலமுடையவரும், தம்மை இடைவிடாது சேவிப்பவர்களுக்கும் மென்மேலும் சேவிக்கவேண்டுமென்ற ஆசையையுண்டாக்கும் அழகையுடையவரும், தம்முடைய தேகசௌந்தர்யத்தினாலும், தயாளகுணத்தினாலும், கடினசித்தமுடைய புருஷர்களின் நேத்திரங்களையும் மனதையும் அபகரிப்பவருமான ஸ்ரீராமபிரானை" கண்டனர்.

சுலோகத்தில் "பும்ஸாம்" என்று அதாவது—

கடினசித்தமுடைய ஆடவர்களுமென்றதினால், அபலையர்களான மங்கையர்விஷயத்தில் சொல்லவேண்டுவதில்லை என்பது கருத்து. இக்கருத்தைக்கொண்டு அழகியமணவாளதாஸரும்—

¶ " வாராக வாமனனேயரங்கா வட்டநேமிவல
வாராகவாவுன் வடிவுகண்டான் மன்மதனுமட
வாராக வாதாரஞ் செய்வனேன்றுலுய்யும் வண்ணமெங்கே
வாராக வாசமுலையேனைப் போலுள்ளமாதருக்கே."

அழகிற்சிறந்த ஆண்பாலான மன்மதனும், தேவரீரது வடிவைக்கண்டு தானும் பெண்ணுருக்கொண்டு, தேவரீருடைய அழகின் நலத்தை யனுபவிக்க விரும்புவானாயின், என்போன்ற பெண்பாலான மடமங்கையர்க்குப் பிழைக்கும் வழிஎன்னே." எனக்கூறியிருக்கின்றனர்.

‡ வா-ரா அயோ-கா. சரு- 3. சு. 28.
¶ திருவரங்கத்தந்தாதி. 60.

தண்டகாரணிய வாஸிகளான முனிவர்கள் இராமபிரானது சௌந்தரியாதிசயத்தில் ஈடுபட்டுத் தாம் பெண்தன்மையைப் பெறவிரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர்மங்கையராய்க் கண்ணனைக்கூடினர் என்ற ஐதீகமுமுண்டு.

$ "தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கைகண்டாருமஃதே
வாள்கொண்ட கண்ணார்யாரே வடிவினைமுடியக் கண்டார்
ஊழ்கொண்ட சமயத்தன்னா னுருவுகண்டாரை யொத்தார்."

"ஸ்ரீராமபிரானைக்கண்ட மாதர்களும் அவரவர் கண்ட இராமபிரானது உறுப்பினழகை முற்றுங்கண்டிலர்." என்பது கருத்து.

இவைகளினால் அழகிற்சிறந்த மன்மதனும், இந்திரியங்களை ஜெயித்த ரிஷிகளும் ஸ்திரீஜன்மத்தையடைய விரும்பக்கூடியதாக ஸ்ரீராமபிரானுடைய தேகஸௌந்தரியம் மிக்கச்சிறந்திருந்ததென்பது ஸித்திக்கின்றது.

ஆதலால் ரூபப்பொருத்தமும் சரியாயிருக்கின்றது.

இதுகாறுங் கூறியவாற்றால் ஸ்ரீராமபிரானுக்கும் ஸீதாப்பிராட்டியாருக்கும் விவாஹஞ்செய்வதற்குறிய குலரூபாதிகளின் பொருத்தம் கூறப்பட்டனவாயிற்று. இனி அவர்களின் மனப்பொருத்தம் எவ்வாறிருக்கின்றனவெனச் சிறிது ஆராய்வாம்.

ஸ்ரீராமலக்ஷ்மணர்கள் விச்வாமித்திரமுனிவருடன் மிதிலையில் பிரவேசித்து அந்நகரத்தின் பலகாக்ஷிகளைக் கண்ணுற்றுக்கொண்டு அரசனது அரண்மனைவீதிவழியாய் ஸீதாதேவியின் கன்னிமாடத்திற்கருகே செல்லும்பொழுது—

† "எண்ணருநலத்தினா ளினையணின்றுழி
கண்ணொடுகண்ணினை கௌவியொன்றையொன்
றுண்ணவுநிலைபெறா துணர்வுமொன்றிட
அண்ணலுநோக்கினா னவளுநோக்கினாள்."

$ கம்-ரா. பால-கா. உலாவியல். 19.
† கம்-ரா. பா-கா. மிதிலை 35.

கன்னிமாடத்தில் பலசேடிகளுடன் நின்ற ஸீதாதேவியின் கண்களும் இராமபிரானது கண்களும் சந்திக்கவே இருவர்களது மனமும் பொருந்திட ஒருவரையொருவர் நன்றாக உற்றுநோக்கினர்.

"கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க ளென்ன பயனுமில."

"காமத்திற்குரிய இருவருள் ஒருவருடைய கண்களோடு ஒருவர்கண்கள் பார்வையில் ஒக்குமாயின் வாய்ச்சொற்கள் பயனில்லை." என்ற திருக்குறள் இங்கு நோக்கத்தக்கது.

இவ்வாறு ஒருவரையொருவர் பார்த்தபொழுது—

$ "நோக்கியநோக்கெனு நுதிகொள்வேலிணை
ஆக்கியமதுகையான் றோளினாழ்ந்தன
வீக்கியகனைகழல் வீரன்செங்கணும்
தாக்கணங்கனையவடனத்திற்றைத்தவே."

பிராட்டியாரின் பார்வை இராமபிரானது தோளிலும், இராமபிரானது பார்வை பிராட்டியாரின் தனத்திலும் பற்றின.

(குறிப்பு) இதனால் ஆடவர்க்கு மாதர் ஸ்தனங்களும் மாதர்களுக்கு ஆடவர் புயங்களும் விரகத்தையுண்டுபண்ணும் அவயமென்பது ஸூசிதம்.

● "கழிபெருங்காதலாள்கட் கருவிளைமலர்கள்வெய்ய
மழவிடையனையான்செய்ய மணிப்புயவரையிற்பூத்த
விழைவொடுமகிழ்சிகூரும் வேனில்வேளனையான் செங்கண்
முழுநெறிக்கமலமன்னான் முலைத்தடத்தலர்ந்தமாதோ."

தேவர்கள் சொற்படி நளன், தமயந்தியிடம் தூதுசென்று "தமயந்தியை அவளது அந்தப்புரத்தில் சந்தித்தபொழுது, தமயந்தியினது கண்கள் நளனது புயத்திலும், நளனது கண்கள் தமயந்தியின் தனத்திலும் பார்த்தன." என்ற நைடதம் இங்கு நோக்கத்தக்கது.

$ கம்-ரா. பால-கா. மிதிலை. 36.
● நைடதம். நளன் தூது. 102.

¶ "பருகிய நோக்கெனும் பாசத்தாற்பிணித்
தொருவரையொருவர்தம் முள்ளமீர்த்தலால்
வரிசிலையண்ணலும் வாட்கணங்கையும்
இருவருமாறிப்புக் கிதயமெய்தினர்."

¶ "மருங்கிலாநங்கையும் வசையிலையனும்
ஒருங்கியவிரண்டுடற் குயிரொன்றாயினர்
கருங்கடற்பள்ளியிற் கலவிநீங்கிப்போய்ப்
பிரிந்தவர்கூடினாற் பேசல்வேண்டுமோ."

இவ்வாறு இருவரும் ஒருவரையொருவர் பார்த்தமாத்திரத்தில் இருவருக்கும் மிகுந்த காதலேற்படவே திரும்பத்திரும்ப ஒருவரையொருவர் பார்த்து மனதில் அன்பும் காதலுமண்டந்து ஓர் உயிரும் இரண்டுடலும்போலாயினர்.

க்ஷீராப்தியில் சேஷசயனத்திலிருந்த பெருமாளும் பெரிய பிராட்டியாருமே லோகஸம்ரக்ஷணார்த்தம் ஸ்ரீராமபிரானும் ஸீதாப்பிராட்டியாருமாக அவதரித்திருப்பதால் இருவரும் முதல் முதல் சந்தித்தபொழுது இருவருக்கும் பரஸ்பரம் அன்பும் காதலும் ஏற்பட்டது, ஆச்சர்யமன்று.

¶ "அந்தமிலழகனை யணைவிலாமையாற்
பைந்தொடியோவியப் பாவைபோன்றனள்
சிந்தையு நிறையு மெய்ந்நலனும்பின்செல
மைந்தனு முனியொடு மறையப்போயினன்."

ஸ்ரீராமபிரானை ஆலிங்கனஞ்செய்யமுடியாமையால் பிராட்டியார் சித்திரப்பாவைபோலாயினள். ஸ்ரீராமபிரானும் பிராட்டியின்மீதுண்டான காதலைத் தனக்குள்ளேயடக்கி பிராட்டியாரை மனதில் சிந்தித்துக்கொண்டே விச்வாமித்திர முனிவருடன் சென்றனர்.

¶ "பிறையெனுநுதலவள் பெண்மையென்படும்
நறைகமழலங்கலா னயனகோசரம்
மறைதலுமனமெனு மத்தயானையின்
நிறையெனுமங்குச நிமிர்ந்துபோயதே."

¶ கம்-ரா. பா-கா. மிதிலை: 37, 38, 39, 40.

மகளிர்க்குரிய நாணம் முதலிய சிறந்த குணங்களை நிரம்பப் பெற்றவரானதால், இராமபிரான் முனிவருடன் சென்றபின்னர் தன்மனதை இராமபிரானிடமிருந்து திருப்புவதற்காக பிராட்டியார் எவ்வளவோ முயன்றும் பயன்படாமற்போயிற்று. ஸ்ரீராமபிரானது திருவுருவம் பிராட்டியாரின் சிந்தையைவிட்டு அகலவேயில்லை. பின்னர் பிராட்டியார் இராமபிரான்மீதுள்ள காதல் நோயால் மிகவும் வருந்தி அன்றிரவுமுழுமையும் ஊணுறக்கமற்று இராமபிரானது சிந்தனையிலேயே காலத்தைக் கழித்தனர்.

ஸ்ரீராமபிரானும் அன்றிரவு பிராட்டியாரின் ரூபத்தை நினைத்துக்கொண்டு விரகதாபத்தால் வேதனையடைந்து

‡ " கன்னலின்கருப்புச் சிலையான்விரை
பொன்னைமுன்னிய பூங்கணைமாரியால்
என்னையெய்து தொலைக்குமென்றாலினி
வன்மையென்னு மிதாரிடைவைகுமே. "

மன்மதபாணமானது என்னையே இவ்வாறு வருந்தச்செய்யுமென்றால் தைரியமென்பது வேறுயாரிடத்தில் காணமுடியும்? என பலவாறு சிந்தித்துக்கொண்டிருந்தனர்.

இவைகளினால் ஸ்ரீஸீதாராமர்களுடைய மனப்பொருத்தமும் ஏற்றதாயிருக்கின்றதென ஸித்திக்கின்றது.

ஸ்ரீராமபிரானுடைய வித்யாவிஷயம்—

§ " வேதவேதாங்கதத்வஜ்ஞோ தநுர்வேதே ச நிஷ்டித: /
ஸர்வசாஸ்த்ரார்த்ததத்வஜ்ஞ: ஸ்ம்ருதிமாந் ப்ரதிபாநவாந்//"

" ஸ்ரீராமபிரான், ருக்கு, யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்ற நான்கு வேதங்களையும், சிக்ஷை, கல்பம், வ்யாகரணம், நிருக்தம், ஜ்யோதிஷம், சந்தஸ் என்ற ஆறுவேதாங்கங்களையும், நன்கறிந்தவர். வில்வித்தைகளிலும், அஸ்த்ரசஸ்த்ரங்களின்

‡ கம்-ரா. பா-கா. மிதிலை. 145.
§ வா-ரா. பால-கா. சரு. 1. சு. 14.

பிரயோக உபஸம்ஹாரங்களில் தேர்ச்சிபெற்றவர். மற்றும் தருமசாஸ்திரபுராண இதிஹாஸாதி சாஸ்திரங்களின் தத்து வங்களின் உண்மைகளையறிந்தவர். தாம் கற்றறிந்த விஷயங் களில் நன்றாய் ஞாபகச்சக்தியுடையவர். வியவஹாரகாலத்தில் தாமறிந்தவிஷயங்களைச் சற்றும் தயங்குதலன்றி ஐடுதியிலெடுத் துரைக்கும் தன்மையுடையவர்." எனக்கூறப்பட்டிருப்ப தால் மணமகனுக்கு முக்கியமாயிருக்கவேண்டியதான வித்யா விஷயமும் ஸ்ரீராமபிரானிடத்து நன்றாகப் பொருந்தியிருக் கின்றது.

இத்தியாதிகாரணங்களினால் ஸ்ரீராமபிரானும் ஸீதாப் பிராட்டியாரும் தாம்பத்தியத்தையடையத் தகுதியுள்ளவர்க ளென நிரூபிக்கப்பட்டதாயிற்று.

ஆகையால் மணமகனும் மணமகளும் குலத்திலும், ரூபத் திலும், வயதிலும், ஒழுக்கத்திலும் பொறுத்தமுடையவர்களாக யிருக்கவேண்டுமென்பது ஸூசிதம்.

இப்படியே

‡ ஸுபத்திரா கலியாணத்தில், இந்திரன்முதலான தேவர்கள் ஸந்தோஷமடைந்து "அர்ஜுனனுக்கு ஸுபத்திரைதான் பிரா யத்தினாலும் அழகினாலும் உத்தமலக்ஷணங்களினாலும் தகுதி யுள்ளவள். அர்ஜுனனும் ஸுபத்திரைக்குத்தகுந்தவன்.' என்று சொன்னார்கள். (என்ற பாரதமும்.)

தமயந்தியின் கலியாண விஷயமாக—

"கேழ்கிளர்தமனவடமிளமுலையிற் கிடப்பினன்றே சிறப்பெய்து
மாழையொண்கண்ணி மார்பிடங்கொண்டு வளரினவனமுலைகினது
பாழியந்தடந்தோட்கு வட்டினைநெருமுங்கப் புல்லினன்றே பயன்பயக்கு
மாழியாய் நினக்குவனப்பவளிலலே லலர்ந்தபாடலகிராமல்."

(நைடதம்)

‡ ஆதிபர்வம் மொழிபெயர்ப்பு. அத். 242.

அன்னப்பக்ஷி நளனைநோக்கி "நீ தமயந்தியை அடைந்து சேர்ந்தாலன்றோ உன்னது அழகு பயன்படும். அல்லாவிடில் பாதிரிப்பூவுக்கொப்பாகும்." என்றது.

" மயிர்வாய்ச்சிறுகட்பிடி மென்னடைவாய்ந்த நல்லாய்
செயிர்தீர் விதியின்றிறம் யார்கொறெளிந்தநீரா
ரயில்வேனளன்றனழகுன் னெழிலொத்தவாற்றாற்
பயினேயமின்ப நினைக்கன்றிப் பயன்படாதால்." (நைடதம்)

அன்னப்பக்ஷி தமயந்தியை நோக்கி "உன்னுடைய அழகும் நளனது அழகும் ஒத்திருக்கின்றது. ஆதலால் இருவருடைய அன்பும் ஒத்தால் இன்பம் சிறக்கும்." என்றது.

இவ்வாறு நளனும் தமயந்தியும் ஒத்தரூபமுடையவரென்றும் அவ்விருவரும், விவாஹம் செய்யப்படுவது சிலாக்கியமென்றும் கூறியுள்ள நைடதமும்.

ருக்குமணிப் பிராட்டியின் விவாஹ விஷயமாக—

¶ "ஸோபச்ருத்ய முகுந்தஸ்ய ரூபவீர்யகுணச்ரிய: /
க்ருஹாகதைர் கீயமாநஸ்தம் மேநே ஸத்ருசம்பதிம் //"

'ருக்மணியென்னும் பெண் தன்வீட்டிற்கு வந்தவர்கள் மூலமாக ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய ஸ்வரூபம், வீர்யம், குணம், அழகு இவைகளைப்பற்றிக்கேள்விப்பட்டுத்தனக்கு கிருஷ்ணனே தகுதியான பர்த்தாவென்று நினைத்தாள்.'

¶ "தாம் புத்திலக்ஷணௌதார்ய ரூபசீலகுணாச்ரயாம் /
க்ருஷ்ணஸ்ச ஸத்ருசீம் பார்யாம் ஸமுத்வோடும்மநோ ததே //"

'ஸ்ரீகிருஷ்ணபகவானும் அந்தப்பெண்ணினுடைய புத்தி, லக்ஷணம், ஔதார்யம், ரூபம், ஸ்வபாவம், குணம், அழகு இவைகளைப்பற்றிக் கேள்விப்பட்டுத் தமக்குத் தகுந்த பத்தினியென்று நினைத்து அவளைக் கலியாணஞ்செய்துகொள்வதாக ஸங்கல்பித்தார்.'

¶ ஸ்ரீ பாகவதம். ஸ்க. 10. அத். 52. சு. 23, 24.

○ "பந்தூனுமிச்சதாம் தாதும் க்ருஷ்ணய பகிநீம் ந்ருப |"

ருக்மிணியின் பந்துக்கள் ருக்மிணியை ஸ்ரீகிருஷ்ணபகவானுக்கு விவாஹஞ்செய்ய விரும்பினார்கள். என்ற ஸ்ரீபாகவதமும் நோக்கத்தக்கன.

## விவாஹப் பொருத்தத்திற்குரிய பிரமாணங்களாவன.

"க்ருஹஸ்த்த: ஸத்ருசீம் பார்யாமுபேயாத் |"
"க்ருஹஸ்த்த: ஸத்ருசீம் பார்யாம் விந்தேத |"

க்ருஹஸ்தன் தனக்குத் தகுதியான பாரியையை விவாஹஞ் செய்துகொள்ளக்கடவன்.

"உத்வஹேத த்விஜோபார்யாம் ஸவர்ணாம் லக்ஷணாந்விதாம்|"

த்விஜர்கள் ஸமானஜாதியில் ரூபவதியானபெண்களை மணத்தல்வேண்டும்.

"ஸவர்ணமநுரூபம் ச குலசீலவய: ச்ருதை: |
ஸஹதர்மம் சரேத்தேந புத்ராம்ச்சோத்பாதயேத்தத:||"

ஸமானமான வர்ணம், ரூபம், குலம், சீலம், வயசு, இவைகளுடைய புருஷனை விவாஹஞ்செய்துகொண்டு அவனோடு கூடவே க்ருஹஸ்த தருமத்தை அநுஷ்டிக்கவேண்டுமென மதனபாரிஜாதத்தில் கூறப்பட்டிருக்கிறது.

### கன்யாலக்ஷணம்.

"புத்தி ரூப சீல லக்ஷண ஸம்பன்னாம் அரோகாம் உபயச்சேத|"
(ஆச்வலாயனர்)

நல்லபுத்தி, ரூபம், குணமுள்ளவளாகவும், சரீரத்தில் ரோகமில்லாதவளுமான கன்னிகையை வரிக்கவேண்டும்.

"அரோகிணீம் மாத்ருவதீம் அஸமாநார்ஷ கோத்ரஜாம்|
உத்வஹேத த்விஜ: கந்யாமஸபிண்டாம் யவீயஸீம் ||"
(யாஜ்ஞ்ய வல்க்கியர்)

---

○ ஸ்ரீபாகவதம்: ஸ்க. 10 அத். 52. ச. 25.

அபஸ்மார ரோகமில்லாதவளும், மாதாவையுடையவளும், அந்யகோத்திரத்தில் ஜனித்தவளும், தாயாதியைச் சேராதவளும் வயதில் தனக்குக்குறைந்தவளுமானபெண்ணை விவாஹஞ்செய்யவேண்டும்.

"நண்ணுகோத்திர மொன்றினிலுதித்துளோர் நலிதருபிணியுற்றோர்
பெண்ணெலாதுயர் நன்மகப்பெறுகிலாப் பேதையர்வழிவந்தோர்
மண்ணினின்றவான் பழிபடுமரபினில் வந்துளோர்வரைபாந்தள்
விண்ணின்மீனதி பறவையின்பேருளோர் வேட்டிடல்விதியன்றே."

"இனியமென்மொழியுடையளாய்த்தன்னினு மிளையளாயெவரோடு
முனிவிகந்திடுகுணத்தளாய்ப்பொருந்திய முயற்கரையொழிந்தோங்கு
பணிசெய்வெண்மதி முகத்தளாய் மைந்தர்கள்பலரொடும் பிறந்தாளாய்த்
துனியிலாதநற் கன்னியைவேட்டிடல் தொன்மறைவழக்காமால்."
(காசிகாண்டம்)

"அமுதமென்மொழியுடையவளாயழகினிற்றிருவாய்க்
குமுதநண்பனுமுகத்தளாய்க் குணமுடையவளாய்
சமைகொண்மை மைந்தர்கள் பலரொடுபிறந்ததங்கையளாய்க்
கமழுமெய்யுடைக் கன்னியை வேட்பது கடனும்."

## வரன் லக்ஷணம்.

"வித்யா சாரித்ர பந்துலக்ஷண சீலலக்ஷண ஸம்பந்நாய தத்யாத்/"
(கௌதமர்)

"பந்து சீலலக்ஷண ஸம்பந்ந: ச்ருதவாந் அரோகாஇதி வர ஸம்பத்/"
(ஆபஸ்தம்பர்)

"குலம் ச சீலம் ச ஸநாததாம் ச
வித்யாம் ச வித்தம் ச வபுர்வயச்ச /
ஏதாந் குணாந் ஸப்த பரீக்ஷ்ய தேயா
கந்யா புதை: சேஷமசிந்தநீயம் //" (எமவசனம்)

நல்ல குலம், நற்குணம், வித்தை, செல்வம், உடையவனும், ரோகமில்லாத சரீரமுடையவனாகவும், யௌவன பிராயமும் ரூபவானுமான புமானுக்குப் பெண்ணை விவாஹஞ்செய்துகொடுக்க வேண்டும்.

ஸ்ரீராமபிரான் சூர்ப்பணகையை நோக்கி—

† "அருத்தியனனைய கூறவசத்தறு நகையின் வெள்ளைக்
குருத்தெழுகின்ற நீலக்கொண்டலுண்டாட்டுங்கொண்டான்
வருத்தநீங்காக்கர்தம்மின் மானுடர்மணத்தணங்கை
பொருத்தமன்றென்றுசாலப் புலமையோர் புகல்வரென்றான்."

"ஏ நங்கை! துன்பமில்லாத இராக்கதரோடு மனிதர் விவாஹஞ்செய்துகொள்ளுதல் பொருத்தமில்லையென்று அறிவுடையோர் கூறுவார்கள்." என்றனர்.

தன்னை உபத்திரவித்த இராக்ஷஸிகளைநோக்கி ஸீதாப்பிராட்டியார்—

÷ "ந மாநுஷீ ராக்ஷஸஸ்ய பார்யா பவிதுமர்ஹதி /"

"ஹே ராக்ஷஸிகளே! ராக்ஷஸனை மணம்புரிய மனுஷ்ய ஸ்திரீ அருகையல்ல." என்றனள்.

இவைகளினுல் மனுஷ்ய ராக்ஷஸகணங்கள் ஒருவரோடொருவர் விவாஹஞ்செய்துகோள்ளக்கூடாதென்ற கணப்பொருத்த விஷயம் ஸூசிதம்.

(7) பெண்ணுக்குத் தக்க வரனையும், பிள்ளைக்குத் தக்க கன்னிகையும் தேடும்விஷயத்தில் கவனிக்கவேண்டியவைகள்.

சுமந்திரர் கைகேயியைப் பழித்துரைசெய்யும்பொழுது—

$ "ஆபிஜாத்யம் ஹி தே மந்யே யதா மாதுஸ்ததைவச /
ந ஹி நிம்பாத்ஸ்ரவேத் க்ஷௌத்ரம் லோகே நிகதிதம் வச://
ஸத்யச்சாயம் ப்ரவாதோயம் லௌகிக: ப்ரதிபாதிமே /
ப்த்ரூந் ஸமநுஜாயந்தே நரா மாதரமங்கநா: //

"உன்னுடைய குணம் உன் தாயினுடைய குணத்தைப் போன்றதென்று யான் நினைக்கின்றேன். வேம்பினின்றுந்

† கம்-ரா. ஆரணி-கா. சூர்ப்பணகை 51.
÷ வா-ரா. சுந்-கா. சரு. 25. சு 3.
ஷை ஷை 24. சு 8.
$ வா-ரா. அ-கா. சரு 35. சு. 15, 26.

தேன் ஒழுகுமோ? புத்திரர் பிதாவைப்போலவும், பெண்கள் தாயைப்போலவும் பிறக்கின்றனர்கள் என உலகில் வழங்கும் பழமொழி எனக்கு உண்மையெனப் புலப்படுகின்றது." என உரைத்தனர்.

## கைகேயியின் மாதாவைப்பற்றிய கதை.

சுமந்திரர் கைகேயிக்கு உரைத்தபடி—

ஆணும் பெண்ணுமான இரண்டு எறும்புகள் பேசிக்கொண்டிருந்த விஷயத்தை, ஸ்திரீயுடன் சயனித்துக்கொண்டிருந்த உன் பிதா கேகயராஜன், தனது வரத்தின் விசேடத்தால் அறிந்து நகைத்தான்; அவனருகிலிருந்த அவனது மகிஷியான உனது மாதா அவன் நகைத்த காரணத்தைக் கேட்டாள். அதற்கு உன் தந்தை—

¶ " ந்ருபஸ்சோவாச தாம் தேவீம் ஹாஸம் சம்ஸாமி தே யதி/
தத்தோ மெ மரணம் ஸத்யோ பவிஷ்யதி ந ஸம்சய: // "

என்றபடி நானிப்பொழுது அந்தக்காரணத்தை உனக்குத் தெரிவித்தேனாகில், உடனே யானிறந்துவிடுவேனென்றான்."

அதைக்கேட்டும் உன் தாய்—

○ " சம்ஸமே ஜீவவா மாவா நமாம் த்வம் ப்ரஹஸிஷ்யஸி // "

" உன் உயிர்போனாலும்சரி இருந்தாலும்சரி நீர் நினைத்த காரணத்தைச் சொல்லியே தீரவேண்டும்." என்றாள்.

அதைக்கேட்டு உன்பிதா—

○ " மாதரம் தெ நிரஸ்யாசு விஜஹார குபேரவத் / "

என்றபடி " அந்த துஷ்டையான உன்மாதாவை நிராகரித்துவிட்டு குபேரன்போல சந்தோஷமாக வாழ்ந்துகொண்டிருந்தான்."

---

¶ வா-ரா. அ-கா. சரு. 35. சு. 22.

○ வா-ரா. அ-கா சரு 35. சு. 23, 26.

வஸிஷ்டர் கைகேயியை நோக்கி—

¶ "ஹ்யதத்தாம் மஹீம் பித்ரா பரத: சாஸ்து மர்ஹதி |
த்வயி வா புத்ரவத் வஸ்தும் யதி ஜாதோ மஹீபதே: ||"

"பரதன் உன்னிடத்தில் மஹாராஜருக்கே பிறந்திருப்பானாகில், உன்னிடத்தில் பிள்ளைபோலிருந்து, உன் சொல்லைக் கேட்டு, தந்தை திருவுளமகிழ்ந்தளித்தருளாத இந்த ராஜ்ஜியத்தைப் பரதனொருகாலும் அரசாகிப் பரிபாலனஞ் செய்யான்." எனமொழிந்தனர்.

இவைகளினால் பிள்ளைகள் தந்தையைப்போலவும், பெண்கள் தாயைப்போலவும், இருப்பார்களாகையால், தாயைப்பார்த்துப் பெண்ணையும், தந்தையைப்பார்த்துப் பிள்ளையையும் கோள்ள வேண்டுமென்பது ஸூசிதம்.

(8) முறைப்பெண், முறைப்பிள்ளை.

$ "காதலுன் பெருங்கணவனை யஞ்சியக் கனிவாய்ச்
சீதைதந்தையுன்றுதையைத் தெறுகிலனிராமன்
மாதுலன்னவனுந்தைக்கு வாழ்வினியுண்டோ
பேதையுன்றுணையாருளர் பழிபடப் பிறந்தார்."

இது கைகேயியை நோக்கிக்கூறிய மந்தரை வசனம். இதில் ஜனகனை 'இராமன் மாதுலன்.' எனக் கூறியிருப்பது, மாதுலன் என்பது தாயோடு பிறந்தவன் என்பது பொருளாயினும் அம்மான் பெண்ணை மணம்புரிவது வழக்கமாதல்பற்றியும்,

† "அன்னவள் கூறுவாளரசர்க்கத்தையர்க்
கென்னுடை வணக்கமுன்னியம்பியானுடைப்
பொன்னிறப் பூவையுங் கிளியும் போற்றுகென்
றுன்னுமென்றங்கையர்க் குணர்த்துவாயென்றாள்."

இது சுமந்தரரிடத்துச் செய்திகூறியனுப்பிய ஸீதாப் பிராட்டியாரின் வசனம். 'அத்தையர்க்கு.' என்பது மாமிமார்களாகிய கோசலைமுதலியவரிடத்து என்பது பொருள். அத்தை

¶ வா-ரா. அயோ-கா. சரு. 37. ச. 30.
$ கம்-ரா. அ-கா. மந்தரை 74. † கம்-ரா. அ-கா. தைல. 40.

யர் என்பது தகப்பன்கூடப்பிறந்தவள். இங்கு மாமிமார்களை அத்தையர் என்று கூறியிருப்பது அத்தை மைந்தனை பெண்பாலார் மணந்துகொள்ளும் வழக்கமாதல்பற்றியும், கூறியிருப்பதால், முறைப்பெண்ணும் முறைப்பிள்ளையும் விவாஹஞ்செய்து கொள்ளுதல் உசிதமாம்.

இதற்குத் திருஷ்டாந்தம்—

‡ "யத்யப்யனுஸ்மரன்வைரம் ருக்மீ க்ருஷ்ணவமாநித: /
வ்யதாத் பாகிநேயாய ஸுதாம் குர்வன்ஸ்வஸு: ப்ரியம் // "

ருக்மியென்பவன் ஸ்ரீகிருஷ்ணனால் அவமதிக்கப்பெற்று கிருஷ்ணனிடத்தில் விரோதபுத்தியுள்ளவனானாலும் ஸஹோதரியான ருக்மணியின் ப்ரியத்திற்காக அவளுடைய புத்திரனாகிய ப்ரத்யும்னனுக்குத் தன்னுடைய பெண்ணாகிய ருக்மவதியை மணஞ்செய்வித்தான். (அதாவது, ப்ரத்யும்னன் தன் தாய்மாமன் மகளாகிய ருக்மவதியைக் கலியாணம் செய்துகொண்டான்)

மேலும் ருக்மியானவன்—

○ "தௌஹித்ராயாநிருத்தாய பௌத்ரீம் ருக்ம்யததாத்தரே: /
ரோசநாம் பத்தவைரோபி ஸ்வஸு: ப்ரியசிகீர்ஷயா // "

¶ "செருக்கியவெண்பிறைக் கோட்டுத்திருகு சினமால்யானை
உருக்குமிதன் மகனுயிர்த்தவோடரிக்கட் செங்கனிவாய்ப்
புரிக்குழலைத்தயங்குமெழில் பொலியும்வலம்புரிபொறித்த
அரக்கெறிதாமரைமலர்க்கையநிருத்தற்களித்தனனால். "

என்றபடி, "தன் புத்திரியின் புத்திரனாகிய அனிருத்தனுக்குப் புத்திரனுடைய புத்திரியான ரோசனையென்பவளை மணஞ்செய்வித்தான்." (அதாவது அனிருத்தன் தன் தாய்மாமன் மகளாகிய ரோசனையென்பவளை மணஞ்செய்துகொண்டான்.)

---

‡ ஸ்ரீமத்பாகவதம் ஸ்கந்தம் 10. உத்தரஅத். 61. சு. 23.

○ ஸ்ரீமத்பாகவதம், ஸ்கந்தம் 10, உத்தர. அத். 61. சு. 25.

¶ ஸ்ரீபாகவதம் கந் 10. அத் 34. பா. 12.

(9) கன்னிகையை விவாஹஞ்செய்விப்பதில் அதிகார முடையவர்கள்:—

குசநாபருக்கு நூறுபெண்கள் பிறந்து தக்கபருவம்வாய்ந்து, ஒருநாள் உத்தியானவனத்தில் எல்லோரும் பாடிக்கொண்டும், நர்த்தனஞ்செய்துகொண்டும், உல்லாசமாகவிருந்தார்கள். வாயு பகவான் அந்நூறு மங்கைகளேயுங் கண்ணுற்று மோகங்கொண்டு,

● " அஹம் வஹா காமயே ஸர்வா பார்யா மம பவிஷ்யதா / "

" பெண்மணிகளே ! யான் உங்களே விரும்புகிறேன். நீங்கள் எல்லோரும் எனக்கு மனைவியர்களாகக்கடவீர்கள். " என்றுரைத்தனர். அவ்வாயுதேவனது வார்த்தையைக்கேட்டு, அப்பெண்கள்,

● " பிதாஹி ப்ரபுரஸ்மாகம் தைவதம் பரமம் ச ஸ: /
யஸ்ய நோ தாஸ்யதி பிதா ஸ நோ பர்த்தா பவிஷ்யதி // "

" வாயுபகவானே ! கன்னிகைகளாகிய எங்களுக்குத் தந்தையே பிரபு, அவரேதெய்வம், அவர் எங்களே எவருக்குக் கொடுக்கிறாரோ அவரே எங்களுக்குப் பதியாவார். நாங்கள் சுதந்திரமாய் ஒன்றுஞ் செய்யமாட்டோம். " என உரைத்தனர்கள்.

ஸீதாப்பிராட்டியார் அநுஸூயா தேவியை நோக்கி—

" எனது பர்த்தாவின் திருத்தோள்வலிக்கு ஆற்றாது அரன் வில் நடுவில் இரண்டாக முறிந்துவிழவே எனது தந்தையார் மிகுந்த சந்தோஷத்துடன்

† " ததோஹம் தத்ர ராமாய பித்ரா ஸத்யாபிஸந்திநா /
உத்யதா தாதுமுத்யம்ய ஜலபாஜநமுத்தமம் //
தீயமாநாம் நது ததா ப்ரதிஜக்ராஹ ராகவ: /
அவிஜ்ஞாய பிதுச்சந்தமயோத்யாதிபதே: ப்ரபோ: //
தத: ச்வசுரமாமந்த்ர்ய வ்ருத்தம் தசரதம் ந்ருபம் /
மம பித்ரா த்வஹம் தத்தா ராமாய விதிதாத்மநே // "

● வா-ரா. பால-கா சரு 32, சு. 16, 22.
† வா-ரா. அயோ-கா. சரு. 118. சு 50, 51, 52.

"என்னை ஸ்ரீராமபிரானுக்குத் தாரைவார்த்துக்கொடுக்க முயர்ச்சிசெய்தனர். ஆனால் என்பர்த்தா தமது பிதாவின் இருவுளமறியாது பாணிக்ரஹணஞ் செய்துகொள்ள விரும்பாமை யறிந்து உடனே எனது மாமனாரான அயோத்திமன்னரை வரவழைத்து அவரது ஸம்மதத்தின்பேரில் எனதுபிதா என்னை ஸர்வஜ்ஞரான ஸ்ரீராமபிரானுக்குப் பார்யையாக அளித்தனர்." என உரைத்தனர்.

இதனால் ஒருபெண் தானாகவே ஒரு புருஷனைத் தேடி விவாஹஞ்செய்துகொள்ளக்கூடாதென்பதும், கன்னிகையை விவாஹம் செய்துகொடுக்கும் அதிகாரம் பிதாவுக்கே, உரியதென்பதும் ஸூசிதம்.

"கந்தடுகிம்புரிக்கோட்டுக் களைகளிபுங்கடாயானை
மந்தாத்தாற்பகைக்கடலை மதித்தவையும் வயவேந்தன்
சிந்தையை நின்டாற்பிணிப்பிற் றெள்ளமுகத்திருவே யுன்
றந்தைபிறற்களித்திடினென் வாய்மைதவறாகாதோ." (நைடதம்)

என தமயந்தியை நோக்கி அன்னப்பக்ஷி கூறியது இங்கு நோக்கத்தக்கது.

ஸ்ரீராமபிரான் சூர்ப்பணகையை நோக்கி—

$ "ஒருவனேவுலகமூன்றிற் கோங்கொருதலைவனாங்கி
லொருவனே குபேரனின்னோடுடன் பிறந்தவர்களன்னோர்
தருவரேற்கொடு மண்றேற்றுமியை வேறிடத்துச்சார
வெருவவெனங்கையென்றான் வேதத்தினறிவவென்றான்."

பெண்ணே! உனது உடன்பிறந்தவர்களில் ஒருவன் மூன்று உலகத்துக்கும் உயர்ந்த இராவணன்; மற்றொருவன் குபேரன்; அவர்களில் ஒருவர் உன்னைத்தருவரேல் மணஞ்செய்துகொள்ளு வோம். அல்லாவிடில் தனிமையாகவந்த நீ வேறிடஞ்செல்வாயாக." என அருளிச்செய்திருப்பதால், கன்னிகைகளை (பிதா இல்லாவிடில்) சகோதரர் விவாஹஞ்செய்துகொடுக்கவேண்டும், என்பது ஸூசிதம்.

$ கம்-ரா. ஆரணி-சூர்ப்பணகை 53.

"பிதா பிதாமஹோ ப்ராதா ஸகுல்யோ ஜநநீததா /
கந்யா ப்ரத: பூர்வநாசே ப்ரக்ருதிஸ்த: பர: பர: //"

"தந்தை, பிதாமஹன், சஹோதரன், உறவினன், தாய் இவர்கள்முறையே கன்னிகையை தானஞ்செய்ய அதிகாரமுடையவர்." என யாஜ்ஞவல்கியர் கூறியிருப்பதும்

† அர்ச்சுனன் ஸுபத்ரையைப்பார்த்து "ஸுபத்ரையே! தந்தை, ஸஹோதரன், தாய், மாதுலன், தந்தையின் தந்தை, தந்தையின்ஸஹோதரன் இவர்கள் கன்னிகையைத் தானஞ்செய்வதற்கு அதிகாரமுள்ளவர்கள்." எனக்கூறியிருப்பதும் நோக்கத்தக்கன.

(10) விவாஹச் சடங்குகள்.

ஸுமுஹூர்த்தம்: சுபவேளை.

ஜனகமஹாராஜர் வசிஷ்ட விச்வாமித்திரர்களை நோக்கி:—

¶ "உத்தரேதிவஸே ப்ரஹ்மந் பல்குநீப்யாம் மநீஷிண: /
வைவாஹிகம் ப்ரசம்ஸந்தி பகோ யத்ர ப்ராஜாபதி: //"

"நாளைநின்று விவாஹத்திற்கு சிலாக்கியமான உத்தரபல்குனி நக்ஷத்திரமாகையால் அன்று விவாஹம் நடத்தப்படவேண்டும்." என்றுரைத்தனர்.

○ "பங்குனி யுத்தரமான பகற்போர்
தங்க ணிருக்கினி லாயிரநாமச்
சிங்க மணத்தொழில் செய்ததிறத்தால்
மங்கல வங்கி வதிட்டன் வகுத்தான்." என்றபடி

ஸீதாப்பிராட்டியாரின் திருமணம் பகற்காலத்தில் உத்தரபல்குனி நக்ஷத்திரத்தில் நடந்திருப்பதால், விவாஹத்திற்கு பகற்பொழுதும் உத்தரபல்குனி நக்ஷத்திரமும் சிறந்ததென்பது ஸூசிதம்.

† ஸ்ரீமஹாபாரதம் மொழிபெயர்ப்பு ஆதி. அத். 242.
¶ வா-ரா. பால-கா. சரு. 72. சு. 13.
○ கம்-ரா. பால-கா. கடிமண 100.

$ "த்ரயாணும் ராக்ஷஸேந்த்ராணும் திஸ்ரோ கந்தர்வ கந்யகா: /
தத்தா மாத்ரா மஹாபாகா நக்ஷத்ரே பகதைவதே //"

கந்தர்வஸ்திரீயாகிய நர்மதை என்பவள் தன்னுடைய மூன்று பெண்களையும் (மாலியவான், சுமாலி, மாலி, என்ற) மூன்று இராக்கதர்களுக்கு உத்தரநக்ஷத்திரத்தில் கன்னிகாதானஞ்செய்துகொடுத்திருப்பதும்,

"ரோஹிணீ ம்ருகசீர்ஷண்யுத்தரபல்குநீ ஸ்வாதீதி விவாஹஸ்ய நக்ஷத்ராணி"

என்ற போதாயனர் வசனமும் நோக்கத்தக்கன.

## கங்கணதாரணம்.

‡ "யுக்தேமுஹூர்த்தெ விஜயெ ஸர்வாபரண பூஷிதை: /
ப்ராத்ருபி: ஸஹிதோராம: க்ருத கௌதுக மங்கள: //"

(வசிஷ்டபகவான்) "சிறந்த முஹூர்த்தத்தில் ஸகலவிதமான ஆபரணங்கள் அணிந்தவர்களான ஸ்ரீராமலக்ஷ்மணபரதசத்ருக்கனர்களுக்கு கையில் கங்கணநூல்களை மந்திரித்துக் கட்டினர்."

இதனால் விவாஹகாலத்தில் முதலில் கங்கணதாரணம் செய்விக்கவேண்டியது அவசியமென்பது ஸூசிதம்.

## குலமுறைகிளத்தல்.

தசரதச் சக்கரவர்த்தியார் ஜனகமஹாராஜரை நோக்கி—

"ஜனகராஜரே! இவ்வசிஷ்டமஹாமுனிவர் கௌசிகமுனி முதலானோருடன் ஆராய்ந்து விவாஹத்தை விதிப்பிரகாரம் நடத்திவைப்பார் விவாஹத்தில் முதலில் மாப்பிள்ளையின் குலமுறைகூறல் மரபாதலால் அதை அருளிச்செய்வார்." என உரைத்தனர். வசிஷ்டமுனிவரும்,

$ வா-ரா. உத்தர-கா. சரு. 5. சு. 32, 33.
‡ வா-ரா. பால-கா. சரு. 73. சு. 9.

● " அவ்யக்த ப்ரபவோ ப்ரஹ்மா சாச்வதோ நித்ய அவ்யய: /
தஸ்மாந்மரீசி: ஸஞ்ஜஜ்ஞே மரீசே: காச்யப: ஸுத: // "
" தஸ்மாத் தசரதாத்ஜாதௌ ப்ராதரௌ ராமலக்ஷ்மணௌ /
ராம லக்ஷ்மணயோ ரர்த்தே த்வத்ஸுதே வரயே நிருப// "

என்றபடி, ப்ரஹ்மதேவர் மரீசி என்பவரைப் படைத்ததும், அவருக்கு காச்யபரும, அவருக்கு விவசுவானும், அவருக்கு மனுவும், அவருக்கு இக்ஷ்வாகுவும் பிறந்ததைக்கூறிப் பின் இக்ஷ்வாகுமுதல் தசரதச் சக்கரவர்த்தியார் பரியந்தம் ராஜபரம்பரையைக்கூறிவந்து, " இத்தசரதச் சக்கரவர்த்திக்கு ஸ்ரீராமலக்ஷ்மணர்களிருவரும் அவதரித்தனர்கள். இந்த ஸ்ரீராம லக்ஷ்மணர்களுக்கு உம்முடைய பெண்களிருவரையும் வரிக்கின்றேன். "

● " ஸத்ருசாப்யாம் நரச்ரேஷ்ட ஸத்ருசே தாதுமர்ஹஸி / "

" அவ்விருவர்களுக்கும் தகுதியுள்ள உமது இரண்டு பெண்களையும் கொடுக்கக்கடவீர். " என அருளிச்செய்தனர்.

ஜனகமஹாராஜன் வசிஷ்டமுனிவரை நோக்கி—

† " ச்ரோது மர்ஹஸி பத்ரம் தே குலம் ந: பரிகீர்த்திதம் /
ப்ரதானேஹி முனிச்ரேஷ்ட குலம் நிரவசேஷத: //
வக்தவ்யம் குலஜாதேந தந்நிபோத மஹாமதே // "

" கன்னிகையை மணஞ்செய்துகொடுப்பவன் தன் மரபின் முறையைச் சிறிதும் விடாதுரைக்கவேண்டுமாதலால் நான் உரைக்கின்றேன். தேவரீர் கேழ்க்கக்கடவீர். " என்றுரைத்து நிமிச்சக்கரவர்த்திமுதல தமது குலமுறையைச் சொல்லிவந்து.

¶ " ததாமி பரமப்ரீதோ வத்வௌ தெ முனிபுங்கவ/
ஸீதாம் ராமாய பத்ரம் தெ ஊர்மிலாம் லக்ஷ்மணாய வை//"
வீர்யசுல்காம் மமஸுதாம் ஸீதாம் ஸுரஸுதோபமாம்/
த்விதீயாமூர்மிலாம் சைவ த்ரிர் வதாமி ந ஸம்சய://"

அடியேன் பெண்கள் இருவருள் மூத்தவளாகிய ஸீதாதேவியை ஸ்ரீராமபிரானுக்கும் இளையவளாகிய ஊர்மிளையை

● வா-ரா. பால-கா. சரு. 70. சு. 19, 43, 45.
† ஷெ சரு. 71. சு 1, 2.
¶ வா-ரா. பால-கா. சரு. 71. சு. 20, 21, 22.

இளையபெருமாளுக்கும் திருமணம் புரிவிக்கின்றேன். இச் சொல்லை மூன்றுமுறை சொன்னேன். யான் சொன்னசொல் தவறுவதில்லை." என்றனர். இவைகளினால் விவாஹகாலத்தில் வதூவரர்களுடைய குலமுறைகள் கூறப்படவேண்டுமென்பது ஸூசிதம்.

" குலமக்ரே பரீக்ஷயோ மாத்ருத: பித்ருதச்ச " இதி — என்பது நோக்கத்தக்கது.

ஜனகமஹாராஜர் வசிஷ்டமுனிவரை நோக்கி—

தேவரீர், மற்றுமுள்ள முனிவர்களுடன்கூடி ஸ்ரீராமச்சந்திரனுக்குச் செய்யவேண்டியதான விவாஹச் சடங்குகளெல்லாம் செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். வசிஷ்டமுனிவரும், அவர்வேண்டுகோளின்படி விச்வாமித்திர, சதானந்தர்களுடன்கூடி—

$ " ப்ரபாமத்யேது விதிவத் வேதிம் க்ருத்வா மஹாதபா: |
அலம்சகார தாம் வேதிம் கந்தபுஷ்பை: ஸமந்தத: ||
ஸுவர்ணபாலிகாபிச்ச சித்ரகும்பைச்ச ஸாங்குரை: |
அங்குராட்யை: சராவைச்ச தூப பாத்ரை: ஸதூபகை: ||
சங்கபாத்ரை: ஸ்ருவை: ஸ்ருக்பி: பாத்ரைரர்க்யாபிபூரிதை:|
லாஜபூர்ணைச்ச பாத்ரீபிரக்ஷதைரபிஸம்ஸ்க்ருதை: ||
தர்பை: ஸமை: ஸமாஸ்தீர்ய விதிவந்மந்த்ரபூர்வகம் |
அக்நிமாதாய வேத்யாம் து விதிமந்த்ர புரஸ்க்ருதம் ||
ஜுஹாவாக்நௌ மஹாதேஜா வஸிஷ்டோ பகவாந்ருஷி: |
தத: ஸீதாம் ஸமாநீய ஸர்வாபரணபூஷிதாம் ||
ஸமக்ஷமக்நே: ஸம்ஸ்தாப்ய ராகவாபிமுகே ததா |
அப்ரவீஜ்ஜநகோ ராஜா கௌஸல்யாநந்தவர்தநம் ||

திருமணப்பந்தலின் நடுவில் சந்தனம், புஷ்பம், அக்ஷதை, இவைமுதலிய மங்களப்பொருள்களினால் அலங்காரஞ்செய்து, நவதானியமுளைகள் நிரம்பிய பொற்பாலிகைகளையும், அம்முளைகளுடன் கூடிய மடக்குகளையும், தூபம் புகைகின்ற தூய பாத்திரங்களையும், சங்கங்களையும், சுருக்கு, சுருவங்களையும், அர்க்கிய

$ வா-ரா. பால-கா. சரு. 73. சு. 26 30, 32.

பாத்தியாசமனீய: பாத்திரங்களையும், நெற்பொரி நிறைந்த பாத்திரங்களையும், மஞ்சளுடன்கூடிய அக்ஷதைகள் நிறைந்த பாத்திரங்களையும், தர்ப்பைப்புல்லையும் பரப்பி, அதன்மேல் முறையே மந்திரித்துவைத்து, நடுவில் மந்திரபூர்வமாக அக்னியை வளர்த்து, அதில் விதிப்படி ஓமஞ்செய்தனர். அந்தச் சமயத்தில் ஜனகப்பெருமான் ஸர்வாபரண பூஷிதையான ஸீதா தேவியை அழைப்பித்து ஹோமாக்நிக்கு அருகில் ஸ்ரீராமபிரானுக்குத் திருமுன்பே நிறுத்தி ஸ்ரீராமபிரானைநோக்கி—

† "இயம் ஸீதா மம ஸுதா ஸஹதர்மசரீ தவ/
ப்ரதீச்ச சைநாம் பத்ரம் தே பாணிம் க்ருஹ்ணீஷ்வ பாணிநா//
பதிவ்ருதா மஹாபாகா சாயேவாநுகதா ஸதா/
இத்யுக்த்வாப்ராக்ஷிபத் ராஜா மந்த்ரபூதம் ஜலம் ததா//"

என்னுடைய புத்திரியான இந்த ஸீதாதேவி எப்பொழுதும் இணைபிரியாமல் நீர்செய்யும் தருமங்களை தானுந்துணையாக நின்று செய்துமுடிப்பள். இவளை நீர் ஏற்றுக்கொண்டு உம்முடைய திருக்கையால் இவளது திருக்கையைப்பற்றித் திருமணஞ் செய்துகொள்ளக்கடவீர். மேலும் இவள் நிழல்போல் எப்பொழுதும் உம்முடன் தொடர்ந்து பதிவ்ரதாதருமத்தைச் சிறிதும் வழுவாது பாதுகாத்து உமக்குப் பெரும்புகழை உண்டாக்கி தானும் சந்தோஷமாகவே இருப்பள்." என்றுரைத்து மந்திரித்த ஜலத்தை ஸ்ரீராமபிரான் கையில் வார்த்து ஸீதாப்பிராட்டியாரின் கரத்தை ஸ்ரீராமபிரான் கையில் பிடித்துக்கொடுத்தனர்.

அதன் பின்னர் ஜனகபெருமான்—

† "லக்ஷ்மணாகச்ச பத்ரம்தே ஊர்மிளாமுத்யதாம் மயா /
ப்ரதீச்ச பாணிம் க்ருஹ்ணீஷ்வ மாபூத் காலஸ்ய பர்யய: //
தமேவ முக்த்வா ஜநகோ பரதம் சாப்யபாஷத /
க்ருஹாண பாணிம் மாண்டவ்யா: பாணிநா ரகுநந்தன //

† வா. ரா. பா-கா. சரு. 73. சு. 33, 34.
ஷை சரு. 73. சு. 37-42, 45, 46.

சத்ருக்நம் சாபி தர்மாத்மா அப்ரவீஜ்ஜநகேச்வர: |
ச்ருதகீர்த்யா மஹாபாஹோ பாணிம்க்ருஹ்ணீஷ்வபாணிநா ||
ஸர்வேபவந்த: ஸௌம்யாச்ச ஸர்வே ஸுசரிதவ்ரதா : |
பத்நீபி: ஸந்து காகுத்ஸ்தா மாபூத் காலஸ்ய பர்யய: ||
ஜநகஸ்ய வச: ச்ருத்வா பாணீந் பாணிபிரஸ்ப்ருசந் |
சத்வாரஸ்தே சதஸ்ருணாம் வஸிஷ்டஸ்ய மதே ஸ்திதா: ||
அக்நிம் ப்ரதக்ஷிணீக்ருத்ய வேதிம் ராஜாநமேவச |
ருஷீம்ஸ்சைவ மஹாத்மாந: ஸபார்யா ரகுஸத்தமா: ||
யதோக்தேந ததாசக்ருர் விவாஹம் விதிபூர்வகம் |
த்ரிரக்நிம் தே பரிக்ரம்ய ஊஹுர்பார்யா மஹோஜஸ: ||
அதோபகாயாம் ஜக்முஸ்தே ஸபார்யா ரகுநந்தநா: |
ராஜாப்யநு யயௌ பச்யந் ஸ ருஷி ஸங்க: ஸ பாந்தவ: ||"

ஊர்மிளையை கையைப்பிடித்துக்கொண்டு இளையபெருமாளை நோக்கி— "லக்ஷ்மணா! இவ்வூர்மிளையை அங்கீகரித்துக் கையைப் பிடித்துக்கொள்ளும்; தாமதம் செய்யவேண்டாம்; உமக்கு க்ஷேமம் உண்டாகட்டும்." என்று வாழ்த்திவிட்டு இந்தப்பிரகாரம் மாண்டவியின் கையைப்பிடித்து பரதாழ்வானுக்கும், ச்ருதகீர்த்தியின் கையைப்பிடித்து சத்ருக்கனனுக்கும் கொடுத்துவிட்டு நான்கு திருமணப்பிள்ளைகளையும் நோக்கி "நீங்களெல்லோரும் ஸதிகளுடன் கூடித் திருக்கலியாணச் சடங்குகளனைத்தையும் முடித்துக்கொள்ளக்கடவீர்கள்." என்றுரைத்தனர்.

உடனே நான்கு குமாரர்களும் தம்தம் பத்தினியின் கரத்தைப்பிடித்துக்கொண்டு, வஸிஷ்டமகாமுனிவரின் அனுமதியின் படி அவ்வக்நியையும் ஜனகராஜனையும் அங்குள்ள முனிகணங்களையும் வலஞ்செய்து மற்றும் கலியாணச் சடங்குகளை விதிப்ரகாரம் செய்தனர்கள்.

அந்நால்வரும் பத்தினிமார்களுடன் அக்நியைமூன்றுமுறை வலஞ்செய்து விவாஹச் சடங்குகளை முடித்துவிட்டு தங்கள் விடுதிக்குச் செல்லுகையில் சக்கரவர்த்தியார், முனிகணங்க

ளோடும், பந்துக்களோடும் பின்தொடர்ந்து தம் திருமக்களை யும், மருமக்களையும் கண்குளிரக்கண்டு சந்தோஷத்துடன் தமது வாஸஸ்தானமடைந்தனர்.

ஸீதாப்பிராட்டியாரின் திருமணம் அத்யாத்மராமாயணத்தி லுள்ளபடி:—

" வஸிஷ்டம் கௌசிகம் சைவ சதாநந்த: புரோஹித: /
யதாக்ரமம் பூஜயித்வா ராமஸ்யோபய பார்ச்வயோ: //
ஸ்தாபயித்வா ஸ தத்ராக்நிம் ஜ்வாலயித்வா யதாவிதி /
ஸீதாமாநீய சோபாட்யாம் நாநாரத்நவிபூஷிதாம் //
ஸபார்யோ ஜநக: ப்ராயாத் ராமம் ராஜீவலோசநம் /
பாதௌ ப்ரக்ஷால்ய விதிவத் ததபோ மூர்த்ந்யதாரயத் //
தத: ஸீதாம் கரே த்ருத்வா ஸாக்ஷதோதகபூர்வகம் /
ராமாய ப்ரததௌ ப்ரீத்யா பாணிக்ரஹவிதாநத: //
ஸீதா கமலபத்ராக்ஷி ஸ்வர்ண முக்தாதி பூஷிதா /
தீயதே மே ஸுதா துப்யம் ப்ரீதோ பவ ரகூத்தம //
இதி ப்ரீதேந மநஸா ஸீதாம் ராமகரே அர்பயந் /
ஊர்மிளாம் சௌரஸீம் கந்யாம் லக்ஷ்மணாய ததௌ முதா //
ததைவ ச்ருதகீர்திம் ச மாண்டவீம் ப்ராத்ருகந்யகே /
பரதாய ததா வேகாம் சத்ருக்நாயாபராம் ததௌ //"

ஸ்ரீராமபிரானுக்கு இருபக்கத்திலும், வஸிஷ்டர் விச்வா மித்திரர், ஸதாநந்தர் இவர்கள் இருந்துகொண்டு அக்நியை ஸ்தாபனஞ்செய்து விதிப்படி பூஜித்து ஜ்வாலைபண்ணி பாணிக்ர ஹணமுஹூர்த்தக் காரியங்களை ஆரம்பித்தனர். ஜனகமஹா ராஜனும் தன்பத்தினியுடன், நவரத்னங்களுடன் கூடிய பலவித ஆபரணங்களையணிந்தவளும் மிகுந்த தேஜஸ்ஸோடு கூடியவளு மான ஸீதாதேவியை அழைத்துக்கொண்டுவந்து, செந்தாமரைக் கண்ணனாகிய ஸ்ரீராமபிரானுடைய திருவடிகளை ஜலத்தால் அலம்பி அந்தத்தீர்த்தத்தை ஸிரஸில் ப்ரோக்ஷித்துக்கொண்டு ஸீதாதேவியின் கையை பிடித்துக்கொண்டு " என் புத்திரியாகிய இந்த ஸீதாதேவியை உமக்குக் கொடுக்கிறேன். நீர் ப்ரீதியுடன் அங்கிகரிக்கக்கடவீர் " என்றுரைத்து மிகுந்த ப்ரீதியுடன்

ஸ்ரீராமபிரானது கையில்கொடுத்து உதகபூர்வமாகக் கன்னிகாதானஞ்செய்தனர். இந்தப்பிரகாரமே தன் குமாரியாகிய ஊர்மிளையை இளையபெருமாளுக்கும், தன் ப்ராதாவின் புத்திரிகளான மாண்டவி, ச்ருதகீர்த்தி என்னும் கன்னிகைகளை பரத சத்ருக்கனர்களுக்கும் பாணிக்ரஹணம் செய்துகொடுத்தனர்.

## ஸீதாப்பிராட்டியாரின் திருமணம் கம்பராமாயணத்திலுள்ளபடி.

○ "தண்டுலம் விரித்துநற் றருப்பை சாத்தியே
மண்டலம் விதிமுறை வகுத்து மென்மலர்
கொண்டவை சொரிந்தெரி குழுமமூட்டினன்
பண்டுள மறைநெறி பாவிச் செய்தனன்."

"மன்றலின் வந்து மணத்தவிசேறி
வென்றி நெடுந்தகை வீரனுமார்வத்
தின்றுணை யன்னமு மெய்தியிருந்தார்
ஒன்றிய போகமும் யோகமுமொத்தார்."

"கோமகன்முன் சனகன் குளிர்நன்னீர்
பூமகளும் பொருளுமென நீயென்
மாமகடன்னொடு மன்னுதியென்னாத்
தாமரையன்ன தடக்கையி னீய்ந்தான்."

"வெய்ய கனற்றலை வீரனு மந்நாள்
மையறு மந்திர முற்றும் வழங்கா
நெய்யமை யாகுதி யாவையு நேர்ந்தான்
தையல் தளிர்க்கை தடக்கை பிடித்தான்."

"வலங்கொடு தீயை வணங்கினர் வந்து
பொலம் பொரி செய்வன செய் பொருண்முற்றி
இலங்கொளி யம்மி மிதித்தெதிர் நின்ற
கலங்கலில் கற்பினருந்ததி கண்டார்."

"மற்றுள செய்வன செய்து மகிழ்ந்தார்
முற்றியமாதவர் தாண்முறைசூடிக்
கொற்றவனைக்கழல் கும்பிடலோடும்
பொற்றொடி கைக்கொடு நன்மனைபுக்கான்."

○ கம்-ரா. பால-கா. கடிமண. 85-86, 87, 90, 92, 93, 102.

" கொய் நிறை தாரன் குசத்துவசப்பேர்
செய் நிறை வேலவன் மங்கையர் சேர்ந்தார்
மை நிறை கண்ணியர் வானுறை நீரார்
மெய் நிறை மூவரை மூவரும் வேட்டார். "

விவாஹங்கள் எட்டுவிதங்களென ஸ்மிருதிகளில் கூறப்பட்டுள்ளன.

‡ " ப்ரஹ்மோ தைவஸ்ததைவார்ஷ: ப்ராஜாபத்யஸ்ததாஸுர:/
கந்தர்வோ ராக்ஷஸச்சைவ பைசாச ஸ்சாஷ்டமோऽதம:// "

¶ " பிரமசற்றெய்வ மாரிடம்பிரசா பத்தியமாசுரம் பெட்பின்
மருவுகாந்திருவ மிராக்கதம்பசாச மெனமணமெட்டுள. "

$ " இருவருமிணங்குகளவு கந்தருவமனந்தலிலிணங்கல் பைசாசம்
பெருவலியதனுன் மருவுதலரக்கம் பெரிலக்கெய்தலேயசுரம்
பொருளுகந்தளித்தலாரிடம் பிரசாபத்தியம் பொருள்கொளாதளித்த
லருமகந்தனேவேட்பித்தலேதெய்வ மழைத்தெதிர்கொடுத்தலே பிர
[மம். "

என்றபடி, (1)பிரம்மம். (2)தைவம். (3)ஆர்ஷம். (4)ப்ராஜாபத்யம். (5)ஆஸுரம். (6)காந்தர்வம். (7)ராக்ஷஸம். (8)பைசாசம். என்ற எட்டுவித விவாஹங்களுள் ஸீதாப்பிராட்டியாரின் திருமணம் " ஸஹதர்மம் சரத இதி ப்ராஜா பத்ய; / " என்ற ஆச்வலாயனர் வசனப்பிரகாரம் ப்ராஜாபத்தியத்தைச் சேர்ந்ததாக ஏற்படுகின்றது.

ஸ்ரீஸீதாராமர்களுடைய விவாஹத்தினுல் அநேகதருமங்கள் ஸூசகமாகின்றன.

(1) ஸீதாதேவியின் திருமணம் மிதிலாபுரியில் நடந்தேறியதால், த்விஜர்களுக்கு விவாஹம் கன்னிகையின் கிருஹத்தில் நடத்தப்படவேண்டுமென்பது.

இதைப்போல் திரௌபதியின் விவாஹம் பாஞ்சாலதேசத்திலும், தமயந்தியின் விவாஹம் குண்டினபுரத்திலும், நடந்திருப்பது கவனிக்கத்தக்கன.

‡ மனு. ¶ காசிகாண்டம். $ திருக்குற்றால புராணம்.

(2) விவாஹச் சடங்குக்குள்ள பதார்த்தங்கள் யெவை யென்பது.

(3) விவாஹம் விதிப்பிரகாரமாக மந்திரத்துடன் நடத்தப்படவேண்டுமென்பது.

(4) ஸீதாப்பிராட்டியாரின் விவாஹம், வஸிஷ்ட ஸதாநந்த முனிவர்களிருந்து நடத்தப்பட்டிருப்பதால், பெண்வீட்டு உபாத்தியாயரும், மாப்பிள்ளைவீட்டு உபாத்தியாயருமிருந்து விவாஹத்தை நடத்திவைக்கவேண்டுமென்பது.

(5) ஹோமாக்நி முன்பாக நடந்திருப்பதால், விவாஹம் அக்கினிஸாக்ஷியாய் நடத்தப்படவேண்டுமென்பது.

" கேள்விக்கொருவனெனுந் தௌமியன் கீதவேத
வேள்விக்கு வேண்டுவனயாவும், விதியினீட்டி
மூள்வித்த செந்தீக்கரியாக முரசுயர்த்த
தான்வித்தகற்கு வரமான சடங்கு செய்தான். " (பாரதம்)

என்றபடி, தௌமியமுனிவர், திரௌபதியின் விவாஹத்தை அக்கினிஸாக்ஷியாக நடத்தியிருப்பது கவனிக்கத்தக்கது.

(6) ஜனகமஹாராஜன் பத்நியுடன் ஸ்ரீராமபிரானுடைய பாதங்களையலம்பி தீர்த்தத்தைச் சிரஸில் ப்ரோக்ஷித்துக்கொண்டதால் ' ஜாமாதா விஷ்ணுவத்பூஜ்ய: ' என்றபடி மணமகனை மஹாவிஷ்ணுவாக பாவித்து, அவருடைய பாதங்களை அலம்பி ப்ரோக்ஷித்துக்கொண்டு கன்னிகாதானஞ்செய்யவேண்டுமென்பது.

(7) ' மந்த்ரபூதம்ஜலம் ' என்றதனால், கன்னிகையின் பிதா உதகபூர்வமாக கன்னிகாதானஞ் செய்யவேண்டுமென்பது.

' ஸர்வாப்யுதகபூர்வாணி தாநாநி / ' " எல்லாதானங்களும் நீர்வார்த்து செய்யப்படவேண்டும். " என்ற ஆபஸ்தம்பர் வசனமும்.

' பூர்வே விவாஹாஸ் சத்வாரோ, தர்ம்யாஸ்தோய ப்ரதாநிகா: / ' விவாஹங்களுள் தாரைவார்த்து கன்னிகாதானஞ் செய்தல் ச்ரேஷ்டமானது என்ற தேவலர் வசனமும்.

" கமலமீது செங் காந்தளலர்ந்தெனக்
குமரனங்கையிற் கோல்வளை செங்கைவைத்
திமயமாது மிறைவனும் போலவாழ்ந்
தமைதிரென்ன வரும் புனனல்கினன் "

" ஜனகனது கையின்மேல் தமையந்தியினது கையை வைத்து பார்வதியும் பரமசிவனும்போல பொருந்தி வாழ்வீர்களென ஆசீர்வதித்து மந்திரித்த ஜலத்தை வீமராஜன் தாரை வார்த்தனர்" என்ற நைடதமும் நோக்கத்தன.

(8) ஸ்ரீ ராமலக்ஷ்மண பரத சத்ருக்னர் நால்வரும் தம்தம் பத்தினியின் கரத்தை பிடித்ததால் பாணிக்ரஹண விதிப்படியான விவாஹமே சிறந்ததென்பது. விவாஹத்தில் பாணிக்ரஹணம் என்பது ஒரு முக்கியமான கருமம். இதை நல்ல லக்னத்தில் தவறுவண்ணம் நடத்தவேண்டும் என்று சாஸ்திரம் கூறுகின்றது.

"பாணிக்ரஹண மந்திரஞ்சொல்லி விவாஹஞ்செய்துகொண்டாற்றான் தருமபத்தினி யாவாள்" என்றிருப்பதால் வரன் தனது வலதுகையினால் கன்னிகையின் வலதுகையைப்பிடிக்கவேண்டும்."

" பாணிக்ரஹண ஸம்ஸ்கார: ஸவர்ணாஸூபதிச்யதெ ;" என்றபடி இந்த பாணிக்ரஹண ஸம்ஸ்காரம் ஸவர்ண கன்னிகையை மணம் புரியும்பொழுது செய்யவேண்டும்.

" மத்தளம்கொட்ட வரிசங்கம் நின்றூத
முத்துடைத்தாமம் நிறைதாழ்ந்த பந்தற்கீழ்
மைத்துனன் நம்பி மதுசூதன்வந்து என்னைக்
கைத்தலம்பற்றக் கனாக்கண்டேன் தோழீநான்."

' ஸ்ரீ கிருஷ்ணபகவான் முத்துப்பந்தலின் கீழே என்னைப் பாணிக்ரஹணஞ் செய்ததாகக் கனாக்கண்டேன்' என்ற நாச்சியார் திருமொழியும்

" சார்தழூழ்கு தடம்புயனாழற்
கேய்ந்த யாவு மினிது முடித்த பி
னய்ந்த நான்மறையின் வழியாயிழை
காந்தன் மேல்விரற் கைபிடித்தானரோ."

'நளமஹாராஜன் விதிப்பிரகாரம் தமயந்தியை பாணிக்ரஹணஞ் செய்தானென்ற' நைடதமும்

" தைய றளிர்க்கரங்க டன் றடக்கை யாற் பற்றி
வைய முழுது மகிழ்தூங்கத் — துய்ய
மணந்தான் முடித்ததற்பின் வாணுதலுந் தானும்
புணர்ந்தான் நெடுங்காலம் புக்கு. "

என்ற நளவெண்பாவும், இங்கு நோக்கத்தக்கன.

(9) 'லாஜபூர்ணேச்ச பாத்ரீபி:' என்றதனால்

லாஜஹோமம் — நெற்பொரி யிறைத்தல் விதியென்பது. கன்னிகையானவள் நெற்பொரிகளை தனது இரண்டுகைகளிலும் எடுத்துக்கொண்டு, தனதுபுருஷனுக்கு நீண்டஆயுளைக்கொடுத்து அருள்புரியவேண்டுமென அக்நிபகவானைப் பிரார்த்தித்து, நெற்பொரியை அக்நியில் ஹோமஞ்செய்தலாம்:—

" கங்குற் பவளவனமீது கடற்றரங்கம்
பொங்கித் தாளத்திரள் சிந்தப் பொழியுமாபோ
லங்கிப்புறத்துத்திருக்காப்பணியங் கையேந்திச்
செங்கட்கரிய குழலாள் பொரிசிந்தினளே. "

த்ரௌபதையானவள் விவாஹகாலத்தில் அக்நியில் பொரி சிந்தினளெனக் கூறியுள்ள பாரதமும்

" வரிசிலைவாள் முகத்தென்னை மார்தாம் வந்திட்டு
எரிமுகம் பாரித்தென்னை முன்னே நிறுத்தி
அரிமுகனச் சுதன் கைமேலென் கைவைத்து
பொரிமுகந்தட்டக் கனாக்கண்டேன் தோழீ நான். "

என்ற நாச்சியார் திருமொழியும், நோக்கத்தக்கன.

(10) அம்மி மிதுத்து அருந்ததி கண்டார் என்றதனால், அம்மி மிதித்து அருந்ததி காணல் அவசியமென்பது. அம்மிமிதித்தலாவது, வரன் கன்னிகையின் வலது காலைப்பிடித்து அக்நிக்கு வடபக்கத்தில் வைக்கப்பட்டிருக்கும், அம்மிக்கல்லின்மேல் ஏற்றி வைக்கவேண்டும்.

இது மந்திர பூர்வமாக செய்யப்படும் ஒரு கருமம். கன்னிகை கற்புநிலை தவறாதிருத்தற் பொருட்டு கற்பிற்சிறந்த அருந்ததி தேவியின் அநுக்கிரகம்பெறுவதற்காக ஆகாயத்தில் மீனுருக்கொண்டுவிளங்கும் அருந்ததிதேவியைப்பார்ப்பது சம்பிரதாயம்.

"இம்மைக்கு மேழேழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மையுடையவன் நாராயணன் நம்பி
செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி
அம்மிமிதிக்கக் கனாக்கண்டேன் தோழிநான்."

'ஸ்ரீ கிருஷ்ணபகவான் தமது திருக்கைகளால் என் காலைப் பிடித்து அம்மிமீது வைக்க நான் கனாக்கண்டேன்.' என்ற நாச்சியார் திருமொழியும்,

"பொங்கு செந்தழல் சூழ் வந்துபூம்பொரி
செங்கையாரச் சொரிந்து திருமகள்
பங்கயப்பதம் பைம்பொனம்மிவைத்
தங்கண் வானத் தருந்ததி காட்டினான்."

என்ற நைடதமும், நோக்கத்தக்கன.

(11) நால்வரும் பத்தினிமார்களுடன் அக்கினியை வலஞ்செய்திருப்பதால் அக்கினியை வலஞ்செய்தல் — அவசியமென்பது

"வாய் நல்லார் நல்ல மறையோதி மந்திரத்தால்
பாசிலைநாணல் படுத்துப் பரிதிவைத்து
காய்ச்சினமாகளிறன்னா னென் கைப்பற்றி
தீவலம் செய்யக் கனாக்கண்டேன் தோழீநான்."

'கிருஷ்ணபகவான் என்னுடைய கையைப் பிடித்துக்கொண்டு அக்கினியைச் சுற்றிவர நான் கனாக்கண்டேன்.' என்ற நாச்சியார் திருமொழியும்

"பன்மங்கலமுமுடன் வைகிய பண்பினானை
நன் மங்கலப் பூண்டுகிலோடு நயந்து சாத்தித்
தன் மங்கலந்தமனத்தோனையத் தையலோடுந்
தென்மங்கலச் செஞ்சுடர்த் தீவலஞ் செய்வித்தாரே."

'யுதிஷ்டிரர் த்ரௌபதியின் கையைப் பிடித்துக்கொண்டு அக்கினியைப் பிரதக்ஷிணஞ்செய்தார்' என்ற பாரதமும் நோக்கத்தக்கன.

(12) விவாஹம் முடிந்தவுடன் நால்வரும் தமது பத்னியுடன் விடுதிக்குச் சென்றதால் விவாஹச் சடங்குகள் முடிந்தவுடன் மணமகனும், மணமகளும் விவாஹகோலத்துடன் மணமகனுடைய கிருஹத்திற்குப் போகவேண்டுமென்பது.

இந்த தருமங்களும் மற்றும் பல தருமங்களும் ஸூசிதம்.

## (11) பெண்களுக்கு ஸ்திரீதனமளித்தல்.

தசரத சக்கரவர்த்தியார் ஜனகமகாராஜரிடத்தில் விடைபெற்று தம் நகரத்தை நோக்கிப் புறப்படுகையில் ஜனகமஹாராஜரும் சரியானபடி உபசாரஞ்செய்து சிறிதுதூரம் பின்சென்று வழியனுப்பி தம்மருமைத் திருமக்கள் நால்வர்களுக்கும்—

‡ "கவாம் சதஸஹஸ்ராணி பஹூநி மிதிலேச்வர:|
கம்பலா நாம் ச முக்யாநாம் க்ஷௌம கோட்யம்பராணி ச||
ஹஸ்த்யச்வ ரதபாதாதம் திவ்ய ரூபம் ஸ்வலங்க்ருதம்|
ததௌ கந்யாபிதா தாஸீம் தாஸீதாஸமநுத்தமம்||
ஹிரண்யஸ்ய ஸுவர்ணஸ்ய முக்தாநாம் வித்ருமஸ்ய ச|
ததௌ பரமஸம்ஹ்ருஷ்ட: கந்யாதநமநுத்தமம்||"

"வெவ்வேறாக அநேக நூறாயிரம்பசுக்கள், சிறந்த கம்பளங்கள், பட்டாடைகள், தேர், யானை, குதிரை, காலாட்படைகள், அநேகம் தாதியர்கள், தாஸர்கள், விலைபெற்ற ஆபரணங்கள், ஏராளமான பொன், முத்து, பவளம், முதலான நவமணிகள் மற்றுமநேகம் பதார்த்தங்களும் ஸ்திரீதனமாக அளித்தனர்."

இதனால் பெண்மக்களுக்கு யதேஷ்டமாக பிதா சீதனம் அளிக்கவேண்டுமென்பது ஸூசிதம்,

$ "வேட்டவர் வேட்டபின் வேந்தனுமேனோர்
கூட்டிய சீர்த்தி கொடுத்திலனல்லால்
ஈட்டிய மெய்ப்பொருள் யாவுள வெல்லாம்
வேட்டவர் வேட்டவை வேண்டளவீந்தான்."

என்பது கம்ப ராமாயணம். இப்படியே

‡ வா-ரா. பால-கா. சரு. 74. சு. 5, 6, 7.
$ கம்-ரா. பால-கா. கடிமண 103.

" மாரன். கரும்பு வளரும்படி வார்த்த நீரா
லீரம்பு லராக்கரத்தோ ருக்கியாகசேனன்
றேரும் பரியுங்களிறுந்திரள் சேனையாவும்
பாருந்தனமு மும்தென்று பலவுமீந்தான்."

என்றபடி த்ருபத மஹாராஜன் த்ரௌபதிக்கு சீதனமளித்திருப்பதும், வீமராஜன்

† " பண்ணமை கலினமான்றேராயிர மிரட்டிப்பாய் மா
வண்ண லங்களி நல்யானை யாயிரத்தறுபத்தொன்பான்
கண்ணகன் விசும்புபூத்த கற்பகத் தருவினோடு
மண்ணிழிந்தனைய பேரூரைம்பதும் வழங்கினனே."

" பொருதிரைப் புணரியீன்ற பொலன் கொடியனையசெவ்வி
யரிவைய ரிருபத்தையா யிரவர் நல்லரங்கிலாடும்
வருமுலைப் பவளச் செவ்வாய் வனிதைய ரெழுநூற்றெண்ம
ரிருபதுகோடி செம்பொ னினிதினில் வழங்கினனே."

" பொழி கதிர் மணி செய் கட்டில் புனைமலர்ப்பாயல் பைம்பொ
னிழைபயில் வண்ணப் பேழை யினிய சாந்தாற்றியோடு
நிழறவழ் மணிக்கண்ணாடி நித்தில முகடுவேய்ந்த
வொழுகொளிக்க வரியின்ன வுலப்பில நல்கினனே."

என்றபடி தமயந்திக்கு சீதனமளித்திருப்பதும்

¶ " ப்ராஹிணோத்பாரி பர்ஹாணி வரவத்வோர் முதாபல: |
மஹாதநோபஸ்கரேப ரதாச்வ வரயோஷித: || "

என்றபடி பலராமர் மிகவும் சந்தோஷத்துடன் ஏராளமான திரவியம், யானைகள், குதிரைகள், தேர்கள் இவைகளையும் உத்தம வேலைக்காரிகளையும், சுபத்திரைக்கு சீதனம் அளித்திருப்பதும்.

* " சதுஃசதம் பாரிபர்ஹம கஜாநாம் ஹேமமாலிநாம்|
அச்வாநாமயுதம் ஸார்தம் ரதாநாம் ச த்ரிஷட்சதம்||
தாஸீநாம் ஸுகுமாரீணாம் த்வே சதே ஸமலம்க்ருதே|
துஹித்ரே தேவக: ப்ராதாத்யாநே துஹித்ருவத்ஸல: || "

" தேவகியின் பிதாவாகிய தேவகனென்பவர் பெண்ணிடத்தில் மிகுந்த அன்புள்ளவராகையால் ஸுவர்ணமாலைகளால் அலங்

† நைடதம். ¶ ஸ்ரீ பாகவதம் ஸ்கந்தம் 10. அத் 86. சு. 12.
* ஷை ஷை 10. அத் 1. சு. 31, 32.

கரிக்கப்பட்ட நான்குநூறுயானைகளையும் ஒன்றரைலக்ஷம்குதிரைகளையும், ஆயிரத்தெண்ணூறு ரதங்களையும், ஸ்திரீதனமாகக் கொடுத்ததுமின்றி இருநூறு வேலைக்காரிகளையும் கொடுத்தார்." என்பதும் கவனிக்கத்தக்கன.

## (12) பெண்களை, கணவருடன் அனுப்புதல்.

ஜனகமஹாராஜர் தசரதசக்கரவர்த்தி முதலானோரைப் பிரயாணப்படுத்தியனுப்பும்பொழுது—

† (1) " ஸீதா மாலிங்க்ய ருததீம் மாதர; ஸாச்ருலோசநா: /
(2) " ச்வச்ரூ சுச்ரூஷணபரா நித்யம் ராமமநுவ்ரதா /
பாதிவ்ரத்யமுபாலப்ய திஷ்ட வத்ஸே யதாசுகம் // "

" ஸீதாதேவி கண்களில் கண்ணீர் ததும்புவதைக்கண்டு தாய்மார்களும் (தம் பெண்களை விட்டுப்பிரியவேண்டியிருப்பதினால்) தங்கள் கண்களிலும் கண்ணீருண்டாக, ஸீதாதேவியைக் கட்டியணைத்து முத்தமிட்டு குழந்தாய்! மாமனார் மாமியார்களை சுச்ரூஷைசெய்துகொண்டும், பதிவ்ரதாதருமத்தை ஆச்ரியித்துக் கொண்டும், உன் தங்கைமார்களையும் அவ்விதமிருக்கும்படி செய்துகொண்டும் சுகமாக இரு." என்று புத்திசொல்லி அனுப்பினார்கள்.

(1) இங்கு ஸீதாதேவியைப் பிரியும்பொழுது ஸீதாதேவிக்கும் அவள் தாய்மார்களுக்கும் கண்களில் கண்ணீருண்டானதாகக் கூறப்பட்டிருக்கிறது. இதனால் பெண்களைப் பிரியும்பொழுது தாய்மார்களுக்குக் கண்ணீருண்டாவதும் தாய்மார்களைப் பிரிவதால் பெண்களுக்குக் கண்ணீருண்டாவதும் ஸகஜமேன்பது ஸூசிதம்.

வெகுகாலம் ப்ரேமையுடன் வளர்த்துவந்ததனால் பிரிதல்காரணமாக துக்கம் மேலிட்டு கண்ணீர்வடியக்கூடுமாயினும், அவ்விதஞ்செய்வது தவறுனகாரியமென்றும், கன்னிகை நீண்டகாலம் புருஷனுடன் வாழப்போவதையுத்தேசித்து சந்தோஷத்தையடையவேண்டுமென்றும் சாஸ்திரம் கூறுகின்றது.

† அத்-ரா. பால-கா. சரு. 6. சு. 80, 81.

மேற்கண்ட துக்கத்தை சாந்தஞ்செய்யும்பொருட்டு விவாஹகாலத்தில் கிருஹ்யசூத்திரத்தில்க்கண்ட ஆறுவது மந்திரம் ஜெபிக்கப்படுகிறது. இவ்விதமாகவே,

" அல்லியங்கமலநீங்கி யாசரிற் புகுந்துவாழும்
மெல்லியல் பிரியலாற்று விழைவொடு பலகாற்புல்லி
மல்லலந் தெரியல்வீமன் மனைவியர் பலருமாழ்கி
யெல்லையில்துயரினோடுந் தனித்தனி யிரங்கினாரே." (நைடதம்)

என்றபடி விவாஹாநந்தரம், தமயந்தியை நளச்சக்கரவர்த்தியுடன் அனுப்பும்பொழுது வீமராஜன் தேவிகள் பலரும் தமயந்தியைப்பிரியமாட்டாமல் மிக்கதுயரமடைந்தார்கள். அப்பொழுது

" பெருந்துயருழந்துவாடும் பிணையனார் தம்மைநோக்கி
விரிந்துபூந்துளவினோன்பின் விரைமலர்க் கோதையேக
வருந்திமுன்னுயிர்த்ததெண்ணீர் மறிகடல்வருந்திற்றேவென்
றருந்தவர்க்கிறைவனை கோதமனாற்றினானே."

'வருந்துகின்ற மங்கையரைநோக்கி கௌதமமுனிவர் மஹாலக்ஷ்மியை மஹாவிஷ்ணுவுடன் அனுப்பும்பொழுது சமுத்திரம் வருத்தமுற்றதேவென்று தேற்றினார்.' என்ற நைடதம் நோக்கத்தக்கது.

(2) ஸீதாதேவியை கணவனுடன் அனுப்பும்பொழுது, தாய்மார்கள் புத்திசொல்லி அனுப்பியிருப்பதால், பெண்களை அவர்களது பர்த்தாவுடனனுப்பும்பொழுது அவர்கள் பர்த்தாவுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகள், பதிவ்ரதாதருமங்கள், மற்றும் புருஷன்வீட்டில் அனுஷ்டிக்கத்தக்க கடமைகள், இவைகளை உபதேசஞ்செய்து அனுப்பவேண்டுமென்பது ஸூசிதம்.

இந்தப்பிரகாரம் தமக்கு உபதேசஞ்செய்திருப்பதாய் ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானைநோக்கி—

$ " அநுசிஷ்டாஸ்மி மாத்ராச பித்ராச விவிதாச்ரயம் / "

'யான் பர்த்தாவிடத்தில் எப்பொழுது எவ்விதம் நடக்கவேண்டுமோ அவ்வகையை, என் தாய்தந்தையர் எனக்கு

$ வா-ரா. அயோ-கா. சரு. 27. ச. 10.

நன்றாக வுபதேசம் செய்திருக்கின்றூர்கள்.' என்றுரைத்திருப்பதும்—

அநஸூயாதேவியை நோக்கி—

"பாணிப்ரதாநகாலேச யத்புராத்வக்நி ஸந்நிதௌ ।
அநுசிஷ்டம் ஜநந்யா மே வாக்யம் ததபி மே த்ருதம் ॥" ‡

"அக்நிக்கு முன்பாக நடந்த எனது கலியாணகாலத்தில் என் மாதாவினுலுரைக்கப்பட்ட உபதேசத்தை என்னுள்ளத்திலுறுதியாகக்கொண்டிருக்கிறேன்." என்றுரைத்திருப்பதும், கவனிக்கத்தக்கன.

(13) வதூகிரஹப்பிரவேசம்.

தசரத சக்கரவர்த்தியார் வஸிஷ்டமஹாமுனிவரை முன்னிட்டுக்கொண்டு தம் புத்திரர்கள், மருகிமார்கள், தம் பத்னிகள், சுற்றத்தார்களுடன் புறப்பட்டு அயோத்தியையடைந்தனர். அரசர் வருகையைத்தெரிந்து, நகரத்தார் ஒருங்குசேர்ந்து புரமெங்கும் தோரணங்கள்கட்டி, வாழைமரங்கள்நாட்டி, மங்கள வாத்தியங்கள் முழக்கிக்கொண்டும், பட்டணத்தைப் பலவித அலங்காரஞ்செய்துகொண்டு, எதிர்கொண்டு அழைத்துக்கொண்டு வந்தனர்கள்.

¶ "புத்ரைர்தகத ஸ்ரீமாந் ஸ்ரீமத்பிச்ச மஹாயசா: ।
ப்ரவிவேச க்ருஹம் ராஜா ஹிமவத் ஸத்ருசம் புந: ॥"

என்றபடி சக்கரவர்த்தியார் மிகுந்த சந்தோஷத்துடன் தம் சிறுவர்களுடனும், மருமக்களுடனும், தம் மனைவிமார்களுடனும் கூடி நகரத்துட்புகுந்து மணிமாடங்கள் சூழ்ந்த தமதரண்மனையிற் பிரவேசித்தனர்.

சுலோகத்தில் 'ப்ரவிவேசக்ருஹம்ராஜா.' என்றிருப்பதால் வதூக்ருஹப்ரவேசமென்பது தாத்பரியமாகையால் விவாஹாநந்தரம் வதூக்ருஹப்ரவேசமும் நடத்தவேண்டுமென்பது ஸூசிதம்.

‡ வா-ரா. அயோ-கா. சரு. 118. சு. 8.
¶ வா-ரா. பால-கா. சரு. 77. சு. 10, 11.

## (14) ஸ்திரீகளின் கடமை.

○ " ஸீதாபி தேவகார்யாணி க்ருத்வா பௌர்வாஹ்ணிகாநிவை /
ஶ்வஶ்ரூணா மகரோத் பூஜாம் ஸர்வாஸா மவிஶேஷத: //
அப்யாகச்சத் ததோ ராமம் விசித்ராபரணாம் பரா / "

" ஸீதாப்பிராட்டியார் ஒவ்வொருநாளும் காலையில் தாம் செய்யவேண்டியதான தேவகார்யங்களனைத்தையும் இனிது செய்துமுடித்து மாமிமார்களெல்லோரையும் தக்கபடி பூஜித்தும், பிறகு விசித்திரமான வஸ்திராபரணங்களணிந்து தம் பிராண நாதனை ஸ்ரீ ரகுநாதனையடைவாள்."

சுலோகத்தில் தேவகார்யாணி என்பது குலமகள் அனுஷ்டிக்கவேண்டிய கடமைகள் என்பது கருத்து. இதனால் ஸ்திரீகள் விவாஹமாகி பர்த்தாவினது கிரஹமடைந்தபின்னர் பிரதிதினமும் அவர்களுக்குரிய கடமைகளைச் செய்துமுடித்தும் மாமனார் மாமிமார் முதலியவர்களை ஏற்றபிரகாரம் பூஜித்தும் பின்பு பர்த்தாவையடைந்து அவருடன் கூடிச் சுகித்து ஆனந்தமடையவேண்டுமென்பதும் ஸூசிதம்.

ஸ்திரீகள் அனுஷ்டிக்கவேண்டிய கடமைகளைப்பற்றிய ஆன்றோர் வாக்கியங்கள்:—

" தர்மதேந குடும்பசிந்தாம் ஆத்மநி ஸம்நிவேஶயேத் / "

" கணவனது அபிப்பிராயப்படி குடும்பசிந்தனையை தன்னிடம் வைத்துக்கொள்ளவேண்டும். "

" போஜநே ச ருசிதமிதம் அஸ்மை த்வேஷ்யமிதம் பத்யமிதம் அபத்யமிதம் இதி ச வித்யாத் / "

" சாப்பாட்டிலும் நாயகனுக்கு இதுவிருப்பமுள்ளது, இது வெறுக்கத்தக்கது, இது பத்யம், இது அபத்யம் என்று அறிய வேண்டும். "

" பஸ்சாத் ஸம்வேஶநம் பூர்வமுத்தாநம் அநவபோதநம் ச ஸுப்தஸ்ய/ "

" கணவனுக்குப்பிறகு படுத்துக்கொள்ளவேண்டும். முன்னால் எழுந்திருக்கவேண்டும். தூங்கும் கணவனை எழுப்பக்கூடாது. "

○ வா-ரா. உத்-கா. சரு. 51. சு. 28, 29.

" நாநுக்தா க்ருஹாந்நிர்கச்சேத் | நாநுத்தரீயா | "

" வீட்டிலுள்ள பெரியோர்களின் உத்திரவின்றியும் மேல் வஸ்திரம் இல்லாமலும் வெளியில் போகக்கூடாது."

" ந நாபிம் தர்சயேத் | ஆகுல்பாத் வாஸ: பரிதத்யாத் | "

" ந ஸ்தநௌ விவ்ருதௌ குர்யாத் | ந ஹஸேத் | "

" பர்தாரம் தத்பந்தூன்வா ந த்விஷ்யாத் | "

"தொப்பிளை வெளியில்காண்பிக்கக்கூடாது; குதிகால்பரியந்தம் வஸ்திரத்தை மறைத்துக் கட்டிக்கொள்ளவேண்டும்; ஸ்தனங்களைமூடிக்கொண்டேயிருக்கவேண்டும்; சிரிப்புக்கூடாது; பதியிடமும் அவன் பந்துக்களிடமும் விரோதங்கூடாது."

" பக்திம் ச்வசுரயோ: குர்யாத் பத்யுச்சாபி விசேஷத: |
தர்மகார்யே அநுகூலத்வமதர்மகார்யேபி ஸம்யமம் |
ப்ராகல்ப்யம் காமகார்யேஷு சுசித்வம் நிஜவிக்ரஹே |
மங்களம் ஸததம் பத்யு: ஸததம ப்ரியபாஷணம் |
பாவ்யம மங்களகாரிண்யா க்ருதமங்கள சீலயா |
க்ருஹோபஸ்கர ஸம்ஸ்காரரதயா ப்ரதிவாஸரம் | "

" தன்னுடைய மாமனார் மாமியார்களிடமும் பர்த்தாவிடமும் அதிக பக்தியுடனிருக்கவேண்டும்; தன்பதியால் அனுஷ்டிக்கப்படும் தருமகாரியத்திற்கு அநுகூலமாகவும், பொருளைச் செலவுசெய்து நடத்தும் காரியங்களில் ஜாக்கிரதையாகவும், பர்த்தாவுக்கு விருப்பமானகாரியத்தைச் செய்கிறவளாயும், அவருடன் எப்பொழுதும் பிரியமாய் பேசுபவளாகவும், கிரஹத்திற்கு லக்ஷ்மீகரமான அலங்காரத்தைச் செய்கிறவளாயும், வீட்டுக்குவேண்டிய ஸாமானகளையும், வீட்டை சுத்தம்பண்ணவேண்டிய விஷயத்தையும், ஒவ்வொருதினமும் கவனிக்கிறவளாயும் இருக்கவேண்டும்,

† "சிறுகாலையட்டிப் புகலருத்தியுறச்சமைத்தல் சுவைதிருத்தியூட்டன்
மறுகாலையெண்ணாது விருந்தழைத்தன் மகப்பேறு தன்மடநாணச்சம்
பெறுகாலையின்புறுதன்முன்னுறங்கப் பின்னுறங்கல் பின்னெழாத
லுறுகாலை தொழுதெழுதல் பன்னிரண்டு மங்கர்க்கற்புடையோர்
செய்கை."

† திருக்குற்றாலபுராணம்.

$ " கொழுந னமுதுண்டதன்பின் றாமுண்பார் குலவுபணி
யொழுகியவன் றுயின்றதன்பின் றாந்துயில்வாருறங்கியவ
னெழுவதன்முனெழுந்திருப்பாரில்லறத்திற்குரியவராய்ப்
பழுதகல் கற்புயர்நெறிகொள் பண்பு மிகுபாவையரே."

" வருவாய்க்குத்தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்விருந்தோம்பித் – திருவாக்குந்
தெய்வதையுமெஞ்ஞான்றுந் தேற்றவழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு." (சிறுபஞ்சமூலம்)

" குடநீரட் டுண்ணு மிடுக்கட் பொழுதுங்
கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங்
கடனீர்மை கையாறாக் கொள்ளு மடமொழி
மாதர் மனைமாட்சியாள்." (நாலடியார்)

¶ " கொழுநனுண்டபின் றானுகர்கொள்கையும்
விழிதுயின்றபின் றுஞ்சலுமென்றுயி
லெழுதன்முன்ன மெழுதலுமேயன்றோ
பழுதில்கற்புடைப் பாவையர் செய்கையே."

" இனியகேள்வர்முனியி னெதிர்நின்று
துனிகொணெஞ்சொ டெதிர்மொழிசொல்கிலா
ரனையகேள்வ ரெறியினுமன்பொடுங்
கனிவர்நெஞ்சகங் கற்புடைமாதரே."

" வனையுந்தங்கலன் மாற்றவட்கீயினு
முனிவுசெய்திலர் மூப்பினர்சேர்வுறாத்
தனியிற்சேர்கலர் தாம்பிறரிற்புகார்
புனிதநெஞ்சுடைப் புண்ணியமாதரே."

" திருத்துமாயுள் சிதையுமென்றெண்ணித்தம்
பொருந்துகாதலா நாமம்புகன்றிடா
ரிருந்தபோதன்றித் தாமுனிருந்திடா
ரருந்துமிச்சி லயிழ்தினுகாவரால்."

" இல்லறத்திற் கியைவன வீட்டுவா
ரல்லசெய்தே வறிதினழித்திடார்
புல்லுகாதல ராயுட்பொலிவுற
மல்லலோங்கணி மஞ்சளணிவரால்."

" காட்டுக்களைந்து கலங்கழீஇ இல்லத்தை
ஆப்பிநீர் எங்கும் தெளித்துச் சிறுகாலை
நீர்ச்சால் கரகம் நிறைய மலரணிந்
தில்லம் பொலிய அடுப்பினுள் தீப்பெய்க
நல்ல துறல்வேண்டுவார்." (ஆசாரக்கோவை)

$ திருக்குடந்தை புராணம். ¶ காசிகாண்டம்.

## (15) ஸம்வேசநம்.

(1) அநஸூயாதேவி ஸீதாப்பிராட்டியாரை நோக்கி—

† " ஸம்ப்ரவ்ருத்த நிசா ஸீதே நக்ஷத்ர ஸமலங்க்ருத |
ஜோத்ஸ்நா ப்ராவரணச் சந்த்ரோ த்ருச்யதேப்யுதிதேம்பரே ||
கம்யதாமநுஜாநாமி ராமஸ்யாநுசரேபவ || "

" ஹே, ஸீதே! ராத்திரியும்வந்துவிட்டது ஆகாயமெங்கும் நக்ஷத்திரங்களால் அலங்கரிக்கப்பட்டு விளங்குகின்றது. சந்திரனும் நிலவென்னும் வெண்பட்டாடையணிந்து காணப்படுகின்றனன். ஆகையால் யான் விடைகொடுக்கின்றேன். நீ சென்று ஸ்ரீராமபிரானிடம் போய்ச்சேருக." என உரைத்தனர்.

இதனால் இரவில் பத்தினிகள் பர்த்தாவினருகேயே சயனிக்க வேண்டுமென்ற தருமம் ஸூசிதம்.

" பாநம் துர்ஜநஸம்ஸர்க: பத்யாச விரஹ: அடநம் |
ஸ்வப்நோந்யகேஹவாஸச்ச நாரீணாம் தூஷணாநி ஷட். || "

"மதுபானம், துர்ச்சனசகவாசம், நாயகனைப் பிறிந்திருத்தல், சுற்றித்திரிதல், கனாக்காண்டல், பிறர்வீட்டில் வஸித்தல், என்னும் இவ்வாறும் பெண்களுக்குக் குற்றங்களாம்." என மனுவசனமிருப்பதால் 'நாயகனைப்பிரிந்திருத்தல்' என்பது நாயகன் படுத்திருக்கும் இடத்தைவிட்டு வேறிடத்திற்படுப்பது எனப் பொருள்படுமாதலின் அது பெண்களுக்குக் குற்றமாகின்றமையால் ஸ்திரீயானவள் பர்த்தாவின் சமீபமே சயனிக்க வேண்டுமென்பதாம்.

‡ (2) "நத்ய: ஸமுத்வாஹித சக்ரவாகா ஸ்தடாநி சீர்ணாந்யபவாஹயித்வா |
த்ருத்தாநவ ப்ராவ்ருதபூர்ணபோகா த்ருதம் ஸ்வபர்தாரமுபோபயந்தி || "

" நதிகள், நீரில்நீந்துகின்ற சக்ரவாகப்பறவைகளென்னும் கொங்கைகளுடன்கூடி, ஆடைநழுவியதுபோல இடிந்து விழுந்த கரைகளை மோதிக்கொண்டு நீரில்விழுந்த புஷ்பம் கனிமுதலிய உபகாரங்களை அலைகளென்னும் கைகளினால் ஏந்திக்கொண்டு

† வா-ரா. அ-கா. சரு. 119. சு. 9, 10.
‡ வா-ரா. கி-கா. சரு. 28. சு. 39.

காமவேட்கைகொண்ட ஸ்திரீகள் தங்கள் நாயகரிடம் விரைவாகச் செல்லுவதுபோல, தம் நாயகனுன சமுத்திரராஜனைநோக்கி விரைவாகச் சென்றன.

இதனுல் ஸ்திரீகள் தமது நாயகரிடம் சயனிப்பதற்காக செல்லும்பொழுது சந்தன் தாம்பூல பக்ஷணாதி உபகாரங்கள் கொண்டுசெல்லவேண்டுமென்பது ஸூசிதம்.

¶ (3) " வ்யாக்ருததிலகா: காஸ்சித் காஸ்சிதுத்ப்ராந்தநூபுரா: /
பார்ச்வே களிதஹாராஸ்ச காஸ்சித்பரம யோஷித: //
முக்தாஹாராவ்ருதாஸ்சாந்யா: காஸ்சித்விஸ்ரஸ்தவாஸஸ: /
வ்யாவித்தரஸநாதமா: கிசோர்ய இவவாஹிதா: // "

" கிரீடையின் விசேஷத்தால் சில ஸ்திரீகளுக்கு நெற்றியில் திலகமழிந்தும், சிலருடைய கால்சிலம்புகள் நழுவியும், சிலருடைய முத்தாஹாரம் சிதறியும், சிலருக்கு வஸ்திரங்கள் அவிழ்ந்தும், சிலருக்கு ஒட்டியாணம் நழுவியுமிருந்தன இவ்வித நிலைமையில் ஸ்திரீகள் அச்வங்கள்போலப் புரண்டு நித்திரை செய்பவர்களை அனுமார்கண்டார். "

இதனுல் ஸ்திரீகள் பர்த்தாவுடன் சயனிக்கப் போகும் பொழுது திவ்ய வஸ்திராபரணங்களும், புஷ்ப சந்தன குங்கும திலகமணிந்து செல்லவேண்டுமென்பது ஸூசிதம்.

"நாயகஸ்ய ச ந விமுக்தபூஷணம் விஜநே ஸந்தர்சநே திஷ்டேத்/"

"ஏகாந்தமான இடத்தில் நாயகனது முன்னிலையில் ஆபரணமில்லாதவளாயிருக்கக்கூடாது."

"குங்குமம் சாஞ்ஜநம் சைவ ததா ஹாரித்ரசந்தநே /
தௌதவஸ்த்ரம்ச தாம்பூலம் ஸம்யோகஞ்ச சுபாவஹம்// " (வியாஸர்)

" பதிவ்ரதாஸ்திரீ தன் நாயகனிடம் சயனிக்கச்செல்லும் பொழுது குங்குமம், அஞ்ஜனம், மஞ்சள், சந்தனம், உலர்ந்த வஸ்திரம், தாம்பூலம் இவைகளுடன் செல்லவேண்டும். "

" தாலபத்ரகலத்கர்ணு தைதா மைதுநம் வ்ரஜேத் /
பஞ்சமே சப்தமே வர்ஷே வைதவ்யமிஹ ஜாயதெ / "

¶ சு.கா. சரு. 9.-சு. 43, 44.

"காதுகளில் ஆபரணமின்றி பர்த்தாவுடன் சங்கமமடைந்தால் அந்தஸ்திரீ ஐந்து அல்லது ஏழு வருஷத்திற்குள் விதவையாவள்." இத்தியாதி ஆன்றோர்வாக்கியங்கள் கவனிக்கத் தக்கன.

$ (4) "பரிவ்ருத்தே அர்த்தராத்ரே து பாநநித்ராவஸம்கதம் |
க்ரீடித்வோபரதம் ராத்ரௌ ஸுஷ்வாபபலவத் ததா ||"

"இராவணனுடன் பாதிராத்திரிவரையில் க்ரீடைகள் செய்து களிப்படைந்து சிரமத்தினாலும், பானமயக்கத்தினாலும் மெய்மறந்து நித்திரைசெய்யும் ஸ்திரீகளை, அநுமான் கண்டார்."

இதனால் பாதிராத்திரிவரையில்தான் பதியுடன் சம்யோகஞ் செய்யலாமென்பது ஸூசிதம்.

"தஸ்யா: ஸஹபத்யா பூர்வராத்ரா உபஸம்வேசநம்
அர்த்தராத்ராதத: சயநம் ஆப்ராஹ்மமுஹூர்த்தாத் |
அதோபோத்தாய நித்யாநு யாரபதே ||" (போதாயனர்)

"ஸ்திரீயானவள் இரவின் முற்சாமத்தில் பர்த்தாவுடன் சுரதவிளையாட்டுகள்செய்து சுகித்தும், நடுச்சாமமானபின் பர்த்தாவின் சமீபத்தில் நித்திரைசெய்தும், பிரம்மமுகூர்த்தத்தில் எழுந்து நித்தியப்படியான கிருககிருத்தியங்கள்செய்ய ஆரம்பிக்கவேணும்." என்பது நோக்கத்தக்கது.

### (16) மகளேக்குணம்.

ஸ்ரீராமபிரானருகிலிருந்த ஸீதாப்பிராட்டியாரைச் சூர்ப்பநகை அதட்டிக் கோபித்தவளவில்,

† "அஞ்சினளஞ்சி யன்ன மின்னிடையலசவோடிப்
பஞ்சின்மெல் லடிக ளேவைப் பதைத்தனள் பருவக்கால
மஞ்சிடைவயங்கித்தோன்றும் பவளத்தின் வல்லியென்னக்
குஞ்சரமனையவீரன் குவவுத்தோடழுவிக் கொண்டாள்."

இயற்கையாகவே அச்சமென்னும் குணத்தையுடைய ஸீதாப்பிராட்டியார் பயந்து நடுங்கி தமது நாயகரான ஸ்ரீராமபிரானைக் கட்டியணைத்துக்கொண்டனள்.

$ வா-ரா. சு-கா. சரு. 9. சு. 35.
† கம்-ரா. ஆ-கா. சூர்ப்பணகை 66.

" நாணமே மடமேயச்ச நாட்டியபயிர்ப்பு நான்கும்
மாணிழைமடநல்லார்க்கு வைத்தநற்குணங்களாகும். "

என்றபடி, அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் மகடூஉக்குணங்கள் நான்கினுளொன்றாய அச்சத்தினையுடையவள் ஸீதாப்பிராட்டியார் என்பது அஞ்சினள் என்றதின் கருத்து.

இதைப்போலவே இராவணன் கைலையங்கிரியைப் பெயர்த்தெடுப்பதற்காக அம்மலையின்கீழே தன் கைகளைக்கொடுத்து அசைத்தபொழுது.

¶ " சாலநாத்பர்வதஸ்யைவ கணாதேவஸ்ய கம்பிதா: |
சசர்லபார்வதீசாபி ததாஶ்லிஷ்டா மஹேஶ்வரம் || "

அந்தமலை கிடுகிடுவென்றாடியது; அங்கிருந்த பிரமதகணங்கள் நடுநடுங்கினர்; உமாதேவியும் ஆட்டமுற்று அஞ்சி தமது கணவரான பரமசிவனை ஆலிங்கனஞ்செய்தனள்.

○ " ஆடல்புரிபூண் முலையரம் பையர்கள் சிந்தையலம் வந்தலறினர்
பாடல்புரிதும் புருவுநாரதரு மாதியர்பயந்தழுவினர்.
கூடலைமுயன்றனர் விரும்பவதிகோபமொடு கூடநினையா
ஊடலைமறந்துமை மடந்தையானைத்தனமுறத்தழுவினள். "

" அருவியங்குன்ற மரக்கன்பெயர்ப்ப
வெருவிய வெற்பரையன்பாவை — பெருமா
னணியாக மாரத்தழுவினள் தான்முன்
தணியாதவூடல் தணிந்து. "

என்பன இங்கு நோக்கத்தக்கன.

இவைகளினால் குலமகளிர்க்கு அச்சமென்னும் குணம் இருத்தலவசியமென்பது ஸூசிதம்.

சுமாலியென்பவன், விவாஹத்திற்கேற்ற பருவமடைந்திருக்கும் தனது புத்ரியானகைகஸியை நோக்கி,

$. " ஸாத்வம் முநிவரம் ஶ்ரேஷ்டம் ப்ராஜாபதிகுலோத்பவம் |
பஜ விஶ்ரவஸம் புத்ரி பௌலஸ்த்யம் வரய ஸ்வயம் || "

¶ உத்தர். சரு. 16, ச. 26. ○ உத்தர-கா. வரை. 70.

‡ " ........................பூமேலிருந்த பொற்பாவை
ஒக்குமுருவமுடையாயிங்குன்னுலே நங்குலம் விளங்கும்
மக்களுண்டாம் புலத்தியன்றன் மகனைவரணுய்வரியென்ருன்."

"குழந்தாய்! பிரமதேவரது குலத்திற்தோன்றிய புலஸ்திய ரது குமாறரான விச்சிரவஸ் என்னும் முனிவரிடஞ்சென்று அவரை நீ கணவராக வரித்துக்கொள் உனக்கு நலல புத்திரர்கள் பிறப்பார்கள்." என்று கூறினுன். கைகஸியும் தந்தையினது வார்த்தையை ஒப்புக்கொண்டு புறப்பட்டு, அக்னிஹோத்திரம் செய்துகொண்டிருக்கும் விச்சிரவஸ் முனிவரது சமீபத்திற் சென்று வணங்கி, தான் வந்தகாரியத்தை முனிவரிடம் தெரி விக்க வெட்கமடைந்து,

$ "உபஸ்ருத்யாக்ரதஸ்தஸ்ய சாணுதோமுகீஸ்திதா /
விலிகம்தீமுஹுர் பூமிமங்குஷ்டாக்ரேண பாமிநீ //"

‡ "சுத்தமுனிதீத்தொழின் முடித்துச்சுடர்தீநாலுண்டெனத்தோன்ற
வைத்தகலசவனமுலேயான் மருங்குவளேத்து மலர்க்கமலம்
ஒத்தசரணப் பெருவிரலா லொல்கி நின்றுநிலங்கீறி
மைத்தகுழலாண்மற்றவன்முன் மலர்மேன்மடந்தையென நின்ருள்."

தலேகுனிந்து, தனது கால் பெருவிரல் நுனியினுல் பூமியை அடிக்கடி கிறிக்கொண்டு நின்றனள்.

‡ " அன்னவவளேயருமறையோனருளினேக்கியார்மகணீ
என்னகருமம்போந்தது பேரென்னென்றுரைப்பச் சுமாலிதரு
கன்னிபெயர்கைகசி வந்தகருமங் கண்டுகோள்ளேன்ன
மின்னினிடைதன் கருத்தறிந்து வேதமுனிவன் விளம்புவான்."

முனிவர் அப்பெண்மணியைக் கண்ணுற்று அவளிடம் கருணேகூர்ந்து "நங்காய்! நீ யாருடைய மகள்? நீ வேண்டிவந்த காரியம் யாது?" என வினவ, அப்பெண் "ஸ்வாமி! யான் சுமாலி யின் மகள்; என்பெயர் கைகஸி; 'ஆத்ம ப்ரபாவேண முநே ஜ்ஞாதுமர்ஹஸி மே மதம் /' யான்வேண்டிவந்த காரியத்தை

$ வா-ரா. உத்-கா. சரு. 9. சு. 12. 16, 17, 19.
‡ உத்-கா இராவணப்பிறப்பு 7, 9, 10.

தேவரீரே யோகமஹிமையினால் உணர்ந்து அறிந்துகொள்ளக் கடவீர்." என விண்ணப்பஞ்செய்தனள்.

இதனால் குலமகளிர், தாம் காதல்கொண்ட ஆடவரிடத்துத் தமதுகருத்தை வாய்திறந்து கூறமாட்டார்கள்என்பது ஸூசிதம். இதைப்போலவே,

தேவர்கள் வேண்டுகோளுக்கிணங்கி நளன் தூதுசென்று தமயந்தியின் அந்தப்புரமடைந்து தான்கொண்டுவந்த செய்தியைத் தமயந்தியினிடம் தெரிவித்தபொழுது—

"என்றிவன் மொழிதலோடு மினையனே நளனென்றெண்ணி
மன்றறங்குழலாளுணி வருத்தமோடெருத்தங்கோட்டி
நின்றனண் மருங்குசூழ்ந்த தோழியர் நிடதங்காக்கும்
வென்றிகொள் சுடர்வேல்வேந்தற் கெதிர்மொழிவிளம்பலுற்றார்.

"வையகமொருகோலோச்சி வான்புகழ் நிடதங்காக்கு
மையனை மணப்பதன்றி யரிமதர் நெடுங்கட்செவ்வாய்த்
தையல்வேறொருவர்நாமஞ சாற்றினுமாற்றாளாகி
வெய்செந்தழலின் மூழ்கி விளிவதற்கையமின்றே."

தாம் மணப்பதற்கு விரும்பியிருக்கும் நளனே இவன் எனத் தெரிந்து, நளனுக்கு மறுமொழிகூற நாணமடைந்து தலைகுனிந்து வாளாவிருந்தனள். அப்பொழுது அவளதுபக்கத்தில் நின்ற தோழிகள் நளனைநோக்கி "இத்தமயந்தியானவள் நிடததேசத்தரசனான நளமகாராசனை மணப்பதன்றி, வேறொருவர்பெயரைச் சொன்னாலும் பொறுக்கமாட்டாதவளாகி நெருப்பினில் முழுகி இறப்பதற்குச் சந்தேகமில்லை." என எதிருத்தரம் சொன்னார்கள். என்ற நைடதமும்.

"தாமுறுகாமத்தன்மை தாங்களே யுரைப்பதென்ப
தாமென லாவதன்று லருங்குல மகளிர்க்கம்மா." என

ஸ்ரீராமபிரானைநோக்கி சூர்ப்பணகை கூறியுள்ள கம்பராமயணமும் நோக்கத்தக்கன.

கார்காலங்கழிந்து சரத்காலம் வந்தபொழுது பெருமாள், இளையபெருமாளை நோக்கி—

¶ " தர்ஶயந்தி ஶரந்நத்ய: புளிநாநி ஶநை: ஶநை: /
நவஸங்கம ஸவ்ரீடா ஜகநாநீவ யோஷித: // "

" இந்த சரத்காலத்தில் நதிகள், முதல் முதல் நாயகரைச் சேரும் குலஸ்திரீகள்,வெட்கத்தினால் மெல்லமெல்ல ஜகனத்தை (அரையை) காண்பிப்பதுபோல, மணற்குன்றுகளை மெல்ல மெல்லக் காண்பிக்கின்றன."

இதனால் குலமகளிர் கிரீடாகாலத்திலும் நாயகனிடத்திலும் மிகுந்த நாணத்துடனிருப்பார்களென்பது ஸூசிதம்.

" புதுமணத்த மென்மகளிர் சாளரத் திடைப்பொருந்து
மதியை யின்னுயிர்ப் பாங்கியர் மறைந்தனர் நோக்கும்
கதிர்கொள் வாண்முகமென்றுதங் காதலர்ப்புல்லும்
பதுமமென்கர நீங்கிநீள் படைவிழி புதைப்பார். " (நைடதம்)

" புதிதாய் விவாஹமானமங்கையர் மேல்மாடியின் பலகணி வழியாய்த் தோன்றிய சந்திரனைக்கண்டு, தன்னை மறைந்து நின்று பார்க்கின்ற உயிர்த்தோழியின் முகமாகநினைத்து நாயகனைத் தழுவிக்கொண்டிருக்கிற தமது கரங்களை நீக்கித் தம் கண்களை மூடிக்கொண்டனர்." இதனால் உத்தமஸ்திரீகள் தமது உயிர்த்தோழியாயிருந்தாலும் அவர்களிடத்தும் நாணமடைதல் இயல்பு என்று வருணித்திருப்பது இங்கு நோக்கத்தக்கது.

இவைகளினால் குலமகளிர்க்கு நாணமேன்னும் குணம் இருத்தல் அவசியமென்பது ஸூசிதம்.

" பெண்மை நலத்திற் கணியென்ப நாணம். " (நான்மணி)

" காமுற்ற பெண்ணுக் கணிகல நாணுடைமை. " (திரிகடுகம்)

" ஸலஜ்ஜா கணிகா நஷ்டா நிர்லஜ்ஜா ச குலாங்கநா / "

" மானமில்லாவில்லாளு மானமுறுவேசியரு
மீனமுறுவாரிவர். "

என்பன இங்கு நோக்கத்தக்கன.

¶ வா-ரா. கி-கா. சரு. 30. சு. 58.

அசோகவனத்தில் இராவணனாலும், இராக்ஷஸிகளாலும் துன்புறுத்தப்பட்ட ஸீதாப்பிராட்டியார் இனி உயிருடனிருந்தால் தனது சீலலக்ஷணத்திற்கு பங்கம் நேரிடுமென நினைத்து உயிரைமாய்த்துக்கொள்ள யத்தனித்தபொழுது, திருவடியானவர் பிராட்டியாரின் முன்தோன்றி தெண்டம் ஸமர்ப்பித்து தான் ஸ்ரீராமதூதனென்று விண்ணப்பஞ்செய்து ஸ்ரீராமநாமாங்கிதமான திருவாழியை ஸமர்ப்பித்தும், ஸ்ரீராமபிரான் சொல்லி அனுப்பிய அடையாளங்களெல்லாம் தெரிவித்து பிராட்டியாரைத் தன்னை நம்பும்படியாகச் செய்தபின்பு பிராட்டியாரை நோக்கி,

† "ப்ருஷ்டமாரோஹ மே தேவி மாவிகாம்க்ஷஸ்வ ஸோபநே |
யோகமந்விச்ச ராமேண ஸஸாங்கேநேவ ரோஹிணீ ||"

○ "ஏயநன்மொழி யெய்தவிளம்பிய
தாயின்முன்னிய கன்றனையான் றனை
ஆயதன்மை யரியதன்றாமெனத்
தூயமென்சொலினையனசொல்லினாள்."

"ஹே, தேவி! பரமபாவனரான ஸ்ரீராமபிரானைவகித்த அடியேனது முதுகின்மீதேற தேவரீர் கிருபைபுரிந்தால் க்ஷணகாலத்தில் இப்பெருங்கடலைத்தாண்டி ஸ்ரீராகவனுடைய ஸன்னதியில் தேவரீரைச் சேர்த்துவிடுகின்றேன். கொஞ்சமும் சந்தேகிக்கவேண்டாம். ரோஹிணிதேவியை சந்திரனோடு சேர்ப்பதுபோல தேவரீரை ஸ்ரீராமபிரானோடு சேர்த்துவிடுகின்றேன்." என விண்ணப்பஞ்செய்தனர். அதைக்கேட்டு ஸீதாப்பிராட்டியார் அநுமாரை நோக்கி,

† "பர்த்ருபக்திம் புரஸ்க்ருத்ய ராமாதந்யஸ்ய வாநர |
நாஹம் ஸ்ப்ரஷ்டும் ஸ்வதோ காத்ரமிச்சேயம் வாநரோத்தம||"

○ "வேறுமுண்டுரை கேளதுமெய்ம்மையோய்
ஏறுசேவகன் மேனியல்லாலிடை
ஆறுமைம்பொறி நின்னையுமாணெனக்
கூறுமிவ்வுறுத்தீண்டுதல் கூடுமோ."

† வா-ரா. சுந்-கா. சரு. 37. சு. 26, 62.
○ கம்-ரா. சுந்-கா. சூடாமணி. 11, 19.

"ஹே, மாருதி! ஸ்திரீகளுக்குரிய பாதிவ்ருத்திய தருமத்தை மேற்கொண்டயான் அந்த லோகநாதனை ஸ்ரீராகவனையல்லது வேறு புருஷரை ஸ்பரிசியேன்." என அருளிச்செய்தனர்.

இதனால் குலமகளிர்க்கு பரபுருஷஸ்பரிசம் ஏற்படுங்கால் மயிர்க்கூச்சலுண்டாவது ஸகஜமாகையால், பிராணஹானி யேற்பட்டகாலத்திலும் அவர்கள் பரபுருஷர்களை ஸ்பரிசிப்பதற்கு இணங்காரென்று மகடூஉக்குணங்களிலொன்றாகிய பயிர்ப்பு என்னும் குணத்தின் இலக்ஷணம் ஸூசிதமாகின்றது.

(17) மாதர் மனம்.

சூர்ப்பநகை இராக்ஷஸரூபத்தைவிட்டு, ஓர் அழகிய பெண்ணின் வடிவம்கொண்டு இராமபிரானிடம்வந்து—

" வீரனஃதுரைத்தலோடு மெய்யிலாள் விமலயானச்
சீரியரல்லார்மாட்டுச் சேர்கிலென் றேவர்பாலு
மாரியமுனிவர்பாலு மடைந்தனெ னிறைவவீண்டோர்
காரியமுண்மை நின்னைக் காணியவந்தேனென்றாள்."

அரசனே! யான் இராவணனுடைய தங்கையாயினும், அரக்கர்கூட்டத்தில் சேர்வதேயில்லை. தேவர்கள் பக்கத்தும், ருஷிகள்பக்கத்தும் சேர்ந்து வசித்துவருகின்றேன். ஈங்கோர் காரியமிருக்கின்றதை உத்தேசித்து உம்மைக் காணுதற்காகவந்தேன்." என்று சொன்னபொழுது, ஸ்ரீராமபிரான்

" அன்னவளுரைத்தலோடு மையனு மறிதற்கோவ்வா
நன்னுதன் மகளிர் சிந்தை நன்னெறிப்பாலவல்ல
பின்னிது தெரியுமென்னாப் பெய்வளைத் தொளியென்பா
லென்னைகாரியத்தை சொல்லஃதியையுமே விழைப்ப லென்றான்."

அழகிய நெற்றியையுடைய மாதர்களது எண்ணங்கள் இலேசில் அறிந்துகொள்வதற்கு முடிவனவல்ல; மேலும் சன்மார்க்கத்தைபடுத்தவையுமல்ல இனிமேல பேசப் பேச அறியலாமென்று நினைத்து பெண்ணே! என்னிடத்தே யாது காரியத்தை வேண்டுகின்றாய் சொல்; அது உசிதமாயின் செய்வேன்" என்றருளிச்செய்தனர்.

இதனால் மகளிர் சிந்தை யறிதற்கோவ்வாத தன்மையவென்பது ஸூசிதம்.

"ஔதும்பராணி புஷ்பாணி ச்வேதவர்ணம் ச வாயஸம் /
மத்ஸ்யபாதம் ஜலே பச்யேந்ந நாரீஹ்ருதயஸ்திதம் //"

"அத்திமலரு மருங்காக்கை வெண்ணிறமும்
கத்துபுனன்மீன்பதமும் கண்டாலும் - புத்தரே
மானார்பெரிய கடவுளருங் காண்பரோ
மானார் விழியாரமனம்." (நீதிஸாரம்)

"மத்ஸ்யத்தின்கால்களை ஜலத்தினில் காணுதலும் கூடும்; அத்திப்பூவையும், வெள்ளைக்காக்கையையும் கண்டாலும் காணலாம்; ஸ்திரீகளின் மனத்தினுழத்தை மட்டும் தேவர்களாலும் அறியமுடியாது."

"அன்னத்தைப் பார்க்கலா மத்திப்பூக் கொய்யலாம்
மின்னொத்த மீன்காலை மேதினியிற் காணலாம்
பொன்னொத்த மேனியார் பூணும் பெருஞ்சூழ்ச்சி
என்னத்தா னய்ந்தாலு மின்னதென் றறியவோ!"

"அச்வப்லுதம் வாஸவகர்ஜிதம் ச ஸ்த்ரீணாம்ச சித்தம் புருஷஸ்யபாக்யம்/
அவர்ஷணஞ்சாப்யதிவர்ஷணம் ச தேவோ நஜாநாதி குதோமநுஷ்ய? //"

குதிரைகள் குதூகலித்து மேற்கிளம்புவதையும், மேகம் கர்ச்சிப்பதையும், ஸ்திரீகள் மனதையும், புருஷனுக்குண்டாம் பாக்கியத்தையும், மழைஇல்லாமையும், அதிகமழையுண்டாதலையும், தேவருக்கே தெரிந்துகொள்ளக்கூடாதென்றால், மனிதன் எப்படி அறிவான்?"

"கள்ளூற்ற கூந்தற்கனங்குழை நல்லார்கருத்திற்
கொள்ளப்படுமெண் குணிக்குந்தகைமையதோ
தள்ளற்கரிதாகித் தம்மொடு பன்னாட்பழகி
யுள்ளூற்றதேவு முணர்தற்கரிதன்றே." (கந்தபுராணம்)

விச்வாமித்திரமுனிவர் ஸ்ரீராமபிரானை நோக்கி அருளிச்செய்தது, மிதிலையினருகில் ஒருவனத்தில் கௌதமனென்னும் முனிவர் அகலிகையென்னும் தம்பத்தினியோடு தவம்புரிந்துகொண்டிருந்தனர். அப்பொழுது ஒருநாள் தேவேந்திரன் முனிவர் வெளியே போயிருக்கும் சமயம்பார்த்து அம்முனிவரைப்போல வேடம்பூண்டு அகலிகையின் அருகில்வந்து,

¶ "ஸங்கமம் த்வஹமிச்சாமி த்வயா ஸஹ ஸுமத்யமே |"

"பெண்மணி! யான் இப்பொழுது காமத்தால் பீடிக்கப் பட்டு உன்னைச் சேறவிரும்புகின்றேன்." என வேண்டினன்.

¶ "முநிவேஷம் ஸஹஸ்ராக்ஷம் விஜ்ஞாய ரகுநந்தந |
மதிம் சகார துர்மேதா தேவராஜகுதூஹலாத் ||"

"அகலியையும் தன்முன் வந்திருப்பவன் தேவராஜன் என சில குறிகளால் உணர்ந்தும் மதிமயங்கி அவனது வேண்டுகோளுக்கிசைந்து அவனுடன்கூடி இன்பம் நுகர்ந்தனள்."

$ "புக்கவளோடுங் காமப்புதுமண மதுவின்றேறல்
ஒக்கவுண்டிருத்தலோடு முணர்ந்தன ளுணர்ந்தபின்னுந்
தக்கதன்றென்னவோராடாழ்ந்தனளிருப்பத்தாழா
முக்கணனனையவாற்றன் முனிவனுமுடுகிவந்தான்."

என்பது கம்பராமாயணம்.

பின்பு விண்ணவர்கோன் மனத்திலச்சங்கொண்டு, அகலியையினிடம் விடைபெற்று ஆச்சிரமத்திற்கு வெளியே செல்லுகையில் எதிரில்வந்த மஹரிஷி இவனது தீச்செயல்களை யோக மகிமையாலுணர்ந்து கடுஞ்சினங்கொண்டு,

¶ "மம ரூபம் ஸமாஸ்தாய க்ருதவாநஸி துர்மதே |
அகர்தவ்யமிதம் தஸ்மாத் விபலஸ்த்வம் பவிஷ்யஸி ||"

$ "தீவிழிசிந்தநோக்கிச் செய்ததையுணர்ந்துசெய்ய
தூயவனவனை நின்கைச் சுடுசரமனையசொல்லால்
ஆயிரமாதர்க்குள்ள வறிகுறியுனக்குண்டாகென்
றேயினனவையெலாம் வந்தியைந்தன விமைப்பின்முன்னம்."

"அடே, முட்டாள்! நீ உன்மத்தனாகி தருமத்தைவிட்டு விலகி என்வேடம்பூண்டு இந்த அக்கிரமச்செயலை நீ செய்தமையால், உனது அண்டங்களிரண்டும் அற்றுவிழுந்து உனது தேகம் பூறுவும் ஆயிரம் ஸ்திரீகளுக்குரிய அடையாளம் உண்டாகக் கடவது." என சபித்தனர். உடனே யாவும் அவ்வண்ணமாயின. பின்பு அகலியையைநோக்கி முனிவர்,

---

¶ வா-ரா. பா-கா. சரு. 48. சு. 19, 20, 29, 32, 33.
$ கம்-ரா. பா-கா. அகலிகை 76, 78, 79.

¶ " இஹ வர்ஷ ஸஹஸ்ராணி பஹூநி த்வம் நிவத்ஸ்யஸி ।
வாயுபக்ஷா நிராஹாரா தப்யந்தீ பஸ்மஶாயிநீ ॥
அத்ருஶ்யா ஸர்வபூதாநாமாஶ்ரமேஸ்மிந்நிவத்ஸ்யஸி ॥ "

$ " எல்லையிலுணர்வெய்தி யாவர்க்கு நகைவந்தெய்தப்
புல்லியபழியினோடும் புரந்தரன் போயபின்றை
மெல்லியலாளைநோக்கி விலைமகளனையநீயுங்
கல்லியலாதியென்றான் கருங்கலாய் மருங்குவீழ்வாள். "

" அடி, அறிவுகெட்டவளே! என்வேடங்கொண்டவன் இந்திரனென்றுணர்ந்தும் நீ மதிகெட்டு மனந்துணிந்து பாபச் செயலுக்கிசைந்தமையால், இவ்விடத்திலேயே நீ பல வருஷங்கள் கல்லுருவாகி ஆகாரமின்றி காற்றைப் புசித்துக்கொண்டு எல்லா பூதங்களுக்குந் தோன்றாமல் கிடக்கக்கடவை." எனச் சபித்தனர்.

அகலியை ரிஷிபத்தினியாயிருந்தும் இந்திரனெனத் தெரிந்தும் இவ்விதமான கெட்டசெய்கைக்கு இணங்கினமையால் மாதர் மனம் நிலையற்றதென்பதும், இளகும் தன்மையதென்பதும் ஸூசிதம்.

‡ " ஐம்புலன்களும் போலவரும் பதிகளாகவு மின்னம் வேறொருவ
னெம்பெருங் கொழுநனாவதற்கு ருகு மிறைவனே யெனது பேரிதய
மம்புவிதனிற் பெண்பிறந்தவரெவாக்கு மாடவரிலாமை யினல்லா
ணம்புதற்குளதோவென்றனள் வசிட்டனல்லறமனைவியேயனையாள்"

ஸ்திரீகளின்மனம்நம்பத்தகுந்தவைகளல்லவென ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவை நோக்கி திரௌபதி கூறியது.

$ " பள்ள முதுநீர்ப் பழகினு மீனினம்
வெள்ளம் புதியது காணின் விருப்புறூஉங்
கள்ளவிழ் கோதையர் காம னோடாயினு
முள்ளம் பிறிதா யுருகலுங் கோண்ணீ. "

" எண்ணிப்பத் தங்கை யிட்டா லிந்திரன் மகளுமாங்கே
வெண்ணெய்க்குன் றெரியுற் றாற்போன் மெலிந்து பின்னிற்குமன்றே."

பெண்கள் மனம் பொருளை விரும்பும் என திருத்தக்கத் தேவர் கூறியிருப்பது.

‡ வில்லிபாரதம். $ வளையாபதி.

" தந்தையாயினுந் தம்மிற் றக வுடனே யொருவயிற்றிற் சார்ந்தாரேனு
மைந்தராயினு மிகவும் வனப்புடையா ராமாயின் மடநல்லார்தஞ்
சிந்தை நடந்திடும். "

மாதர் சிந்தை ரூபமுடைய புருஷர்மீது நாடும் எனக் காசி காண்டம் கூறுவது.

" யதந்தஸ்தந்நஜிஹ்வாயாம் யஜ்ஜிஹ்வாயாம் ந தத் பஹி: /
யத்பஹிஸ்தந்நகுர்வந்தி விசித்ர சரிதாஸ்திரிய: // "

எது மனதிலுள்ளதோ அது வாக்கிலிராது. சொல்லுகிற படி செய்கையிராது. ஸ்திரீகள் இவ்விதமான விசித்திர நடையுள்ளவர்கள்.

" உஶநா வேத யச்சாஸ்த்ரம் யச்ச வேத ப்ருஹஸ்பதி: /
ஸ்வபாவேனைவ தச்சாஸ்த்ரம் ஸ்திரீபுத்தௌ ஸுப்ரதிஷ்டிதம் //"

சுக்கிராசாரியாரும் வியாழபகவானும் எந்த சாஸ்திரங்களை அறிந்திருக்கின்றார்களோ அந்த சாஸ்திரங்களெல்லாம் இயற்கையாலேயே பெண்களுடைய புத்தியில் தாபிக்கப்பட்டிருக்கின்றன."

ஒருநாள் போஜராஜன் மாறுவேடம்பூண்டு மத்தியானவேளையில் வீதிகளில் திரிந்துகொண்டுவந்து ஒரு விப்பிரன் வீட்டு முன்னணியில் நிற்கையில், விருத்த வேதியன் வைஸ்வதேவம் செய்து வாயஸபலியை முற்றத்தில் ஓரிடத்தில்வைத்து 'கா கா' வென்றனன். உடனே அநேக காகங்கள் சப்தித்துக்கொண்டு கூடவு மதிலொன்று கடினமாய் சப்திக்கவே அதைக்கண்டு பயந்து அவ்விப்பிரனின் மனைவி புருஷனைக் கட்டிக்கொண்டு மூர்ச்சையாயினள். அந்தணன் அவளை மூர்சசை தெளிவிக்க அந்த ஸ்திரீ 'ஹே, நாதா! காகத்தின் கடூர தொனியைக் கேட்டு எனது மனம் கலங்கிற்று' என்றனள். இதையெல்லாம் கவனித்த அரசன் இவள் சாமான்னிய ஸ்திரீயல்ல இவள் உண்மை நிலையையறியவேண்டுமென நினைத்து அன்றிரவு ஊரடங்கியவுடன் அவ் விப்பிரனது கிரகத்தருகே வந்து ஒளித்திருந்து கவனித்தனன். பிராம்மணத்தியும் கணவன்நித்திரையடைந்தபின்பு ஒரு வேலைக்

காரியின் தலைமேல் மாம்ஸதுண்டங்களை எடுப்பித்துக்கொண்டு நருமதையாற்றங்கரை சேர்ந்தனள். அரசனும் பின் சென்றனன். அந்தப் பிராம்மணி ஆற்றிலிறங்கி இடையிலே தன்னைக் கவ்வ வந்த முதலைகளுக்கு மாம்ஸ துண்டங்களைப் போட்டுக்கொண்டே அக்கரைபோய் அங்கேயுள்ள சோரநாயகனோடு கூடியிருந்து மீண்டும் வீடுபோய்ச் சேர்ந்ததைக் கவனித்த அரசன் ஆச்சரியமடைந்து மறுநாள் காலை ஸபைக்கு வந்து, வித்வான்களை நோக்கி,

"திவா காகருதாத் பீதா" (பகலில் காகங்களையப் பயந்தாள்) என்னக் காளிதாஸ கவி "ராத்ரௌ தரதி நர்மதாம்" (நள்ளிரவில் நருமதையைத் தாண்டுகிறாள்). என்றனன்.

அதற்கரசன் "தத்ர ஸந்தி ஜலே க்ராஹா:" (அந்த ஜலத்தில் முதலைகளிருக்கின்றனவே) எனக் காளிதாஸன்—

"மர்மஜ்ஞாநைவ ஸுந்தரீ." (அம்மாது உபாயமறிந்தவள்). என்றனன்.

போஜனும் கவியின் ஸாமர்த்தியத்தை மெச்சி ஸன்மானஞ் செய்தனன்.

போஜசரித்திரத்திலுள்ள இந்தக் கதையினால் பெண்களின் மனதின் கபடத் தன்மையும் அவர்களின் தந்திரச்செயலும் காண்பிக்கப்பட்டதாயிற்று.

## (18) மங்கையர் சோற்கேட்டல்.

† "மங்கையர் பொருட்டாலெய்து மாந்தர்க்கு மரணமென்றல்
சங்கையின் றுணர்தி வாலி செய்கையாற் சாலு மின்னு
மங்கவர் திறத்தினாலே யல்லலும் பழியுமாத
லெங்களிற் காண்டியன்றே யிதனின் வேறுறுதியுண்டோ."

"மனிதருக்கு ஸ்திரீகளின் நிமித்தமாய் மரணமுண்டாகுமென்பதற்கு வாலியே சாக்ஷி; மேலும் அவர்கள் காரணமாகவே மனிதருக்குப் பலவிததுன்பங்கள் நேருமென்பதற்கு எங்களைப் பார்த்துத் தெரிந்துகொள். இதற்கு வேறு சாக்ஷிவேண்டாம்." என சுக்கிரீவமஹாராஜனை நோக்கி ஸ்ரீராமபிரான் அருளிச்செய்

† கம்-ரா. கிஷ்-கா. அரசி. 33.

தனர். 'அங்கவர் திறத்தினானே யல்லலும் பழியுமாத லெங் களிற் காண்டி.' என்பதின் கருத்து — ஸீதாப்பிராட்டியாரின் விருப்பத்தின் பிரகாரம் பொன்மானைப் பிடிப்பதற்காகச் சென் றதினிமித்தம் பிராட்டியாரை இராவணன் அபகரித்துச்செல்ல நேரிட்டு, அதனிடமாக தானும் இளையபெருமாளும் பலவிததுன் பங்கள் அடைந்தனர்; என்பதாம்.

இதனால் ஸ்திரீகளின் சொற்கேட்டு நடந்தால் பலவிததுன்ப மடைய நேரிடுமென்பது ஸூசிதம்.

"தேன்பிடிக்குந் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை
மான்பிடிக்கச்சொன்ன மயிலேபோல் — தான்பிடிக்க
பொற்புள்ளைப் பற்றித்தாவென்றாள் புதுமழலைச்
சொற்கிள்ளைவாயாடொழுது." (நளவெண்பா கலி 81.)

"பொன்மானைப் பிட்டித்துத் தரவேணுமென்று கேட்ட ஸீதாப்பிராட்டியாரைப்போல, தமயந்தியானவள் சுவர்ண பக்ஷியைப் பிடித்துத்தரும்படியாக நளமஹாராஜனை வேண்டினள்." (இங்கு ஸீதாப்பிராட்டியாரை உபமானமாகக் கூறியிருப்பதின் கருத்தாவது, பிராட்டியாரின் சொல்லைக்கேட்ட இராமபிரான் பின்னால் துயரமடைந்ததைப்போல் தமயந்தியின் சொல்லைக் கேட்டுச் சென்ற நளன் ஆடையையிழந்து துயரமடைந்தான் என்பதாம்.)

‡ "பெண்மதிசேளாரென்றும் பெரியவரெனக்கொண்டிந்த
மண்மொழிவார்த்தை பொய்யோவருத்த நீருற்றவெல்லா
மெண்மிகவெண்ணின்முன்ன மென்பொருட்டன்றோவென்று
கண்மலரருவிசோரக்கனற் பிறந்தாளுஞ் சொன்னாள்."

"பெரியோர் பெண்களின் வார்த்தைகளை ஒருபொழுதும் கேட்கமாட்டார்கள் என்ற உலகவசனம் பொய்யாகுமோ? இதுவரை நீங்கள் அனுபவித்த கஷ்டங்களெல்லாம் என்னிமித்தமாக ஏற்பட்டதன்றோ?" என திரௌபதி கூறினள்.

இவை இங்கு கவனிக்கத்தக்கன.

‡ வில்லிபாரதம். ஆரணி. பழம்பொருந்து. 12.

ஆத்மபுத்தி: ஸுகம் சைவ குருபுத்திர்விசேஷத: |
பரபுத்திர்விநாஶாய ஸ்த்ரீபுத்தி: ப்ராளயங்கரீ || " (நீதிஸாரம்)

"தன்புத்தி ஸுகத்தைத் தரும்; குருபுத்தி விசேஷ ஸுகத்தைக் கொடுக்கும்; பிறர்புத்தி விநாசத்தைக்கொடுக்கும்; ஸ்த்ரீ புத்தி கொல்லும்."

"என்புத்தி தன்புத்தி யியல்பதாமலதேயாகில்
நண்புற்ற மூத்தோர்புத்தி நண்ணிடநலமுண்டாகும்
பண்பில் பலபேர்புத்தி நாசமாமாமதிலும்பார்க்கிற்
பெண்புத்தியதனைக் கேட்டாற் பிராளயநாசமென்றே." (நீதிஸாரம்)

" தன்னைப் புகழ்வானும் சாக்ஷிசொல்லி நிற்பானும்
பொன்னைமிகத்தேடிப் புதைப்பானும் — ஒன்னலர்தம்
நண்புத்தி கேட்பானும் நாணமில்லாதானும்
பெண்புத்தி கேட்பானும் பேய்."

"மங்கை கைகேசி சொற்கேட்டு மன்னர்புகழ் தசரதனுமரணமானான்
செங்கமலச் சீதைசொல்லை சிராமன்கேட்டவுடன் சென்றான் மான்பின்
தங்கையவன் சொற்கேட்ட ராவணனுங் கிளையோடு தானுமாண்டான்
நங்கையர் சொற்கேட்பதெல்லாங் கேடுவரும் பேருலகோர் நகைப்பர் தாமே."
(விவேகசிந்தாமணி)

என்ற ஆன்றோர் வாக்கியங்கள் நோக்கத்தக்கன.



## (19) பெண்களின் இயற்கைக் குணங்கள்.

ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானுடன் வனஞ்செல்லப் புறப்பட்டபொழுது கோசலையார் பிராட்டியாரைநோக்கி—

† " அஸத்ய: ஸர்வலோகே஽ஸ்மிந் ஸததம் ஸத்க்ருதா: ப்ரியை: |
பர்த்தாரம் நாபிமந்யந்தே விநிபாதகதம் ஸ்த்ரிய: ||
ஏஷஸ்வபாவோ நாரீணு மநுபூய புராஸுகம் |
அல்பாமப்யாபதம் ப்ராப்ய துஷ்யந்தி ப்ரஜஹத்யபி ||

† வா-ரா. அயோ-கா. சரு. 39. சு. 20, 21, 22, 23.

அஸத்யஶீலா விக்ருதா துர்கா அஹ்ருதயா: ஸதா |
அஸத்ய: பாபஸங்கல்பா: க்ஷணமாத்ர விராகிண: ||
ந குலம் ந க்ருதம் வித்யா ந தத்தம் நாபி ஸங்க்ரஹ: |
ஸ்த்ரீணாம் க்ருஹ்ணாதி ஹ்ருதய மநித்ய ஹ்ருதயாஹிதா: ||"

"ஹே, ஸீதே! உலகத்தில் ஸ்திரீகள் தம்பர்த்தாக்கள் தனவந்தராய் வாழ்ந்து தாம் விரும்பியவற்றையளிக்குமட்டும், அவர்களுக்கிசைந்து நடந்து, அவர்கள் பொருளிழந்து கஷ்டப் படுங்காலத்தில் அவர்களைத் துறந்து தம்மிச்சைப்படி திரிவது பெண்களினியல்பு. பெண்கள்எப்பொழுதும் அஸத்தியமும் பாவ சிந்தையுமுடையவர்கள். ஒருக்ஷணத்திலேயே பதியைவெறுத்து விடக்கூடியவர்கள். கணவரின் குலம், அவர்செய்த உபகாரம், கல்வி, வெகுமதி இவைகளை நினைத்துப் புருஷனை நன்கு உபசரியார்கள். அவர்கள் சபலசித்தமுடையவர்கள்." எனக்கூறினர்.

அகஸ்தியமுனிவர் ஸ்ரீராமபிரானை நோக்கி—

○ "ஏஷாஹி ப்ரக்ருதி:ஸ்த்ரீணாமாஸ்ருஷ்டே ரகுநந்தந |
ஸமஸ்தமநுரஜ்யந்தே விஷமஸ்தம் த்யஜந்தி ச ||
ஶதஹ்ருதாநாம் லோலத்வம் ஶஸ்த்ராணாம் தீக்ஷ்ணதாம் ததா |
கருடாநிலயோ: ஶைக்ர்யமநுகச்சந்தி யோஷித: ||"

"ஹே, ரகுநந்தன! ஸ்திரீகள் பர்த்தா செல்வமுற்றிருக்கையில், பிரியத்துடன் சேருகின்றனர்கள். துன்புற்றிருக்கையில் தள்ளிவிடுகின்றனர்கள்; இதுதான் பெண்களுக்கியல்பாகவுள்ள குணங்கள். பெண்கள் மின்னலைப்போல நிலையின்மையையும், வாளின் கூர்மையையும்,கெருடன்,வாயு, இவர்களின் வேகத்தையும் அனுசரிக்கின்றனர்கள்." என அருளிச்செய்தனர்.

இவைகளினால் பெண்களின் இயற்கைக் குணங்கள் கூறியவாறாயிற்று.

இதைப்போலவே ஸ்ரீமத் பாகவதத்தில்—

தன் பத்தினியான திதியின் செயலையறிந்த காச்யபர் ஸ்திரீகளின் ஸ்வபாவகுணங்களைப்பற்றி,

○ வா-ரா. ஆரணி-கா. சரு. 13. சு. 5, 6.

¶ " பாரத்பத்மோத்ஸவம் வக்த்ரம் வசச்ச ச்ரவணாம்ருதம் |
ஹ்ருதயம் க்ஷுரதாராபம் ஸ்த்ரீணாம் கோ வேத சேஷ்டிதம் ||
நஹி கச்சித்ப்ரிய: ஸ்த்ரீணாமஞ்ஜஸாஸ்வாசிஷாத்மநாம் |
பதிம் புத்ரம் ப்ராதரம் வா க்நந்த்யர்தே காதயந்திச ||

$ " மடந்தையர் வதனநல்ல மதியென மாற்றம் வானோர்
கடைந்தவானமுதமென்னக் கவினுமென்றாலுமுள்ளம்
விடங்கொடுபுரிந்தவாள்போல் வெங்கொலைவிரும்புமந்த
அடங்கலாமனஞ்செல்வண்ண மாரறிந்தறையகிற்பார். "

" புல்லுறுகொழுநனே நன்புதல்வரேயேனுமன்பால்
சொல்லுமோரகட்டிற்றோன்றுந் துணைவரேயேனுமாதர்
கொல்லுவர் சினந்தாராயிற் கூசிலா சிறிதுமென்று
அல்லலுற்றழுங்கியன்னாட் கொருவரமளிக்கலுற்றான். "

" ஸ்திரீகளுடைய முகமானது சரத்காலத்திய தாமரை மலர்போல் ஸந்தோஷத்தைக் கொடுக்கக்கூடியது; வார்த்தையோ கேட்க இனிமையானது; ஹிருதயமோ கத்தியின் முனைபோன்றது; அவர்களுடைய சரிதத்தை யாரால் அறிய முடியும்? ஸ்திரீகள் தங்கள் கார்யத்தையே முக்யமாகக் கொண்டவர்கள். அவர்கள் புருஷனையும், புத்திரனையும், ஸஹோதரனையும் கொல்வார்கள்; கொல்லும்படிச் செய்வார்கள்." எனக்கூறியிருப்பதும்

மோஹினிரூபம் தரித்த பகவான் அசுரர்களை நோக்கி—

† " விச்வாஸம் பண்டிதோ ஜாது காமிநீஷு ந யாதி ஹி ||
ஸாலாவ்ருகாணாம் ஸ்த்ரீணாம் ச ஸ்வைரிணீநாம் ஸுரத்விஷ:|
ஸக்யாந்யாஹுரநித்யாநி நூதநம் நூத்நம் விசின்வதாம் ||"

" வித்வான்கள் ஸ்திரீகளை நம்பமாட்டார்கள். செந்நாய் முதலிய துஷ்டமிருகங்கள், ஸ்திரீகள், வ்யபிசாரிகள் இவைக

¶ ஸ்ரீமத்-பாக. ஸ்க. 6. அத். 18. சு. 41, 42.
$ ஸ்ரீ. பாக. கா. 6. அத். 8. பா. 19, 20.
† ஸ்ரீமத்-பாக. ஸ்க. 8. அத். 9. சு. 9, 10.

ளுடைய ப்ரீதி ஸ்திரமானதல்ல. அவர்கள் அடிக்கடி வெவ்வேறு மனிதனைத் தேடுவார்கள்" எனக் கூறியிருப்பதும்,

புரூருவச் சக்கரவர்த்தியைநோக்கி ஊர்வசி—

‡ "மா ம்ருதா: புருஷோऽஸி த்வம் மாஸ்ம த்வாऽத்யுர்வ்ருகா இமே |
க்வாபி ஸக்யம் ந வை ஸ்த்ரீணாம் வ்ருகாணாம் ஹ்ருதயம் யதா ||
ஸ்த்ரியோ ஹ்யகருணா: க்ரூரா துர்மர்ஷா: ப்ரியஸாஹஸா: |
க்நந்த்யல்பார்தேऽபி விஸ்ரப்தம் பதிம் ப்ராதரமப்யுத ||
விதாயாலீகவிஸ்ரம்பமஜ்ஞேஷு த்யக்தஸௌஹ்ருதா:
நவம் நவமபீப்ஸந்த்ய: பும்ச்சல்ய: ஸ்வைரவ்ருத்தய: || "

"நீர் அல்ப புருஷனல்ல, உம்மை செந்நாய்களால் கொல்ல முடியாது; ஸ்திரீகளுடைய ஹிருதயம் செந்நாய்களுடைய மனம்போன்றதானதால் அவர்களுடைய ப்ரீதி நிலையற்றது; ஸ்திரீகள் தயையற்றவர்கள்; பொறுமையற்றவர்கள்; பிடிவாதமுள்ளவர்கள்; அல்ப பிரயோஜனத்திற்காக பர்த்தாவையும், ஸஹோதரர்களையும் கொன்றுவிடுவார்கள். மேலும் அவர்கள் பிரீதியாகவிருப்பதுபோல அபிநயஞ்செய்து ஸ்திரீகளுடைய ஸ்வபாவத்தையறியாத மூடர்களை வஞ்சிப்பார்கள்; உண்மையில் ஸ்நேஹிக்கமாட்டார்கள். அடிக்கடி வெவ்வேறு புருஷனை விரும்புவார்கள்; வ்யபிசாரமுள்ளவர்கள் தங்களிஷ்டப்படி நடப்பவர்கள்; ஆனதால் ஸ்திரீகளை நம்பவேண்டாம்." எனக் கூறியிருப்பதும்,

"நைதா ஜாநந்தி பிதரம் ந குலம் ந ச மாதரம் |
ந ப்ராத்ரூந் நச பர்த்தாரம் நச புத்ராந் நதேவராந் |
லீலவதய: குலம் க்நந்தி கூலாநீவ ஸரித்வரா || "

"பெண்கள் தந்தைதாய்களையும், குலத்தையும், உடன்பிறந்தவர்களையும், கணவனையும் மைத்துனர்களையும், புத்திரர்களையும் பாரார், மஹாநதிகள் கரைகளையிடிப்பதுபோல லீலைகளைச்செய்து குலங்களைக் கெடுப்பார்." என்ற மஹாபாரதமும், நோக்கத்தக்கன.



‡ ஸ்ரீமத்-பாக. ஸ்க. 9. அத். 14. சு. 36, 37, 38.

## (20) துஷ்டசகவாச நிவர்த்தி.

ஸ்ரீராமபிரான் ஸீதாப்பிராட்டியாரை நோக்கி—

○ " லக்ஷயித்வா ஹ்யபிப்ராயம் ப்ரியகாமா ஸுதக்ஷிணு |
ஸம்சோதயதி ராஜாநம் மதர்தம் மதிரேக்ஷணே ||
ஸா ப்ரஹ்ருஷ்டா மஹாராஜம் ஹிதகாமாநுவர்திநீ |
ஜநநீ சார்தகாமா மே கேகயாதிபதே: ஸுதா || "

" அழகான கண்களையுடைய ஸீதே! மிகவும் கெட்டிக்காரியான கைகேயிதேவியானவள் எனக்கு எப்பொழுதும் நன்மையைச் செய்வதிலாசைகொண்டவளானபடியால், மஹாராஜாவினுடைய அபிப்பிராயத்தையறிந்துகொண்டு (பரதன் வருவதையுமெதிர்பாராமல்) இப்பொழுதே எனக்குப் பட்டாபிஷேகம் பண்ணிவிடவேண்டுமென்று அவரைத் தூண்டிக்கொண்டுவருகிறாள். கேகயமஹாராஜாவின் புத்திரியான கைகேயியானவள் என்னிடம் மிகவும் சந்தோஷமுள்ளவள். எனக்கிதத்தைச் செய்வதையே விரும்புகின்றவள். அதற்காக மஹாராஜாவைப் பனுசரித்து எனக்கு சம்பத்தைக் கோருகின்றவளும், தாயுமானவள்." என அருளிச்செய்தனர்.

ஸ்ரீராமபிரான் இளையபெருமாளை நோக்கி—

$ " ஜாநாவிஹி யதா ஸௌம்ய ந மாத்ருஷு மமாந்தரம் |
பூதபூர்வம் விசேஷோ வா தஸ்யா மயி ஸுதேபி வா || "

" அடா, லக்ஷ்மணு! எனக்குத் தாய்மார்கள் விஷயத்தில் கொஞ்சமும் வித்தியாஸமில்லையென்பதையும் கைகேயிதேவிக்கு என்னிடத்திலும், தன் சொந்தப்பிள்ளையான பரதனிடத்திலும் இதுவரையில் வித்தியாஸமன்னியில் அன்புடனிருந்தனளென்பதையும் நீ நன்கறிவாயன்றோ? என அருளிச்செய்தனர்.

இந்தப்பிரகாரமாக ஸ்ரீராமபிரானே அருளிச்செய்திருப்பதாலும்

ஸ்ரீராமபிரானது பட்டாபிஷேகச் செய்தியையறிந்த மந்தரையென்னும் கூனி கைகேயினிடம்வந்து " ஹே, தேவி!

○ வா-ரா. அயோ-கா. சரு. 16, சு. 16, 17.
$ வா-ரா. ஷை சரு. 22, சு. 17.

உனக்குப் பெருந்துன்பம் சமீபத்தில் வருவதாயிருக்கிறது." என்று சொன்னதைக்கேட்டு கைகேயி

‡ "பராவரும் புதல்வரைப் பயக்க யாவரு
முராவருந் துயரைவிட் டுறுதிகாண்பரால்
விராவரும் புவிக்கெலாம் வேதமேயன
விராமனைப் பயந்தவெற் கிடருண்டோவென்றாள்."

"ஸ்ரீராமனைப் பிள்ளையாக அடைந்த எனக்குத் துன்பமேது" என்றனள்.

ஸ்ரீராமபிரானுக்குப் பட்டாபிஷேகம் என்பதாக மந்தரை உரைசெய்யக்கேட்டும் கைகேயிமனஞ் சிறிதும் வேற்றுமைப் படாமல் இம்மங்களச்செய்தியை யுரைத்தனளேயெனச் சந்தோஷங்கொண்டு

† "திவ்யமாபரணம் தஸ்யை குப்ஜாயை ப்ரததௌ சுபம் / "

¶ "ஆயபே ரன்பெனு மளக்க ரார்த்தெழத்
தேய்விலா முகமதி விளங்கித் தேசுறத்
தூயவ ளுவகைபோய் மிகச்சுடர்க்கெலாம்
நாயகமனையதோர் மாலை நல்கினள்."

"மிக்கப் பிரகாசமுள்ள ஒரு இரத்தினமாலையைப் பரிசாக அளித்தனள்."

பின்பு கூனி பலவிதமாய்த் துர்போதனை செய்தபொழுது, கைகேயி கூனியை நோக்கி—

¶ "போதியென்னெதிர்நின்று நின்புன்பொறிநாவைச்
சேதியாதிது பொறுத்தனன் புறஞ்சிலரறியி
னீதியல்லவு நெறிமுறை யல்லவு நினைந்தா
யாதியாதலி னறிவிலியடங்குதியென்றாள்."

"அடீ, துஷ்டே! நீசொன்னதற்கு உன்னுவை அறுக்க வேணும். என் தோழியாதலின் பொறுத்தேன். என்முன் நில்லாதே." எனக்கூறிவிட்டு மறுபடியும்

‡ கம்-ரா. அ-கா. மந்தரை. 47.
† வா-ரா. அ-கா. 7. சு. 32. ¶ கம்-ரா. அ-கா. மந்தரை 52, 67.

† "ராமேவா பரதேவாஹம் விஸேஷம் நோபலக்ஷயே /
தஸ்மாத்துஷ்டாஸ்மி யத்ராஜா ராமம் ராஜ்யே அபிஷேக்ஷ்யதி //"

"அடி, கூனி! ஸ்ரீராமனென்றும் பரதனென்றும் அவ்விருவர்களில் எனக்கு யாதொருவிதமான வித்தியாசமுங்கிடையாது. ஆதலால் சக்கரவர்த்தியார் ஸ்ரீராமபிரானுக்கு அபிஷேகஞ் செய்ய ஏற்பாடுசெய்கின்றாரென்பதினால் நான் மகிழ்ச்சியுடைகின்றேன்." என உரைத்தனள்.

இவ்விதமாகக் கைகேயி கூறியிருப்பதாலும், கைகேயி இயற்கையில் நல்லகுணமுடையவளென்பதும், இராமபிரான்மீது மிக்க அன்புகொண்டு தான்பெற்ற பிள்ளையாகவே கருதிவந்தனளென்பதும், நன்குவிளங்குகின்றன.

பின்பு துஸ்ஸ்வபாவமுடைய மந்தரையென்னும் கூனி இடைவிடாது கைகேயிக்கு துர்ப்போதனை செய்துவரவே—

○ "தீயமந்தரை யிவ்வுரை செப்பலுந்தேவி
தூயசிந்தையுந்திரிந்தது சூழ்ச்சியினிமையோர்
மாயையுமவர்பெற்றுள வரமுண்மையாலு
மாயவந்தணரியற்றிய வருந்தவத்தாலும்."

என்றபடி கைகேயியினது பரிசுத்தமாயிருந்தமனதும்மாறிவிட்டது. மந்தரையின் சூழ்ச்சிக்கிணங்கியகைகேயி அவளைநோக்கி

○ "நன்றுசொல்லினை நம்பியை நளிர்முடிசூட்ட
முன்றுகானத்தி லிராமனைத்துரத்தலிவ்விரண்டு
மன்றதாமெனிலரசன்மு னென்னுயிர்துறந்து
பொன்றிநீங்குதல் புரிவென்யான் போதிநீயென்றாள்."

"பரதனுக்கு முடிசூட்டுதலும், இராமனைக் காட்டிற்கு அனுப்புதலுமாகிய, இருவரங்களைக் கேட்பேன். அவ்வரங்களை மன்னவன் கொடாவிடில அவன் முன்னிலையில்தானே என் உயிரைவிடுவேன். நீ போகலாம்." எனவும்

$ "அஹம் ஹி நைவாஸ்த்ரணனி நஸ்ரஜோ
ந சந்தனம் நாஞ்ஜநபாநபோஜநம் /
ந கிஞ்சிதிச்சாமி ந சேஹ ஜீவிதம்
ந சேதிதோ கச்சதி ராகவோ வநம் //"

† வா-ரா. அ-கா. சரு. 7. சு. 35.
○ கம்-ரா. அ-கா. மந்தரை. 77, 84. $ வா-ரா. சரு. 9. சு. 64.

" அடீ! ஸ்ரீராமன் காட்டுக்குச்செல்லல்வேண்டும், அல்லா விடில் யான் இறத்தல்வேண்டும்; இதுதான் எனது துணிபு; இதைவிட்டு எனக்கு வஸ்திராபரணாதிகள் ஒன்றிலும் விருப்ப மில்லை." எனவும் உரைத்தனள்.

இவ்வாறு துஷ்டையான மந்தரையின் துர்போதனையினால் உத்தமகுலத்தில் ஜனித்தவளும் நற்குணமுடையவளுமான கைகேயியின் மனமானது மாறுதலடைந்து, அமார்க்கப் பிர விருத்தியிலிறங்கிவிட்டது.

ஆதலால் துஷ்டஸஹவாஸத்தை ஸர்வதா பரித்யாகம் செய்ய வேண்டும் என்ற தருமம் ஸித்திக்கின்றது.

" அஸதாம் தர்ஶநாத் ஸ்பர்ஶநாத் ஸம்ஜல்பாச்ச ப்ரஹாஸநாத் |
தர்மாசாரா: ப்ரஹீயந்தே ஸித்யந்தி ந ச மாநவா: || "

" கெட்டவர்களைப் பார்ப்பதாலும், சேருவதாலும், அவர்க ளுடன் சம்பாஷிப்பதாலும், விளையாடுவதாலும் ஒருவருடைய தர்மாசாரங்கள் கெடுதலடைகின்றன. அவர் ஒருபொழுதும் மேன்மையடையார்." (மஹாபாரதம் வனபருவம்)

" அனுரப்யஸதாம் ஸங்கோ ஸத்குணம் ஹந்தி விஸ்த்ருதம் |
குணரூபாந்தரம் யாதி தக்ரயோகாத் யதா பய: || "

" தீயோர்சேர்க்கைச் சிறிதளவாலும் நல்லோரின் குணங்க ளனைத்தையும் கெடுத்துவிடுகிறது. சிறிதளவு மோர் சேர்ந்த தனால், பாலின் ரூபமும் குணமும் மாறுதலடைகின்றன.

" நெருப்பழற் சேர்ந்தக்கானெய்போல்வதூஉ
மெரிப்பச் சுட்டெவ்வ நோயாக்கும் — பரப்பக்
கொடுவினையராகுவர் கோடாருங்கோடிக்
கடுவினையராகியார்ச் சார்ந்து." (நாலடியார்)

" தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற்கேட்பதுவுந் தீதே — தீயார்
குணங்களுரைப்பதுவுந் தீதேயவரோ
டிணங்கியிருப்பதுவுந் தீது."

என்ற ஆன்றோர் வாக்கியங்கள் நோக்கத்தக்கன.



## (21) பெண்கள் கணவரை வசப்படுத்தும் திறமை.

கூனியின் துர்ப்போதனைக்கு உடன்பட்டு கைகேயியானவள் சக்கரவர்த்தியினிடம் தன் எண்ணத்தைப் பூர்த்திசெய்து கொள்ளும்பொருட்டு, ஆபரணங்களைக் கழற்றியெறிந்து, அழுக்காடையுடுத்தி, கோபக்குறியுடன் கோபக்கிரஹத்தில் படுத்திருந்தனள். சக்கரவர்த்தியாரும் ஸ்ரீராமபிரானுக்கு முடிசூட்டுவதான மங்களச்செய்தியைக் கைகேயிக்கு உரைக்கும் பொருட்டு கைகேயியின் அந்தப்புரஞ்சென்று அங்கு அவளைக் காணமல், வருத்தமுற்று கோபக்கிரஹத்திற்குச் சென்று, அங்கு—

† " ஸ வ்ருத்தஸ்தருணீம் பார்யாம் ப்ராணேப்யோபி கரீயஸீம் /
அபாப: பாபஸங்கல்பாம் ததர்ஶ தரணீதலே // "

என்றபடி, மூப்படைந்த சக்கரவர்த்தியார், யௌவன முடையவளும், தம்முயிரினும் மிகப்பிரியமுள்ளவளுமான கைகேயியைக்கண்டு அவள் மனதிலுள்ள கெட்ட எண்ணத்தை யறியாமல்

† " பரிம்ருஶ்ய ச பாணிப்யாம் அபிஸம்த்ரஸ்தசேதந: /
காமீ கமலபத்ராக்ஷீமுவாச வநிதாமிதம் // "

என்றபடி, அவளைத் தம் திருக்கரங்களாலெடுத்து தடவி, காமவேட்கைகொண்டு கட்டியணைத்து அவளிடம் பயந்த மனத்தினராய், அவளை ஸமாதானஞ்செய்யும்பொருட்டு 'அடீ, என் காதலி! என்ன காரணத்தால் சினங்கொண்டிருக்கின்றனை? யாரேனும் உன்னை அவமதித்தனரா? உன் எண்ணத்தைச் சொல்லு.'

† " அஹம் சைவ மதீயாஶ்ச ஸர்வே தவ வஶாநுகா: /
ந தே கிஞ்சிதபிப்ராயம் வ்யாஹந்தும் மஹமுத்ஸஹே //
ஆத்மநோ ஜீவிதேநாபி ப்ரூஹி யந்மநஸேச்சஸி /
பலமாத்மநி ஜாநந்தி நமாம் ஶங்கிது மர்ஹஸி //
கரிஷ்யாமி தவப்ரீதிம் ஸுக்ருதேநாபி தேஶபே // "

† வா-ரா. அ-கா. சரு. 10. ச. 23, 27, 34, 35, 36.

"நானும் என்னைச் சேர்ந்தவர்களும் உன் கட்டளைப்படி நடப்பவர்களாகையால், உனது அபிப்பிராயத்தைக் கொஞ்சமும் மறுத்துரையேன்; உன்பொருட்டு என்னுயிரைக்கூடக் கொடுக்க ஸித்தனாயிருப்பதால் கொஞ்சமும் சந்தேகிக்காமல் உன் விருப்பத்தைத் தெரிவிக்கக்கடவை. என் சக்தியும் உன் ஸாமர்த்தியமும் உனக்கு நன்றாய் தெரியும். உன் விருபபத்தைத் தவறாமல் செய்கிறேனென்று எனது புண்ணியத்தின்பேரில் சபதமாய்க் கூறுகிறேன்." என்று நேர்மையான இருதயத்துடன் சக்கரவர்த்தியார் சொல்ல, அவருடைய வார்த்தையை ஸ்திரப்படுத்திக் கொள்ளும்பொருட்டு குடிலஇருதயமுடைய கைகேயி

¶ "அபிப்ராயஸ்து மே கஶ்சித் தமிச்சாமி த்வயா க்ருதம் /
ப்ரதிஜ்ஞாம் ப்ரதிஜாநீஷ்வ யதி த்வம் கர்துமிச்சஸி //"

"என்னுயிர்காதலரே! எனக்கொரு விருப்பமிருக்கிறது அதை நீர் முடித்துத் தரல்வேண்டும். அவ்விதம் முடித்துக் கொடுக்க உமக்கு இஷ்டமிருக்குமாயின், செய்வேனென சபதம் செய்துகொடுக்கக்கடவீர்." எனக்கூறினள்.

¶ "ஶபேஷே ஜீவநார்ஹேண ப்ருஹி யந்மநஸேச்சஸி /
யம்முஹூர்தமபஶ்யந்து ந ஜீவேயமஹம் த்ருவம் /
தேநராமேண கைகேயி ஶபேதே வசநக்ரியாம் //"

○ "கள்ளவிழ்கோதை கருத்துணர்ந்த மன்னன்
வெள்ளநெடுஞ்சுடர் மின்னின் மின்னநக்கான்
உள்ளமுவந்துள செய்வனேன்றும் லோபேன்
வள்ளலிராமனுன் மைந்தனுணையென்றன்."

"எந்த இராமனைவிட்டுப் பிரிந்து இமைப்பொழுதாயினும் உயிர் வைத்திரேனோ, என் உயிர்வாழ்க்கைக்குக் காரணமாகிய அந்த இராமன்பேரில் ஆணையாக நீ சொல்லுங்காரியத்தை முடித்துத் தருகின்றேன்; உனதுவிருப்பத்தை யுரைக்கக் கடவை." எனச் சக்கரவர்த்தியார் வேண்டியுரைத்தனர். உடனே கைகேயி படுக்கையைவிட்டெழுந்து,

¶ வா-ரா. அ-கா. சரு. 11. சு. 2, 3, 6, 7.
○ கம்-ரா. அ-கா. கைகேசி 7.

¶ " யதாக்ரமேண ஶபஶி வரம் மம ததாஶிச |
தச்ச்ருண்வந்து த்ரயஸ்த்ரிம்ஶத்தேவா: ஸாக்ஷிபுரோகமா: ||"
சந்த்ரார்கௌ நபஶ்சைவ க்ரஹாராத்ர்யஹநீ திஶ: || "

" சக்கரவர்த்தியாரே! என் மனோபீஷ்டத்தைக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டு கிரமப்படி சபதங்கூறி வரமளித்திருக்கிறீர். இதனை முப்பத்திமூன்று தேவர்களும் சந்திர ஸூரியர்களும் பகலிரவுகளும் திசைகளும் அறியக்கடவர்கள்" என சாக்ஷிவைத்துஉறுதிப்படுத்திச் சக்கரவர்த்தியாரைநோக்கி, 'என் காதலரே! முன்பொருஸமயம் தேவாசுரயுத்தத்தில் நான் உமக்குதவிசெய்ததற்காக இரண்டுவரங்கள் எனக்குத் தேவையான ஸமயம் கொடுப்பேனென்று வரமளித்தீரன்றோ.'

¶ " அத்யைவஹி க்ரஹாஸ்யாமி ஜீவிதம் த்வத்விமாநிதா || "

○ " ஆன்றவ னவ்வுரைகூற வையமில்லாள்
தோன்றியே பேரவலந் துடைத்ததுண்டேல்
சான்றிமையோர் குலமாக மன்ன நீயன்
றேன்ற வரங்களிரண்டு மீதி யென்றாள்."

"அவ்விரண்டு வரங்களையும் இப்பொழுதுபெற்றுக்கொள்ளுகிறேன். நீர் கொடுக்கவேண்டும். மறுப்பீராகில் எனதுயிரை மாய்த்துக்கொள்வேன்." என்றனள்.

¶ " வாங்மாத்ரேண ததா ராஜா கைகேய்யா ஸ்வவஶே க்ருத: |
ப்ரசஸ்கந்த விநாஶாய பாஶம் ம்ருக இவாத்மந: || "

வேடனுடைய கானத்தைக்கேட்டுத் தன் வசமழிந்து மான் தான் இறப்பதின்பொருட்டே வலையுள்வந்தகப்பட்டுக்கொள்வதுபோலச் சக்கரவர்த்தியாரும் கைகேயியினால் முன்கொடுத்தவரங்களைக்கேட்டமாத்திரத்தினாலே தருமமென்னும் வலையிற்சிக்கிக்கொண்டு கைகேயியை நோக்கி—

‡ " வரங்கொளவித்துணை மன்னு மல்லலெய்தி
இரங்கிடவேண்டுவதீவனே கோளேன்பால்
பரங்கெடவிப்பொழுதே பகர்ந்திடென்றான்
உரங்கொண் மனத்தவன் வஞ்சமோர்கிலாதான்."

¶ வா-ரா. அ-கா. சரு. 11. சு. 13, 14, 22, 21.
○ கம்-ரா. அ-கா. கைகேசி 8. ‡ கம்-ரா. அ-கா. கைகேசி. 8, 9.

"அடி, என் காதலி! உனக்குவேண்டும் வரங்களைக்கேட்டுக் கொள். இப்பொழுதே தருகின்றேன்." எனச் சக்கரவர்த்தியார் கைகேயியின் கபடத்தன்மையைச் சற்றுமறிந்துகொள்ளாமல்கூறவே, மிகக்கொடியவளான கைகேயி சக்கரவர்த்தியாரை நோக்கி

$ "யோ அபிஷேக ஸமாரம்போ ராகவஸ்யோபகல்பித: /
அநேநைவாபிஷேகேண பரதோ மே அபிஷிச்யதாம் //"
"நவ பஞ்ச ச வர்ஷாணி தண்டகாரண்யமாஸ்ரித: /
சீரஜிந ஜடாதாரீ ராமோ பவது தாபஸ: //"

‡ "ஏயவரங்களிரண்டி னொன்றினாலென்
சேயரசாள்வது சீதைகேள்வனொன்றால்
போய்வனமாள்வதெனப் புகன்றுநின்றாள்
தீயவை யாவையினுஞ் சிறந்த தீயாள்."

"முன்பு நீர் எனக்களித்த இரண்டு வரங்களில் ஒன்றினால் ஸ்ரீராமனுக்கு அபிஷேகத்தின்பொருட்டுச் சேகரிக்கப்பட்ட பொருள்களினால் இப்பொழுதே பரதனுக்கு அபிஷேகஞ்செய்விக்கவேண்டும். இரண்டாவது வரத்தினால் ஸ்ரீராமன் இப்பொழுதே மான்தோலுடுத்திச் சடைதரித்துத் தவசியாகிப் பதினான்கு வருஷம் வனவாஸஞ்செய்யக்கடவன்" என்றனள். விஷஸர்ப்பத்தினுங் கொடியாளான கைகேயி இவ்வண்ண முரைத்த வசனங்களைக்கேட்டவுடன்

🌐 "தத: ஸ்ருத்வா மஹாராஜ: கைகேய்யா தாருணம் வச: /
சிந்தாமபிஸமாபேதே முஹூர்தம் ப்ரததாப ச //
கிம்நு மே யதி வா ஸ்வப்நஸ்சித்தமோஹோபி வா மம /
அநுபூதோபஸர்கோ வா மநஸோ வாப்யுபத்ரவ: /
இதி ஸம்சிந்த்ய தத்ராஜா நாப்யகச்சத்ததாஸுகம் //"

$ வா-ரா. அ-கா. சரு. 11. சு. 25, 27.
‡ கம்-ரா. அ-கா. கைகேசி. 10
🌐 வா-ரா. அ-கா. சரு. 12. சு. 1, 2.

‡ "நாகமெனுங் கொடியாட னாவினீந்த
சோகவிடந் தொடரத் துணுக்கமெய்தா
ஆகமடங்கலும் வெந்தழிந்தராவின்
வேகமடங்கிய வேழமென்ன வீழ்ந்தான்."

சக்கரவர்த்தியார்— "ஒரு முஹூர்த்தகாலம் மூர்ச்சித்திருந்து, பின் தெளிந்து, கைகேயியின் வசனத்தை நினைத்து, இஃது என்ன? ஸ்வப்பனமா? அல்லது சித்தப்ரமையா? அல்லது வியாதியினாலேற்படும் மயக்கமா? என்று பலவாறாக ஆலோசித்தும் ஒன்றுந் தோன்றாமல் கொஞ்சமும் சுகமடையாமல், வேகமடங்கிய யானைபோல தரையில்விழுந்து தயங்கினர்."

இந்தப்பிரகாரமாக, யௌவன வயதுடைய கைகேயியானவள், தம்மீது மிக்கக் காதலுடையவரும் மூப்படைந்தவருமான சக்கரவர்த்தியாரைத் தமது விருப்பத்தையளிப்பதாகச் சபதஞ் செய்யும்படி செய்வித்து, அதற்கு ஸர்வதேவதைகளையும் சாக்ஷியமேற்படுத்தி, இரண்டு வரங்களைக்கேட்டு சக்கரவர்த்தியாரைத் துயர்க்கடலில் விழச்செய்திருப்பதால்

ஸ்திரீகள் பெரும்பாலும், தங்கள்மீது காமாஸக்தர்களான தம் கணவரை தமது மோகவலையிற் சிக்கச்செய்து தாம் கருதிய காரியங்களை முடித்துக்கொள்ளும் ஆற்றலுள்ளவர்கள் என்பதும், மனைவியிடத்தில் மோகங்கொண்டு அவர்களிடம் அதிகவிசுவாசங் கொண்டவர்கள் மிகுந்ததுயரமடைய நேரிடுமென்பதும், ஆதலால் மனைவியிடத்தில் அதிக சிநேகமாவது, விரோதமாவது, அதிக நம்பிக்கையாவது கொள்வது கூடாதென்பதும் ஸூசிதம்.

இதைப்போல ஸ்ரீ பாகவதத்தில் கூறியுள்ள இதிஹாஸம்—

சுகப்ரஹ்மரிஷி பரீக்ஷித்துமஹாராஜாவை நோக்கி கூறுகின்றார்.

இந்திரனால் திதிதேவியின் புத்திரர்கள் கொல்லப்பட்டார்கள். அப்பொழுது திதிதேவி துக்கத்தையும் கோபத்தையும் அடைந்து இந்திரனுடைய கர்வத்தைப் போக்கக்கூடிய புத்திரனையடையவேண்டிய உபாயத்தைச் செய்யவேண்டுமெனத் தீர்மானித்து,

‡ கம்-ரா- அ-கா, கைகேசி. 11.

¶ " இதி பாவேந ஸா பர்துராசசாராஸக்ருத்ப்ரியம் |
ஸுஶ்ரூஷயாநுராகேண ப்ரஶ்ரயேண தமேந ச ||
பக்த்யா பரமயா ராஜந்மநோஜ்ஞைர்வல்கு பாஷிதை: |
மநோ ஜக்ராஹ பாவஜ்ஞா ஸுஸ்மிதாபாங்கவீக்ஷணை: ||
ஏவம் ஸ்திரியா ஜடீபூதோ வித்வாநபி விதக்தயா |
பாடமித்யாஹ விவஶோ ந தச்சித்ரம் ஹி யோஷிதி || "

* " வரம்பெறுமைந்தர்தம்மை வாசவற்காகப்பெம்மான்
உரஞ்சிதைத்துயிரைநீப்ப வொண்ணுதற்றிதியுண்மாழ்கிப்
புரந்தரன் றன்னைக்கொல்லும் புதல்வனைப் பெறுதல்வேண்டி
இருந்தவன் மகிழும்வண்ண மேவல்செய்தினிதினின்றாள்."

" காசிபனுளமுவப்பக் கருதினளேவல்செய்தும்
பூசலங்குடுமிவைவேல் புரைவிழிக் கடைநோக்குற்றும்
நேசன்னிலவுகால நின்றனணைகைத்துமந்த
ஆசிலாதவனையன்னாடன் வயமாக்கினளால்."

" தமது பர்த்தாவான காச்யபரை, சுச்ரூஷைசெய்வது, பிரியமாகப் பேசுவது, வணக்கம், இந்திரியங்களையடக்குவது பக்தி கடைக்கண்பார்வை முதலியவைகளால் உபசரித்து அவரைத் தன் வசப்படுத்திக்கொண்டாள். அந்த காச்யபர் வித்வானாலும் ஸ்திரீயினால் ஜெயிக்கப்பட்டு அவளுடைய கருத்தை யுணராமல் அவளுக்கு வசப்பட்டார்.

¶ " ஏவம் ஶுஶ்ரூஷிதஸ்தாத பகவாந்கஶ்யப: ஸ்த்ரியா |
ப்ரஹஸ்ய பரமப்ரீதோ திதிமாஹாபிநந்த்ய ச ||
வரம் வரய வாமோரு ப்ரீதஸ்தே஽ஹ மநிந்திதே |
ஸ்திரியா பர்தரி ஸுப்ரீதே க: காம இஹ சாகம: ||

இப்படி பணிவிடைசெய்யும் திதியை நோக்கி காச்யபர் சிறித்துக்கொண்டு " ஓ, அழகான துடையுள்ளவளே! உன் பணிவிடையால் யான் சந்தோஷமடைந்தேன். உனக்குவேண்

¶ ஸ்ரீ-பாக. ஸ்க. 6. அத். 18. சு. 27, 28, 29, 31, 32.
* ஸ்ரீ-பாக. கா. 6. அத். 8. பா. 15, 16.

டும் வரத்தைக்கேள். பர்த்தா பத்தினியிடம் சந்தோஷமடைந்தால் எதுதான் கிடைக்காது." எனக்கூறினர். அதைக்கேட்டு திதியானவள் பர்த்தாவை நோக்கி—

¶ " வரதோ யதி மே ப்ரஹ்மந்புத்ரமிந்த்ரஹணம் வ்ருணே |
அம்ருத்யும் ம்ருதபுத்ராऽஹம் யேந மே காதிதௌ ஸுதௌ ||"

* " மாதவன் மகிழ்ச்சிகூர்ந்து மனையவள்வதனநோக்கிப்
பேதைநீவிழைந்ததென்கொல் பெறுதியென்றுரைத்தலோடும்
ஓதுவாசவனைக்காது மொருமகவளித்தியென்று
தாதுறுகுழலாண்மங்கை சாற்றினள் கொடுஞ்சொலன்றே."

" ஓ, பிராஹ்மணா! நீர் எனக்கு வரங்கொடுப்பது உண்மையானல் என்னுடைய புத்திரர்களைக்கொன்ற இந்திரனைக் கொல்லக்கூடிய சக்தியுள்ள புத்திரன் எனக்குப் பிறக்கும்படி அனுக்கிரஹிக்கவேண்டும்." என்று கேட்டுக்கொண்டாள். அதனைக் கேட்ட காச்யபர் கவலையடைந்து—

¶ " நிஸம்ய தத்வசோ விப்ரோ விமநா: பர்யதப்யத |
அஹோ அதர்ம: ஸுமஹாநத்ய மே ஸமுபஸ்தித: ||
அஹோ அத்யேந்த்ரியாராமோ யோஷிந்மய்யேஹ மாயயா |
க்ருஹீதசேதா: க்ருபண: பதிஷ்யே நரகே த்ருவம் ||
கோऽதிக்ரமோऽநுவர்தந்த்யா: ஸ்வபாவமிஹ யோஷித: |
திங் மாம் பதாபுதம் ஸ்வார்தே யதஹம் த்வஜிதேந்த்ரிய: ||"

* " அவ்வுரைகேட்டலோடு மரும்பெறற் புதல்வற்கொல்லும்
வெவ்வரமளிப்பர்கொல்லோ விரும்பினேடுயிர்த்துளோரும்
நவ்வியின் விழிக்குநங்காய் நயந்தது நன்று நன்றென்
றெவ்வமில்புகழ்சாலொப்பிலிருந்தவனுளத்தியம்பும்."

" மிகுந்த அதருமம் நேர்ந்ததே; விஷயங்களிலும் இந்திரியங்களிலும் ஆசைப்பட்டு ஸ்திரீரூபமான மாயையால் பிடிக்கப்பட்டு நான் நரகத்தில் விழப்போகிறேன். ஸ்திரீயாகிய திதியின் மதுரமான வார்த்தையினால் மதிமயங்கி நான் என்னுடைய

¶ ஸ்ரீ-பாக. ஸ்க. 6. அத். 18. சு. 37, 38, 39, 40

* ஸ்ரீ-பாக. கந். 6. அத். 8. பா. 17, 18.

அநுகூலத்தில் தவறுதலடைந்தேன்; என்னைச் சுடவேண்டும்" என தன்னையே நொந்து வருந்தினர்.

இந்த இதிஹாஸமும்

† " ஏதாஹி ரமமாணஸ்து வஞ்சயந்தீஹ மாநவாந் /
ந சாஸம் முச்யதே கச்சித் புருஷோ ஹஸ்தமாகத: //"

"இந்த ஸ்திரீகள் தங்கள் மாயைகளினால் புருஷர்களை ஏமாற்றுகின்றனர்; அவர்கள் கைக்குள்ளகப்பட்ட ஆண்பிள்ளையொருவனும் விடுபடுவதில்லை.

† " நாஸாம் ஸ்நேஹோ நரை: கார்யஸ்ததைவேர்ஷ்யா ஜநேம்வர "/
கேதமாஸ்தாய புஞ்ஜீத தர்மமாஸ்தாய சைவஹ //
நிஹந்யாதந்யதா குர்வந்நர: கௌரவநந்தந //"

" அரசனே! புருஷர்கள் இவர்களிடத்தில் சிநேகத்தையும் பகையையும் செய்யத்தகாது. சிரமத்தை வஹித்து தருமத்தையனுசரித்து அனுபவிக்கவேண்டும். இதற்கு மாறாகச்செய்யும் மனிதன் கெடுவான்."

என பீஷ்மர் யுதிஷ்டிரனை நோக்கிக் கூறியிருப்பதும்,

" யோ மோஹாந்மந்யதே மூடோ ரக்தேயம் மம காமிநீ /
ஸ தஸ்யா வமகோ நித்யம் பவேத் க்ரீடாசகுந்தவத் //"

" எனது மனைவி என்மீது மிக்க பிரியமாயிருக்கின்றனள்; என்று எந்த மூடன் எண்ணுகிறானோ, அவன் அவள் வசத்தையடைந்து விளையாட்டுப் பறவைபோல் ஆகின்றான் "

" ஓதலுமொன்றுவுள மொன்றுச் செய்கையொன்றுப்
பேதைநிலைமைபிடித்துப் பெரும்பவஞ்செய்
மாதர்வலைப்பட்டு மயக்குற்றாரல்லவோ
சாதல் பிறப்பிற் றடுமாறுகின்றாரே." (கந்தபுராணம்)

என்பனவும், நோக்கத்தக்கன.



† பாரதம் - அநு - அத் 74. 78.

## (22) பெண்களின் பிடிவாதகுணம்.

கைகேயி கேட்டுக்கொண்ட வரத்தினிடமாக தரையில் மூர்ச்சித்துவிழுந்த சக்கரவர்த்தியார் மூர்ச்சை தெளிந்தெழுந்து கைகேயியை நோக்கி—

† "நிருஸம்ஸே துஷ்டசாரித்ரே குலஸ்யாஸ்ய விநாஸிநி /
கிம் க்ருதம் தவ ராமேண பாபே பாபம் மயாபி வா //
ஸதா தே ஜநநீதுல்யாம் வ்ருத்திம் வஹதி ராகவ: /
தஸ்யைவ த்வமநர்தாய கிம் நிமித்தமிஹோத்யதா //
நதுராமம் விநாதேஹே திஷ்டேத்து மமஜீவிதம் /
ததலம் த்யஜ்யதாமேஷ நிஸ்சய: பாபநிஸ்சயே //
அபிதே சரணௌமூர்த்நா ஸ்ப்ருஸாமி யேஷ ப்ரஸீதமே //
மம வ்ருத்தஸ்ய தீநஸ்ய கதாந்தஸ்ய தபஸ்விந: /
தீநம் லாலப்யமாநஸ்ய காருண்யம் கர்துமர்ஹஸி //
அஞ்சலிம் குர்மி கைகேயி பாதௌ சாபி ஸ்ப்ருஸாமி தே /
ஸரணம் பவ ராமஸ்ய மாதர்மோ மாமிஹ ஸ்ப்ருஸேத் //"

$ "கண்ணேவேண்டுமென்னினு மீயக்கடவேனென்
உண்ணேராவிவேண்டினு மின்றேயுனதன்றோ
பெண்ணேவண்மைக் கைகயன்மானேபெறுவாயேல்
மண்ணேகொண்ணீமற்றைய தோன்றுமறவென்றான்."

"கோன்மேற்கொண்டுங் குற்றமகற்றிக் குறிகொண்டார்
போன்மேலுற்றதுண்டெனினன்றும் பொறையென்னாக்
கான்மேல்வீழ்ந்தான் கந்துகொல்யானைக் களிமன்னர்
மேன்மேல்வந்து முந்திவணங்கி மிடைதாளான்."

"நின்மகனாள்வானீயினிதாள்வாய் நிலமெல்லாம்
உன்வயமேயாளுதிதந்தேனுரைகுன்றேன்
என்மகனென் கண்ணென்னுயிரெல்லாவுயிர்கட்கும்
நன்மகனிந்த நாடிறவாமை நயவென்றான்."

"மெய்யே யென்றன் வேரற நூறும் வினைநோக்கி
நய்யாநின்றே னுவுழுலர்ந்தே னளினம்போல்
கய்யாநின்றென் கண்ணெதிர் நின்றுங்கழிவானேல்
உய்யேனங்கா யுன்னபயம் மென்னுயிரென்றான்."

---

† வா-ரா. அ-கா சரு. 12. சு. 7, 8, 14, 15, 34, 36.

$ கம்-ரா. அ-கா. கைகேசி. 28, 25, 32, 33.

" அடி, துஷ்டே! கெட்டநடத்தையுள்ளவளே! குலகேடீ! உனக்கு இராமனாலாவது, என்னாலாவது என்ன தீங்கு செய்யப்பட்டது? பெற்றதாயைப்போலவே உன்னை நினைத்து உனக்கு வழிபாடுசெய்துவருகின்றனனே. அப்படியிருக்க அவன் விஷயத்திலே நீ என்னகாரணத்திற்காக கெடுதிசெய்ய முயற்சிக்கின்றனை? ஸ்ரீராமச்சந்திரனை நீங்கி சிறிதுநேரமும என்னுயிர் என்னுடலிலிருக்கமாட்டாதென்பது நிச்சயம். ஆதலால் இவ்வெண்ணத்தை விட்டுவிடு. இராஜ்யத்தைவேணுமென்றாலும் பெற்றுக்கொள். இரண்டாவது வரமாகிய என்மகன் என் கண்மணி இராமன் வனஞ்செல்லவேண்டுமென்றதை மட்டும் மறந்துவிடு. உன் காலைப்பிடித்துத் தலைமேல்வைத்துக் கொண்டு வேண்டுகிறேன். நான் விருத்தாப்பியனாயும், ஆதரவற்றவனாயும், உன் கணவனாயுமிருப்பதினால் என்னிடத்தில் மனமிரங்கியருள்செய்யக்கடவை. திரும்பவும் உனக்குக் கைகூப்பி காலைப்பிடித்து வேண்டிக்கொள்ளுகிறேன். நீ இராமனுக்கு அபயமளித்து என்னையும் அதர்மத்தில்நின்றும் காக்கக்கடவை." என பலவிதமாகச் சொல்லிவேண்டினர்.

இவ்வாறுசக்கரவர்த்தியார்கைகேயியின்காலில்விழுந்துமன்றாடி யாசித்தும்,கைகேயி சற்றும் மனமிரங்காமல் பர்த்தாவைநோக்கி

† " ஸத்யம் தர்மம் பரித்யஜ்ய ராமம் ராஜ்யேஅபிஷிச்ய ச |
ஸஹகௌஸல்யயா நித்யம் ரந்துமிச்சஸி துர்மதே ||"

† " பவத்வதர்மோ தர்மோ வா ஸத்யம் வா யதி வாந்ருதம் |
யத்த்வயா ஸம்ச்ருதம் மஹ்யம் தஸ்ய நாஸ்தி வ்யதிக்ரம: ||
அஹம் ஹி விஷமத்யைவ பீத்வா பஹு தவாக்ரத: |
பச்யதஸ்தே மரிஷ்யாமி ராமோ யத்யபிஷிச்யதே ||
யதா நாந்யேந துஷ்யேயம்ருதே ராம விவாஸநாத் |
பாதேநாத்மநா சாஹம் சபே தே மநுஜாதிப | "

$ " ஆழிப்பொற்றேர் மன்னவனிவ்வா றயர்வெய்திப்
பூழிப்பெற்றேன் முற்றுமடங்கப் புரள்போழ்தில்
ஊழிற் பொய்த்தாலென்னுரையின்றே யுயிர்மாய்வேன்
பாழிப்பொற்றூர் மன்னவவென்றாள் பகையற்றாள். "

† வா-ரா. அ-கா. சரு. 12. சு. 45, 46, 47, 49,
$ கம்-ரா. அ-கா. கைகேசி. 42.

" கெட்டபுத்தியுடையவரே! நீர் ஸத்தியத்தையும், தருமத்தையும் விட்டுவிட்டு இராமனுக்குத் திருமுடிசூட்டிக் கௌஸலையுடன் நித்தியமும் ரமிக்க விரும்புகின்றீர். நான் கேட்டவரம் தருமமோ, அதருமமோ, ஸத்தியமோ, அஸத்தியமோ, எப்படியிருந்தாலும் சரி, நீர் எனக்கு வரமளித்தபடி நான் கேட்டதில் இனி மாறுதல்கிடையாது. இராமனுக்கு நீர் முடிசூட்டுவதாயிருந்தால் இப்பொழுதே உம்முடைய முன்பு விஷத்தைப் புசித்துப் பிராணனைவிடுவேன். இராமனை வனத்திற்கு ஓட்டிவிடுவதினாலல்லாது வேறு எந்தவிதத்திலும் நான் சந்தோஷமடையேன். உம்மீதும், பரதன்மீதும சபதம்செய்து கூறுகின்றேன்." என, வன்மொழி மொழிந்தனள்.

கைகேயியின் இகழ்ச்சியான வார்த்தைகளைக் கேட்டுச் சக்கரவர்த்தியார், "நாம் எவ்வளவோ நயந்து வேண்டியும் இவள் ஒரே பிடிவாதமாக இருக்கின்றனளே." எனப் பெருந்துன்பமுற்று ஒன்றுந் தோன்றாமல் முகூர்த்தகாலம் மயங்கியிருந்து பின்பு தெளிந்து, மறுபடியும்

† " விபூடித்தபாவஸ்ய ஸதுவ்ஷ்டபாவா தாம்ரேக்ஷணஸ்யாப்ரு குலஸ்ய ராஜ்ஞ: |
ப்ருத்வா விசித்ரம் கருணம் விலாபம் பர்த்ருர்ந்ருஸம்ஸா நசகார வாக்யம் ||"

பரிசுத்தமனத்தரான சக்கரவர்த்தியார் மிக்க தீனமாய் பிரார்த்தித்து வேண்டியும், அவரது வேண்டுகோளை, கெடுமதியும் கடின ஹிருதயமுமுடைய கொடும்பாவியான கைகேயி சிறிதும் அங்கீகரிக்கவில்லை.

இதனால் பெண்கள் ஸாஹஸமும் பிடிவாதகுணமுமுடையவர்களென்பதும், அவர்களிடம் புருஷர்கள் அதிக விசுவாசம் வைக்கக்கூடாதென்பதும் ஸூசிதம்.

$ " அஞ்சலையனதல்லல் கண்டு முள்ளம்
நஞ்சிவளணிலளென்ன நாணமாமால்
வஞ்சனை பண்டு மடந்தைவேடமென்றே
தஞ்செனமாதரை யுள்ளலார் கடக்கோர்."

† வா-ரா. அ-கா. சரு. 13. சு. 25. $ கம்-ரா. அ-கா. கைகேசி. 17.

" கணவர்படும் துன்பத்தைக்கண்டும் கைகேயி சிறிதளவும் பயமாவது, இரக்கமாவது, வெட்கமாவது அடையவில்லை. ஆனதால் வஞ்சகமே பெண்ணுருபமாய்த் தோன்றியிருப்பதாக எண்ணி பெரியோர் தம் மனைவியைத் தஞ்சமெனக் கொள்ளார். " என்ற கம்பராமாயணம் நோக்கத்தக்கது.



## (23) ஸ்திரீகளின் சினேகப்பான்மை.

† " ததஃ ஸ ராஜா புநரேவ மூர்ச்சிதஃ ப்ரியாமதுஷ்டாம் ப்ரதிகூலபாஷிணீம் /
ஸமீக்ஷ்ய புத்ரஸ்ய விவாஸநம் ப்ரதி க்ஷிதௌ விஸம்ஜ்ஞோ நிபபாத துஃகிதஃ // "

" இதுவரை தனக்கு அத்தியந்தம் பிரியமாயும் நல்ல ஸ்வபாவத்துடனும் இருந்த கைகேயி இப்பொழுது தனனிடத்தில் பிரதிகூலமாய்ப் பேசுவதையும் தனதருமைப் புத்திரன் வனவாஸஞ்செல்லவேண்டியிருப்பதையும் நினைத்துச் சக்கரவர்த்தியார் துக்கமேலிட்டு மூர்ச்சித்துத் தரையில் விழுந்தனர்.

இதனுலும் முன்பு சக்கரவர்த்தியார் கைகேயியை நோக்கி—

○ " ந ஹி கிஞ்சிதயுக்தம் வா விப்ரியம் வா புரா மம /
அகரோஸ்த்வம் விஶாலாக்ஷி தேந ந ஶ்ரத்ததாம்யஹம் // "

" முன்பு ஒருபொழுதும் எனக்கு அஹிதத்தையாயினும், என் மனதிற்குப் பிரியமில்லாத செயல்களையாயினும் செய்ததில்லையே; ஆதலால் இப்பொழுதும் நீ தீமைசெய்வாய் என்று நம்பேன். " எனக் கூறியிருப்பதாலும்,

கைகேயி இதுவரை பர்த்தாவினிடத்தில் மிகுந்த அன்புடனிருந்து, அவரிடம் தாம்பெறவேண்டியதான யௌவன சுகத்தையும், சத்புத்திரனையும், ஆடையாபரணாதி செல்வங்களையும் அடைந்துவிட்டபடியால், இப்பொழுது " கள்ளினற்குழலாள் மூத்தாற் கணவனைக்கருதிப்பாராள் " என்றபடி சக்கரவர்த்தியாருடைய வார்த்தைகளை உல்லங்கனஞ்செய்து வெறுப்பாகப் பேசினளென ஏற்படுகின்றது.

† வா-ரா. அ-கா. சரு. 13. சு. 26. ○ வா-ரா. அ-கா. சரு. 12. சு. 20.

இதனால் ஸ்திரீகள் யௌவனத்தில் தமது பர்த்தாவினிடம் சினேகப்பான்மையுடனும் அன்புடனுமிருப்பதெல்லாம் ஸ்வப்ர யோஜனத்தின்பொருட்டே என்பது ஸூசிதம்.

" ஏதா: ஸ்வார்தபரா நார்ய: கேவலம் ஸ்வஸுகே ரதா: |
ந தாஸாம் வல்லப: கோऽபி ஸுதோऽபி ஸ்வஸுகம் வினா || "

" ஸ்திரீகள் தங்களுடைய சுகத்தையும் லாபத்தையுமே முக்கியமாகக்கருதுபவர்கள். " என்ற ஆன்றோர் வாக்கியம் நோக்கத்தக்கது.

(2) ஸ்ரீராமபிரான் வனஞ்சென்றால் தம்முடைய பிராணன் போய்விடுமென்று சக்கரவர்த்தியார் கூறியும் கைகேயி சற்றும் லக்ஷியஞ்செய்யாமல் தனமகன் பரதாழ்வானுக்கு இராஜ்யமும் இராமபிரானுக்கு வனவாஸமுமாகிய இரண்டுவரங்களையும் கண்டிப்பாகக் கொடுக்கத்தான் வேண்டுமென்று பிடிவாதஞ்செய்திருப்பதால் ஸ்திரீகள் புத்திரவதிகளானபின் புத்திரவாஞ்சையினால் தங்கள் புதல்வரின் செல்வஅபிவிருத்தியையும் நலத்தையுமே கருதுவதன்றி பர்த்தாவின் பிராணபயத்தையுங் கவனியாமல் அவர்களை உபேக்ஷைசெய்வார்களென்பது ஸூசிதம்.

" நஹி பார்யேதி விஶ்வாஸ: கார்ய: பும்ஸா ஸுதஞ்சந |
நஹி கார்யமநுத்யாதி நாரீ புத்ரவதீ ஸதி || " (பாரதம்)

" மனைவி என்ற நம்பிக்கை புருஷன் எவ்வகையிலும் வைக்கத்தகாது. புத்திரர்களைப்பெற்ற ஸ்திரீ புருஷனிடத்தில் காரியமிருப்பதாக நினைப்பதில்லை. " என பாரியையான ஜரிதையைப் பார்த்து மந்தபாலர் கூறிய வசனமும்,

† " பிறவிக்குருடராகிய தீர்க்கதமஸ் என்னும் ரிஷியின் பத்நியாகிய ப்ரத்வேஷியென்னும் ஸ்திரீ தனக்குப் புத்திரர்கள் கிடைத்ததினால் தன்கணவனை விரும்பவில்லை. புகைக்கின்ற தன் மனைவியை நோக்கி அந்த ரிஷி " என்னை ஏன் பகைக்கிறாய்? " என்று கேட்டதற்கு அவள் " பாரியையைப் போஷிப்பதனால் பர்த்தாவென்றும் பாதுகாப்பதனால் பதியென்றும்

† மஹாபாரதம். ஆதி. அத். 113.

சொல்லுகின்றனர்; நான் உம்மைப் போஷிப்பதற்கு முடியாதவள். சிறந்த தபஸுள்ளவரே! எந்தக்காலமும் கஷ்டத்தினால் வருந்திக்கொண்டு பிறவிக்குருடனையும் பிள்ளைகளையும் நான் போஷிக்கமாட்டேன்." என்றனள். அந்த ரிஷி தமது மனைவி சொன்ன அந்தச் சொல்லைக்கேட்டுக் கோபத்துடன் புத்திரர்களோடுகூடிய ப்ரத்வேஷியென்னும்பத்தினியைநோக்கி, "என்னை ராஜக்ருஹத்திற்குக்கொண்டுபோ; உனக்குத் தனலாபம் நேரிடும்." என்று மறுமொழிசொன்னார். ப்ரத்வேஷியென்பவள், "பிராமணா! நீர் கொடுக்கும் தனம் துன்பத்திற்குக் காரணம்; அதை நான் விரும்பேன். பிராமணச்ரேஷ்டரே! உம் இஷ்டம்போலே செய்யும். முன்போல் நான் உம்மைப் போஷிக்கமாட்டேன்." என்று சொல்லிவிட்டு புத்திரர்களை நோக்கி— 'இவரைக் கங்கையிற்றள்ளுங்கள்' என்றாள். கௌதமர் முதலிய புத்திரர்கள் அறிவின்மையால் குருடனும்கிழவனுமாகிய இவனை எதற்காகக் காப்பாற்றவேண்டுமென்று நினைத்து அந்த ரிஷியைக் கட்டி ஓடத்திற்போட்டு கங்கையில் விட்டுவிட்டனர்.

இந்த இதிஹாஸமும் நோக்கத்தக்கன.

(3) புத்திரசோகத்தினால் பொன்னுலகமடைந்த சக்கரவர்த்தியாரின் உடலைத் தைலக்கொப்பறையில் போட்டுவைத்திருக்கவும், தூதுவர்சென்று கேகயதேயத்தினின்று பரதசத்துருக்கனர்களை அயோத்திக்கு அழைத்துவர, பரதாழ்வான், பட்டணம் முழுவதும் அலங்காரமின்றி சோபையிழந்தும், ஜனங்கள் குதூஹலமில்லாமல் சோகத்துடனிருப்பதையுங்கண்டு மனதில் கவலையடைந்து, பிதாவைக் காணும்பொருட்டு அரண்மனை சென்று பார்க்க, அங்கு பிதாவைக் காணாததினால் மிக்கத்துயரங் கொண்டு, தமது மாதாவாகிய கைகேயியின் அந்தப்புரத்தில் ஒருக்காலிருக்கலாமென் றெண்ணி அங்கு சென்றபொழுது, கைகேயிமட்டும் தனித்திருக்கக்கண்டு பின்னும் அதிகத்துயரமடைந்து விரைவாகச் சென்று மாதாவின் திருவடிகளில் தெண்டம் ஸமர்ப்பித்தனர். கைகேயி தன் மைந்தனைத் தழுவி மடியில் உட்காரவைத்துக்கொண்டு

† " அத்யதேகதிசித்ராத்ர்யஸ்ச்யுதஸ்யார்யக வேஸ்மந : |
அபிராத்வ ஸ்ரம: ஸீக்ரம் ரதேநாபததஸ்தவ ||
ஆர்யகஸ்தே ஸகுஸலீ யுதாஜித் மாதுலஸ்தவ |
ப்ரவாஸாச்ச ஸுகம் புத்ர ஸர்வம் மே வக்துமர்ஹஸி || "

$ " வந்து தாயை யடியில் வணங்கலும்
சிந்தையாரத் தழுவினள் தீதிலா
எந்தையென்னைய ரெங்கையரென்றனள்
அந்தமில் குணத்தானு மதாமென்றான். "

" மகனே! நீ யுன் மாதாமகன் மாளிகையைவிட்டுப் புறப்பட்டு எத்தனை தினங்களாயின? நீ துரிதமாகப் பிரயாணஞ் செய்து வந்ததனால் உனக்குக் களைப்பு உண்டாகவில்லையா? உன் மாதாமகன், அம்மானாகிய யுதாஜித்து முதலியவர்கள் க்ஷேமமாயிருக்கின்றனர்களா? இவையெல்லாம் உரைக்கக்கடவை." என வினவினள். பரதாழ்வானும் தமது மாதாவின் கேள்விகளுக்கு விடையளித்து, "அம்மா! என் தந்தையார் எங்கெழுந்தருளியிருக்கின்றனர்? அவர் திருவடிகளில் தெண்டம்ஸமர்ப்பிக்கவேண்டும்.' என வினவினர். அதுகேட்டு கைகேயி,

† " யாகதி: ஸர்வபூதாநாம் தாம்கதிம் தே பிதா கத: | "

$ " ஆனவனுரைசெய வழிவில் சிந்தையாள்
தானவர் வலிதவ நியிர்ந்த தானையத்
தேனமர் தெரியலாள் றேவர் கைதொழ
வானகமெய்தினன் வருந்தனீயென்றாள். "

" எல்லாப் பிராணிகளும் கடைசியில் எந்த கதியையடையுமோ அந்தக்கதியினை உன் பிதாவும் அடைந்தனர். அதற்காக நீ வருந்தாதே." என்றுரைத்தனள்.

சக்கரவர்த்தியார் பொன்னுலகடைந்ததினால் கைகேயிக்கு வைதவ்யம் நேரிட்டும், பரதாழ்வான் 24-வயதாகிய சிறுபிராயத்திலேயே பிதாவையிழந்துமிருந்த சமயத்தில், கைகேயி பரதாழ்வானிடம் துக்கம் விசாரியாமல், தன்னுடைய பிதாவி

† வா-ரா. அ-கா. சரு. 72. சு. 5,6,15. $ கம்-ரா. அ-கா. பள்ளி. 42,44.

னுடையவும், சகோதரனுடையவும் க்ஷேமசமாசாரம் முதலியவைகளை விஸ்தாரமாக விசாரித்ததினால், ஸ்திரீகள் பெரும்பாலும் தங்கள் கணவரது நலத்தைவிட அவர்களது பிறந்தகத்தார்களுடைய நலத்தையே முக்கியமாய்ப் பிரியத்துடன் கருதுவார்கள் என்பது ஸூசிதம்.

ஸ்ரீ பரமேச்வரருடைய மாமனாராகிய தக்ஷப்ரஜாபதியென்பவர் 'ப்ரஹஸ்பதிஸவம்.' என்ற யாகத்தைச் செய்ய ஆரம்பித்தார். அவ்யாகத்திற்குத் தேவர்கள் ஆகாசமார்க்கமாகச் செல்லுவதைககண்டு ஸதீதேவியானவள் தமது பர்த்தாவாகிய பரமசிவனைநோக்கி— "ஒ, தேவா! உம்முடைய மாமனாராகிய தக்ஷப்ரஜாபதி இப்பொழுது யாகஞ் செய்கின்றார். தேவதைகளெல்லோரும் போகிறார்கள். என்னுடைய சகோதரிகளும் தங்கள் தங்கள் புருஷர்களுடன் அவ்விடம் வந்திருப்பார்கள். ஆகையால், அவர்களையும், என் தாயாரையும் யாகத்தையும் பார்க்க விரும்புகிறேன்." என்றனள். அதனைக்கேட்ட பரமசிவன் ஸதீதேவியை நோக்கி—

"யோ விச்வஸ்ருக்யஜ்ஞகதம் வரோரு மாமநாகஸம் துர்வசஸாSகரோத்திர: |
யதி வ்ரஜிஷ்யஸ்யதிஹாய மத்வசோ பத்ரம் பவத்யா ந ததோ பவிஷ்யதி ||"

"கொந்துவார்குழல் கூறுதல் கேட்டாலும்
அந்தணாளரமராவையின்கண்
தந்தையாகிய தக்கன் சினந்துரை
நிந்தையார நிகழ்த்தினனன்றரோ."

"அருப்புவெம்முலை நங்கையழைக்கிலன்
செருக்கினாலவன் செல்லினுமெள்ளுமால்
விருப்பமின்னது விட்டிடல் வெண்டுமென்
றுரைத்தனன் புரமொள்ளழ லூட்டனான்."

" உன்னுடைய பிதா 'விசுவஸ்ருக்' யாகத்தில் என்னை நிந்தனை செய்து அவமானப்படுத்தியதோடு என்னிடத்தில் எப்பொழுதும் துவேஷபுத்தியுடன் கூடியிருக்கின்றனன். மேலும் யாகத்திற்கு நம்மை அழைக்கவுமில்லை. ஆதலால் அங்கு நீ செல்

வது உசிதமில்லை. என் வார்த்தையை மீறி நீ சென்றால் அவன் உன்னை அவமதிப்பான், உனக்கு க்ஷேமமுண்டாகாது." எனத் தடுத்துரைத்தனர். அதனைக்கேட்டும் தன் பெற்றோர்களையும், சகோதரிகளையும் பார்க்கவேண்டுமென்ற விருப்பங்கொண்டு

" பித்ரோரகாத்ஸ்த்ரைணவிமூடதீர்க்ருஹாக்ப்ரேம்ணாத்மனோயோ**ர்**
[ர்தமதாத்ஸதாம்ப்ரிய: /

" போகலென்னினும் பொன்று மற்றவ்வழி
ஏகுமேனு மிறந்து படுமெனு
நாகஞ்சூடிய நம்பனிருத்தலும்
தோகைபல் கணஞ்சூழ வெழுந்தனள்."

" ஸ்திரீஸ்வபாவத்தால் மூடபுத்தியுள்ளவளாகி தன்னிடத்தில் மிகுந்தப்ரீதியால் தம்முடைய பாதி சரீரத்தைத் தனக்குக் கொடுத்தவரும் ஸாதுக்களுக்கு ப்ரியருமான பரமசிவனை விட்டு தாய்தந்தைகளுடைய வீட்டிற்குச் சென்றாள்,"

இந்த இதிஹாஸம் இங்கு நோக்கத்தக்கது.



(24) கணவரது வார்த்தையை உல்லங்கனஞ்செய்யும் மனைவியரை பரித்யாகஞ்செய்தல்—

புத்திரசோகத்தால் மூர்ச்சித்துத் தரையில்வீழ்ந்த சக்கரவர்த்தியார் அன்று இரவுமுழுதும் துயரங்கொண்டிருந்தனர். மறுநாள் காலையில் கைகேயி, தனக்குச் செய்துகொடுத்த பிரதிஜ்ஞையை நிறைவேற்றும்படி மீண்டும் வற்புறுத்தவே, சக்கரவர்த்தியார் கைகேயியை நோக்கி—

† " யஸ்தே மந்த்ரக்ருத: பாணிரக்நௌ பாபே மயா த்ருத: /
தம் த்யஜாமி ஸ்வயம் சாபி தவ புத்ரம் ஸஹ த்வயா //"

" அடி பாவி கைகேயி! யான் உன்னை விவாஹஞ்செய்யுங் காலையில் மந்திரபூர்வமாக உன் கையைப் பிடித்தேனன்றோ? அந்தக்கையையும உன்னையும் உன்மகன் பரதனையும் இன்று விட்டுவிட்டேன்." எனக் கைகேயியைப் பயமுறுத்தினர். அதற்கும் கைகேயி சிறிதும் பயமன்னியில் சக்கரவர்த்தியாரைநோக்கி

† வா-ரா. அ-கா. சரு. 14 சு. 14.

† "ஆராயயிதுமக்லிஷ்டம் புத்ரம் ராமம் இஹார்ஹஸி |
ஸ்தாப்யராஜ்யே மமஸுதம் க்ருத்வாராமம் வநேசரம் ||"

"உடனே ஸ்ரீராமனை இங்கு வரவழைத்து அவனை வனஞ் செல்லக்கட்டளையிட்டும், என் மகனுக்குப் பட்டங்கட்ட ஏற்பாடும் செய்யக்கடவீர்." என்று சொல்லவே, சக்கரவர்த்தியார் கடுஞ் சினங்கொண்டு

† "தர்மபந்தேந பத்தோஸ்மி நஷ்டாச மம சேதநா |
ஜ்யேஷ்டபுத்ரம் ப்ரியம்ராமம் த்ரஷ்டுமிச்சாமி தார்மிகம் ||"

"நான் தருமமென்னும் வலைக்குள்ளகப்பட்டுக் கட்டுண்டேன். என்னுடைய அறிவையுமிழந்துவிட்டேன். எனது மூத்தகுமாரனும் தார்மிகனுமான ஸ்ரீராமனைக்காண விரும்புகின்றேன்." என்றுரைசெய்யவே, இராமபிரானை அழைத்து வரும்படியாகக் கைகேயி சுமந்திரருக்குக் கட்டளையிட, சுமந்திரரும ஸ்ரீராமபிரானுடைய திருமாளிகைக்குச் சென்று, ஸ்ரீராமபிரானிடம் செய்தியை விண்ணப்பஞ்செய்து ஸ்ரீராமபிரானைத் தேர்மீது எழுந்தருளச்செய்து அழைத்துவந்தனர். ஸ்ரீராமச் சந்திரரும் தமது திருத்தகப்பனாருகிற்சென்று தெண்டம் ஸமர்ப்பித்துப் பின்பு கைகேயிக்கும் தெண்டம் ஸமர்ப்பித்துச் சக்கரவர்த்தியார் கடுந்துயரங் கொண்டிருப்பதற்குக் காரணம் யாதென வினவ; கைகேயி ஸ்ரீராமபிரானிடம் தனக்கும் சக்கரவர்த்தியாருக்கும் நடந்த விருத்தாந்தங்களைத் தெரிவித்து

$ "ஆழிசூழுலகமெல்லாம பரதனேயாள நீபோய்த்
தாழிருஞ் சடைகடாங்கித் தாங்கருந்தவமேற்கொண்டு
பூழி வெங்கானநண்ணிப் புண்ணியத்துறைகளாடி
ஏழிரண்டாண்டின் வாவென்றியம்பின னரசனென்றாள்."

சக்கரவர்த்தியார் எனக்களித்த இரண்டு வரங்களின் பிரகாரம்

"இவ்விராஜ்ஜியத்தை என்மகன் பரதனுக்குப் பட்டங் கட்டவேண்டுமென்றும் நீ பதினான்கு வருஷம் வனவாசஞ் செய்யவேண்டுமென்றும் சக்கரவர்த்தியார் கட்டளையிட்டிருக்

† வா-ரா. அ-கா. சரு. 14. சு. 21, 22, 24.
$ கம்-ரா. அ-கா. கைகேசி. 107.

கின்றனர். உன்பேரிலுள்ள பிரியத்தினால் சக்கரவர்த்தியார் இவ்வண்ணம் துயரங்கொண்டு உன்னிடம் பேசுவதற்கும் முடியாமல் தயங்கியிருக்கின்றனர்." என்றனள்.

அவ்வாக்கியத்தைக்கேட்ட ஸ்ரீராமபிரான் கைகேயியை நோக்கி—

$ "மன்னவன்பணியன்றாகினும் பணிமறுப்பனோவென்
பின்னவன்பெற்றசெல்வ மடியனேன் பெற்றதன்றோ
என்னினியுறுதியப்பா லிப்பணி தலைமேற்கொண்டேன்
மின்னொளிர் கானமின்றே போகின்றேன் விடையுங்கொண்
[டேன்."

"அம்மா! அரசனது கட்டளையில்லாவிடினும், தேவரீரது உத்திரவுக்கு எதிர்மொழி கூறுவேனோ? என் தம்பிக்கு முடிசூட்டுவது எனக்கே முடிசூட்டியதாகுமல்லவோ? தேவரீரது கட்டளைப்பிரகாரம் இன்றே யான் வனஞ்செல்கின்றேனென அருளிச்செய்துவிட்டு, வனத்திற்குப் புறப்பட ஆயத்தஞ்செய்தனர். பின்பு இராமபிரான் வனஞ்செல்லப் பிரயத்தனப்படுவதுதெரிந்து சக்கரவர்த்தியார் மீளவும் கைகேயியைச் சமாதானஞ்செய்தும், சுமந்திரர், ஸித்தார்த்தர், வஸிஷ்டமுனிவர் முதலியோர்கள் கைகேயியைச் சமாதானஞ்செய்தும், ஒன்றுக்கும் இணங்கவில்லை. ஸ்ரீராமபிரான் ஸீதாப்பிராட்டியாருடனும் இளையபெருமாளுடனும் வனஞ்சென்றனர். ஸ்ரீராமபிரான் புறப்பட்டு நகர்நீங்கிய பின்னர் புத்திரசோகத்தினால் மஹாராஜர் மூர்ச்சித்துத் தரையில் வீழ்ந்தனர். அதுகண்டு கோசலாதேவி அவரது வலது கையைப் பிடித்துத்தாங்கி ஆச்வாஸஞ்செய்தனர். கைகேயி அவரது இடதுபக்கத்தில்வந்து நின்றாள். அப்பொழுது ஸத்தியஸந்தரும் தருமவானுமான சக்கரவர்த்தியார் கைகேயியின்மீது வெறுப்புக்கொண்டு அவளைநோக்கி—

$ கம்-ரா. அ-கா. கைகேசி. 110.

‡ " கைகேயி மா மமாங்காநி ப்ராக்ஷீஸ்த்வம் துஷ்டசாரிணீ |
ந ஹி த்வாம் த்ரஷ்டுமிச்சாமி ந பார்யா ந ச பாந்தவீ ||
யே ச த்வாமுபஜீவந்தி நாஹம் தேஷாம் ந தே மம |
கேவலார்தபராம் ஹி த்வாம் த்யக்த தர்மாம் த்யஜாம்யஹம் ||
அக்ருண்ஹாம் யச்ச தே பாணிமக்நிபர்யயணம் ச யத் |
அநுஜாநாமி தத்ஸர்வமஸ்மிந்லோகே பரத்ர ச ||
பரதஸ்சேத்ப்ரதீத: ஸ்யாத்ராஜ்யம் ப்ராப்யேதமவ்யயம் |
யந்மே தத்யாத்ஸ த்ருப்த்யர்தம் மா தத்தத்தமங்வகாத் || "

" அடி பாவி! நீ என் சரீரத்தைத் தொடாதே. உன்னைப் பார்ப்பதிலும் யான் விரும்பவில்லை. நீ எனக்கு மனைவியுமில்லை பந்துவுமில்லை. உன்னைச்சேர்ந்தவர்கள் என்னைச் சேர்ந்தவர்களல்ல. நானும் அவர்களைச் சேர்ந்தவனல்லேன். கேவலம் பொருளையே முக்கியமாகக்கொண்டு தருமத்தைவிட்டு நீங்கிய உன்னை யான் இப்பொழுதே பரித்தியாகஞ்செய்கின்றேன்." என்றனர்.

இப்படியே கம்பராமாயணத்திலும்.

○ " இன்னே பலவும் பகர்வானிரங்காதாளை நோக்கிச்
சொன்னேனின்றே யிவளென்றாமல்லடுறந்தேன்
மன்னேயாவான்வருமப பரதன்றனையுமகனென்
றுன்னேன்முனிவா வவனுமாகானுரிமைக்கென்றான். "

எனக்கூறியிருப்பது இங்கு நோக்கத்தக்கது.

இதனால் பர்த்தாவின் வாக்கியத்திற்கு இணங்கி நடக்காத கெட்ட ஸ்வபாவமுடைய மனைவியைப் பரித்தியாகஞ் செய்ய வேண்டுமென்பது ஸூசிதம்.

" பரித்யாஜ்யா த்வயா பார்யா பர்த்ருவசநலங்கநீ |
தத்ர தோஷா ந சாஸ்தீதி த்வம் ஹி வேத்த யதாததம் ||
ஸர்வலக்ஷணயுக்தாபி யாது பர்த்ருவ்யதிக்ரமம் |
க்ரோதி ஸா பரித்யாஜ்யா ஏஷ தர்ம: ஸநாதந: || "

‡ வா-ரா. அ-கா. சரு. 42. சு. 6, 7, 8.

○ கம்-ரா. அ-கா. நகர்நீங்கு. 50.

"பர்த்தாவின் வார்த்தையை உல்லங்கனஞ்செய்கிறவளான உனது மனைவி உன்னால் பரித்யாகஞ்செய்யத் தகுந்தவள். இந்த விஷயத்தில் யாதொரு குற்றமும் உனக்கேற்படாதென்பதை நீ தெரிந்துகொள்ளக்கடவை. எல்லா குணங்களும் பொருந்தியிருந்தாலும், எவளொருத்தி பர்த்தாவின் வார்த்தைக்கு மீறி நடக்கின்றனளோ, அவள் பர்த்தாவினால் பரித்தியாகஞ்செய்யத் தக்கவள். இதுவே சாஸ்வதமான தருமம்." என்ற பிரம்ம புராணம் நோக்கத்தக்கது.

$ "மாதரம் தே நிரஸ்யாபூ விஜஹார குபேரவத் |"

"உன்னைப்போலவே பிடிவாதகுணத்துடன் பர்த்தாவின் வார்த்தையை உல்லங்கனஞ்செய்த உன்மாதாவை உனது தந்தை தள்ளிவிட்டுக் குபேரன்போல சௌக்கியமாய் வாழ்ந்து கொண்டிருந்தனன்." எனக் கைகேயியை நோக்கி சுமந்திரர் கூறியிருப்பது இங்கு கவனிக்கத்தக்கது.



குறிப்பு:—

"அதுஷ்டாம் விநதாம் பார்யாம் யௌவநே ய: பரித்யஜேத் |
ஸப்தஜந்ம பவேத்ஸ்த்ரீத்வம் வைதவ்யம் ச புந: புந: ||"

"நல்லொழுக்கமுடையவளும் வணக்கமுள்ளவளுமான மனைவியை யௌவனத்தில் எந்தப்புருஷன் பரித்யாகஞ்செய்கின்றனனோ அவன் ஏழு பிறவி பெண்ணாகப்பிறந்து திரும்பத்திரும்ப வைதவ்யதசையடைவான்." என மனைவியைப் பரித்யாகஞ்செய்வதில் தோஷம் கூறப்பட்டிருக்கிறது. மேலும் சக்கரவர்த்தியாரே, கைகேயியை நோக்கி—

† "ந ஹி கிஞ்சிதயுக்தம் வா விப்ரியம் வா புரா மம |"

"முன்பு ஒருபொழுதும் உசிதமில்லாதவற்றையாயினும், என் மனதிற்கு பிரியமில்லாதவற்றையாயினும் நீ செய்ததில்லையே." எனக் கூறியிருப்பதால், கைகேயி துஷ்டஸ்வபாவமில்லாதவளெனவும்,

¶ 'ஸ வ்ருத்தஸ்தருணீம்' என்றபடி கைகேயியை 'தருணி' எனக் கூறப்பட்டிருப்பதால் கைகேயி, யௌவனமுடையவள் எனவும், ஏற்படு

$ வா-ரா. அ-கா. சரு. 35 சு. 26.

† வா-ரா. அ-கா. சரு. 12. சு. 20. ¶ வா-ரா. அ-கா. சரு. 10. சு. 23.

வதால் கைகேயியைப் பரித்யாகஞ்செய்யத்தகுந்த குற்றமில்லாமலிருக்கும் பொழுது சக்கரவர்த்தியார் கைகேயியைப் பரித்யாகஞ்செய்தது உசித மாகுமோவெனில்—

❁ " தர்மவிக்நகரீம் பார்யாமஸதீம் சாதிகோபநாம் /
த்யஜேத்தர்மஸ்ய ரக்ஷார்த்தம் ஸதைவாப்ரியவாதிநீம் // "

" (1)தருமத்திற்கு இடையூறு செய்பவளும் (2)தீயவளும் (3)அதிக கோபமுடையவளும் (4) எப்பொழுதும் வெறுப்பாய்ப் பேசுபவளுமான மனைவியை, தருமத்தைப் பாதுகாக்கும் பொருட்டு பரித்யாகஞ்செய்ய வேண்டும். " என சாஸ்திரம் கூறுகின்றது. அப்படியாகில் இந்த நான்கு தோஷங்களும் கைகேயியினிடத்தில் பொருத்தமாகின்றனவோ என சிறிது ஆராய்வாம்.

(1) சக்கரவர்த்தியார் முன்வாக்களித்த இரண்டுவரங்களைத்தானே கைகேயி இப்பொழுதுகேட்டனள்; அது தருமத்திற்கு இடையூறாகுமோ?

$ " இக்ஷ்வாகூணும் ஹி ஸர்வேஷாம் ராஜா பவதி பூர்வஜ: / "

" இக்ஷ்வாகு குலத்திற் பிறந்தவர்களுள் மூத்தோனே அரசனாகுவது முறையன்றோ? " என இராமபிரானைநோக்கிக் கூறிய வஸிஷ்டமஹரிஷி யின் வசனப்பிரகாரம் இராமபிரானே அரசனாகவேண்டியது குலதருமமாக இருக்க, கைகேயி கனிஷ்டனாகிய தன் மகனுக்கு முடிசூட்டவேண்டு மென்றும்,

‡ " அதுஷ்டஸ்ய ஹி ஸம்த்யாக: ஸத்பதே நிரதஸ்ய ச /
நிர்தஹேதபி சக்ரஸ்ய த்யுதிம் தர்மநிரோதநாத் // "

" சிறிதும் குற்றமின்றி நற்குண நன்னடக்கையுடைய புத்திரனை ஊரைவிட்டுத் துரத்துவது கொடியபாவமன்றோ? அப்படிச் செய்பவன் இந்திரனானாலும் கொடிய நரகத்தையடைவான். " என கைகேயியை நோக்கிக் கூறிய ஸித்தார்த்தர் வசனப்பிரகாரம் சிறிதேனும் தோஷமில் லாதவரும் மிக்கத்தார்மிகருமான ஸ்ரீராமபிரானை வனத்திற்கு அனுப்புவது தருமவிரோதமான காரியமாயிருந்தும் அவரை வனத்திற்கு அனுப்ப வேணுமென்றும், கைகேயி சக்கரவர்த்தியாரைக் கேட்ட இரண்டு வரங் களும் தருமவிரோதமாகின்றன. மேலும்

❁ மாதவ புராணம். $ வா-ரா. அ-கா. சரு. 110. சு. 36.
‡ வா-ரா. அ-கா. சரு. 36. சு. 29.

† "ந ஸா ஸ்த்ரீத்யபிமந்தவ்யா யஸ்யாம் பர்தா ந துஷ்யதி |
துஷ்டே பர்த்தரி நாரீணாம் துஷ்டா: ஸ்யு: ஸர்வதேவதா: ||
அக்நிஸாக்ஷிகமித்யேவ பாதா வை தைவதம் பரம் |
தாவாக்நிரேவ நிர்தக்தா ஸபுஷ்பஸ்தபகாலதா ||
பஸ்மீ பவது ஸா நாரீ யஸ்யாம் பர்தா ந துஷ்யதி|

"எவளிடத்தில் பர்த்தா சந்தோஷமடையவில்லையோ அவள் ஸ்திரீயென்று அறியத்தக்கவளல்லள். பதி சந்தோஷமுள்ளவனானால் ஸ்திரீகளுக்கு எல்லா தேவதைகளும் சந்தோஷமுள்ளவர்களாகிறார்கள். பதியன்றோ ஸ்திரீகளுக்குத் தெய்வம். இது அக்கினிஸாக்ஷியாகக் கொண்ட தருமம். எவளுடைய பர்த்தா சந்தோஷமடையவில்லையோ அவள் காட்டுத் தீயாலெரிக்கப்பட்ட பூங்கொத்துடன் கூடிய கொடிபோலச் சாம்பலாகிறாள்." என்றபடி கைகேயி பர்த்தாவை மனவருத்தமடையச் செய்ததால் அவள் மனைவியின் தருமத்தைவிட்டு விலகியவளாகிறாள்.

இந்த நியாயங்களால் 'தர்மவிக்நகரீம்' என்ற முதலாவது காரணம் பொருத்தமாகின்றது.

(2) "பாணிக்ராஹஸ்ய ஸாத்வீஸ்த்ரீ ஜீவதோ வா ம்ருதஸ்ய வா |
பதிலோகமபீப்ஸந்தீ நாசரேத் கிஞ்சிதப்ரியம் ||" (மனு)

"பதிலோகத்தையடைய விரும்பும் உத்தம ஸ்திரீ, தன்னை மணம்புரிந்த புருஷன் உயிருடனிருப்பினும், அல்லது மரித்தாலும், அற்பங்கூட பர்த்தாவுக்குப் பிரியமில்லாத காரியத்தைச் செய்யக்கூடாது." என்றும்,

"ஸத்வ்ருத்தம் அநுவர்தேவ நாயகஸ்ய ஹிதைஷிணீ |
தர்மம் அர்த்தம் ததா காமம் லபந்தே ஸத்தாநமேவச ||"

"நாயகனுடைய ஹிதத்தையே விரும்புகிறவர்களாக, நல்ல ஒழுக்கத்திலே நடந்துவரும் ஸ்திரீகள் தருமம், பொருள், இன்பம், மோக்ஷம், ஆகிய புருஷார்த்தங்கள் நான்கையும் அடைகிறார்கள்." என்றும் சாஸ்திரங் கூறுகின்றமையால்,

சக்கரவர்த்தியார் கைகேயியை நோக்கி- "பரதனுக்கு இராஜ்யத்தை தருகின்றேன். இராமன் வனத்திற்குச் செல்லவேண்டுமென்ற ஒருவரத்தை மட்டும் நிறுத்திக்கொள். இராமன் என்னைவிட்டுப்பிரிந்து வனஞ்செல்வானாகில் என் பிராணன் போய்விடும்," என மிகவும் வருந்திக்கேட்டும் கொஞ்சமும் மனமிளகாமல் பர்த்தாவின் பிராணஹானியையும் கவனிக்

† பாரதம். சாந்தி. ஆபத். அத். 144.

காமல் பிடிவாதகுணத்துடன் தான் கேட்ட இரண்டு வரங்களையும் கட்டா யம் கொடுக்கவேணுமாய் நிர்ப்பந்தம் செய்தது கெட்டஸ்திரீயின் சுபா வத்தைக்காண்பிக்கிறபடியாலும்,

† "ஸதீம் த்வாமஹமத்யந்தம் வ்யவஸ்யாம்யஸதீம் ஸதீம் / "

"முன்பு உன்னை நன்னடக்கையுள்ளவளென எண்ணியிருந்தேன். உன்னடத்தையால் கெட்டவளென்று தீர்மானிக்கின்றேன்." என தச ரதர் கூறியிருப்பதாலும்,

○ "காதலன்றீதெனிற் கற்புண்டாகுமோ." என்றபடி கைகேயி துஷ்டையாகின்றாள்.

‡ (3) "க்ரோதனாமக்ருதப்ரஜ்ஞாம் த்ருப்தாம் ஸுபகமானிநீம் /
மம தாம் மாதரம் வித்தி ந்ருஸம்ஸாம் பாபநிச்சயாம் // "

"இதோ நிற்கின்றனளே இவள்தான் கோபமுடையவளும், துர்புத்தி யுடையவளும், செருக்குடையவளும் மிக்கக் கொடியவளுமான எனது மாதாவாகிய கைகேயியென்பவள்." என பரதாழ்வான் பரத்துவாஜ முனிவரிடம் கூறியிருப்பதால் கைகேயி அதிக கோபமுடையவளென்பது விளங்குகின்றது.

¶ (4) "ஸத்யம் தர்மம் பரித்யஜ்ய ராமம் ராஜ்யேऽபிஷிச்ய ச /
ஸஹ கௌஸல்யயா நித்யம் ரந்து மிச்சஸி துர்மதே // "

என்றபடி கைகேயி சக்கரவர்த்தியாரை துர்புத்தியுடையவர் (துர் மதே) என்றும், சத்தியம், தருமம் இவைகளைத்துறந்தவர் (ஸத்யம் தரு மம் பரித்யஜ்ய) என்றும், நிந்தனையான வசனங்களையும் மற்றும் பருஷ வசனங்களையும் சபத பூர்வமாகக் கூறியிருப்பதால், அவைகள் சக்கரவர்த்தி யாருக்குப் பிரியமற்ற வசனங்களாகின்றன. தவிற

🌐 "அதிப்ரவ்ருத்தே துர்மேதே கைகேயி குலபாம்ஸநி /
வஞ்சயித்வா து ராஜானம் ந ப்ரமாணேऽவதிஷ்டஸே // "

"அடி மதிகெட்டவளே! குலத்தைக்கெடுக்கவந்தவளே! நீதிதப்பி நடப்பவளே! அடி கைகேயி! நீ மஹாராஜரை வஞ்சனை செய்ததுமல்லா மல் உன் செய்கை வரம்புகடந்ததாய் இருக்கின்றது." என வஸிஷ்ட மஹரிஷி கைகேயியை நோக்கிக் கூறியிருப்பதாலும்,

† வா-ரா. அ-கா. சரு. 12 சு. 77. ○ உத்தர-கா. அசுவ. 292.
‡ வா-ரா. அ-கா. சரு. 92. சு. 26, 27.
¶ ஸ்திரீ தருமம் 158 பக்கம் பார்க்க
🌐 ஷை. ஷை சரு. 37. சு. 22.

$ " யஸ்யாஸ்தவ பதிஸ்த்யக்தோ ராஜா தஶரத: ஸ்வயம் |
ந ஹ்யகார்யதமம் கிஞ்சித்தவ தேவீஹ வித்யதே ||
பதிக்னீம் த்வாமஹம் மந்யே குலக்னீமபி சாந்தத: |
மாவமம்ஸ்தா தஶரதம் பர்தாரம் வரதம் ப்ரியம் ||

" அடி பாவி கைகேயி! உனது பதியாகிய சக்கரவர்த்தியாரை நீ விட்டுவிட்டமையால், நீ செய்யத்தகாத கெட்டசெய்கை யொன்றுமில்லை. இதனால் நீ பதியைக் கொலைசெய்தவளெனவும், இக்குலத்தையே கொலை செய்தவளெனவும் எண்ணுகின்றேன். நீ வேண்டியவற்றையெல்லாம் கொடுப்பவரும் உன்மீது பிரியமுடையவருமான பர்த்தாவை அவமதி செய்யாதே." என சுமந்திரர் கைகேயியை நோக்கிப் பழித்துரைத் திருப்பதாலும்,

பரதாழ்வான், கைகேயியை நோக்கி—

† " குலஸ்யத்வமபாவாய காலராத்ரிரிவாகதா ||"
ம்ருத்யுமாபாதிதோ ராஜா த்வயா மே பாபதர்ஶிநி |
ஸுகம்பரிஹ்ருதம் மோஹாத் குலேஸ்மிந் குலபாம்ஸநி ||

‡ " நோயீரல்லீர் நுங்கணவன் றன்னுயிருண்டீர்
பேயீரே நீரின்னமிருக்கப் பெறுவீரோ
மாயீர்மாயாவன்பழிதந்தீர் முலைதந்தீர்
தாயீரே நீரின்னு மெனக்கென் றருவீரே."

" அடி பாவி! இக்குலம் முழுதும் அழியும்பொருட்டு நீ காளராத்திரி போல வந்துதோன்றினை. நீ மிக்க மோகங்கொண்டு இக்குலத்திற்குச் சுக மென்பதே யில்லாதவண்ணம் செய்துவிட்டனை. அடி! குலத்தைக் கெடுத்த கொடும்பாவி! என் தந்தை உன்னாலேயன்றோ மரணமடைந் தனர். நீ எனக்குத் தாயாய் நின்று எனக்குக் கொடியபழியைக் கொடுத்தீர்." என இகழ்ந்துரைத்தும்,

¶ "படரெலாம் படைத்தாளைப் பழிவளர்க்குஞ் செவிலியைத்தன்பாழ்த்த [பாவிக்
குடரிலேநெடுங்காலங் கிடந்தேறக்கு முயிர்ப்பாரங் குறைந்து தேய
உடரெலாமுயிரெலாவெனத் தோன்று முலகத்தே யொருத்தியன்றே
இடரிலாமுகத்தானை யறிந்திலையே லிந்நின்றாளென்னையீன்றாள்."

$ வா-ரா. அ-கா. சரு. 35. சு. 5, 6.
† வா-ரா. அ-கா. சரு. 73. சு. 4. 5. ‡ கம்-ரா. அ-கா. பள்ளி. 75
¶ கம்-ரா. அ-கா. குகன். 70.

எனக் குகப்பெருமானிடம் கைகேயியைப் பழித்துக் கூறியுமிருப்ப தாலும், கைகேயி சக்கரவர்த்தியாரிடங் கூறியவசனங்கள், சக்கரவர்த்தி யாருக்கன்றி, மற்றும் பெரியோர்களுக்கும், அவளது புத்திரனுக்குமே, அருவருப்பை யளித்திருப்பதாய் ஏற்படுகின்றமையால், கைகேயி அப்பிரிய வாதினி யாகின்றாள்.

இக்காரணங்களினால், சக்கரவர்த்தியார் கைகேயியைப் பரித்யாகஞ் செய்தது யுக்தமெனக் கொள்ளத் தக்கதாம்.



## (25) ஸ்திரீகளுக்குச் சக்களத்தியுடமை.

(1) கௌஸல்யாதேவி, ஸ்ரீராமபிரானை நோக்கி—

○ " ஸா பஹூந்யமனோஜ்ஞாநி வாக்யாநி ஹ்ருதயச்சிதாம் |
அஹம் ஶ்ரோஷ்யதே ஸபத்நீநாமவராணாம் வரா ஸதீ ||
அதோ துஃகதரம் கிம் நு ப்ரமதாநாம் பவிஷ்யதி || "

" குழந்தாய், ராமா! நான் பட்டமஹிஷியாயிருந்தும் மனதைப் புண்படுத்துகின்ற மிகவும் இளப்பமான சக்களத்திகளுடைய, கொடுமையான அநேகம் வார்த்தைகளை இனி கேட்கப் போகிறேன். சக்களத்திகளின் கடுமையான சொற்களைக்கேட்டுக் கொண்டு வாழ்வதைக்காட்டிலும் ஸ்திரீகளுக்கு மிகவும் துக்ககரமான காரியம் வேறு என்ன இருக்கிறது." ஆகையால்

* " ஆஸாம் ராம ஸபத்நீநாம் வஸ்தும் மத்யே நமேக்ஷமம் | "

" ஹே, ராம! இச்சக்களத்திகளின் நடுவில் வாஸஞ்செய்ய என்னால் கொஞ்சமும் முடியாது." எனக் கூறியிருப்பதாலும்,

ஸ்ரீராமபிரான் சூர்ப்பணகையை நோக்கி—

$ " த்வத்விதாநாம் து நாரீணாம் ஸுதுஃகா ஸஸபத்நதா | "

" உன்போன்ற ஸ்திரீகளுக்குச் சக்களத்தியிருப்பது மிகத் துன்பத்திற்கிடமானது." என அருளிச்செய்திருப்பதாலும், ஸ்திரீகளுக்குச் சக்களத்தியேற்படுவது மிக்கத்துன்பத்தையளிக்குமென்பது ஸூசிதம்.

○ வா-ரா. அ-கா. சரு. 20. சு. 39, 40.
* ஷை ஷை சரு. 24. சு. 19.
$ ஷை ஆ-கா. சரு. 18. சு. 2.

சூர்ப்பணகை இளையபெருமாளை நோக்கி—

† "ஏற்றவளை வரிசிலையோ னியம்பாமுனிகலரக்கி
சேற்றவளை தன்கணவனருகிருப்பச் சினந்திருகிச்
சூற்றவளை நீருழக்குந்துறை கெழுநீர்வளநாடா
மாற்றவளைக் கண்டக்காலழலாதோ மனமென்றாள்."

"சக்களத்தியைப் பார்த்தால் மனங் கோபங்கொள்ளாதோ?" என்ற கம்பராமாயணம் இங்கு நோக்கத்தக்கது.

இந்தப்பாட்டின் முதல்மூன்றடிகளில், பகுத்தறிவிற்குறைவுபட்டதோர் அஃறிணையுயிர்தானும், தான் கலவிக்குரியதல்லாத நிலையிலும் தன் கணவனருகில் தன் ஜாதியினுங் கீழ்ப்பட்ட அயற்பெண்பால் இருத்தலை நோக்கிப் பிணங்கினதாக வருணித்திருப்பதும் கவனிக்கத்தக்கது.

இப்படியே:— தமது குஞ்சுகளையும் மனைவியையும் பார்க்க வந்த மந்தபாலர் என்னும் ரிஷியைநோக்கி அவரது முதல் பத்தினியாகிய ஜரிதை என்ற பக்ஷி— "என்னை ஒன்றுமில்லாமல் விட்டுவிட்டு யாரை முன்னே அடைந்தீரோ அந்தப் புன்னகையுள்ள சிறுபெண்ணாகிய லபிதை (இரண்டாவது தாரம்) யிடம் போம்." என்று சொல்லிற்று. மந்தபாலர்—

"பெண்களுக்கு வேறுபுருஷனையடைவதைப்பார்க்கிலும் பரலோகத்திற் புருஷார்த்தத்தைக் கெடுப்பது வேறொன்றுமில்லை. மாற்றாளிருப்பதைத்தவிர வேறொன்று இவ்வுலகில் புருஷார்த்தத்தைக் கெடுப்பதில்லை. மாற்றாளிருப்பது த்வேஷமென்கிற அக்னியை ஜ்வலிக்கச்செய்வதும் மிக்கத்துயரத்தையுண்டுபண்ணுவதுமானது." என்று கூறியிருப்பதும்,

ஸுபத்ராவிவாஹத்திற்குப்பின் அர்ஜுனனை நோக்கி—

"தத்ரைவ கச்ச கௌந்தேய யத்ர ஸா ஸாத்வதாத்மஜா /
ஸுபத்தஸ்யாபி பாரஸ்ய பூர்வபந்த: ஶ்லதாயதே //"

"குந்திதேவியின் புத்திரரே! சுபத்திரை எங்கு இருக்கிறாளோ அந்த இடத்திற்கே செல்லும்; புதுக்கட்டு ஏற்பட்டால் பழைய கட்டு நெகிழ்தலடைகின்றது." எனத் திரௌபதி கூறியிருப்பதும் நோக்கத்தக்கன.

† கம்-ரா. ஆ-கா. சூர்ப்பணகை. 122.

(2) கைகேயி தசரதச் சக்கரவர்த்தியாரை நோக்கி—

¶ " ஸ்தாப்யராஜ்யே மமஸுதம் க்ருத்வா ராமம் வநேசரம் /
நி:ஸபத்நாம்ச மாம் க்ருத்வா க்ருதக்ருத்யே பவிஷ்யஸி //"

" அரசரே! சீக்கிரம் ஸ்ரீராமனை இங்கு வரவழைத்து வனஞ் செல்லக் கட்டளையிட்டனுப்பிவிட்டும், எனது புத்திரனுக்குப் பட்டங்கட்டிவிட்டும், என்னைச் சக்களத்திகளிடம் பகையற்றவளாகச் செய்து உம்முடைய சத்தியத்தைப் பாதுகாத்துக்கொள்ளக்கடவீர். " என்றனள்.

குறிப்பு:— சுலோகத்தில் நி:ஸபத்நாம் என்பதின் கருத்து— ஸ்ரீராமபிரானுக்கு முடிசூட்டினால் கௌஸல்யாதேவிக்கு உயர்ந்த பதவி ஏற்பட்டு பட்டணத்துஜனங்களெல்லோரும் அவளுக்கு மிகுந்த மரியாதை செய்து வணங்குவார்களாகையால் தானும் கீழ்படிய நேரிடுமெனநினைத்துச் சக்களத்தியாகிய கௌஸல்யாதேவி உன்னதஸ்திதியிலிருப்பதைக் கண்ணால் காண்பதைவிட உயிர்துறப்பது நலமெனக்கருதி இராமபிரானுக்குப் பட்டங்கட்டினால் உயிர்துறப்பேன் என்றுரைத்து சக்களத்தியின் புத்திரனைக் காட்டிற்குத் துறத்தவும் தன்மகனுக்கு முடிசூட்டவும் வரங் கேட்டனள், என்பதாம்.

இதனால் ஸ்திரீகள் தங்கள் சக்களத்திகள் மேன்மையடைவதைக்காண மனஞ்சகியார்கள் என்பதும், பொறாமைகொண்டு சக்களத்தியின் பிள்ளைக்குத் தீங்கிழைக்க எத்தனிப்பார்களென்பதும் ஸூசிதம்.

உதாரணம்

i சூரஸேனமென்ற தேசத்தில் சித்திரகேது என்ற ஓர் அரசனிருந்தார். அவருக்கு அநேகம் பாரியைகள் இருந்தார்கள். அவர்களில் மூத்த பத்தினியான கிருதத்யுதி என்பவளுக்கு ஒரு புத்திரன் பிறந்தான். அதனால் மற்ற ஸபத்தினிகளான ஸ்திரீகள் கிருதத்யுதியிடத்தும் அவள் புத்திரனிடத்தும் பொறாமைகொண்டு—

" வித்வேஷநஷ்டமதய: ஸ்த்ரியோதாருணசேதஸ: /
கரம் தது: குமாராய துர்மர்ஷா ந்ருபதிம் ப்ரதி //"

விரோதபுத்தியோடும், இரக்கமற்ற ஸ்வபாவத்துடனும் கூடி அக்குமாரனுக்கு விஷத்தைக்கொடுத்தார்கள். கிருதத்யுதியானவள் ஸபத்தினிகளால் செய்யப்பட்டதை அறியாதவளாகி குழந்தை தூங்குகிறதென்றே நினைத்திருந்தாள்.

¶ வா-ரா. அ-கா. சரு. 14. சு. 22.

"அஞ்சொலன்னையகலமலர்விழி
துஞ்சுகின்ற சுடர்த்தொடித் தோன்றலை
நஞ்சமூட்டினர் வீட்டினர் நஞ்சுதோய்
வெஞ்சினக்கொலைவேலன்னகண்ணினர்."

"பெற்றதாயெழிற்பிள்ளை மூலையுண
உற்றுநீகொணர்வாயென வோடினள்
இற்றவாவிமகவுகண்டேங்கினள்
சொற்றனள்வந்தழுதோர் தொழுத்தையே,"

பிறகு சற்றுநேரங்கழித்துக் குழந்தையைப் பால்கொடுப்பதற்காக எடுத்துவரும்படி தன்னுடைய வேலைக்காரியை ஆஜ்ஞைசெய்ய, அவள் குழந்தையின் சமீபஞ்சென்று பார்க்கும்பொழுது அந்தப்பாலன் உயிர் நீங்கினவனாகக் காணப்பட்டான்.

ii இக்ஷ்வாகுவம்சத்தில் பாஹுகர் என்ற ஓர் அரசனிருந்தார். அவர் சத்துருக்களால் ஜெயிக்கப்பட்டு இராஜ்ஜியமிழந்து பத்தினியுடன் காட்டிற்குச்சென்று வஸித்து வனத்திலேயே மரணமடைந்தார். அப்பொழுது அவருடையபத்தினி கற்பிணியாகஇருந்தாள். அதையறிந்த ஸபத்தினிகள்,

"ஆஜ்ஞாயாஸ்யை ஸபத்நீபிர்கரோதத்தோஸந்தஸா ஸஹ /
ஸஹ தேநைவ ஸம்ஜாத: ஸகராக்யோ மஹாயஸா: //"

அன்னத்தில் விஷத்தைக்கலந்து கொடுத்தார்கள். அந்த விஷத்துடன் குழந்தைபிறந்தது. அதனால் அக்குழந்தைக்கு சகரனென்று பெயரிட்டார்கள். அவர்தான் சகரச்சக்கரவர்த்தியாயினர்.

ஸ்ரீமத்பாகவதத்திலுள்ள இந்த இதிஹாஸங்கள் கவனிக்கத்தக்கன.

(3) ஸ்ரீராமபிரானுடன் வனஞ்செல்லுவதற்காக இளையபெருமாள் தமது மாதாவிடம் விடைபெற்றுக்கொண்டு போகும் பொருட்டுச் சுமித்திராதேவியை வந்தனஞ்செய்து நின்றனர். சுமித்திராதேவியும் தன்மைந்தனை அணைத்தெடுத்து உச்சிமோந்து அவரைநோக்கி—

‡ "ராமம் தசரதம்வித்தி மாம்வித்தி ஜனகாத்மஜாம் /
அயோத்யா மடவீம்வித்தி கச்சதாதயதாஸுகம் //"

‡ வா-ரா. அ-கா. சரு. 40. சு. 9.

○ " ஆகாததன்றாலுனக்கவ்வன மிவ்வயோத்தி
மாகாதலிராமனம்மன்னவன் வையமீந்தும்
போகாவுயிர்த்தாயர் நம்பூங்குழற் சீதையென்றே
ஏகாயினியிவ்வயினிற்றலு மேதமென்றாள்."

○ " பின்னும்பகர்வாண் மகனேயிவன் பின்செறம்பி
என்னும்படியன்றடியா ரினிலேவல்செய்தி
மன்னும்நகர்க்கேயிவன் வந்திடின் வாவதன்றேல்
முன்னம் முடியென்றனள் பான்முலேசோரநின்றாள்."

" அடா, என் அருமை மைந்தா! ஸ்ரீராமபத்திரனையே (ஜ்யேஷ்டப்ராதா பித்ருஸம:) என்கிற நியாயத்தால் தந்தையெனவும், அந்த நியாயப்படி ஸீதாதேவியையே என்னைப் போலவே தாயெனவும், ஸ்ரீராமபத்திரனெழுந்தருளியிருக்கும் அரணியத்தையே திருவயோத்தியெனவும் நினைத்துச் சுகமாக மகிழ்ந்து செல்லக்கடவை. மேலும் நீ செல்லும்பொழுது ஸ்ரீராம்பிரானுடைய தம்பியென்னும் கர்வம் சிறிதுமின்றி ஒரு வேலையாளைப்போல் குற்றேவல்செய்துகொண்டுசெல். இவ்விராகவன் இந்நகருக்குத் திரும்பிவருவானாயின் நீயும் கூடவே வருவாயாக. அதன்றி அவனுக்கு ஏதாவது கெடுதிவருமென்று உனக்குத்தோன்றினால் முன்னதாகவே நீ உன்னுயிரை விட்டுவிடு." என புத்திசொல்லி விடைகொடுத்தனுப்பினள். இதனால் சுமித்திராதேவிக்கு ஸ்ரீராமபிரான்மீது (சக்களத்திபுத்திரனாயிருந்தும்) பேரன்புகொண்டவளென்பது நன்குவிளங்குகின்றது.

ஸ்ரீராமபிரான் தன் மாதாவினிடஞ்சென்று 'பரதன் முடிசூடுகின்றான்.' எனச் சொல்லியபொழுது—

¶ " முறைமையன்றென்ப தொன்றுண்டு மும்மையின்
நிறைதுணத்தவனின்னினு நல்லனல்
குறைவிலன்னெனக் கூறினனல்வர்க்கும்
மறுவிலன்பினில் வேற்றுமை மாற்றினள்."

---

○ கம-ரா. அ-கா. நகர்நீங்கு. 150, 151.
¶ கம்-ரா. அ-கா. நகர்நீங்கு. 5.

"பரதன் உன்னைவிட குணத்தில் சிறந்தவன்." என, நான்கு புத்திரர்களிடத்தும் ஸமமான அன்புடன் கூடிய கௌஸல்யாதேவி, கூறினள்.

இந்தப்பாட்டினால் கௌஸல்யாதேவி சக்களத்தி புத்திரர்களிடத்தும்மிருந்த அன்புடையவளென்பது விளங்குகின்றது.

இவைகளினால் ஸ்திரீகள் கௌஸல்யாதேவியையும் சுமித்திராதேவியையும் பின்பற்றிச் சக்களத்தி மக்களிடத்துக் கொஞ்சமும் துவேஷமின்றி மிக்க அன்புடனிருக்கவேண்டுமென்பது ஸூசிதம்.

(4) ஸ்ரீ பரதாழ்வான் கைகேயியை நோக்கி—

† "ததாஜ் யேஷ்டாஹி மே மாதா கௌஸல்யா தீர்கதர்ஸிநீ |
த்வயிதர்மம் ஸமாஸ்தாய பகிந்யாமிவவர்த்தே ||"

"பட்டமஹிஷியாகிய கோஸலையாரும் உன்னிடத்தில், உடன்பிறந்தாளிடத்திற்போலவே ஆதரஞ்செய்து வந்தனரன்றோ?" என்றுரைத்திருப்பதால் கௌஸல்யாதேவி சக்களத்திகளிடத்தில் துவேஷமில்லாமல் அன்புடனிருந்தனரென்பது விதிக்கின்றது.

இதனால் மற்ற ஸ்திரீகளும் சக்களத்திகளிடம் துவேஷத்துடனிருக்கக்கூடாதென்பது ஸூசிதம்.

குந்திதேவியானவள் தூர்வாஸ மஹரிஷியாலுபதேசிக்கப்பட்ட வித்தையின் மகிமையினால் யுதிஷ்டிரர், பீமஸேனர், அர்ஜுனர் என்னும் மூன்று புத்திரர்களை யடைந்ததைக்கண்ட ஸபத்நியான மாத்ரி யென்பவள் தன் பர்த்தாவான பாண்டுராஜனை நோக்கி, வீரரே! குந்திதேவியானவள் எனக்கும் சந்தானமுண்டாகுமாறு அனுக்கிரகிப்பாளாயின் பெரிய உபகாரமாகும். ஆனால் அவள் எனக்கு மாற்றாளாயிருப்பதினால் அவளிடத்தில் நானே சொல்லுவதற்கு வெட்கமாயிருக்கின்றது. ஆதலால் என்னிடத்தில் கிருபையுடன் நீரே அவளைக் கட்டளையிடவேண்டும்.' என்று சொன்னாள்.

† வா-ரா. அ-கா. சரு. 73. சு. 10.

‡ " இறைவனுமகிழ்ந்து பின்னும் யாதவிக்குரைப்பவந்த
மறையினை முறையிற்பெற்ற மத்திர ராசன்கன்னி
குறைவறவிருவர்வேண்டுங் குமரரென்றுன்னிநின்று
ணிறையுடை யிரவிமைந்த ரிருவரு நினைவின் வந்தார்.

மருவருங்குழலியாயு மறையினால் வரிசைபெற்ற
விருவருமொருவர்போல வின்புற மணந்தபோதிற்
பருவரலியாதுமில்லாப் பாலகரிருவர்சேரக்
கருவினைந்துதித்தார்யாருங் கண்ணெனக்காணுநீரார். "

பாண்டுராஜனும் குந்தியை நோக்கி, 'குற்றமற்றவளே! உனது சக்களத்தியாகிய மாத்ரிக்குச் சந்ததியைக் கொடுத்துச் சிறந்த கீர்த்தியைப் பெருவாயாக.' என்றார். அதைக்கேட்டு குந்திதேவி மாத்ரிக்கும் உபகாரத்தைச் செய்வேன். என்று சொல்லி, அவளுக்குத் தான் பெற்றிருந்த மந்திரத்தை யுபதேசித்தனள். மாத்ரியும் நகுல ஸஹாதேவர்கள் என்னும் இரட்டைப் பிள்ளைகளைப் பெற்றனள்.

குந்திதேவி சக்களத்தியினிடம் சிறிதும் துவேஷமன்னியில், அவள் சந்ததி யடையுமாறு உபகரித்தது இங்கு கவனிக்கத்தக்கது.



## (26) மாமியர் மருமக்களிடம் அன்புடனிருக்கவேண்டுமென்பது.

சித்திரகூட பர்வதத்தில் ஸீதாப்பிராட்டியார், கௌசல்யா தேவியைக் கண்டவுடன் அவரது அடிபணிந்து கண்களில் நீர் ததும்ப நின்றபொழுது, கௌசல்யாதேவி

† " தாம்பரிஷ்வஜ்ய து:கார்தா மாதா துஹிதரம் யதா |
வனவாஸக்ருதாம் தீனாம் கௌஸல்யா வாக்யமப்ரவீத் ||
வைதேஹராஜந்யஸுதா ஸ்நுஷாதஸரதஸ்யச |
ராமபத்நீ கதம் து:கம் ஸம்ப்ராப்தா விஜநேவநே ||
பத்மாதபஸந்தப்தம் பரிக்லிஷ்டமிவோத்பலம் |
காஞ்சநம் ரஜஸாத்வஸ்தம் க்லிஷ்டம் சந்த்ரமிவாம்புதை: ||
முகம்தேப்ரேக்ஷ்யமாம் ஸோகோ தஹத்யக்நிரிவாஸ்ரயம் |
ப்ருஸம் மனஸி வைதேஹி வ்யஸநாரணிஸம்பவ: ||

‡ வில்லிபாரதம். † வா-ரா. அ-கா. சரு 104. சு. 23, 26.

தாய் மகளைத் தழுவுவதுபோல ஸீதாப்பிராட்டியாரைத் தழுவிக்கொண்டு " அந்தோ! ஜனகமஹாராஜாவின் பிரியமான புத்திரியும் தசரதச் சக்கரவர்த்தியாரின் மருமகளும் ஸ்ரீராமச் சந்திரனின் தருமபத்தினியுமாகிய ஸீதாதேவி இவ்வண்ணம் துன்புறுமாறு நேர்ந்ததே! அடி, கண்மணி! வெயிலினால் தஹிக்கப்பட்ட தாமரைபோலவும், மாசடைந்த பளிங்குபோலவும், மேகங்களால் மறைக்கப்பட்ட சந்திரபிம்பம்போலவும், ஒளி மழுங்கியிருக்கும் உனது முகத்தைப் பார்க்கையில், சோகாக்னி என்னைப்பற்றியெரிக்கின்றது." எனப் புலம்பி வருந்தினள்.

இதனால் கௌசல்யாதேவியைப் பின்பற்றி மற்றஸ்திரீகளும் தங்கள் மருமகளை மகளைப்போல அன்புடன் ஆதரிக்கவேண்டு மென்பது ஸூசிதம்.

‡ " பய்யார்வெம்பணத்தலகிற் பழியாலே பழிமறைத்து
நெய்யாலே நெருப்பவிக்க நீணிலத்திற் கண்டறியேன்
கய்யார்வெஞ்சிலைதரித்த காகுத்தனிடைக்கண்டேன்
உய்யாரேன்மாமிமாரிவ்வுரைதஞ்சேவியுறவே. "

இந்தப் பாட்டில் தமது மாமிமார் தம்மீது மிகுந்த பக்ஷமுள்ளவர்கள் என ஸீதாப்பிராட்டியாரே ஸூசிப்பித்திருப்பது கவனிக்கத்தக்கது.



இதுகாறும் ஸ்திரீகளின் பொதுவான தருமங்கள் கூறப்பட்டன. இனி பதிவிரதை அல்லது கற்புடைமகளிரின் தருமங்களைப்பற்றிச் சிறிது கூறுவாம்.

கற்பாவது, " ஸ்திரீகள்கொண்டானிற் சிறந்ததெய்வமில்லையென்றும் குலமகட்கழகு கொழுநனைப்பேணுதல் என்றும் அவனுக்கு இன்னவாறு நீகுற்றேவல்செய்து ஒழுகவேண்டுமென்றும்" இளமைதொடங்கித்தாய் தந்தையராலும் மற்றும் பெரியோராலும்கற்பிக்கப்பட்டு அதற்கேற்ப ஒழுகும் ஒழுக்கமென்பர்.

‡ கம்-ரா. உத்-கா. ஸீதைவனம்புகு. 63.

## (27) ஸ்திகரீள் பரபுருஷரிடம் சம்பாஷித்தல் கூடாதென்பது முதலியன.

இராவணன் பிராட்டியாரை யபகரித்துச்சென்று இலங்காபுரி சேர்ந்து, தன தரண்மனையினுட்புகுந்து தனது பிரதாபங்களை எடுத்துச்சொல்லி தன் செல்வங்களை யெல்லாம் பிராட்டியாருக்கு காண்பித்தபொழுது, மஹாபதிவிரதையான பிராட்டியாரும், பர புருஷனையும், அவனது செல்வங்களையும் கண்ணால் பார்ப்பதும் கூடாதென்றெண்ணி.

$ " ஏவம் வததிதஸ்மிந் ஸா வஸ்த்ராந்தேந வராங்கநா /
பிதாயேந்துநிபம் ஸீதா மந்தமஸ்ரூண்யவர்தயத் // "

தமது திருமுகமண்டலத்தை வஸ்திரத்தின் நுனியினால் மறைத்துக்கொண்டு கண்ணீர் பெருக்கி வருந்தினர். பின்பு இராவணன், அயோக்கியமான வார்த்தைகளுரைத்துத் தன்னைச் சேரும்படி சொன்னபொழுது பிராட்டியார்மிக்ககோபங்கொண்டு

O " த்ருணமந்தரத: க்ருத்வா ராவணம் ப்ரத்யபாஷத / "

தனக்கும் இராவணனுக்கும் நடுவில் ஒரு துரும்பைப் போட்டு பிரதியுத்தரம் உரைத்தனர். மறுபடியும்

துஷ்டராக்ஷஸனான இராவணன் காமாதுரனாய் மதிமயங்கி அசோகவனஞ்சென்று ஸீதாப்பிராட்டியாரைநோக்கி,பதிவ்ரதைகள் கேட்டுச் சகியாத கர்ணகடோரவசனங்களைச் சொன்னான். அதைக்கேட்டுப் பதிவ்ரதாதிடமுள்ளபிராட்டியார் நடுங்கி மனஞ் சகிக்காமல் கிலேசப்பட்டு,

† " சிந்தயந்தீவராரோஹா பதிமேவ பதிவ்ரதா /
த்ருணமந்தரத:க்ருத்வா ப்ரத்யுவாச ஶுசிஸ்மிதா // "

ஸ்ரீ ராமபிரானுடைய கமல சரணங்களை மனதில் தியானஞ் செய்துகொண்டு இராவணனுக்கும் தனக்கும் மத்தியில் ஒரு துரும்பைக் கிள்ளிப்போட்டு, சுத்தமான மந்தஹாசத்துடன் பிரதியுத்தரஞ்சொன்னாள். இராவணனுக்கு சில நீதி வசனங்களைக் கூறிவிட்டு,

---

$ வா-ரா. ஆ - கா. சரு 55. சு. 32, 33.
O ஷை ஷை சரு 56. சு. 1.
† வா-ரா. சுந்-கா. சரு. 21. சு. 2, 3.

† " ராவணம் ப்ருஷ்டத:க்ருத்வா பூயோவசநமப்ரவீத் / "

தன் முகத்தைப் பின்புறமாகத் திருப்பிக்கொண்டு மறுபடியும் சொல்லத் தொடங்கினாள்.

குறிப்பு:— ஸீதாப்பிராட்டியார் இராவணனுக்கும் தனக்கும் மத்தியில் ஒரு துரும்பைக் கிள்ளிப்போட்டு பதிலுத்தரஞ்சொல்லியதின் கருத்தாவது, அந்தப்புரவாசிகளான உத்தம ராஜஸ்திரீகள் பரபுருஷருடன் பேசுவதில்லை. ஒருசமயம் பேசும்படி நேரிட்டால், திரைக்குள்ளிருந்து சம்பாஷிப்பது சம்பிரதாயம். இங்கு திரையில்லாததினால் அதற்குப் பதில் ஒரு துரும்பைப்போட்டுப் பேசினள் என்பதாம். மறுபடியும், பிராட்டியார் முகத்தைப் பின்புறம் திருப்பிக்கொண்டு பேசியதின் கருத்தாவது, பதிவ்ரதையை நோக்கி வாய்கூசாமல் அனுசிதமான வசனங்களைக்கூறிய அந்நீசனுடைய முகாலோகனமுஞ் செய்யத்தகாதென்பதாம்.

¶ " நத்வஹம் மநஸாது அந்யம் த்ரஷ்டாஸ்மி த்வத்ருதே அநக / "

" குற்றமற்ற ஸ்வாமி! அடியாள் தேவரைத்தவிர வேறொரு புருஷனை மனத்திலும் நினைத்ததில்லை." என ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீ ராமபிரானிடம் உரைத்தனர்.

இதனால் ஸ்திரீகள் பரபுருஷரை நினைப்பதும், அவர்களைக் கவனித்துப்பார்ப்பதும், அவர்களுடன் சம்பாஷிப்பதும் கூடாதென்பது ஸூசிதம்.

பிரமாணங்கள்—

" வீக்ஷிதா வீக்ஷதே நாந்யம் ஹஸிதா ந ஹஸத்யபி /
பாஷிதா பாஷதே நைவம் ஸா ஸாத்வீ ஸாது லக்ஷணா // "

" உத்தம குணமுடைய பதிவிரதையானவள் இதர புருஷனால் பார்க்கப்பட்டாலும், தான் அவனைப் பார்க்கமாட்டாள். அவன்சிரித்தாலும் இவள்சிரிக்கமாட்டாள். ஏதாகிலும் வார்த்தை சொன்னாலும் இவள் சொல்லமாட்டாள்." என்ற வியாஸர் வசனமும்,

" எம்மேனியாயினும் நோக்கார் தலைமகன்
தன்மேனி யல்லாற் பிற. "

† வா-ரா. சுந்-கா. சரு. 21. சு. 6. ¶ வா-ரா. அ-கா. சரு 30. சு. 7.

"குலமாதர் தம்முடைய கணவரது தேகத்தின் வடிவத்தை யன்றிப் பிறருடைய தேகத்தின் வடிவழகைப் பாரார்."
என்ற ஆசாரக் கோவையும் நோக்கத்தக்கன.

ஜனஸ்தானத்தில் பர்ணசாலையில் ஸீதாப்பிராட்டியார் தனித்திருந்த சமயத்தில் இராவணன் சன்னியாசிவேடம்பூண்டு வந்து பிராட்டியாரிடம் குசலப்ரச்னஞ் செய்தனன். இராவணன் முனிவேடம்பூண்டிருந்தமையால் உண்மையான சன்னியாசியாகவே எண்ணி,

$ "ஸர்வைரதிதிஸத்காரை: பூஜயாமாஸ மைதிலீ |
உபாநீயாஸநம் பூர்வம் பாத்யேநாபி நிமந்த்ர்யச |
அப்ரவீத் ஸித்தமித்யேவ ததா தம் ஸௌம்யதர்சநம் ||"

‡ "எத்தினளெய்தலு மிருத்திரீண்டென
வேத்திரத்தாசனம் விதியினல்கினள்
மாத்திரிதண்டயல் வைத்தவஞ்சனும்
பூத்தொடர் சாலையினிருந்தபோழ்தினே."

அவனுக்கு ஆஸனமளித்து அர்க்யம், பாத்யம் முதலிய உபசாரங்கள் செய்து, "உணவு ஸித்தமாயிருக்கின்றது; அமுது செய்யவாரு" மென மொழிந்தனள்.

இங்கு தனிமையாகவிருந்த ஸீதாப்பிராட்டியார் பரபுருஷ சம்பாஷணைசெய்து உபசாரங்கள் செய்தது உசிதமோவெனில்—
"பரபுருஷமபிபாஷேத நாந்யத்ர வணிக் ப்ரவ்ரஜிதவ்ருத்த வைத்யேப்ய:"

"வியாபாரி, ஸந்யாஸி, வயதுசென்றவர், வைத்தியர் இவர்களைத் தவிர இதர புருஷர்களிடம் ஸ்திரீகள் பேசக்கூடாது." என்று தருமசாஸ்திரம் கூறுவதால் ஸீதாப்பிராட்டியார் சம்பாஷணைசெய்தது உசிதமேயாம்.

ஜமதக்னி முனிவரின் பத்தினியான இரேணுகாதேவி பிரதி தினமும் கங்கைக்குச்சென்று பாத்திரமன்னியில் ஜலத்தைக் கையால் திரட்ட, அது அவளது கற்பின் மகிமையால் குடவடிவமடைந்து கையில் வரும். அத் தீர்த்தத்தைத் தன் கணவருடைய பூஜைக்குக் கொண்டுவருவது வழக்கம்! ஒருநாள் அவ்வாறு ஜலம்

$ வா-ரா. ஆ-கா. சரு. 46. சு. 33,34. ‡ கம்-ரா. ஆ-கா. சடாயுயிர் 34.

திரட்டச் சென்றபொழுது, ஆகாயமார்க்கமாகச் சென்றுகொண்டிருந்த ஓர் கந்தருவப்புருடனுடைய சாயையை ஜலத்தில்கண்டு "ஆ! இவனது ரூபம் எவ்வளவு அழகாயிருக்கின்றது." என்று மனதில் நினைத்தமாத்திரத்தினால் அவளது கற்புக்குறைந்து ஜலம் கைக்குத்திரண்டு வராமற்போயிற்று. இதைத்தமது ஞானதிருஷ்டியாலுணர்ந்த முனிவர், தன் புத்திரரான பரசுராமரையழைத்து, உன் தாய் கற்புத்தவறினளாகையால் நீசென்று அவளைக்கொன்றுவிடு." என்று ஆஜ்ஞை செய்தனர்.

"ஜாமதக்ந்யேந ராமேண ரேணுகா ஜநநீ ஸ்வயம் |
க்ருத்தா பரஶுநாரண்யே பிதுர்வசநகாரிணா ||" (இராமாயணம்)

பரசுராமருந் தந்தையின் கட்டளையின்படிக் கோடாலியால் தம்மை ஈன்றாளாகிய ரேணுகையை வெட்டிக்கொலை செய்தனர். இந்த இதிஹாஸமும்

பீஷ்மாசாரியார் திருதராஷ்டிரனுக்கு விவாஹஞ்செய்யும் பொருட்டு காந்தாரதேசத்து அரசனிடம் அவருடைய பெண்ணாகிய காந்தாரியைக் கொடுக்கும்படி தூது அனுப்பினர். திருதராஷ்டிரன் கண்ணில்லாதவன் என்பதினால் சுபலனுக்கு ஆக்ஷேபமிருந்தது. ஆனால்குலத்தையும்,கியாதியையும்ஆராய்ந்துபார்த்து,

" ததௌ தாம் த்ருதராஷ்ட்ராய காந்தாரீம் தர்மசாரிணீம் |
காந்தாரீம் த்வத ஶுஶ்ராவ த்ருதராஷ்ட்ரமசக்ஷுஷம் |
தத: ஸா படமாதாய க்ருத்வா பஹுகுணம் ததா |
பபந்த நேத்ரே ஸ்வே ராஜந் பதிவ்ரதபராயணா ||"

" நதியளித்தவனேவலிற்றூதர்போய் நயந்துடன் காந்தார
பதியளித்தமெய்க் கன்னியைத்தருக பூபதிக்கெனமணநேர்ந்தார்
மதியளித்த தொல்குலத்தவன் விழியிலாமகனெனத்தமர்சொல்ல
விதியளித்ததென்றுளமகிழ்ந்தனள் வடமீனெனத்தகுங்கற்பாள்."

" இமைத்தகண்ணிணை மலர்ந்தினி நோக்கிலேன் யாரொருவரையென்று
சமைத்தபட்டமொன்றினிற் பொதி பெதும்பையைத் தந்தையுந்தனை [யோரு
மமைத்தருங்குலமுனிவரு மறைமுறையருங்கடி விளைத்திட்டார்
சுமைத்தராபதி மதியிவளுரோகிணியென்னவேதொழத்தக்காள்."

பதிவ்ரதையாகிய அந்தக் காந்தாரியை திருதராஷ்டிரனுக்கு விவாஹஞ்செய்துகொடுத்தான். திருதராஷ்டிரனுக்குக் கண்ணில்லையென்று காந்தாரி கேழ்வியுற்றாள். ராஜாவே! பதிவ்ரதா தருமத்தைப் பெரிதாகக்கொண்டவளும், அருந்ததிக்கொப்பானவளுமான அந்தக் காந்தாரி, இவ்விதம் தனக்கு நேர்ந்தது வினைப் பயன் எனக் கருதி, 'இனி நான் ஒருபுருஷரையும் கண்ணால் பார்ப்பதில்லையென்று நிச்சயஞ்செய்துகொண்டு ஒரு வஸ்திரத்தையெடுத்துப் பலமடியாகச்செய்து தன் நேத்திரங்களிரண்டையும் மறைத்துக் கட்டிக்கொண்டாள்.

"வாசாபி புருஷாநந்யாந் ஸுவ்ரதா நாந்வகீர்தயந் /"

அப்பதிவ்ரதை வாக்கினாலும் வேறு புருஷர்களை எடுத்துச் சொல்லாமலிருந்தாள் என்ற மஹாபாரத இதிஹாஸமும் நோக்கத் தக்கன.



## (28) குலதருமபத்தினி.

(1) தசரதச்சக்கரவர்த்தியார் கைகேயியை நோக்கி—

¶ "யதா யதா ஹி கௌஸல்யா தாஸீவச்ச ஸகீவச /
பார்யாவத் பகிநீவச்ச மாத்ருவச்சோபதிஷ்டதே //"

"அடி கைகேயி! கௌஸல்யை எனனிடத்தில் எக்காலத்தில் எவ்விதமிருக்கவேண்டுமோ, அக்காலோசிதமாக அடியாள் போலவும், தோழியைப்போலவும், பத்தினியைப்போலவும், ஸகோதரியைப்போலவும், மாதாவைப்போலவும், உபசாரஞ் செய்துவருகின்றனள்." என்று கோஸலாதேவியின் குணத்தைப் புகழ்ந்துரை செய்தனர்.

குறிப்பு:— இந்த சுலோகத்தில்—

(1) தாஸீவத்- என்றிருப்பதால் கௌஸல்யாதேவி பட்டஸ்திரீ யென்றுமெண்ணுமல் பர்த்ரு கைங்கர்யஞ்செய்யவேண்டிய ஸமயத்தில் வேலைக்காரிபோல பணிவிடைசெய்துவந்தன ளென்பதும்,

¶ வா-ரா. அ-கா. சரு 12. சு. 69.

(2) ஸகீவத்– என்றதினால் சொக்கட்டான் முதலிய விளையாட்டு நேரங்களில் தோழியைப்போல உற்சாகத்தோடிருந்தன ளென்பதும்,

(3) பார்யாவத்– என்றதினால் தர்ம கர்மானுஷ்டான ஸமயங்களில் தருமபத்தினியாகவிருந்து தானும் கூடவே தருமமனுஷ்டித் தனளென்பதும்,

(4) பகிநீவத்– என்றதினால் மற்றும் அநேக ஸ்திரீகளைச் சக்கர வர்த்தியார் விவாஹஞ்செய்துகொள்ளுங் காலங்களில் சக்க ளத்தியென்ற த்வேஷமன்னியில் பொறுமையுடன் கூடி சகோதரியைப்போல லாலனைசெய்துவந்தனளென்பதும்,

(5) மாத்ருவத்– என்றதினால் சரீர போஷணை விஷயங்களில் தாயைப்போல உபசரித்தனளென்பதும், தாத்பரியம்

தசரதச் சக்கரவர்த்தியார் கௌஸல்யாதேவியை நோக்கி—

‡ "வத்ஸலாசாந்ருஸம்ஸாச த்வம்ஹி நித்யம் பரேஷ்வபி /"

"அடி, என் பிராணநாயகி! நீ விரோதிகளிடத்திலும் அன்பு கூர்ந்தவளும் கொடுமையற்றவளுமாய் இருப்பவளன்றோ." என உரைத்தனர். இவைகளினால் கௌஸல்யாதேவியார் தமது பர்த்தா மகிழ்ச்சியடையுமாறு வழிபாடுசெய்துவந்தனளென்பது நன்கு விளங்குகின்றது.

(2) இக்ஷ்வாகு வம்சத்தில் ஸௌதாசர் அல்லது மித்திர ஸஹர் என்ற ஓர் அரசர் இருந்தார். அவ்வரசர் அஸ்வமேதயாகம் இயற்றினர். அவ்வேள்வி முற்றுப்பெற்றவளவில் அரசன்மீது விரோதபாவத்துடனிருந்த ஓர் அரக்கன் வஸிஷ்டமுனிவராக வேடம்பூண்டுவந்து, இன்று எனக்கு மாம்ஸ போஜனம் அளிக்க வேண்டுமென்றுரைத்துவிட்டுச் சென்றனன். அரசனும் சமையற் காரருக்கு மாம்ஸபோஜனம் ஸித்தஞ்செய்ய ஆஜ்ஞாபித்தனர். அவர்களும் அவ்விதமே ஸித்தஞ்செய்து நிஜவஸிஷ்டமாமுனி வருக்குப் பரிமாறினர். மாம்ஸ உணவைக்கண்டுமுனிவர் மிக்கச் சீற்றங்கொண்டு, அரசனை நோக்கி—

‡ வா-ரா. அ-கா. சரு 62. சு. 7.

† "யஸ்மாத்த்வம் போஜநம்ராஜந் மமைதத்தாதுமிச்சஸி |
தஸ்மாத் போஜநமேதத்தே பவிஷ்யதி ந ஸம்ஶய: || "

" மதிகெட்ட மன்னனே! இந்த மாம்ஸத்தை நீ எனக்கு உணவாக அளித்தமையின், நீ என்றைக்கும் மாம்ஸம் உண்ணும் புலையனாகக் கடவை." எனச் சபித்தனர். அதைக்கேட்ட ஸௌதாஸர் அம்முனிவருக்குப் பிரதி சாபமளிக்குமாறு கையில் தண்ணீர் எடுத்துக்கொள்ள, அதைக்கண்ணுற்ற அவரது தரும பத்தினியாகிய மதயந்தி என்பவள் அரசனை நோக்கி—

† " ராஜந்ப்ரபுர்யதோஸ்மாகம் வஸிஷ்டோபகவாந்ருஷி: |
ப்ரதிஶப்தும் நஶக்தஸ்த்வம் தேவதுல்யம் புரோதஸம் || "

" ராஜனே! தேவர்களுக்கொப்பான மஹிமைவாய்ந்தவரும் நமக்குப் பிரபுவும் புரோஹிதருமாகிய வஸிஷ்டமாமுனிவருக்கு நீர் இங்ஙனம் பிரதி சாபமளிக்கத் துணிவது உசிதமானதன்று." என இதமுரைத்துத் தடுத்தனள். வேந்தனும் சிற்றந்தணிந்து ஆசிரியரைச் சபிக்குமாறு கோபத்துடன் கையிலெடுத்த தீர்த்தத்தைத் தமது பாதத்தின்மீது பெய்தனர். அதனால் அவரதுபாதம் வெம்பிப்போக, அதுமுதல் அவ்வரசருக்கு 'கல்மாஷபாதர்' என்ற பெயருண்டாகியது.

இலங்கைசென்று திரும்பிவந்த திருவடியானவர் மஹேந்திரகிரியிலிருக்கும், ஜாம்பவான், அங்கதன் முதலிய வானரர்களை நோக்கிக் கூறுகின்றார்.

இராவணனுடைய வேண்டுகோளுக்கிணங்காமல் சினந்துரைத்த ஸீதாப்பிராட்டியாரின் வசனத்தைக் கேட்டு மிக்கக் கோபத்துடன் இராவணன்,

$ " விவ்ருத்ய நயநே க்ரூரே முஷ்டிமுத்யம்யதக்ஷிணம் |
மைதிலீம் ஹந்து மாரப்தஸ்ஸ்திரீபிர்ஹாஹாக்ருதந்ததா ||
ஸ்த்ரீணாம் மத்யாத்ஸமுத்பத்ய தஸ்ய பார்யாதுராத்மந: |
வரா மண்டோதரீ நாம தயா ஸ ப்ரதிஷேதித: || "

† வா-ரா. உத்-கா. சரு 76. சு. 28, 30.
$ ஷை சுந்-கா. சரு 58. சு. 74, 75.

"தன் கண்களை ஜ்வலிக்கும்படி யுறுட்டிப்பார்த்து வலது புஜத்தை ஓங்கிக்கொண்டு பிராட்டியாரைக் கொல்லவந்தான். அப்பொழுது ஸ்திரீகளெல்லோரும் "ஹா! ஹா!" என்று சொன்னார்கள். அவர்களின் மத்தியிலிருந்து இராவணன் மனைவியான மந்தோதரி ஓடிவந்து தடுத்து அநேக நீதி வசனங்களை யுரைத்தனள்." இராவணனும் திரும்பி அந்தப்புரமடைந்தனன்.

† "வளர்ந்தநாணினன் மாதிரமனைத்தையு மறைவித்
தளர்ந்ததோளினனனல் சொரிகண்ணினனிவளைப்
பிளந்து தின்பெனென்றுடன்றனன் பெயர்ந்தனன் பெயரான்
கிளர்ந்த சீற்றமுங் காதலு மெதிரெதிர் கிடைப்ப."

என்பது கம்பராமாயணம்.

மேற்கூறிய மதயந்தி, மந்தோதரி இவர்களுடைய விருத்தாந்தங்களினால், புருஷன் கோபத்தால் யாதாமொரு தகாதகாரியஞ் செய்யப்புகின், குலஸ்திரீயானவள் அவ்வாறு செய்யவொட்டாமற்றடுத்து ஹிதவசனமுரைத்துக் கணவனுடைய மனதைச் சாந்தஞ்செய்வாரென்பது பேற்றும்.

இதுபோலவே, திரௌபதியின் புத்திரர்களான உபபாண்டவர்கள் ஐவரும் தூங்கும் சமயத்தில் அஸ்வத்தாமா என்பவர் அவர்களுடைய தலையை வெட்டினார். அப்பொழுது திரௌபதிதேவி புத்திரசோகத்தால் பரிதபித்து அழுதாள். அந்தச்சமயத்தில் அர்ஜுனன் அவளை நோக்கி "நல்ல சுபாவமுள்ளவளே! உனது குழந்தைகளைக் கொன்றவனுடைய தலையைக்கொண்டுவந்து உன்னிடம் கொடுத்து உன்னுடைய துக்கத்தை நிவர்த்திக்கின்றேன்." எனச் சமாதானஞ்செய்துவிட்டுச் சத்துருவைத் தேடிச்சென்றனன். அர்ஜுனனைக் கண்டு பயந்து, அஸ்வத்தாமா பிராணனைக் காப்பாற்றிக்கொள்ளவேண்டி ஓடினார். அர்ஜுனன் பின்சென்று அஸ்வத்தாமாவைக் கட்டிப்பிடித்துவந்தனன். அதைக்கண்ட ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுனனை நோக்கி, "ஏ! பார்த்தா! இவன் ராத்திரியில் தூங்கிக்கொண்டிருந்த நிரபராதிகளான குழந்தைகளைக் கொன்றவனாதலால், ஆததாயியான இவனைக் கொல்லுவதால் தோஷமில்லை. மேலும் திரௌபதியினிடம், உன் குழந்தைகளைக்கொன்றவனுடைய தலையை உன்னிடம்

† கம்-ரா. சுந்-கா. நிந்தனை 61.

சேர்ப்பிக்கிறேன், என்று சபதமும் செய்திருக்கிருய். ஆகலால் இவனைச் சிக்ஷிக்கவேண்டியது நியாயம்" என்றுரைத்தனர். உடனே அர்ஜுனன் அஸ்வத்தாமாவை இழுத்துக்கொண்டு திரௌபதியினிடம் சென்று அவளை நோக்கி "ஓ, திரௌபதி! உன்னுடைய புத்திரர்களைக் கொன்றவன் இதோ இருக்கின்றான் உன்னிஷ்டப்படி இவனுக்குச் சிக்ஷைசெய்கிறேன்" என்றான். பதிவிரதையான திரௌபதியானவள் அஸ்வத்தாமாவைக் கட்டிக்கொண்டுவந்ததைச் சகியாதவளாகி அவருக்கு நமஸ்காரஞ்செய்து தன்னுடைய பர்த்தாவை நோக்கி,

"முச்யதாம் முச்யதாமேஷ ப்ராஹ்மணோ நிதராம் குரு: |
ஸரஹஸ்யோ தநுர்வேத: ஸவிஸர்கோபஸம்யம: |
அஸ்த்ரக்ராமச்ச பவதா சிக்ஷிதோ யதநுக்ரஹாத் |
ஸ ஏஷ பகவாந்த்ரோண: ப்ரஜாரூபேண வர்ததே ||"

"அரவணைத்துயி லஞ்சனப்புயலனையனமெடுத்தோத
விரைவிற்கொண்டுபோய்த் துருபதன்மகண்முனம் விடுத்தனனவள் காணு
ஒருவனந்தணனுக்கு விற்றொழில் புவிவியப்புறவுணர்த்திட்ட
துரவன்காதலன் கோல்லனீவிடுகெனக் துயிலெனக் கரைந்தாளால்."

"இவரை, விட்டுவிடவேண்டும், விட்டுவிடவேண்டும்; இவர் பிராம்மணர் தவிரவும் குருபுத்திரர்; ரஹஸ்ய மந்திரங்கள், உபஸம்ஹாரம், பிரயோகம் ஆகிய இவைகளுடன் எல்லா அஸ்திரங்களையும் இவருடைய பிதாவான துரோணரிடமிருந்து தாங்கள் அப்யஸித்தீர்கள். அவரே புத்திரரூபியாக இருக்கிறார். ஆகையால் இவரை சிக்ஷிப்பது தகாது" என்று சொன்னாள். அவ்வார்த்தையைக் கேட்டு தருமபுத்திரர் முதலிய யாவரும் உசிதமென்று ஒப்புக்கொண்டார்கள். அர்ஜுனனும் தருமசாஸ்திரத்திற்கு விரோதமின்றித் தாம்செய்த பிரதிஜ்ஞைக்குப் பங்கம் நேரிடாவண்ணம், அஸ்வத்தாமாவினுடைய தலையிலிருக்கும் ரத்தினத்தை மயிர்களுடனெடுத்துப் பின்பு கட்டையவிழ்த்து அனுப்பிவிட்டார். என்ற பாகவத இதிஹாஸம் நோக்கத்தக்கது.

இதுகாறுங் கூறியவாற்றால் ஸ்திரீகள் தமது பர்த்தாவை அந்தந்தக் காலோசிதமாகப் பணிவிடையினாலும், உபசாரத்தாலும், போஷணையினாலும், லாலனையினாலும், திருப்திசெய்விக்க வேண்டுமென்பதும், பர்த்தா ஒருசமயம் கோபங்கோண்டு தரும

விரோதமான காரியஞ்செய்ய ஆரம்பித்தால், அதனைத் தடுத்து நியாயங்களுரைத்துக் கோபத்தைச் சாந்தஞ்செய்யவேண்டுமேன்பதுமான குலதரும பத்தினியின் தருமம் கூறப்பட்டதாயிற்று.

பிரமாணங்கள்;—

"கார்யேஷு தாஸீ கரணேஷு மந்த்ரீ ரூபேஷு லக்ஷ்மீ க்ஷமயா தரித்ரீ।
ஸ்நேஹே ச மாதா ஶயநே து வேஶ்யா ஷட்கர்மயுக்தா குலதர்மபத்நீ॥"

"வீட்டுவேலையில் பணிப்பெண்போலவும், கார்யாலோசனையில் மந்திரிபோலவும், ரூபத்தில் மஹாலக்ஷ்மிபோலவும், பொறுமையில் பூமிதேவிபோலவும், ஸ்நேஹத்தில் தாய்போலும், படுக்கையில் வேசிபோலவும் இவ்வாறுவகையாய் கணவன் விஷயத்தில் ப்ரவர்த்திப்பவள்தான் குலஸ்திரீயாவாள்." (நீதிஸாரம்.)

"அன்னைதயையு மடியாள் பணியுமலர்ப்
பொன்னினழகும் புவிப்பொறையும் — வன்னமுலை
வேசிதுயிலும் விரல்மந்திரிமதியும்
பேசிலிவையுடையாள் பேண்." (நீதிவெண்பா.)

"எப்பணியாலின்புறுவர் காதலரக் காதலரை
யப்பணியாலப்பொழுதே யன்புறுத்தி — யொப்ப
மனங்குழையும் வண்ண மகிழ்விப்பதன்றே
கனங்குழையார் தங்கள் கடன்." (பெருந்தேவனார் பாரதம்)

ஸ்ரீகிருஷ்ணனுடையபத்தினிகளான பதினாயிரம்ஸ்திரீகளும்,

"ப்ரத்யுத்கமாஸந வரார்ஹண பாதஶௌசதாம்பூலவிஶ்ரமண வீஜந கந்தமால்யை:।
கேஶப்ரஸாரஶயநஸ்நபநோபஹார்யை: தாஸீஶதா அபி விபோர் விதது: ஸ்ம தாஸ்யம்॥"

"தங்களுக்கு அநேக வேலைக்காரிகளிருந்தாலும், எதிர்கொண்டழைப்பது, ஆஸனங்கொடுப்பது, பூஜிப்பது, காலையலம்புவது, தாம்பூலங்கொடுப்பது, விசிறுவது, ச்ரமத்தை நிவர்த்திப்பது சந்தனம்பூசுவது, புஷ்பத்தால் அலங்கரிப்பது, தலைவாருவது, படுக்கை போடுவது, ஸ்நானஞ்செய்விப்பது, பழம் முதலியவைகளை ஸமர்ப்பிப்பது முதலியவைகளால் ஸ்ரீ கிருஷ்ணனை யுபசரித்தார்கள்." (பாகவதம்)

என்பன நோக்கத்தக்கன



## (29) பெண்களுக்குப் பதியே தெய்வமென்பதும் பதிசுச்ருஷையே சிறந்த தருமமென்பதும்.

ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானைநோக்கி—

$ "ஆர்யபுத்ர பிதா மாதா ப்ராதா புத்ரஸ்ததா ஸ்நுஷா |
ஸ்வாநி புண்யாநிபுஞ்ஜாநஸ்ஸ்வம் ஸ்வம் பாக்யமுபாஸதே |
பர்த்துர்ப்பாக்யந்து பார்யைகா ப்ராப்நோதி புருஷர்ஷப |
அதச்சைவாஹமாதிஷ்டா வநே வஸ்தவ்யமித்யபி |
நபிதா நாத்மஜோ நாத்மா நமாதா நஸஹீஜநா: |
இஹ ப்ரேத்யச நாரீணாம் பதிரேகோ கதிஸ்ஸதா ||"

"தந்தை, தாய், உடன்பிறந்தார், மக்கள், மருமக்கள் முதலானவர்கள் அவரவர்கள் வினைப்பயனை அவரவர்கள் அனுபவிப்பதன்றி ஒருவர்செய்த வினைப்பயனை மற்றொருவர் அனுபவிப்பதில்லை. மனைவியொருத்தியே பர்த்தாசெய்த வினைப்பயனை அவருடன்கூடி அனுபவிக்கின்றனள். ஆதலால் வனத்திற்குச் செல்லவேண்டுமென தேவர் ஆஜ்ஞைசெய்யப்பட்டபோதே அடியாளும் கட்டளையிடப்பட்டவளானேன். விவாஹமானபின் ஸ்திரீகளுக்கு பிதா, மாதா, புத்திரர், ஸுஹ்ருத்துக்கள் முதலிய ஒருவரும் முக்கியமல்ல. கணவன் ஒருவரே இந்த லோகத்திற்கும், மேல் உலகத்திற்கும் கதியாயிருப்பதால் அவரையே முக்கியமாய் ஆராதிக்கவேண்டும்." என விண்ணப்பஞ்செய்தனர்.

தசரதச்சக்கரவர்த்தியார் கௌஸல்யாதேவியை நோக்கி—

† "பர்த்தாதுகலுநாரீணாம் குணவாந்நிர்குணோபிவா |
தர்மம் விம்ருஶமாநாநாம் ப்ரத்யக்ஷந்தேவிதைவதம் ||"

"ஹே தேவி! நற்குணனுயினும், துர்க்குணனுயினும், தருமமுணர்ந்த ஸ்திரீகளுக்கு கண்ணுல் காணக்கூடிய தெய்வம் பர்த்தாவேயன்றோ?" என உரைத்தனர்.

ஸ்ரீராமபிரான் கௌஸல்யாதேவியை நோக்கி—

‡ "ஜீவந்த்யா ஹி ஸ்த்ரியா பர்த்தா தைவதம் ப்ரபுரேவ ச |"

$ வா-ரா. அ-கா. சரு. 27. சு. 4, 5, 6.
† ஷை ஷை சரு. 62. சு. 8.
‡ ஷை ஷை சரு. 24. சு. 21.

" வாழ்ந்துகொண்டிருக்கிற ஸ்திரீகளுக்கு பர்த்தாவன்றோ தெய்வமாகவும் பிரபுவாகவுமிருக்கிறார்." என அருளிச்செய்தனர்.

அநஸூயாதேவி ஸீதாப்பிராட்டியாரை நோக்கி—

¶ " து:ஶீல: காமவ்ருத்தோவா தநைர்வா பரிவர்ஜித: |
ஸ்த்ரீணாமார்யஸ்வபாவாநாம் பரமம் தைவதம் பதி: ||"

" குணவானாயினும், நிர்க்குணனாயினும், தனவானாயினும், தனமற்றவனாயினும் குலஸ்திரீகளுக்குப் பதியே தெய்வம்." என உரைத்தனள். இவைகளினால் குலமகட்குக் கொழுநனே தெய்வமென்பதாயிற்று.

ஸ்ரீராமபிரான், தமது மாதாவான கோசலையாரைநோக்கி—

○ " யாவஜ்ஜீவதி காகுத்ஸ்த: பிதா மெ ஜகதீபதி: |
ஶுஶ்ரூஷா க்ரியதாம் தாவத் ஸஹி தர்ம: ஸநாதந: ||

" எனது பிதா ஜீவித்திருக்குமளவும் நீர் அவருக்குப் பணிவிடைசெய்யக்கடவீர். இதுதான் பெண்களுக்குரிய புராதனமானதும் சாஸ்வதமாயுள்ளதுமான தருமம். எனப் பெரியோர் அருளிச்செய்திருக்கின்றனர்.

மேலும்,

○ " வ்ரதோபவாஸ நிரதா யா நாரீ பரமோத்தமா |
பர்த்தாரம் நாநுவர்த்தேத ஸா து பாபகதிர்ப்பவேத் ||
பர்த்து: ஶுஶ்ரூஷயா நாரீ லபதே ஸ்வர்கமுத்தமம் |
அபியாநிர்நமஸ்காரா நிவ்ருத்தா தேவபூஜநாத் ||
ஶுஶ்ரூஷா மேவ குர்வீத பர்த்து: ப்ரியஹிதேரதா |
ஏஷதர்ம: ஸ்த்ரியா நித்யோ வேதே லோகே ஶ்ருத: ஸ்ம்ருத: ||"

எவளொருத்தி விரதோபவாஸங்கள் செய்தும், பரபுருஷனைப் பாராமல் பரிசுத்தையாயிருந்தும், தன் பர்த்தாவுக்கிசைந்து நடவாதிருக்கின்றனளோ அவள் நரகத்தையே யடைவள். எந்த ஸ்திரீ தேவதாபூஜைசெய்யாமலும், பெரியோர்களை வணங்காமலுமிருந்து, தன் பர்த்தாவைப் பணிவிடைசெய்து மகிழ்வித்து

¶ வா-ரா. அ-கா. சரு. 117. சு. 24.
○ வா-ரா. அயோ-கா. சரு. 24. சு. 13, 25, 26, 27.

வருகின்றனளோ அவள் உத்தமமான சுவர்க்கத்தையடைவள். ஆதலால் குலமகள் பர்த்தாவுக்குப் பணிவிடையே செய்யக் கடவள். இதுவே அநாதியான தருமமென வேதத்திலும் ஸ்மிருதிகளிலும் கூறப்படுகின்றது." என அருளிச்செய்தனர்.

ஸ்ரீசீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானை நோக்கி—

$ "ஶுஶ்ரூஷமாணா தே நித்யம் நியதா ப்ரஹ்மசாரிணீ |
ஸஹ ரம்ஸ்யே த்வயா வீர வநேஷு மதுகந்திஷு ||"

மிகுந்த பராக்கிரமமுடைய ஸ்வாமி! அடியாள் நியமத்துடன் கூடி இந்திரியங்களையடக்கிக்கொண்டு எப்பொழுதும் தேவருக்குப் பணிவிடைசெய்துகொண்டு தேன், வாஸனை இவைகளுடன் கூடின வனங்களில் தேவருடன்கூட விளையாடிக்கொண்டிருப்பேன்."

† "க்ருதக்ஷணாஹம் பத்ரம் தே கமநம் ப்ரதி ராகவ |
வநவாஸஸ்ய ஶூரஸ்ய சர்யா ஹி மம ரோசதே ||"

"ஓ, ஸ்வாமி! தேவருடன் கூட வனத்திற்குப் புறப்படுவதற்காக சந்தோஷத்துடன் காத்துக்கொண்டிருக்கிறேன். சூரராகிய தேவர் வனத்தில் வஸிக்குங்காலத்தில் தேவருக்குப் பணிவிடைசெய்யவேண்டுமென்று அடியாள் ஆசைப்படுகிறேன். தேவருக்கு மங்களமுண்டாகட்டும்." என உரைத்தனர்.

ஸீதாப்பிராட்டியார் அநஸூயாதேவியை நோக்கி—

‡ "பதிஶுஶ்ரூஷணாந் நார்யா ஸ்தபோ நாந்யத் விதீயதே |
ஸாவித்ரீ பதிஶுஶ்ரூஷாம் க்ருத்வா ஸ்வர்கே மஹீயதே ||
ததா வ்ருத்திஸ்ச யாதா த்வம் பதிஶுஶ்ரூஷயா திவம் |
வரிஷ்டா ஸர்வ நாரீணா மேஷா ச திவிதேவதா ||"

"ஹே, தேவி! பெண்களுக்கு, கணவனுக்குப் பணிவிடை செய்வதைவிட்டு, வேறு தவம் விதிக்கப்படவில்லை. ஸாவித்திரி

$ வா-ரா. அயே-கா சரு. 27. சு. 12.
† ஷை ஷை சரு. 27. சு. 15.
‡ வா-ரா. அ-கா. சரு. 118. சு. 9, 10, 11.

தேவியும் பதிசுச்ரூஷையினால் ஸ்வர்க்கமடைந்தனள். தேவரீரும் பதிசுச்ரூஷையினாலேயே தேவலோகமடைந்து மிக்க மேன்மையுடன் ஜோதிரூபம்பெற்று விளங்குகின்றீர்." என உரைத்தனர்.

இவைகளினால் ஸ்திரீகளுக்குப் பதியே தெய்வமென்பதும், பர்த்தாவுக்குப் பணிவிடைசெய்வதே சிறந்த தருமமென்பதும், வேறு விரதம், தேவதாபூஜை முதலியன அவசியமில்லையென்பதும், கணவனையே கடவுளாகநினைத்துப் பணிவிடை செய்யும் பதிவிரதை சுவர்க்கம்பெறுவாளென்பதும், விரதோபவாஸங்கள் புரிந்து உத்தமியாயிருந்தாலும் பர்த்தாவுக்குப் பணிவிடைசெய்யாதவள் புண்ணியலோகம் பெறாளென்பதும், ஸூசிதம்.

இதற்குரிய பிரமாணங்கள்:—

"பார்யைகசாரிணீ ரூடவிஸ்ரம்பா தேவவத் பதிமநுவர்த்தேத |"

'(ஒருவனையேயடைந்த பார்யையான)ஏகசாரிணீ என்பவள் வேரூன்றின விசுவாஸத்துடன் தேவனைப்போல் பதியை அனுசரிக்கவேண்டும்." (ஏகசாரிணீ என்பவள் ஒரு புருஷனுக்கு ஒரே பத்நினியாயிருப்பவள்.)

"யா பதிம் ஹரிபாவேந பஜேத் ஸ்ரீரிவ தத்பரா |
ஹர்யாத்மநா ஹரேர்லோகே பத்யா ஸ்ரீரிவமோததே ||"

"எவள் தன்னுடைய பர்த்தாவை ஸ்ரீமஹாவிஷ்ணுவாகப் பாவித்து லக்ஷ்மிதேவிபோல் ஸேவிக்கிறாளோ, அவள் ஸ்ரீமஹாவிஷ்ணுவினுடன் லக்ஷ்மிதேவி கூடி சந்தோஷிப்பதுபோல பரலோகத்திலும் தன் பர்த்தாவுடன் சேர்ந்து ஸுகத்தையடைவாள்." (ஸ்ரீபாகவதம்)

"பதிர்ஹி தேவோ நாரீணாம் பதிர்பந்து: பதிர்கதி: |
பத்யுர்கதி ஸமாநாஸ்தி தைவதம வா யதா பதி: ||"

"ஸ்திரீகளுக்குப் பதியே தைவம், பதியே பந்து, பதியே ஆதரவு ஸ்திரீகளுக்குக் கணவனைப்போன்ற ஆதரவும் தெய்வமும் வேறில்லை." (அநுசாஸநம்)

"விசீல:காமவ்ருத்தோவா குணைர்வாபரிவர்ஜித: |
உபசர்ய: ஸ்த்ரியா ஸாத்வ்யா ஸததம் தேவவத்பதி: ||

'கணவன் துராசாரமுள்ளவனாகவிருந்தாலும், அன்னிய ஸ்திரீலோலனாயிருந்தாலும், நற்குணமில்லாதவனாயிருந்தாலும் பதிவிரதையானவள் அவனைத் தெய்வத்தைப்போற் பூசிக்க வேண்டியது.' (மனு)

"பத்யௌ ஜீவதி யா நாரீ உபோஷ்ய வ்ரதமாசரேத் |
ஆயுஷ்யம் ஹரதே பர்து: ஸா நாரீ நரகம் வ்ரஜேத் ||" (பராசரர்)

"தன்பதி உயிருடனிருக்கும்பொழுது எந்த ஸ்திரீயானவள் உபவாஸமிருந்து விரதானுஷ்டானம் செய்கிறாளோ அந்த ஸ்திரீயானவள் பர்த்தாவினுடைய ஆயுஸ்ஸை அபகரித்துவிடுகிறாள்; அவளும் நரகத்தையடைகிறாள்."

"நார்சா ஜபதபோ ஹோமதாந வ்ரதமகாதய: |
ஸ்த்ரீணாம் பதிவ்ரதாநாம் து பத்யௌ ஜீவதி கிம்சந || (ஆச்வலாயனர்)

"ஸ்திரீகளுக்கு பதி ஜீவித்திருக்கும்பொழுது பூஜை, ஜபம், தவம், ஹோமம், தானம், விரதம் யாகம் முதலியவைகளில் யாதொரு அனுஷ்டானமும் கிடையாது."

"நாஸ்திஸ்திரீணாம் ப்ரதக்தர்மோ நவ்ரதம் நாப்யுபோஷணம் |
பதிம் ஶுஶ்ரூஷதே யாது தேந ஸ்வர்க்கே மஹீயதே||" (மனு)

"ஸ்திரீகளுக்கு பஞ்சமஹாயஜ்ஞம், உபவாசம், விரதம் இவை முதலான தருமங்கள் தனியாகக்கிடையாது. கணவனுக்குச் சுச்ரூஷை செய்வதினாலேயே ஸ்வர்க்கத்திற் பெருமை பெறுகிறார்கள்."

"ந வ்ரதைர்நோபவாஸைந தர்மேண விவிதேந ச |
நாரீ ஸ்வர்க்கமவாப்நோதி ப்ராப்நோதி பதிபூஜநாத் ||" (அத்ரி)

"ஸ்திரீயானவள் விரதோபவாஸாதி தருமங்களினால் ஸ்வர்க்கமடைகிறதில்லை. ஆனால் பதிசுச்ரூஷையினால் ஸ்வர்க்கமடைகிறாள்."

"தெய்வந் தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை." (குறள்)

"குலமகட்கழகுதன் கொழுநனைப் பேணுதல்."

" ஆரியகேள்வருவந்து பணிந்திடா
தரியநோன்பொடு பூசனையாற்றுவார்
கரியகூற்றுவன் றூதர்கடிந்திட
வெரியுந்தீ நரகத்திடை யெய்துவார்." (காசிகாண்டம்)

† " இற்பிறப்புடையமாதர் யாதுரை செய்னுங் கேள்வன்
சொற்படி புரிந்து தெய்வந் தொழாதவற் றெழுதுபேணிப்
பிற்பட நுகர்ந்து துஞ்சிப் பிறர்பழிப் பகற்றிமுற்றுங்
கற்பினில்வழாதுநிற்றல் கடனவர்க்காகுமன்றே."

○ " காண்டகைய தங்கணவரைக் கடவுளார்போல்
வேண்டலுறு கற்பினர்த மெய்யுரையினிற்கு
மீண்டையுள தெய்வதமு மாமுகிலுமென்று
லாண்டகைமையோர்களுமவர்க்கு நிகரன்றே."

" கொண்டகணவன் குரூபியேயானாலும்
பண்டுதான்செய்த பலனெனவே — கண்டுகொண்டு
குற்றமெனவெண்ணி மனங்கோணுதவன் பணியைப்
பற்றிமிகச் செய்வார் பரிந்து." (தனிப்பாடல்)

பதி சுச்ருஷையின் மகிமை:—

(1) தபச்ரேஷ்டரான கௌசிகர் என்னும் ருஷி தமது ஆச்சிரமத்தினருகில் ஓர் மரத்தடியிலிருந்து வேதாத்தியயனஞ் செய்துகொண்டிருந்தபொழுது, அம்மரத்திலிருந்த ஒரு கொக்கு தமது சிரஸில் எச்சமிட்டதையறிந்து கோபத்துடனதை விழித்துப்பார்க்கவே, அந்தக் கொக்கு உடனே சாம்பலாய் எரிந்துபோயிற்று. அதனால் பச்சாத்தாபமடைந்த அந்த ருஷி பக்கக் கிராமஞ்சென்று வீடுவீடாய்ப் போய் பிக்ஷை கேட்கும்போது ஒருவீட்டில் ஒரு ஸ்திரீயைப் பார்த்து பிக்ஷைகேட்டார். அக்கிரஹிணி பிக்ஷையெடுப்பதற்காக உள்ளே சென்றபொழுது, அவளது பர்த்தா, தனக்குப் பசி அதிகமயிருப்பதாயும் ஆகாரம் போடும்படி சொன்னதினால் பர்த்தாவுக்கு வேண்டிய ஆகாரமளித்துவிட்டு, பிக்ஷான்னமெடுத்துக்கொண்டு ருஷியினிடம்வந்தாள். சற்றுநேரம் காத்திருக்கும்படி நேரிட்டதினால் ருஷி கோபமடைந்து அக்கிரஹிணியை நோக்கி— 'பெண்ணே! அதிதிபூஜை முக்கியமென்பது உனக்குத் தெரியாதா? பிராம்மணனை அவமதித்துவிட்டாயே? என்றுகேட்க அதற்குக் கிரஹிணி-

† பிரபோத சந்திரோதயம். ○ கந்தபுராணம்.

" க்ஷந்துமர்ஹஸி மே வித்வந் பர்த்தா மே தைவதம் மஹத் /
ஸசாபி க்ஷுதித: ச்ராந்த: ப்ராப்த: சுச்ரூஷிதோ மயா//"

'முனிவரே! மன்னிக்கும்படி பிரார்த்திக்கிறேன். எனக்குக் கணவனே முக்கிய தெய்வமாதலால் பசியால் களைப்புடனிருந்த அவருக்கு ஆகாரங்கொடுத்துவரச் சற்றுத் தாமதமாகிவிட்டது.' என்றனள். மறுபடியும் முனிவர் 'பெண்ணே! தபஸ்வியான பிராம்மணனுடைய கோபம் அக்னியைப்போலெரித்துவிடுமென்பதை நீ தெரிந்துகொள்ளவில்லையே.' என்று சொல்ல, அதற்குக் கிரஹிணி—

" நாஹம் பலாகா விப்ரேந்த்ர த்யஜக்ரோதம் தபோதநம் /
அநயாக்ருத்தயா த்ருஷ்டயா க்ருத்த: கிம் மாம் கரிஷ்யஸி //"

" முனிச்ரேஷ்டரே! என்னைக் கொக்கென்று நினைத்தீரோ? உம்முடைய கோபம் என்னையொன்றுஞ் செய்யமாட்டாது. பதிசுச்ரூஷையின் நிமித்தம் கொஞ்சம் தாமதித்தேன். குலமகட்கழகு தன் கொழுநனைப் பேணுதல் அன்றோ ? ஆகையால் என்னால் செய்யப்பட்ட இக்குற்றத்தை க்ஷமித்தருளக்கடவீர். பிராம்மணச்ரேஷ்டர்களின் கோபத்தின்பெருமை நான் அறிந்திருக்கிறேன். பிராம்மணகோபத்தினால் ஸமுத்திரஜலம் உப்புஜலமாக மாறியதும், தண்டகனுடைய பட்டணம் அரண்யமானதும், பிராம்மணனுவமானத்தால் வாதாபி ஜீர்ணமானதும், மற்றும் பிராமமணப் பிரபாவங்களும் பெரியோர்கள் சொல்லக்கேட்டிருக்கிறேன்."

" சுச்ரூஷாயா: பலம் பச்ய பத்யுர் ப்ராஹ்மண யாத்ருசம் /
பலாகா ஹி த்வயா தக்தா ரோஷாத் தத்விதிதம் மம // "

'பர்த்தாவுக்குப் பணிவிடைசெய்ததின் பலனைப்பாரும். நீர் கோபத்தால் கொக்கை யெரித்ததை நான் இங்கிருந்தே அறிந்தேன்.' என்றனள்.

கௌசிகர் கிரஹிணியை நோக்கி— 'மங்களவதி!

" ப்ரீதோஸ்மி தவ பத்ரம் தே கத: க்ரோதஸ்ச சோபநே / "

நீ மொழிந்ததைககேட்டு மிக்கச் சந்தோஷமடைந்தேன்; எனது கோபமும் நீங்கிவிட்டது; உனக்கு க்ஷேமம் உண்டாகட்டும்; யான்சென்று வருகிறேன்.' என உரைத்துவிட்டுத் தன்னையே நொந்துகொண்டு தன திருப்பிடஞ் சென்றனர்.

மஹாபாரதம் அரண்யபருவத்திலுள்ள இந்த இதிஹாஸமும்,

(2) முன்னொருகாலத்தில் நம் பரதகண்டத்தில் கோதாவரி தீரத்தில் பிரதிஷ்டானமென்னும் நகரத்தில் மௌத்கல்யர் என்னும் ஓர் அந்தணர் இருந்தார். அவருக்கு நளாயினி என்றும் இந்திரசேனையென்றும் பெயர்பூண்ட மனைவியொருத்தி இருந்தாள். அம்மங்கை தன் கணவனையே தெய்வமாகக் கருதித் தன் புருஷன் மனம் மகிழும்வண்ணம் பணிவிடை புரிந்துவந்தனள். கணவனது சொல்லைத்தட்டி நடப்பதில்லை. அப்பெண்மணியின் கற்பின் உறுதியைப் பரீக்ஷித்தறிய விரும்பி அம் முனிவர்

" காதிற்கலந்தகடைக் கண்ணிதன் கற்புமன்புஞ்
சோதித்தலுன்னித் தணியாத துவக்குநோயன்
கோதித்த நெஞ்சன் பெருமூப்பினன் கூர்ந்துநாளும்
வாதித்தலன்றி மகிழாமனை வாழ்வு பூண்டான். "

தமது உடம்பில் மிகுந்த குஷ்டநோயும் அருவருக்கத்தக்க ரூபமும் மிக்கக் கிழத்தனமும் சதா கோபமும் சரீரத்தில் துர்கந்தமும் உடையவராய்த் தம்மைக் காட்டிவந்தார்.

" கச்சிற்கடங்காமுலையாளைக் கணவனுண்ட
மிச்சிற்புறத்து விரல்வீழவும் வீழ்கன்மிஞ்சிக்
குச்சித்தலின்றி நுகர்ந்தாள் கொடுங்காமநோய்கொண்
டிச்சித்தவின்ப நுகராமலிளைத்தமெய்யாள். "

நளாயினி கொஞ்சமேனும் அருவருப்புக்கொள்ளாமல், அவருக்குக் கால்கழுவுதல், ஆடையுடுப்பித்தல், உண்டியுதவல், புண்ணிலிருந்துவரும் சீழ், இரத்தம் முதலியவைகளை அடிக்கடி கழுவி எண்ணெ பூசுதல் ஆகிய பணிவிடைகளனைத்தையும் சிறிதும் குறைவின்றி அன்புடன் புரிந்தும், தன் நாயகன் புசித்த எச்சிலைத் தான்புசித்தும் வந்தனள். ஒருநாள் கணவரது விரல் போஜனஞ்செய்துகொண்டிருக்கையில் உதிர்ந்தது. அதனை எடுத்துவிட்டு அவ்வன்னத்தின் மிகுதியைப் புசித்தாள். ஒருநாள் அவ்வேதியர் நளாயினியை நோக்கி, ' அடி, பெண்ணே! ராஜவீதியில் வசித்துவரும் விலைமாதின்வீட்டிற்குச் செல்ல என்மனம் ஆசையுருகின்றது. நீ என்னை அங்கு தூக்கிச் செல்லவேண்டுமென்று கூறவே, நளாயினி தன் நாயகனை ஆடைஅணிகளால் அலங்கரித்து அவரை ஒரு கூடையிலிருக்கச்செய்து அக்கூடையையும், அம்மாதுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தையும் எடுத்துக்கொண்டு அவ்வேசியின் கிரஹம் சேர்ந்தனள். பின்னர் இரவின் கடையாமத்தில் முன்போலவே தன் கணவனை

கூடையில்வைத்துத் தூக்கிக்கொண்டு வீடுநோக்கித் திரும்பிவந்தனள். வரும்வழியில், மாண்டவ்யர் என்னும் முனிவர் அரசனால் கழுமரத்தில் ஏற்றபட்டிருந்தனர். அச்சமயம் இருள்மூடியிருந்ததினால் தெரியாமல் நளாயினி கொண்டுவந்த கூடை மாண்டவ்யரின் பாதங்களில் தாக்கவே, அதனால் மிகவும் வேதனையடைந்த மாண்டவ்யர் "என்னை இவள் நோகச்செய்தமையால் சூரியன் உதயமானதும் இவள் புருஷன் மரிக்கக்கடவன்." எனச் சாபமிட்டனர். அச்சாபமொழியைக் கேட்ட நளாயினி, 'அந்தோ! அந்தகாரத்தினால் முனிவர் இருந்ததையறியாதுபோயினேன்; அவரோ மிகவும் வேதனையடைகின்றார்; என்செய்வது? கதிரவன் உதயமாயின், என் புருஷன் மரணமடையநேருமாதலின், கதிரவன் உதயமாகாமலிருக்கக்கடவது." என்று சபித்துவிட்டு வீடடைந்தனள். இவ்வாறாக பதிசுச்ரூஷையிற் சிறந்தவளும் பதிவ்ரதாசிரோன்மணியுமாகிய நளாயினியின் சபதப்பிரகாரம் தினகரனும் உதித்தானில்லை. பூமி முழுவதும் இருழ் சூழ்ந்து என்றும் இரவாகவே இருந்தது. இவ்வாறு பலநாட்களாயின. உலகத்திலுள்ள ஜீவராசிகள் மிகவும் வருந்தின. அதனால் தேவரனைவரும் ஒருங்கே திரண்டுவந்து நளாயினியைநோக்கி, 'கற்பரசியே! உன் கணவன் பிழைத்திருக்கும்படி செய்கின்றோம். தயைசெய்து நீயிட்டசாபத்தை மாற்றிக் கதிரவன் உதயமாகும்வண்ணம் செய்யக்கடவை.' என வேண்டினர். உடனே நளாயினி கைகளில் நீரையேந்தித் தம் கணவரை மனதில் தியானித்துச் சூரியன் உதயமாகும்படி விரும்பினாள். கண்ணிமைப்பொழுதில் கதிரவனும் கீழ்திசையில் ஆயிரம் கிரணங்களுடன் தோன்றினான். அப்பொழுது நளாயினியின் கணவரது ஆவி உடலைவிட்டு நீங்கத்தொடங்கவே, அவ்வேதியர் சுகஜீவியாய் வாழ்ந்திருக்கவேண்டுமென்று தேவர்கள் அனுக்கிரகித்தனர். அவ்வேதியரும் பிழைத்தெழுந்து நோயுமொழிந்து இளமையுடன் திவ்யரூபவானாய் விளங்கினார்.' பாரதத்திலுள்ள இந்த இதிஹாஸமும்.

(3) உமாதேவி பரமசிவனை நோக்கிக் கூறியது.

"தேவரே! கேளும். ஒரு பிராம்மணனுக்கு இரண்டு மனைவிகள் இருந்தனர். அவர்களில் ஒருத்தி தேவர்களிடத்தில் பக்தியோடு தருமத்தைச் செய்யக் கருதுகிறவள். அவள் கணவனை அவமதித்துத் தேவதைகளிடத்தில் பக்திவைத்து ஊக்கத்துடன் தேவதா விக்கிரஹங்களைப் பூஜித்துப் பெரிய தருமத்தைச் செய்தாள். சிறந்தவளான மற்றொருத்தி கணவனைப்பற்றியே தருமஞ்செய்ய நினைத்து அவனையே தெய்வமாகக்

கொண்டு அவன் விருப்பத்தைச் செய்தாள். மஹாதேவரே! இப்படி நடந்துகொண்டிருக்கையில் அவ்விருவருக்கும் ஒருகாலத்தில் மரணம் நேர்ந்தபோது அவ்விருவரும் பரலோகத்தின்வழியில் சென்றனர். அவர்களுள் ஒருத்தியான் தெய்வப்பற்றுள்ளவள் நிற்க, பதிவ்ரதை புண்ணிய லோகம் சென்றாள். தெய்வபக்தியுள்ளவள் நின்றுகொண்டு மிக்க துயரத்தோடு அழுதாள். திக்பாலகனாகிய யமன் அவளைப்பார்த்து, 'குற்றமற்றவளே! நீ விசனப்படாதே. உனக்கு உலகங்களில்லை. நீ உன் தருமத்தைச் செய்யாமலிருந்ததனால் உனக்கு அந்தப் புண்ணிய உலகங்கள் கிடையா. பெண்ணுக்குக் கணவனே தெய்வமாக எல்லாத் தேவதைகளாலும் விதிக்கப்பட்டிருக்கிறன். சிறந்தவளே! நீ அவனை அவமதித்தபின் புண்ணியலோகங்களுக்குப் போவது எப்படி? பெண்ணரசியே! நீ மதிகெட்டு உன்தெய்வத்தை அறியாமற்போனாய். கணவனுள்ள பெண் கணவனுக்குள்ள தருமத்தையே செய்யவேண்டும். ஆதலால், நீ திரும்பிச் செல்; கணவனுக்கு அனுகூலத்தைச் செய். அதன்மேல், பதிவ்ரதைகள் போகும் லோகங்களுக்குப் போவாய். இல்லாவிடில் உத்தமமான பதியுலகத்திற்குப் போகமுடியாது; என்றும் பூரணமான சொல்லைச் சொன்னான். யமன் இவ்வாறுசொன்னபின், அவள் மறுபடியும் திரும்பிச் சென்று, கணவனையடுத்து அவன் விருப்பத்தையே முக்கியமாகச் செய்துகொண்டிருந்தாள். மஹாதேவரே! இப்படி இருப்பதினால் பெண்ணுக்குக் கணவனே தெய்வம். ஆதலால், அவள் கணவனையே முக்கியமாக நினைத்து அவனுக்குப் பணிவிடை செய்யவேண்டும்."

என்ற அநுசாஸனபருவம் (மொழிபெயர்ப்பு. அத். 249) உமா மஹேச்வர ஸம்வாதத்திலுள்ள இதிஹாஸமும் இங்கு நோக்கத்தக்கன.



## (30) பிரிவாற்றாமை.

ஸ்ரீராமபிரான் ஸீதாப்பிராட்டியாரை நோக்கி:—

† " சதுர்தச ஹி வர்ஷாணி வஸ்தவ்யம் தண்டகே மயா /
பித்ரா மே பரதஸ்சாபி யௌவராஜ்யே நியோஜித: //
ஸோஹம் த்வாமாகதோ த்ரஷ்டும் ப்ரஸ்திதோ விஜநம் வநம் /
அஹம் கமிஷ்யாமி மஹாவநம் ப்ரியே த்வயா ஹி வஸ்தவ்யமிஹைவ பாமினி /
யதாவ்யலீகம் குருஷே ந கஸ்யசித் ததாத்வயா கார்யமிதம் வசோ மம //"

† வா-ரா. அ-கா. சரு. 26. சு. 23, 24, 28.

○ " பொருவிலெம்பி புவிபுரப்பான் புகல்
இருவராணையு மேந்தினெ னின்றுபோயக்
கருவிமாமழை கற்றடங்கண்டுநான்
வருவே னீண்டு வருந்தலை நீயென்றான். "

" ஹே, ப்ரியே! வைதேஹி! என் தந்தையார், நான் பதினான்கு வருஷம் வனவாஸஞ் செய்யவேண்டுமென்றும், பரதன் யுவராஜனாகப் பட்டம் பெறல்வேண்டுமென்றும், கட்டளையிட்டனர். ஆதலால் நான்வனஞ்செல்லப் புறப்பட்டு உன்னைப் பார்த்துவிட்டுப் போவதற்காக இங்கு வந்தேன். நான் இப்பொழுதே வனஞ்செல்லுகின்றேன். நீ வருந்தாது இங்கேயே வஸித்திருந்து ஒருவருக்கும் ஒரு துன்பமும் செய்யாமல், என் சொற்படிசெய்து வாழ்ந்திருக்கக்கடவை." என அருளிச் செய்தனர்.

○ " நாயகன் வனநண்ணலுற்றானென்றும்
மேய மண்ணிழந்தானென்றும் விம்மலள்
நீய் வருந்தலை நீங்குவேன் யானென்ற
தீயவெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள். "

ஸீதாப்பிராட்டியார் தமது பர்த்தா வனம்போக நேர்ந்ததைப் பற்றியாயினும் இராஜ்ஜியமிழந்ததைப் பற்றியாயினும் சிறிதும் வருத்தமடையாமல் ' நீ வருந்தாதே நான் வனஞ்சென்று வருகின்றேன்' என்ற கொடிய வசனத்தைக் கேட்டதும் மிகவும் வருத்தமடைந்து தம் பர்த்தாவை நோக்கி—

¶ " அன்னதன்மைய ளையனுமன்னையும்
சொன்னசெய்யத் துணிந்தது தாயதே
என்னையென்னை யிருத்தியென்றனென
உன்னைவுன்னவுயிருமிழா நின்றாள். "

" கிமிதம் பாஷஸே ராம வாக்யம் லகுதயாத்ருவம் / "

" தேவரீர், பெற்றோர்களேவிய காரியங்களைச் செய்யத் துணிந்தது நியாயமென்றாலும், (குலமகள் தன் கொழுநனைப் பிரிந்திராள், என்பதை நன்குணர்ந்த) ஹே, நாதா! அடியேனை

○ கம்-ரா. அ-கா. நகர்நீங்கு. 221, 222.
¶ கம்-ரா. அ-கா. நகர்நீங்கு. 224.

நோக்கி இங்கே இரு என எளிமையாய் அருளிச் செய்தது யாது காரணம்பற்றி?" என்றுரைத்து ஸ்ரீராமபிரான் அருளிச்செய்த மொழிகளை நினைத்து நினைத்துப் பெருமூச்சுவிட்டுக்கொண்டு, 'ஹே நாதா!

$ " இமம் ஹி ஸஹிதம் ஶோகம முஹூர்தமபி நோத்ஸஹே |
கிம்பு நர் தஶவர்ஷாணி த்ரீணிசைகம்ச து:கிதா |
இதி ஸாஶோகஸம்தப்தா விலப்ய கருணம் பஹு |
சுக்ரோஶ பதிமாயஸ்தா ப்ருஶமாலிங்க்ய ஸஸ்வரம் ||"

"தேவர் வனஞ்செல்லுகிறேனென வாயினாற் சொல்லும் பொழுது இந்தச் சோகத்தைப் பொறுக்க என்னால் முடியவில்லை. பத்துவருஷம், மேலே மூன்றுவருஷம், அதற்குமேல் ஒருவருஷம், அந்தோ! இவ்வளவு காலமும் தேவர் விரகத்தை, எவ்விதம் பொறுத்துப் பிழைத்திருப்பேனென்று மிகவும் சோகங்கொண்டு ஆயாஸமடைந்து பர்த்தாவைக் கட்டியணைத்துக்கொண்டு கூவி அழுதனள்."

இதனால் கற்புடைய மகளிர் தம்கணவரது பிரிவைக் கேட்கவும் மனஞ்சகியார் என்பது ஸூசிதம்.

இதுபோலவே நளமஹாராஜன் தன் நகரினின்றும் நீங்கி வனஞ்செல்லும்பொழுது, தன் பத்தினியாகிய தமயந்தியை நோக்கி—

'உயிர்நில மக்களோடு லங்கொடோளினன்
செயிரறுதந்தைபாற் செல்கென்றோதலும்
புயனறுங்கூந்தலாள் புண்ணினூடெரி
யயினுழைந்தாலென வலமந்தேங்கினாள்."

"நீ உன் மக்களுடன் உன் தந்தையிடஞ்செல் என்றதும் தமயந்தி மர்மஸ்தானத்திலுண்டான புண்ணில் எரிகின்ற வேலானது நுழைந்ததுபோல் மனங்கலங்கி அழுதனள்." என்ற நைடதமும்,

" செல்லாமை யுண்டோ லெனக்குரை மற்று நின்
வல்வரவு வாழ்வார்க் குறை."

என்ற குறளும், நோக்கத்தக்கன.



$ வா-ரா. அ-கா. சரு. 30. சு. 21, 22.

## (31) பதியை அநுசரித்தல்.

ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானை நோக்கி "கொண்டானின் துன்னியகேளிர் பிறரில்லை. என்றபடி பெண்களுக்குக்கணவனைத் தவிர நெருங்கிய பந்துக்கள் வேறொருவருமில்லை. ஆதலின்

‡ யதி த்வம் ப்ரஸ்திதோ துர்கம் வநம்தயைவ ராகவ |
அக்ரதஸ்தே கமிஷ்யாமி ம்ருத்நந்தீ குசகண்டகம் ||
ப்ராஸாதாக்ரைர் விமாநைர்வா வைஹாயஸகதேந வா |
ஸர்வாவஸ்தாம் கதா பர்து: பாதச்சாயா விஸிஷ்யதே ||
ஸாஹம் த்வயா கமிஷ்யாமி வநம்த்ய ந ஸம்ஸய: |
நாஹம் ஸக்யா மஹாபாக நிவர்த்யிது முத்யதா ||
ஸஹ த்வயா விஸாலாக்ஷ ரம்ஸ்யே பரமநந்திநீ |
ஏவம் வர்ஷ ஸஹஸ்ராணி ஸதம் வாபி த்வயா ஸஹ ||
வ்யதிக்ரமம் ந வத்ஸ்யாமி ஸ்வர்கோபி ஹி நமே மத: ||

புகுதற்கரிய வனத்திலே வாஸஞ்செய்ய தேவரீர் இன்று புறப்படுவதாயின், வழியிலுள்ள தருப்பைகள் முள்ளுகள் தேவர் திருவடிகளில் தைக்காமல் ம்ருதுவாக்கிக்கொண்டு நான் முன்னால் நடந்துசெல்வேன். மணிமாடத்திலிருந்தாலும், விமானத்திலேறிச் சென்றாலும் ஆகாய கமனஞ்செய்தாலும், பர்த்தாவுடன் பின்சென்று பர்த்தாவின் திருவடி நிழல்போலப் பிரியாதிருப்பதே குலஸ்திரீகளுக்கு மேன்மையென விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அடியேன் தேவருடன் வனத்துக்கு இப்பொழுதே வருவேன். என் மனஉறுதியை மாற்றமுடியாது. அநேக நூறுயிரம் வருஷங்களாயினும் தேவருடன் வனத்தில் பரமசந்தோஷத்துடன் வசிக்க விரும்புகின்றேன். தேவரைப் பிரிந்து வசிக்க தேவலோகமாயினும் விரும்பேன்." என்று விண்ணப்பஞ் செய்தனர்.

பிராட்டியாரின் வாக்கியங்களைச் செவியுற்று ஸ்ரீராமபிரான் பிராட்டியாரை நோக்கி—

† " வநே தோஷா ஹி பஹவோ வஸதஸ்தந்நிபோத மே |
ஸீதே விமுச்யதாமேஷா வநவாஸக்ருதா மதி: ||
பஹுல தோஷம் ஹி காந்தாரம் வநமித்யபிதீயதே || "

‡ வா-ரா. அ-கா. சரு. 27. சு 7, 9, 15, 20, 21.
† வா-ரா. அ-கா. சரு. 28. சு. 4, 5.

$ " வல்லரக்கரின் மால்வரைபோய்விழுந்
தல்லரக்கினுருக்கழல் காட்டயற்
கல்லரக்குங் கடுமையவல்லநின்
சில்லரக்குண்ட சேவடிப்போதென்றான்."

" அடி, ஸீதே! காட்டில் பலவகைத் துன்பங்கள் நேரிடும்; அவைகளையுரைக்கின்றேன் கேள்; நீயும் வனத்திற்குக் கூட வருவதான எண்ணத்தை விட்டுவிடு. அனேக குற்றங்களோடு கூடிய காடே வனமெனப்படுகின்றது. வனத்தில் துஷ்டமிருகங்கள் சஞ்சரிக்கும். வழிகளில் கற்களுங் கூறியமுட்களும் நிறைந்திருக்குமாதலாலும், வெய்யிலின் தாபத்தினாலும், உன்னால் நடப்பதற்கு முடியாமல் வருத்தமடைவாய். பலவிடங்களில் பானஞ்செய்ய நீரில்லாமல் கஷ்டமும் மற்றும் பலவிதமான துன்பங்களும் நேரிடும்." என்றுரைத்துக் காட்டுக்குத் தம்முடன் அழைத்துக்கொண்டுபோக உடன்படாமல் தடுத்தருளிச் செய்தனர். அவ்வருளிச்செயலைக் கேட்ட பிராட்டியார், ஸ்ரீராமபிரானை நோக்கி—

$ " பரிவிகந்த மனத்தொடு பற்றிலா
தொருவுகின்றனை யூழியருக்கனு
மெரியுமென்பது யாண்டையது நீண்டுநின்
பிரிவினுஞ்சுடுமோ பெருங்காடென்றாள்."

‡ " யே த்வயா கீர்த்திதா தோஷா வநே வஸ்தவ்யதாம் ப்ரதி /
குணாநித்யேவ தாந் வித்தி தவஸ்நேகபுரஸ்க்ருதா // "

பிராணநாதரே! என்னிடத்துச் சிறிதும் கிருபையில்லாமல் தேவரீர் என்னைவிட்டுச்செல்வதினால் எனக்குண்டாகும் பிரிவுத் துயர் ஊழிகாலத்துச் சூரியனும் நிகரல்லனென்னும்படி சுடுமே! இத்துயரைவிட கானகஞ்சுடுமோ? மேலும் வனவாஸஞ்செய்வதில் தேவரீரருளிச் செய்த தோஷங்களெல்லாம் தேவரீருடன் கூடி வஸிக்கும் அடியாளுக்குக் குணங்களேயாகும்.

$ கம்-ரா. அ-கா. நகர்நீங்கு 225, 226.
‡ வா-ரா. அ-கா. சரு. 29. சு. 2.

† " த்வயாச ஸஹகந்தவ்யம் மயா குருஜநாஜ்ஞயா |
த்வத்வியோகே மே ராம த்யக்தவ்யமிஹஜீவிதம் ||
பதிஹீநாது யாநாரீ நஸாஸக்ஷ்யதி ஜீவிதும் |
காமமேவம்விதம் ராம த்வயாமம நிதர்ஸிதம் || "

" தேவர் எங்குசென்றாலும் அங்கு கூடவே செல்லவேண்டு மென எனது பெற்றோர்கள் கட்டளையிட்டிருப்பதால், தேவர் என்னைவிட்டுச்சென்றால் அடியேன் பிராணனை விட்டுவிடுவேன். மேலும் குலஸ்திரீ கணவனைவிட்டுப் பிரிந்திருக்கவிரும்பாள் என தேவரே அடியாளுக்கு உபதேசித்திருக்கின்றீர். "

† " ஸுத்தாத்மந் ப்ரேமபாவாத்தி பவிஷ்யாமி விகல்மஷா |
பர்தார மநு கச்சந்தீ பர்தா ஹி பரதைவதம் || "

நின்மலஸ்வரூப ! அடியாள் தேவரிடத்தில் களங்கமற்ற மனதுடன் பரபக்தியுடனிருக்கின்றேன்; பதியே எனக்குத் தெய்வமென உறுதிகொண்டுத் தேவரீரே தஞ்சமெனத் தேவரைத் தொடர்ந்து வருகின்றேன்; ஆகையால்—

† " பக்தாம் பதிவ்ரதாம் தீநாம் மாம் ஸமாம்ஸுகது:கயோ: |
நேது மர்ஹஸி காகுத்ஸ்த ஸமாந ஸுகது:கிநீம் ||
யதிமாம் து:கிதாமேவம் வநம் நேதும் ந சேச்சஸி ||
விஷ மக்நிம் ஜலம் வாஹமாஸ்த்தாஸ்யே ம்ருத்யுகாரணாத் | "

தேவரிடம் பக்தியுடையவளும், பதிவிரதையும், வேறுகதியில்லாதவளும், தேவருடன்கூடி ஸுகதுக்கங்களைச் சமமாக அநுபவிக்கத் தகுந்தவளுமான அடியேனையுமழைத்துக்கொண்டு எழுந்தருளக்கடவீர். என்னைவிட்டுவிட்டுப் போகவேண்டுமென தேவர் உறுதிகொண்டிருக்கும்பக்ஷத்தில், அடியேன் விஷத்தையுண்டாவது, நெருப்பில் விழுந்தாவது, தண்ணீரில் விழுந்தாவது உயிரை மாய்த்துக்கொள்ளுவேன். ஆதலால்

¶ " ஸமாமநாதாய வநம் நத்வம் ப்ரஸ்திதுமர்ஹஸி |
தபோவாயதிவாரண்யம் ஸ்வர்கோவாஸ்யாத்வயாஸஹ ||
நசமே பவிதா தத்ர கஸ்சித்பதி பரிஸ்ரம: |
ப்ருஷ்டதஸ்தவகச்சந்த்யா விஹாரஸயநேஷ்விவ ||

† வா-ரா. அ-கா. சரு. 29. சு. 5, 7, 16, 20, 21.

¶ வா-ரா. அ-கா. சரு. 30. சு. 10—14, 16, 18, 19, 20.

குமகாமமரேஷீகா யேச கம்டகிநோத்ருமா: |
தூலாஜிந ஸமஸ்பர்ம மார்கேமம ஸஹத்வயா ||
மஹாவாத ஸமுத்பூதம் யந்மாமவ கரிஷ்யதி |
ரஜோரமணதந்மந்யே பரார்த்யாமிவசந்தநம் ||
மாத்வலேஷு யதா மிம்யே வநாந்தர்வநகோசரா |
குதாஸ்தரணயுக்தேஷு கிம்ஸ்யாத்ஸுகதரந்தத: ||
நமாதுர்நபிதுஸ்தத்ர ஸ்மரிஷ்யாமி நவேம்மந: ||
யஸ்த்வயாஸஹஸஸ்வர்கோ நிரயோயஸ்த்வயாவிநா |
இதிஜாநந்பராம் ப்ரீதிம் கச்ச ராம மயா ஸஹ ||
அதமாமேவமவ்யக்ராம் வநம் நைவ நயிஷ்யஸே |
விஷமத்யைவ பாஸ்யாமிமாவமம் த்விஷதாம் கமம் ||
பம்சாதபி ஹி து:கேந மம நைவாஸ்தி ஜீவிதம் |
உஜ்ஜிதாயாஸ்த்வயாநாத தைவ மரணம் வரம் ||"

"தேவர் என்னையுமழைத்துக்கொண்டு எழுந்தருளக்கடவீர். தவமாகிலும், வனவாஸமாகிலும், தேவலோகமாகிலும், தேவருடன் எனக்கும் வேண்டுமேயல்லது, தேவரைவிட்டுத் தனியே ஒன்றும் வேண்டுவதில்லை. தேவர் திருவடிநிழலைப் பற்றி பின்றொடர்ந்துவருகிற எனக்கு விநோதமாக நடப்பது போலவும், சுகமாகப் படுத்திருப்பதுபோலவும் தோன்றுமே யன்றிச் சிறிதும் வருத்தம் தோன்றாது. தருப்பை, நாணல், மூங்கில், மற்றும் முள்ளுடைய மரங்கள் யாவும் எனக்கு இலவம் பஞ்சு, மான்றோல் முதலியனபோல மெதுவாகயிருக்கும். காற்றில் பறந்து என் சரீரத்தின்மேல் படிந்த தூளிகளைச் சிறந்த வாஸனையுள்ள சந்தனமென எண்ணுவேன். தேவருடன் இளம் புற்றரையில் படுத்தாலும் பட்டுமெத்தையின்மீது படுத்தாற் போல மிகவும் இன்பம் தரும். அங்கு தாயையாயினும், தந்தையையானும், நம்மனையையாயினும் நினையேன். தேவருடன் வஸிப்பதே எனக்குச் சுவர்க்கமாகவும், தேவரைப்பிரிந்திருப்பது எனக்கு நரகவாஸமாயுமிருக்கும். ஆதலால் என்னையும் அழைத்துக்கொண்டெழுந்தருளக்கடவீர். என்னை அழைத்துக்கொண்டு

போகாதபக்ஷத்தில் நான் இப்பொழுதே விஷத்தையுண்டு இறப்பேன். தேவர் என்னைவிட்டுப் போகும்பக்ஷத்தில் சோகத்தால் யான் இறப்பது நிச்சயமாகையால், அதைவிட இப்பொழுதே உயிர் துறப்பது மேன்மையாகும்." என பலவாறு பிரார்த்தித்து வேண்டினர்.

ஸ்ரீராமபிரான் பிராட்டியாருடைய வேண்டுகோளுக்கிசைந்து, பிராட்டியாரைநோக்கி—

¶ "அநுகச்சஸ்வ மாம் பீரு ஸஹதர்மசரீபவ /"

"அடி, ஸீதே! நீ என்னுடன்வர நிச்சயங்கொண்டிருக்கின்றனையாதலால், நான் அனுமதியளிக்கின்றேன். என்னைப் பின்தொடர்ந்து வரக்கடவை. வனத்திலும் நான்செய்யும் தருமங்களுக்குச் சகாயமாகக்கடவை." என்றருளிச்செய்தனர்.

பிராட்டியாரும் பர்த்தாவுக்குமேலான தெய்வமில்லையென்றெண்ணி,

○ "ஸர்வாந் போகாந் பரித்யஜ்ய பர்த்ருஸ்நேஹபலாத்க்ருதா /
அசிந்தயித்வா து:காநி ப்ரவிஷ்டா நிர்ஜநம் வநம் //"

"ஸ்ரீராமபிரானிடத்திலுள்ள அன்பினால், தான் நகரத்திலனுபவித்துவந்த சந்தன புஷ்ப தாம்பூலாதி ஸகலசுகங்களையும் விட்டு, வனவாஸ துக்கங்களையும் நினையாமல், தண்டகாரண்யத்திற்கு ஸ்ரீராமபிரானைப் பின்தொடர்ந்து சென்றனர்.

இவைகளினால் பதிவிரதைகள் தம்கணவர் மிக்கக் கஷ்டதசையையடைந்திருந்தபோதிலும் அவரைவிட்டு விலகாமல், அவர் எங்குசென்றாலும் தொடர்ந்துசென்று பணிவிடைகள் செய்யவேண்டுமென்பது ஸூசிதம்.

ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானுடன் வனஞ்செல்லப் புறப்பட்டபொழுது கோசலையார் பிராட்டியாரை நோக்கி—

¶ வா-ரா. அ-கா. சரு. 30. சு. 40.
○ ஷை. சு-கா. சரு. 16. ச. 19.

$ " ஸாத்வீனாம் துஸ்திதானாம் து ஶீலேஸத்யேஶ்ருதேஸ்திதே |
ஸ்திரீணாம் பவித்ரம் பரமம் பதிரேகோவிஶிஷ்யதே ||
ஸத்வயாநாவமந்தவ்ய: புத்ர: ப்ரவ்ராஜிதோவநம் |
தவதேவஸமஸ்த்வேஷநிர்தந: ஸதநோபிவா || "

" கற்புடைய ஸ்திரீகளின் மனமானது நன்னடக்கையிலும், ஸத்தியத்திலும், பெரியோருபதேசத்தைக் கேட்பதிலும், பொறுமையிலும் நிலைகொண்டிருக்கும். கணவனே தஞ்சமென நினைத்து அவனைப் பிரியாமல் அவன் சென்றவிடமெல்லாங் கூடவேசென்று வாழ்ந்திருப்பள். பதிவிரதைகளுக்குத் தெய்வங்களைப்பார்க்கிலும் பதியே சிறந்தவன். ஆதலால், ஸீதே! உன் பதி வனவாசஞ் செய்பவனெனவெண்ணி நீயொருபொழுதும் இகழாதே. உன்பதி தனவானுயினும் தனமிழந்தவனுயினும் அவனே உனக்குத் தெய்வமாகக் கடவன்." என ஹிதோபதேசஞ்செய்திருப்பதும்,

அநஸூயாதேவி ஸீதாப்பிராட்டியாரை நோக்கி—

‡ " நகரஸ்தோ வநஸ்தோவா ஶுபோவா யதிவாஶுப: |
யாஸாம் ஸ்த்ரீணாம் ப்ரியோ பர்தா தாஸாம் லோகா மஹோதயா: ||
நாதோவிஶிஷ்டம் பஶ்யாமி பாந்தவம் விம்ருஶம்த்யஹம் |
ஸர்வத்ர யோக்யம் வைதேஹி தப: க்ருதமிவாவ்யயம் ||
த்வத்விதாஸ்து குணைர்யுக்தா த்ருஷ்டலோகபராவரா: |
ஸ்த்ரிய: ஸ்வர்கே சரிஷ்யந்தி யதா புண்யக்ருதஸ்ததா |
ததேவமேதம்த்வமநுவ்ரதா ஸதீபதிப்ரதாநா ஸமயாநுவர்திநீ |
பவ ஸ்வபர்து:ஸஹதர்மசாரிணீ யஶஶ்சதர்மம்ச தத: ஸமாப்ஸ்யஸி || "

" ஹே, ஸீதே! பர்த்தாவானவன் வீட்டில் வஸித்தாலும் காட்டில் வஸித்தாலும் பாபியாயினும் சுபனுயினும் அவனிடத்தில் எந்த ஸ்திரீகள் அதிகமான பக்தியுடனிருக்கின்றனர்களோ அவர்களுக்குச் சிறந்த உலகங்கள் கிடைக்கின்றன. பெண்களுக்குக் கணவனைவிடச் சிறந்த பந்துக்களொருவருமில்லை. உன்

$ வா-ரா. அ-கா. சரு. 39. சு. 24, 25.

‡ வா-ரா. அ-கா. சரு 117. சு. 23, 25, 28, 29.

னைப்போன்ற ஸ்திரீகள் சிறந்த தருமங்களைச் செய்து சுவர்க்க மடைந்திருக்கின்றனர். ஆதலால் நீயும் அவ்வண்ணமே கணவனையனுசரித்துப் பதிவ்ரதா தருமத்தைப் பாதுகாத்து வருவாயாகில் நல்லகீர்த்தியையும் தருமத்தையும் பெற்று நெடுங்காலம் வாழ்வாய்." என்று அருளிச் செய்திருப்பதும், கவனிக்கத் தக்கன.

ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானைப்பின்தொடர்ந்து சென்றதுபோலத் தன்னைவிட்டுப்பிரிந்து வனஞ்செல்லவிரும்பிய நளமஹாராஜனை நோக்கி, தமயந்தியானவள்,

† "ஹத ராஜ்யம் ஹதத்ரவ்யம் விவஸ்த்ரம் த்ருட் ஶ்ரமாந்விதம் |
கதமுத்ஸ்ருஜ்ய கச்சேயமஹம் ஹி விஜநே வநே ||"

○ "நெடுபடுகானிடைத் தமியைநீங்கிப்போய்ப்
படுபரலமளிமேற் பள்ளிகொள்ள வெங்
கடிநகரடைந்துமெல் லணையிற்கண்படி
லடியனேற்கிதனினு மறனுண்டாங் கொலோ."

"கூற்றுறழ் குருதிவேற் குரிசின்மக்கடா
மாற்றினுமாற்றலா தஞ்சின் மூழ்கினு
மாற்றருங் கற்பினுர் மகிழ்நர்கான்செல
வேற்றுநாடுறைவது விழுமிதோவென்றாள்."

"சிலதியர் பரப்பிய தேங்கொண் மெல்லிதழ்
மலர்மிசை மிதிப்பினும் வருந்துசீறடி
நிலமிசைப்படுபா லுறைப்ப நேரிழை
புலவுவேற்தானைபின் றொடர்ந்து போயினள்."

"நீர் இராஜ்ஜியத்தையிழந்து திரவியமின்றி வஸ்திரமில்லாமல் வனத்தில் தனியே சஞ்சரிக்க விட்டுவிட்டு நான் என் பிதாவின் கிரஹமடைந்து சௌக்கியமாய் வாழுதல் தருமமாகுமோ; ஒருக்கால் மக்களைவிட்டுப் பிரிவதற்கிசைந்தாலும் கற்புடைமாதர் தமது நாயகனை விட்டுப்பிரிய இசைவது மேன்மையாகுமோ?" என்றுரைத்துத் தனது புஷ்பத்தினும் மெல்லிய பாதம் வருந்தத் தம் நாயகனைப் பின்தொடர்ந்து சென்றாள். என்ற இதிகாசமும்,

† பாரதம் வனபருவம். ○ நைடதம்.

¶ " த்யுமத்ஸேநஸுதம் வீரம் ஸத்யவந்தமநிந்திதா |
ஸாவித்ர்யநுசசாரைகா யமலோகம் மநஸ்விநீ || "

" ஸாவித்திரியென்பவள், த்யுமத்ஸேனரின் புத்திரரும், தன் பர்த்தாவுமான ஸத்தியவந்தனையனுசரித்து வனத்திற்குச் சென்று வஸித்தும், பர்த்தாவினுடன் யமலோகம்வரையில் கூடவே சென்றாள். " என்ற இதிஹாஸமும்,

" யத்ர மே நீயதே பர்தா ஸ்வயம் வா யத்ர கச்சதி |
மயா சதத்ர கந்தவ்யமேஷதர்ம: ஸநாதந: || "

" எனது பர்தா எந்தவிடத்திற்கு அழைத்துக்கொண்டு போகப்படுகின்றனரோ அல்லது தானாகவே செல்லுகின்றாரோ அந்தவிடத்திற்கு என்னுலும் செல்லத்தக்கது; இதுவே அநாதியான தருமம். " என ஸாவித்ரியானவள் யமனிடம் கூறியுள்ள வசனமும் நோக்கத்தக்கன.



(32) பதிவிரதையானவள் பர்த்தாவின் உச்சிட்டத்தைப் புசித்து அவரைப்போலவே நியமம் தரிக்கவேண்டுமென்பது:—

ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானை நோக்கி—

‡ " பலமூலாஶநாநித்யம் பவிஷ்யாமி நஸம்ஶய: |
அக்ரதஸ்தேகமிஷ்யாமி போக்ஷ்யே புக்தவதீ த்வயி || "

" தேவர் புசித்து மிகுந்த கிழங்குகளையும், கனிகளையும் புசித்து மகிழ்ந்திருப்பேன். ஆதலால் தேவருடன் வருவேன். "

$ " பத்ரம் மூலம் பலம் யத்து அல்பம் வா யதி வா பஹு |
தாஸ்யஸே ஸ்வயமாஹ்ருத்ய தன்மே஽ம்ருதரஸோபமம் ||
ஆர்தவாந் யுப புஷ்பாணி ச பலாநி ச || "

" என் பிராணநாதரே! இலையாவது, கிழங்காவது, கனியாவது, சொற்பமாகவோ, ஜாஸ்தியாகவோ, தேவர், எந்தப் பதார்த்தத்தை அடியேனுக்கு அளிப்பீரோ, அதுவே அம்ருதம்போலாகும். வனத்தில் கிடைக்கும் கனியையும் பூவையும் புஜித்து மகிழ்ந்திருப்பேன். " என விண்ணப்பஞ்செய்தனர்.

¶ விராடபருவம். ‡ வா-ரா. அ-கா. சரு. 27. சு. 16, 17.
$ வா-ரா. அ-கா. சரு. 30. சு. 15, 16.

பின்னால் ஸீதாப்பிராட்டியாரை அசோகவனத்தில் திருவடி யானவர் பார்த்தபொழுது,

* " ஸந்துஷ்டா பலமூலேந பர்த்ருஶுஶ்ரூஷணோரதா |
யா பராம் பஜதேப்ரீதிம் வநேऽபி பவநேயதா || "

" வனவாஸத்தில் ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராகவன் புஜித்து மிகுந்த கந்தமூலபலங்களையே தனக்குத் தேவாமிருதமென் றெண்ணி புஜித்துச் சந்தோஷமடைந்தும், மிகுந்த பிரியத்துடன் பர்த்தாவுக்குப்பணிவிடைசெய்து சந்தோஷிக்கச்செய்தும், நிர் ஜனமான அவ்வனத்தையே பந்துமித்திரர்கள் நிறைந்த அயோத்திபோலெண்ணி மகிழ்ந்திருந்தனர். " எனக்கூறினர்.

இவைகளினால் பாரியையானவள் பர்த்தாவின் உச்சிட்டத்தையே புஜிக்கவேண்டுமென்பது ஸூசிதம்.

உதாரணம்:— பதிவிரதையான நளாயினி யென்பவள் ஒரு சமயம்,

" கச்சிற்கடங்கா முலையாளக் கணவனுண்ட
மிச்சிற்புறத்து விரல்வீழவும் வீழ்ந்தன்மிஞ்சிக்
குச்சித்தலின்றி நுகர்ந்தாள் .................."

" தொழுநோயுடைய தன் நாயகன் உணவருந்திக்கொண் டிருக்கையில், உதிர்ந்த அவரது விரலை எடுத்துவிட்டு அவ்வுண வின் மிகுதியைச் சிறிதும் அருவருப்பின்றிப் புசித்தாள். " என்ற வில்லிபாரதம் இங்கு நோக்கத்தக்கது.

பிரமாணங்கள்.

" ஸேவதே பர்த்துருச்சிஷ்டமந்நபாநபலாதிகம் |
மஹாப்ரஸாத இத்யத்தா பதிதத்தம் ப்ரதீச்சதி || "

" கற்புடைமாதர் பர்த்தாவின் உச்சிட்டமான அன்னம், பானம், பலம் முதலானவைகளையே உட்கொள்ளவேண்டும். பர்த்தா எதைக் கொடுக்கின்றாரோ அதை மஹாப்ரஸாதமாகப் பெற்றுக்கொள்ளவேண்டும். " என்ற ஸ்காந்தமும்.

" யச்ச பர்தா ந பிபதி யச்ச பர்தா ந காததி |
யச்ச பர்தா ந சாஶ்நாதி ஸர்வம் தத்வர்ஜயேத்ஸதீ | "

* வை. சுந்-கா.சரு. 16. சு. 20.

" பர்த்தா எதைப் பருகவில்லையோ, எதை மென்று தின்ன வில்லையோ, எதை உண்ணவில்லையோ, அந்தப் பதார்த்தங்க ளெல்லாம் பாரியை தவிர்க்கவேண்டும்." என்ற வ்யாஸர் வசன மும், நோக்கத்தக்கன.

ஸீதாப்பிராட்டியார் கைகேயியால் அளிக்கப்பட்ட மாவுரியை வாங்கி, யுடுக்கத் தெரியாமல் பர்த்தாவை நோக்கி,

¶ " கதம் நு சீரம் பத்நந்தி முநயோ வநவாஸிந: | "

" வனத்தில் ரிஷிகள் மாவுரியை எப்படி உடுத்திக்கொள்ளு கிறார்களோ, அது எனக்குத் தெரியவில்லை." என்றுரைத்து,

¶ " க்ருத்வா கண்டேஸ்மஸா சீரமேகமாதாய பாணிநா | "

மாவுரியைக் கழுத்தில் போட்டுக்கொண்டு வெட்கத்துடன் நின்றனள். உடனே ஸ்ரீராமபிரான்,

¶ " சீரம் பபந்த ஸீதாயா: கௌஸேயஸ்யோபரி ஸ்வயம் | "

ஸீதாப்பிராட்டியாரின் அரையில் வெண்பட்டின்மேல் அந்த மாவுரியையுடுத்தியருளினார்.

○ " அனையவேலை யகன்மனை யெய்தினள்
புனையுஞ் சீரந்துணிந்து புனைந்தனள்
நினைவில் வள்ளல்பின் வந்தயனின்றனள்
பனையினீள்கரம் பற்றியகையினாள்."

என்பது கம்பராமாயணம். இதில் ஸீதாப்பிராட்டியாரே சிரத்தையணிந்து வந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது.

இவைகளினாலும்

† " தபஸாசாங்விதோவேஷஸ்த்வம் ராமமஹிஷீத்ருவம் |

" தேவரீர் ருஷிகளின் வேஷத்தைத் தரித்திருப்பதால், ஸ்ரீராமபிரானுடைய பத்தினியான ஸீதாதேவியாராயிருக்கலா மென்று நிச்சயமாய் நம்புகின்றேன்." என திருவடியானவர் பிராட்டியாரைநோக்கிச் சொல்லியிருப்பதாலும், பிராட்டியார் ஸ்ரீராமபிரானைப்போலவே, வானப்பிரஸ்தாச்ரமத்திற்குரிய வே டம் தரித்திருந்தனரென்பதாயிற்று.

---

¶ வா-ரா அ-கா. சரு. 37. சு. 12, 13, 14.
○ கம்-ரா. அ-கா. நகர்நீங்கு. 228.
† வா-ரா. சுந்-கா. சரு. 33. சு. 13.

இதனால் பாரியையானவள் பர்த்தாவைப்போலவே தானும் விரதம் அனுஷ்டிக்கவேண்டுமென்பது ஸூசிதம்.

பிரமாணம்:—

“ நாயகஸ்ய வ்ரதமுபவாஸம் ச ஸ்வயமபி கரணேநாநுவர்தேத |
வாரிதாயாஸ்ச நாஹமத்ர நிர்பந்தநீயேதி தத்வசஸோ நிவர்த்தநம்||”

“ நாயகனால் அனுஷ்டிக்கப்பட்ட விரதம், உபவாஸம் முதலியவைகளைத் தானுமனுஷ்டித்து அவனை அனுசரிக்கவேண்டும். நாயகன் தடுத்தபோதிலும், இதில் என்னை நிர்ப்பந்தம்செய்யக் கூடாதென்று அவனது வார்த்தையைத்தடுத்து, அவரைப் போலவே விரதம் முதலியது அனுஷ்டிக்கவேண்டும்.”

உதாரணம். மஹாப்ரஸ்தானிகத்தில்:—

“ தத: ஸராஜா கௌரவ்யோ தர்மபுத்ரோ யுதிஷ்டிர: |
உத்ஸ்ருஜ்யாபரணாந்யங்காஜ்ஜக்ருஹே வல்கலாநிச ||
பீமார்ஜுநயமாஸ்சைவ த்ரௌபதீ ச யஸஸ்விநீ |
ததைவ ஜக்ருஹு: ஸர்வே வல்கலாநி நராதிப || ”

“ யுதிஷ்டிரர் (மஹாப்ரஸ்தானஞ்செல்லப் புறப்பட்ட பொழுது) சரீரத்தினின்று ஆபரணங்களைக் கழற்றிவிட்டு மரவுரிகளை யெடுத்துக்கொண்டார். பீமஸேனன், அர்ஜுனன், நகுலன், ஸஹாதேவன் இவர்களும், கீர்த்திபெற்ற திரௌபதியும் அவ்வாறே மரவுரிகளை உடுத்திக்கொண்டார்கள் ” எனக் கூறப் பட்டிருப்பதும், ஸாவித்திரி உபாக்கியானத்தில்:—

அஸ்வபதியென்னும் அரசன் தனது புத்திரியாகிய ஸாவித்திரியென்பவளை வனத்தில் வஸிக்கும் சத்தியவான் என்பவனுக்கு விவாஹஞ்செய்துகொடுத்துப் பட்டணம்வந்து சேர்ந்தான்.

“ கதே பிதரி ஸம்ர்யஸ்ய ஸர்வாண்யாபரணாநி ஸா |
ஜக்ராஹே வல்கலாந் யேவ வஸ்த்ரம் காஷாயமேவச || ”

‘ பிதா சென்றவுடன் சாவித்திரி ஆபரணங்கள் யாவற்றையும் கழற்றிவிட்டு மரப்பட்டைகளைத் தரித்துக்கொண்டு காஷாய வஸ்திரம் உடுத்திக்கொண்டனள்.’ எனக்கூறப்பட்டிருப்பதும் இங்கு கவனிக்கத்தக்கன.

(33) பெண்கள் பர்த்தாவைவிட்டுப் பிரிந்திருக்கும் காலங்களில் அனுஷ்டிக்கத்தக்கவை.

*அசோகவனத்தில் சிம்சுபாவிருக்ஷத்தில் மறைந்து நின்ற திருவடியானவர் (அனுமார்)*

‡ "வைதேஹ்யா யாநிசாங்கேஷு ததாராமோऽந்வகீர்தயத் /
தாந்யாபரணஜாலாநி சாகாசோபீநி யலக்ஷயத் //
ஸுக்ருதௌ கர்ணவேஷ்டௌச ஸ்வதம்ஷ்ட்ரௌச ஸுஸம்ஸ்திதௌ /
மணிவித்ரும சித்ராணி ஹஸ்தேஷ்வாபரணாநி ச //"

*"கிஷ்கிந்தையில் ஸ்ரீராமபிரான் பிராட்டியாரின் அவயவங்களில் எந்தெந்த ஆபரணங்களிருக்குமென்று அருளிச்செய்தனரோ, அவ்வாபரணங்களெல்லாம் விருக்ஷத்தின கிளைகளில் பிரகாசிப்பதைக்கண்டார். இன்னும் ஸ்ரீராமபிரான் குறிப்பிட்ட சிரேஷ்டமான கர்ணாபரணங்களையும் ஹஸ்தாபரணங்களையும் அந்த விருக்ஷத்தின் கிளைகளில் கண்ணுற்றார். (பர்த்தாவைவிட்டுப் பிரிந்திருக்கும் காலத்தில் பூஷணங்களை தரிப்பது அநுசிதமாகையால், அவைகளைப் பிராட்டியார் தமது அவயவங்களினின்று கழற்றி மரக்கிளைகளில் தொங்கவிட்டிருந்தனரென்பது தாத்பர்யம்)*

*இன்னும் அங்கு கோரராக்ஷஸிகளின் மத்தியில்*

$ "நிஷ்ப்ரபாம் சோக ஸம்தப்தாம் மலஸங்குல மூர்தஜாம் //
பூஷணைருத்தமைர்ஹீநாம் பர்த்ருவாத்ஸல்யபூஷணாம் //
மலிநேநதுவஸ்த்ரேண பரிக்லிஷ்டேந பாமிநீம் //"

*"மிக்கத்துயரத்துடன் கூடியவளும், ஸ்நாநம், அப்யங்கனம் முதலியவை செய்துகொள்ளாமல் அழுக்கடைந்து சடைபோல் கட்டுண்ட கூந்தலையுடையவளாயும், உத்க்ருஷ்டமான ஆபரணங்களிருந்தும் அவைகளையணிந்துகொள்ளாமல் பர்த்ருவாத்ஸல்யமென்னும் உத்தமபூஷணத்தைத் தரித்தவளும் மிகவும் கிழிந்து மலினமான வஸ்திரத்தைத் தரித்திருப்பவளுமான பிராட்டியாரைக் கண்டார்."*

‡ வா-ரா. சுந்-கா. சரு. 15. சு. 41, 42.
$ ஷை ஷை சரு. 17. சு. 19, 21, 26.

மேலும், இராவணன் அசோகவனத்தில்,

○ " ஏகயா தீர்கயா வேண்யா ஶோபமாநாமயத்நத: /
நீலயா நீரதாபாயே வநராஜ்யா மஹீமிவ //
உபவாஸேந ஶோகேந த்யாநேந ச பயேந ச /
பரிக்ஷீணாம் க்ருஶாம் தீநாமல்பாஹாராம் தபோதநாம் //
ஆயாசமாநாம் து:கார்தாம் ப்ராஞ்ஜலிம் தேவதா மிவ /
பாவேந ரகுமுக்யஸ்ய தஶக்ரீவ பராபவம் // "

சிப்பெடுத்துக்கோவாமல் சடையாகி நீண்டு தொங்குகிற பின்னலையுடையவளும், ஆகாரமில்லாமல் ஜலபானமாத்திரத்தால் பிராணனைத் தரித்திருப்பவளும், அதனால் தேகமிளைத்து வாடியிருப்பவளும், அலங்காரமில்லாமலே சோபையோடே பிரகாசிப்பவளும், ஸ்ரீராமபிரான் சீக்கிரத்தில் அங்குவந்து இராவணனைக் கொன்று தன்னையழைத்துப்போம்படி அப்பரமாத்மாவைக் கைகூப்பிப் பிரார்த்தித்துத் தவஞ்செய்பவளுமாயிருந்த பிராட்டியாரைக் கண்டான். இவைகளினாலும் இன்னும் இராவணன் பிராட்டியாரைநோக்கி,

† " ஏகவேணீ தராஶய்யா த்யாநம் மலிநாம்பரம் /
அஸ்தாநேऽப்யுபவாஸஶ்ச நைதாந்யௌபயிகாநிதே // "

" நீ இங்கே வந்தபின்னும் தலைவாரிக் கோவாமல் ஒரே சடையாய் கட்டியிருப்பதும், தரையில் படுப்பதும், எப்போதும் கவலையுடனிருப்பதும், அழுக்காடையுடுப்பதும், பட்டினிகிடப்பதும் உனக்குத் தகாது. " எனக்கூறியிருப்பதாலும்,

⊕ " கமையினுடிருமுகத்தயல் கதுப்புறக்கவ்விச்
சுமையுடைக்கற்றை நிலத்திடைக்கிடந்த தூமதியை
அமையவாயிற்பெய்து மிழ்கின்றவயிலெயிற்றரவிற்
குமையுறத்திரண்டொரு சடையாகிய குழலாள்.

" ஆவியந்துகில்புனைவ தொன்றன்றி வேறறியாள்
தூவியன்னமென்புனலிடைத் தோய்கிலாமெய்யாள்
தேவுதென்கடலமிழ்து கொண்டநங்கவேள்செய்த
ஓவியம்புகையுண்டதே யொக்கின்றவுருவாள். "

என்ற கம்பராமாயணத்தாலும்,

○ வா-ரா. சுந்-கா.சரு. 19. சு. 20, 21, 22.
† வா-ரா. சுந்-கா. சரு. 20. சு. 8. ⊕ கம்-ரா. சுந்-கா. காக்ஷி 10, 11.

ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானைப்பிரிந்து அசோக வனத்திலிருந்தபொழுது ஸ்நாநஞ்செய்யாமலும் கிழிந்த வஸ்திரத்துடனும், ஆபரணங்களணிந்துகொள்ளாமலும் ஆகாரமின்றி ஜலபானமாத்திரம் செய்துகொண்டும், தமது பர்த்தாவின் வரவை அனவரதமுமெதிர்பார்த்துக்கொண்டு மிருந்தனரெனச் சித்திக்கின்றது.

இதனால் ஸ்திரீகள் தமது நாயகரைப் பிரிந்திருக்கும்படி நேர்ந்தகாலத்தில் இவ்வாறே அனுஷ்டிக்கவேண்டுமென்பது ஸூசிதம்.

" எரிமணிப்பொலம் பூண்சுமந்தின்னுயிர்க்
குரியகேள்வருவப்ப முன்னெய்துவார்
பிரியுங்காலையிற் பெய்கலன்யாவையு
மொருவிமாசுட லுண்டிட வைகுவார். " (காசிகாண்டம்)

" அநலம்க்ருதமாத்மாநம் தவ நோ தர்ஸயேத்க்வசித் /
கார்யார்தம் ப்ரோஷிதே க்வாபி ஸர்வமண்டநவர்ஜிதா // "

" (உமது பார்யையான லோபாமுத்திரை) அலங்காரஞ் செய்துகொள்ளாமல், உம்முடைய முன்பு வருகிறதில்லை. நீர். யாதாமொரு கார்யார்த்தமாக சென்றிருக்குங்காலத்தில் ஒருவிதமான அலங்காரமுஞ்செய்துகொள்ளுகிறதில்லை. " என அகஸ்தியரை நோக்கி பிரஹஸ்பதி கூறியிருப்பது, (ஸ்காந்தம்)

" அயலூரவன்போக அம்மஞ்சளாடிக்
கயலேர்கண் ஆர வெழுதிப் — புயலைம்பால்
வண்டோச்சி நின்றுலாம் வாளோர் தடங்கண்ணாள்
தண்டோச்சிப் பின்செல்லுங் கூற்று. " (அறநெறிச்சாரம்)

" கணவன் அயலூர் சென்றிருக்கும்பொழுது மனைவி அலங்காரஞ்செய்துகொண்டால் கொடிய நரகமடைவாள், "

" உண்ணல் பூச்சுடனெஞ் சுவத்த லொப்பனை
பண்ண லெல்லாமவர் பார்க்கவே யன்றோ
வண்ணறன் பிரிவினை யறிந்துந் தோழிநீ
மண்ணவந் தனையிது மடமை யாகுமே. " (நீதிநூல்)

என்பன நோக்கத்தக்கன.

ஸ்ரீராமபிரான் ஸீதாப்பிராட்டியாரை நோக்கி—

‡ " யாதே மயி ச கல்யாணி வநம் முநி நிஷேவிதம் |
வ்ரதோபவாஸரதயா பவிதவ்யம் த்வயாநகே ||
கல்யமுத்தாய தேவாநாம் க்ருத்வா பூஜாம் யதாவிதி |
வந்திதவ்யோ தஸரத: பிதா மம ஜநேஸ்வர: ||
மாதாசமம கௌஸல்யா வ்ருத்தா ஸந்தாபகர்ஸிதா |
தர்ம மேவாக்ரத: க்ருத்வா த்வத்த: ஸம்மாந மர்ஹதி || "

" ஹே, ஸீதே! எனது பிதாவின் கட்டளைப்பிரகாரம் வனஞ்செல்லுகின்றேன். யான்சென்றபின்பு நீ விரதோபவாஸங்களுடன் கூடி நித்தியமுங் காலையிலெழுந்து விதிப்பிரகாரம் தேவதாபூஜைசெய்து, என் தந்தையான சக்கரவர்த்தியாரையும் மூப்படைந்தும், வருத்தமுற்றுமிருக்கும் என தன்னையாரையும் வணங்கி அவர்களுக்குப் பணிவிடைசெய்துவரக்கடவை." என அருளிச்செய்தனர்.

இதனால் பர்த்தாவின் அனுமதியின்பேரில் விரதாதிகள் அனுஷ்டிக்கலாமேன்பதும், பர்த்தா அயலிடஞ்சேன்றிருந்தால் பார்யை விரதோபவாஸாதிகளுடன் கூடியிருத்தல்வேண்டுமேன் பதும் ஸூசிதம்.

இதற்குப் பிரமாணம்—

" பார்யா பத்யுர்மதேநைவ வ்ரதாதீநாசரேத் ஸதா| " (காத்யாயந:)

" பர்த்தாவினுடைய ஸம்மதத்தின்பேரிலேயே ஸ்திரீயானவள் விரதங்களையனுஷ்டிக்கவேண்டும். "

" ப்ரவாஸம் எதி மே யாதி பர்தா கார்யேண கேநசித் |
மங்களைர்பஹுபிர்யுக்தா பவாமி நியதா ததா ||
அஞ்ஜநம் ரோசநாம் சைவ ஸ்நாநமால்யாநுலேபநம் |
ப்ரஸாதநம் ச நிஷ்க்ராந்தே நாபிநந்தாமிபர்தரி || "

" என் கணவர் ஒரு கார்யார்த்தமாக தேசாந்திரம் போவாராயின் அப்போது அநேகம் மங்களாசாரங்களையும் தவத்தையும் செய்துகொண்டிருப்பேன். மையிடுவதையும், கோரோசனையையும், ஸ்நானஞ்செய்வதையும், புஷ்பசந்தனங்களையும், அலங்காரத்தையும் விரும்புவதில்லை." என்ற சாண்டலீவசனம்.

‡ வா-ரா. அ-கா. சரு. 26. சு. 29, 30, 31.

"யதா ப்ரவஸதே பர்தா குடும்பார்தம் ந கேநசித் /
ஸுமநோ வர்ணகாபேத பவாமி வ்ரதசாரிணி //"
என ஸத்யபாமையைநோக்கிக் கூறிய திரௌபதிவசனம்.



## (34) ஶீலரக்ஷணம் அதாவது கற்பைக்காத்தல்.

ஸீதாப்பிராட்டியார்மீது காதல்கொண்ட இராவணன் பர்ணசாலையினின்று அபகரித்துவந்து லங்காபட்டணத்தில்தனது அந்தப்புரமடைந்து தனது பராக்கிரமத்தையும், செல்வத்தையும் பிராட்டியாரிடம் எடுத்துச்சொல்லி,

† "ஏதௌ பாதௌ மயாஸ்நிக்தௌ ஶிரோபி: பரிபீடிதௌ /
ப்ரசாதம் குருமேக்ஷிப்ரம் வஶ்யோதாஸோऽஹமஸ்மி தே //"

○ "குடிமைமூன்றுலகுஞ் செயுங் கொற்றத்தென்
அடிமைகோடியருளுதியாலெனா
முடியின்மீது முகிழ்த்துயர் கையினன்
படியின்மேல் விழுந்தான் பழிபார்க்கலான்."

'அடி, வைதேஹி! திரிலோகங்களையும் ஜெயித்து அரசாக்ஷி செய்கிறபான் உனது உபயதிருவடிகளிலும் தலைவணங்கிப் பிரார்த்திக்கின்றேன்; அருள்செய்க; யான் உன்னடிமை.' என்று தீனமாகமொழிந்து தலைமீதுகைகூப்பி மண்மேல்விழுந்து தெண்டம் ஸமர்ப்பித்தான். இராவணனது வாக்கியங்களைச் செவியுற்ற பிராட்டியார், அவனைநோக்கி,

$ "நஶக்யா யஜ்ஞமத்யஸ்தா வேதி: ஸ்ருக்பாண்டமண்டிதா /
த்விஜாதிமந்த்ரஸம்பூதா சண்டாலேநாவமர்திதும் //
ததாஹம் தர்மநித்யஸ்ய தர்மபத்நீ த்ருடவ்ரதா /
த்வயா ஸ்ப்ரஷ்டும் நஶக்யாஹம் ராக்ஷஸாதம பாபிநா //
இதம் ஶரீரம் நி:ஸஞ்ஜ்ஞம் பந்தவா காதயஸ்வவா /
நேதம் ஶரீரம்ரக்ஷ்யம்மே ஜீவிதமவாபிராக்ஷஸா //
நது ஶக்யமவக்ரோஶம் ப்ருதிவ்யாம் தாதுமாத்மந: //

'அடா, ராக்ஷஸாதம! பிராம்மணர்களால் மந்திரிக்கப்பட்ட,யாகவேதியை,ச்சண்டாளனால் தீண்டமுடியாததுபோலப் பதிவிரதையான என்னைக்கிட்ட உன்னால்முடியாது. என்று

† வா-ரா. ஆ-கா. சரு. 55. சு. 35, 36. ○ கம்-ரா. சு-கா. நிந்தனை37.
$ ஷை ஷை சரு 56. சு 18, 19, 21, 22.

டைய சரீரத்தைக் கட்டினும் கட்டுக; கடித்துத் தின்னினும் தின்க; எனக்கு இச்சரீரமும், உயிரும் ரெக்ஷிக்கத்தக்கனவல்ல. இவ்வுலகில் சாஸ்வதமான புகழுடம்பொன்றே ரெக்ஷிக்கத் தகுந்தது. ஆகையால் ஒருக்காலும் உனக்கு வசமாகேன்.' என வன்மொழி மொழிந்தனர். அவ்வாக்கியங்களைக்கேட்ட இராவணன் மிகவும்கோபங்கொண்டு பிராட்டியாரைநோக்கி,

¶ " ஶ்ருணுமைதிலி மத்வாக்யம் மாஸாந் த்வாதஶபாமிநீ /
காலேநாநேந நாப்யேஷியதிமாம் சாருஹாஸிநீ /
ததஸ்த்வாம் ப்ராதராஶார்தம் ஸூதாஸ்சேத்ஸ்யந்தி லேஶஶ:"

"அடி, மைதிலி! உனக்கு இன்றுமுதல் பன்னிரண்டுமாதம் கெடுவு ஏற்படுத்தியிருக்கின்றேன். அதற்குள் நீ இணங்கி என்னையடையாவிடில், பின்பு உன்னைப் பரிசாரகர்கள் வெட்டித் துண்டித்து எனது காலைபோஜனத்திற்காகச் சமைக்கக்கடவர்கள்." என்றுரைத்துவிட்டுப் பக்கத்திலிருந்த இராக்ஷஸிகளை நோக்கி, "நீங்கள் இவளை அசோகவனத்திற்கு அழைத்துச் சென்று, அங்கு இவளை பயத்தாலும், நயத்தாலும் என்வசமாகும்படிசெய்யக்கடவீர்கள்."எனக் கட்டளையிட்டான். பின்பு

ஸீதாப்பிராட்டியார், பர்த்தாவையும், பந்துக்களையும், ஸகீஜனங்களையும் பிரிந்து பரதேசத்தில் உக்கிரராக்ஷஸஸங்கரமாகிய லங்காபட்டணத்தில் அசோகவனத்தில் பற்பல ஆயுதங்களுடன் கூடிய கோரராக்ஷஸிகளுடைய கூட்டத்தின் மத்தியில் துணையின்றித் தனியாக இருந்தபொழுது, இராவணன்,

‡ " காமதர்பமதைர்யுக்தம் ஜிஹ்மதாம்ராயதேக்ஷணம் /
ஸமக்ஷமிவ கந்தர்பமபவித்தஶராஸநம் //"

⊕ " மாலையுஞ்சாந்துங் கலவையும் பூணும்வயங்குநுண்டுசொடுகாசும்
சோலையின் றெழுதிக்கற்பகத்தருவு நிதிகளுங்கொண்டு பின்றொடரப்
பாலின்வெண்பரவைத் திரைகருங்கிரிமேற் பரந்தெனச்சாமரைபதை
[ப்ப
வேலைநின்றுயருமுயலில்வெண்மதியின் வெண்குடை மீதுறவிளங்க."

¶ வா-ரா. ஆ-கா. சரு. 56. சு. 24, 25.
‡ வா-ரா. சுந்-கா. சரு. 18. சு. 23. ⊕ கம்-ரா. சுந்-கா. நிந்தனை. 16.

"புஷ்பசந்தனதிவாஸனைத்திரவியங்களணிந்து சர்வாபரணாலங்கிருதனாய், சேடியர்கள் வெண்சாமரம்வீசவும், வெள்ளைக் குடைபிடிக்கவும், மன்மதனை மூர்த்திகரித்து வருவதுபோல மோஹனவேஷந்தரித்து, சிருங்காரசேஷ்டைகளோடுகூடிவந்து, பிராட்டியாரைநோக்கி,

$ " பவமைதிலிபார்யாமே மோஹமேதம் விஸர்ஜய |
பஹ்வீநாமுத்தமஸ்த்ரீணாமாஹ்ருதாநாமிதஸ்தத: |
ஸர்வாஸாமேவ பத்ரம்தே மமாக்ர மஹிஷீபவ ||
லோகேப்யோ யாநிரத்நாநிஸம்ப்ரமத்யாஹ்ருதாநிவை |
தாநிமே பீருஸர்வாணி ராஜ்யம் சைததஹம்ச தே ||"

"ஹே, ஸீதே! எப்போதும் ராமனையே நினைத்துக்கொண்டிருக்கிறதான உன்னுடைய அஜ்ஞானத்தைவிட்டு என்னைப் பார்த்தாவாக அடை. நான் பற்பல இடங்களிலிருந்து யுத்தஞ் செய்துகொண்டுவந்த என்னுடைய பத்தினிகளான உத்தம ஸ்திரீகளுக்கெல்லாம் மேலான பதவியையடைந்து, எனது பட்ட மஹிஷியாயிருந்து ஸகலபோகங்களையுமனுபவி. இன்னும் இந்திர, வருண, குபேர முதலானவர்களையும், திக்பாலர்களையும், பூலோகத்திலுள்ள ஸமஸ்தராஜாக்களையும ஜெயித்து அங்கிருந்து யான் கொண்டுவந்திருக்கும் நவமணிகள் முதலிய ரத்தினங்களெல்லாம் உன் ஸ்வாதீனத்தையடையட்டும். இந்த லங்கா ராஜ்ஜியமும் உன்னுடையதே. நானும் உனக்கடிமையாகிவிடுகின்றேன்," என்று தனது இராஜ்ஜியத்தையும், பொருளையும் கொடுப்பதாகச்சொல்லித் தன்னையடையும்படி வேண்டினன்.

அதற்குப் பிராட்டியார் இராவணனை நோக்கி—

† " ஶக்யா லோபயிதும் நாஹமைஶ்வர்யேண தநேந வா |
அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா || "

"அடே, இராவணா! இராஜ்ஜியத்தையும், மற்றுமுள்ள செல்வங்களையும் இச்சித்து உனக்கு ஸ்வாதீனையாய்விடக்கூடிய ஸ்திரீயென்று எண்ணாதே. அவையாவும், உனக்குப் பட்ட

$ வா-ரா. சுந்-கா. சரு. 20. சு. 16, 17.
† வா-ரா. சுந்-கா. சரு. 21. சு. 15.

மஹிஷியாயிருந்தனுபவிப்பதும், எனக்கு ஒருத்ருணமடா. இவை களினால் எனது பாதிவிரத்யத்தையசைக்கமுடியாது. சூரிய காந்தி சூரியனைவிட்டு வேறொருவனிடத்திற் செல்லாததுபோல நானும் அந்த ஸ்ரீராகவனைவிட்டு வேறெவனையும் அடையமாட் டேன்." எனப்பதிலுரைத்தனர்.

இவ்விதமாக இராவணனுடைய வேண்டுகோளுக்குச் சற்று மிணங்காமல் உதாஸீனமாக மறுத்துரைக்கவே, இராவணன் கோபங்கொண்டு பிராட்டியாரை நோக்கி—

○ " த்வௌ மாஸௌ ரக்ஷிதவ்யௌ மே யோऽவதிஸ்தே மயாக்ருத:/
தத: ஶயநமாரோஹ மம த்வம் வரவர்ணினி //
ஊர்த்வம் த்வாப்யாம் து மாஸாப்யாம் பர்தாரம் மாமநிச்சதீம் /
மம த்வாம் ப்ராதராஶார்தமாலபந்தே மஹாநஸே // "

"ஹே, ஸீதே! ஆதியில் உனக்கேற்படுத்திய ஒருவருஷகா லத்தில் பாக்கியிருக்கும் இரண்டுமாஸத்திற்குள் நீ என்சய னத்தையடையாவிடில், எனது பரிசாரகர்கள் உன்னை என் னுடைய காலைபோஜனத்திற்காக சமைத்துவிடுவார்கள்." என் றதட்டவே, அதற்குப் பிராட்டியார் இராவணனுடைய செய்கை யைப் பலவாறு நிந்தித்துரைத்தபொழுது, இராவணன், 'அடீ, ஸீதே!

○ " நாஶயாம்யஹமத்ய த்வாம் ஸூர்ய: ஸந்த்யாமிவௌஜஸா //"

'சூரியன் இருளைப்போக்குவதுபோல உன்னை நான் இப் போது கொன்றுவிடுகின்றேன்.' எனப்பயமுறுத்திவிட்டு ராக்ஷ ஸிகளைநோக்கி, 'இராக்ஷஸிகளே! இவள் என்னைச்சீக்கிரத்திலடை யும்படி செய்யவேண்டியது.' எனக் கட்டளையிட்டுச் சென்ற னன். பின்பு இராக்ஷஸிகள், இராவணனைப் பதியாக அடை யும்படி பிராட்டியாரையுபத்திரவித்தபொழுது, பிராட்டியார் இராக்ஷஸிகளை நோக்கி—

○ வா-ரா. சுந்-கா. சரு. 22. சு. 8, 9, 30.

† "தீநோ வா ராஜ்யஹீநோ வா யோ மே பர்தா ஸ மே குரு: /
தம் நித்யமநுரக்தாஸ்மி யதா ஸூர்யம் ஸுவர்சலா //
யதா ஶசீ மஹாபாகா ஶக்ரம் ஸமுபதிஷ்டதி /
அருந்ததீ வஸிஷ்டம் ச ரோஹிணீ ஶஶிநம் யதா //
லோபாமுத்ரா யதாகஸ்த்யம் ஸுகந்யா ச்யவநம் யதா /
ஸாவித்ரீ ஸத்யவந்தம் ச கபிலம் ஶ்ரீமதீ யதா //
ஸௌதாஸம் மதயந்தீவ கேஶிநீ ஸகரம் யதா /
நைஷதம் தமயந்தீவ பைமீ பதிமநுவ்ரதா /
ததாஹமிக்ஷ்வாகுவரம் ராமம் பதிமநுவ்ரதா //"

"என்னுடைய பர்த்தா ஏழையாயிருந்தாலும், இராஜ்ஜிய மிழந்தவராயிருந்தாலும் அவரே எனக்குப் பூஜ்ஜியர். ஆகையால் சூரியபகவானைச் சாயாதேவி ஆசைப்படுவதுபோல், நானும் அந்த ஸ்ரீராகவனையே அநுராகத்துடன் நேசிப்பேன். ஒருக்காலும் வேறொருவரையும், மனத்திலும் ஸ்மரியேன். இன்னும் மஹா பாக்கியவதிகளான சசீதேவி, அருந்ததி, உலோபாமுத்திரை, ஸுகன்னியை, ஸாவித்திரீ, ஸ்ரீமதி, மதயந்தீ, கேஶிநீ, தமயந்தி, இந்துமதி, என்ற பதிவிரதைகள் தங்கள் தங்கள் பர்த்தாக்களையனுசரித்துச் சாசுவதமான கீர்த்தியை யடைந்ததுபோல யானும் இக்ஷ்வாகு குலசிரேஷ்டரான ஸ்ரீராம பிரானையனுசரித்து புகழ்பெறக்கடவேன்." என்றனர். பின்பு ஸீதாப்பிராட்டியார் சிம்சுபா மரத்தடியில் விசனமடைந்து உட்கார்ந்திருந்தபொழுது,

† "தாம் க்ருஶாம் தீநவதநாம் மலிநாம்பரதாரிணீம் /
பர்த்ஸயாஞ்சக்ரிரே ஸீதாம் ராக்ஷஸ்யஸ்தாம் ஸமந்தத:" //

இராக்ஷஸிகள் அங்குவந்து, உடம்பிளைத்து, முகம்வாடி, கிழிந்த வஸ்திரத்துடனிருந்த பிராட்டியாரைச் சூழ்ந்துகொண்டு பயமுறுத்தினார்கள். அவர்களில் விநதையென்ற ராக்ஷஸி, பிராட்டியாரைநோக்கி—

† "மாநுஷம் க்ருபணம் ராமம் த்யக்த்வா ராவணமாஶ்ரய /"

'தரித்திரனை இராமனைவிட்டு இலங்காதிபதியான இராவணனை பர்த்தாவாக அடை.'

† வா-ரா. சுந்-கா. சரு. 24. ச 9, 10, 11, 12, 19, 25.

† " ஏததுக்தம் ச மெ வாக்யம் யதி த்வம் ந கரிஷ்யஸி |
அஸ்மிந்முஹூர்தெ ஸர்வாஸ்த்வாம் பக்ஷயிஷ்யாமஹே வயம் || "

'நான் சொன்னபடி நீ செய்யாமற்போனால் நாங்களெல்லோரும் ஒன்றுசேர்ந்து உன்னைத் தின்றுவிடுவோம்.' என்றனள். விகடையென்ற மற்றொரு ராக்ஷஸி பிராட்டியாரை நோக்கி,

† " பஜ ப்ரீதிம் ப்ரஹர்ஷம் ச த்யஜதாம் நித்யதைந்யதாம் |
ஸீதே ராக்ஷஸராஜேந ஸஹ க்ரீட யதாஸுகம் || "
ஸ்த்ரீஸஹஸ்ராணி தே ஸப்த வஶே ஸ்தாஸ்யந்தி ஸுந்தரி |
ராவணம் பஜ பர்தாரம் பர்தாரம் ஸர்வரக்ஷஸாம் ||
உத்பாட்ய வா தே ஹ்ருதயம் பக்ஷயிஷ்யாமி மைதிலி |
யதிமே வ்யாஹ்ருதம் வாக்யம் ந யதாவத்கரிஷ்யஸி ||

'அடி, ஜாநகி! இந்தத்துக்கத்தைவிட்டுச் சுகத்தைநாடி இராவணனைச் சேர்ந்து ஆனந்தமாகக் கிரீடிக்கக்கடவை. இராவணனை நீ பர்த்தாவாகவடைந்தால் ஏழாயிரம் ஸ்திரீகள் உனக்குப்பரிசாரகைகளாவார்கள். நான்சொன்னபடி செய்யாமற்போனால், உன்னுடலைப்பிடுங்கித் தின்றுவிடுவேன்.' என்றனள்.

¶ " முன்முன்னின்றார்கண் கனல்சிந்தமுடுகுற்றார்
மின்மின்னென்றுஞ் சூலமும் வேலுமிவையோச்சிக்
கொன்மின்கொன்மின்கொன்று துறைத்துதடாராத்
தின்மின்றின்மினென்று தெழித்தார்சிலரெல்லாம். "

" இராக்ஷஸிகள் பிராட்டியாருக்கு முன்பில்நின்றுகொண்டு கண்களில் நெருப்புப்பொறிபறக்க அடிக்க ஓடினார்கள் சிலர். சூலாயுதங்களையும், வேலாயுதங்களையும் ஓங்கிக்கொண்டு, இவளைக்கொல்லுங்கள் கொல்லுங்களென்றும், கொலைசெய்து, வயிறாரத் தின்னுங்கள் தின்னுங்களென்றும் அதட்டினார்கள் சிலர்." இவ்வாறு இராக்ஷஸிகளால் பலவாறு பயமுறுத்தப்பட்டபொழுது, பிராட்டியார் மிகவும் மனம்நொந்து,

இராக்ஷஸிகளை நோக்கி

‡ " ந மாநுஷீ ராக்ஷஸஸ்ய பார்யா பவிதுமர்ஹதி |
காமம் காதத மாம் ஸர்வா ந கரிஷ்யாமி வோ வச: || "

† வா-ரா. சுந்-கா. சரு. 24. சு. 27, 34, 37, 38.
¶ கம்-ரா. சுந்-கா. நிந்தனை. 76. ‡ வா-ரா. சுந்-கா. சரு. 25. சு. 3.

"இராக்ஷஸிகளே! இராக்ஷஸனை மானுடஸ்திரீ மணம்புரிய மாட்டாள். ஆகையால் நீங்கள்சொன்னதை நான் செய்யமாட்டேன். என்னை நீங்கள் புஜித்தாலும் புஜியுங்கள்."

○ "சாணேநாபி ஸ்வ்யேந ந ஸ்ப்ருசேயம் நிசாசராம் /
ராவணம் கிம் புநாஹம் காமயேயம் விகர்ஹிதம் //
சிந்நா பிந்நா விபக்தா வா தீப்தேவாக்நௌ ப்ரதீபிதா /
ராவணம் நோபதிஷ்டேயம் கிம் ப்ரலாபேந வஸ்சிரம் //"

"இந்த இராவணனை நான் இடதுகாலாலும் தொடமாட்டேன். அப்படியிருக்க அவன்மீது எப்படி காமம்கொள்வேன? ஆதலால் இராக்ஷஸிகளே! நீங்கள் என்னைத் துண்டுதுண்டாய் வெட்டினாலும், பிளந்தாலும், அக்னியில்போட்டு வாட்டினாலும், உங்கள்பேச்சைக் கேழ்க்கமாட்டேன். இராவணனுக்கு நான் பத்தினியுமாகேன். என் வீணாக பிதற்றுகிறீர்கள்?" என்று உரைத்தனர்.

இவ்விதமாக இராவணனுடைய பயமுறுத்தலாலும், இராக்ஷஸிகளுடைய கோரவசனங்களாலும், பயந்து மனம் நொந்து துக்கித்த பிராட்டியார் ஆலோசிக்கின்றார்.

$ "நைவாஸ்தி தோஷம் மம நூநமத்ர
வத்யாஹமஸ்யாப்ரியதர்சநஸ்ய /
பாவம் ந சாஸ்யாஹமநு ப்ரதாது
மலம் த்விஜோமந்த்ரமிவாத்விஜாய //
நூநம் மமாங்காந்யசிராதநார்ய:
சஸ்த்ரை: சிதைச்சேத்ஸ்யதிராக்ஷஸேந்த்ர: /
தஸ்மிந்நநாகச்சதி லோகநாதே
கர்பஸ்தஜந்தோரிவ சல்யக்ருந்த: //"

"இன்னும் கொஞ்சகாலத்தில் இராவணன் என்னைக் கொல்வது நிச்சயம். அந்தப்பாவியின் கையாலிறப்பதைவிட, நானே பிராணனைவிடுவது மேன்மை. தனது தருமத்தைவிட்டு

○ வா-ரா. சுந்-கா. சரு. 26. சு. 10, 12.
$ ஷை. ஷை. சரு. 28. சு. 5, 6.

வாழ்வதைப்பார்க்கினும், ஆத்மஹத்திசெய்வது உத்தமம். வேத மந்திரத்தை எப்படி பிராம்மணன் சூத்திரனுக்குச்சொல்ல உடன்படானே, அப்படியே ஸ்ரீராமபிரானுக்கு அர்ப்பணஞ் செய்த என்மனஸை, இராவணனுக்கு இசையும்படி செய்யேன். இன்னும் இரண்டுமாதத்தில் ஸ்ரீராகவன் என்னையடையாவிட்டால், கர்ப்பத்தில் மறித்த சிசுவை மருத்துவச்சி துண்டித்து வெளிப்படுத்துவதுபோல, தன் விருப்பத்திற்கிசையாத என்னை இராவணன் கத்தியால் சேதிக்கப்போகிறான்.

† " அநர்யதேவத்வமியம் க்ஷமா ச
பூமௌ ச ஶய்யா நியமஶ்ச தர்மே |
பதிவ்ரதாத்வம் விபலம் மமேதம்
க்ருதம் க்ருதக்நேஷ்விவ மாநுஷாணாம் ||
மோகோ ஹி தர்மஶ்சரிதோ மயாயம்
ததைகபத்நீத்வமிதம் நிரர்தம் |
யா த்வாம் ந பஶ்யாமி க்ருஶா விவர்ணா
ஹீநா த்வயா ஸங்கமநே நிராஶா ||
அஹம் து ராம த்வயிஜாதகாமா
சிரம் விநாஶாய நிபத்தபாவா |
மோகம் சரித்வாத தபோவ்ரதம் ச
த்யக்ஷ்யாமி திக் ஜீவிதமல்பபாக்யா ||
இதீவ தேவீ பஹுதா விலப்ய
ஸர்வாத்மநா ராமமநுஸ்மரந்தீ |
ப்ரவேபமாநா பரிஶுஷ்கவக்த்ரா
நகோத்தமம் புஷ்பிதமாஸஸாத || "

○ " ஆதலானிறத்தலே யறத்தினுறெனுச்
சாதல்காப்பவரு மென்றவத்திற்சாம்பினர்
ஈதலாதிடமும் வேறில்லையென்றொரு
போதுலாமாதவிப் பொதும்பரெய்தினாள். "

† வா-ரா. சுந்-கா. சரு. 28. சு. 12, 13, 15, 17.
○ கம்-ரா. சுந்-கா. உருக்காட்டு 21.

"ஹே, நாதா! வேறொரு தெய்வத்தையும் நான் நினையாமல் தேவரையே தெய்வமாகத் திரிகரணசுத்தியுடன் தியானித்திருந்தேன். இராவணன் என்னைப்பலவிதமாக ஹிம்ஸிக்கையிலும் தேவரைக் காணலாம்,க்ஷேமமடையலாம்,என்றெண்ணி யாவற்றையும்பொறுத்திருந்தேன்; தேவரைப்பிரிந்தபின் ஸகலசுகங்களையும் வர்ஜித்து புழுதிபடிந்த பாழ்தரையில் படுத்தும், பதியைப் பிரிந்திருக்குங்காலத்தில் குலஸ்திரீயனுசரிக்கவேண்டிய ஸகலதருமங்களையும் விரதங்களையுமனுசரித்தேன்; எப்பொழுதும்தேவரையே நினைத்துக்கொண்டு அல்லும்பகலும் அனவரதமும் தேவர்வரவை யெதிர்பார்த்து பதிவ்ரதாதருமம் கெடாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தேன்; இந்தத்தருமங்களெல்லாம், நன்றிமறந்தவனுக்குச்செய்த உபகாரம்போல வீணாயின.

தேவரீருடைய திருவடிகளின் ஸேவையின்றி யான் வாடினேன்; தேகம் உருமாறிக் குரூபியானேன்; தேவரைத் திரும்ப அடையலாமென்ற ஆசைக்கிடமில்லை; யான் செய்ததவமெல்லாம் வீணாயின. ஹே, நாதா! யான் தேவரை எப்போதும் உள்ளன்போடு நேசித்துவந்தேன்; கடுந்தவமும், விரதமுமனுஷ்டித்தேன்; என்னசெய்தும் எனக்கு நற்காலம்வரவில்லை; ஆகையால் பாக்யஹீனையான யான் பிராணனைவிடப்போகிறேன்."

இப்படி அநேகவிதமாகச்சொல்லியழுது, ஆத்மஹத்தி செய்துகொள்ள நிச்சயித்து, ஸ்ரீராமபிரானைச் செவ்வையாய் மனதில் தியானஞ்செய்துகொண்டு கிலேசத்தாலும், பயத்தாலும் தேகம் நடுங்கி துக்கித்தமுகத்துடன் ஸீதாப்பிராட்டியார் சிம்சுபாமரத்தடியில்வந்தனர்.

$ "ஶோகாபிதப்தா பஹுதா விசிந்த்ய
ஸீதாத வேண்யுத்க்ரதநம் க்ருஹீத்வா /
உத்பத்ய வேண்யுத்க்ரதநேந ஶீக்ர
மஹம் கமிஷ்யாமி யமஸ்ய மூலம் //
உபஸ்திதா ஸா ம்ருதுஸர்வகாத்ரீ
ஶாகாம் க்ருஹீத்வாத நகஸ்ய தஸ்ய /
தஸ்யாஸ்து ராமம் ப்ரவிசிந்தயந்த்யா
ராமாநுஜம் ஸ்வம் ச குலம் ஶுபாங்க்யா: //

$ வா-ரா. சுந்-கா. சரு. 28. சு. 18, 19, 20.

ஶோகநிமித்தாநி ததா பஹூநி
 தைர்யார்ஜிதாநி ப்ரவராணி லோகே |
ப்ராதுர்நிமித்தாநி ததா பபூவு:
 புராபி ஸித்தாந்யுபலக்ஷிதாநி || "

" சிம்சுபாவிருக்ஷத்தின் கீழ்நின்று ஆத்மஹத்திசெய்யும் விஷயத்தை பகுவிதமாயாலோசித்துத் தன்னுடைய பின்னலைக் கழுத்தைச்சுற்றி மரக்கிளையில்கட்டி மரணத்தையடைகிற தென்கிற தீர்மானத்துடன், அம்மரத்தினுடைய ஒரு கிளையைப் பிடித்துக்கொண்டு நின்றனர். ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானையும், இளையபெருமாளையும், தான்பிறந்தகுலத்தையும் நினைத்துத் தனக்கு இவ்வாபத்து நேர்ந்ததேயென்று சிந்தித்துக் கொண்டிருக்கையில், அத்தேவிக்குத்துக்கத்தைப்போக்கி தைரியத்தைக்கொடுக்கக்கூடியதும், உலகத்தில் பிரசித்தமானதுமான நல்ல சகுனங்கள் அனேகமுண்டாயின.

(1) ஸீதாப்பிராட்டியார்மீது காதல்கொண்ட இராவணன் பிராட்டியாரைத் தந்திரமாக அபகரித்துவந்து, அவரைத்தன்விருப்பத்திற்கு இணங்கும்பொருட்டு, தன்னுடைய பட்டணத்தில் அசோகவனத்தில யாதொருதுணையின்றி கோரராக்ஷஸிகளால் காவல்செய்தான்.

(2) தன்விருப்பத்திற்கிணங்குமாறு தீனமாய்ப்பிரார்த்தித்தான்.

(3) " ஸுந்தரம் புருஷம் த்ருஷ்ட்வா ப்ராதரம் பிதரம் ஸுதம் |
 யோநிர்த்ரவதி நாரீணாம் தத்யம்மே ப்ருஹி கேஶவ || "

"தந்தையாயினுந் தம்பிற் றகவுடனே யொருவயிற்றிற் சார்ந்தாரேனு
 மைந்தராயினு மிகவும் வனப்புடையாராமாயின் மடநல்லார்தஞ்
 சிந்தைநடந்திடும்........................................"

என்றபடி, மாதர்மனம் ரூபமுடைய புருஷர்மீது செல்லுமென்றெண்ணி, பிராட்டியார் தன்மீது காதல்கொள்ளும்பொருட்டுச் சுந்தரவடிவந்தரித்துப் பிராட்டியாரிடஞ்சென்று ஸம்பாஷித்தான்.

(4) " எண்ணிப்பத்தங்கையிட்டாலிந்திரன் மகளுமாங்கே
 வெண்ணெய்க்குன் றெரியுற்றுற்போன் மெலிந்து பின்னிற்கு
 [மன்றே. "

என்றபடி, பெண்கள் மனம் பொருளைவிரும்பும் என்றெண்ணி தனது இராஜ்ஜிய ஸம்பத்தைப் பிராட்டியாருக்கு அளிப்பதாகத் தெரிவித்துத் தன்னையடையும்படி வேண்டினன்.

(5) ஸ்திரீகள் அபலைகளானதால் பயத்தால் வசப்படுத்தலாமென்றெண்ணிப் பிராட்டியாரைக் கொல்லப்போவதாக அச்சுறுத்தினான்.

(6) இராக்ஷஸிகளைக்கொண்டு போதித்துப்பயமுறுத்தும்படிசெய்தான்.

இவைகளுக்கெல்லாம் பிராட்டியாரின் மனம் சிறிதுஞ்சலிக்கவில்லை. தனது சீலத்தை இழப்பதைவிட, பிராணத்தியாகஞ்செய்வதே மேலெனக் கருதி, ஆத்மஹத்திசெய்துகொள்ள யத்தனித்தனர்.

**இதனால் குலஸ்திரீகள் பரபுருஷரால் தங்களுக்கு எவ்வளவு துன்பம் நேர்ந்தாலும், ரூபத்திற்கும், பொருளுக்குமாசைப்பட்டுத் தங்கள் கற்பைஇழந்துவிடாமல், பிராணனையிழந்தாவது கற்பைக்காத்துக் கொள்ளவேண்டுமென்பது ஸூசிதம்.**

பிரமாணங்கள்:—

" தைந்யேந ப்ரார்திதாவாபி பலேந வித்ருதாபிவா /
வஸ்த்ராத்யைர்வாவிதாவபி நைவாந்யம் பஜதே ஸதீ//"(வியாஸர்)

" எந்தஸ்திரீயானவள் பரபுருஷனால் தைந்யத்துடன் பிரார்த்திக்கப்பட்டாலும், பலாத்காரமாக கிரகிக்கப்பட்டாலும், சிறந்த ஆடை ஆபரணங்கள் கொடுக்கப்பட்டாலும், அவனை அடையாமலிருக்கிறாளோ, அவள்பதிவிரதையாகிறாள். "

" தேவோ மநுஷ்யோ கந்தர்வோ யுவாசாபி ஸ்வலங்க்ருத: /
த்ரவ்யவாநபிரூபோவா ந மேநந்ய: புருஷோ மத: "

" யௌவனத்துடன்கூடி நன்றாயலங்காரஞ்செய்துகொண்ட தேவனாயினும், மனுஷ்யனாயினும், கந்தர்வனாயினும், தனவானாயினும், சுந்தர புருஷனாயினும்,அன்னியபுருஷர்மீது என்மனஞ்சென்றதில்லை. "என்பது ஸத்தியபாமையிடம்கூறிய திரௌபதியின் வசனம்.

" **பதிவ்ரதாயா: த்ருசதும்பயுக்ம** மத்யுக்ரமார்தாலநகாவலிம்ச /
வீரஸ்ய மஸ்த்ரம் க்ருபணஸ்ய வித்தம் லப்யாநி சத்வாரிததந்த
[காலே// "

" புலியுயிர்போகுமட்டும் பொருந்தியவதனையியா
வலியுறுவீரன்றானுமறிப்பனன்றிப் புறம்வழங்கான்
**பொலிவுறுகற்பளாவி போன்றிடத்தனங்களியா**
நலிவுறுலோபசீவனொழிவன்றியொன்றாநல்கான். "

“ பதிவிரதையின் ஸ்தனங்கள், வீரன்கை வாள், புலியின் நகம், உலோபியின் திரவியம் இந்த நான்கும் அவரவர் பிராணன்போனபின்பே கிடைக்கத்தக்கன.” என்பது நீதிஸாரம்.

“ ப்ராணம்வாபி பர்த்யஜ்ய மாநமேவாபிரக்ஷேத்து
அநித்யோ பவதி ப்ராணோ மாநஸ்த்வாசந்த்ரதாரகம் ||”

“ ஊனமேயானவூனிடையிருந்து முயிரினைத்துறந்துமோவம்பூணு
மானமேபுரப்பதவனிமேலெவர்க்கும் வரினசையுந்தோற்றமுமாபு
ஞானமேயானதிருவடிவுடையாய் ஞாலமுள்ளளவுநிற்றலினு
லினமேயுயிருக்கியற்கையாதலினுலென்றனன்வீமனுக்கிளையோன்.”

“ தனக்கு மானஹானிகரமான ஆபத்துநேர்ந்தபோது பிராணனை யாவதுவிட்டு மானத்தைக்காத்துக்கொள்ளவேண்டும். ஏனெனில், பிராணன், க்ஷணத்தில் அழிந்துபோகக்கூடியது. மானமோ ஆசந்திரதாரகமானது.” என்பது பாரதவாக்கியம். இவைநோக்கத்தக்கன.

குறிப்பு:— தமயந்தியை பாம்பின்வாயினின்றும் வெளிப்படுத்திய வேடன்,

“ இந்து நுதலி யெழிறோக்கி யேதோதன்
சிந்தைகருதிச் சிலைவேடன் — பைந்தொடிநீ
போதுவாயென்னுடனே யென்றான் புலைநரகுக்
கேதுவாய்நின்றானெடுத்து.” (நளவெண்பா)

“ தீக்கட் புலிதொடரச் செல்லுஞ் சிறுமான்போல்
ஆக்கை தளர வலமந்து — போக்கற்றுச்
சீறு விழித்தாள் சிலைவேட னவ்வளவில்
நீறாய் விழுந்தா னிலத்து. (நளவெண்பா)

வெய்யவரவின்பகுவாயின் விடுத்தமடமானெழிறோக்கி
மையல்கூர்ந்தநெஞ்சினனாய் வரிவிற்றடக்கைவயவேடன்
றெய்யின்மூலைமேற்புல்லுதற்குத் தொடரத்துஞ்சாவருங்கற்பின்
றையன்முனிந்துநோக்குதலுஞ் சாம்பராயிற்றவனுடலே.
(நைடதம்)

தமயந்தியினது அழகைக்கண்டு மோகித்து அவளை அணைதற்குத் தொடர்ந்தபோது, பதிவிரதையான தமயந்தி அவனைக்கோபித்துப் பார்த்தமாத்திரத்தில், வேடனுடைய உடல் தக்ஷணமே சாம்பராயிற்று.

இதைப்போல பிராட்டியாரும் இராவணனை, ஏன்எரிக்கவில்லை? அத்திறமை பிராட்டியாருக்கிலதோவெனில், அன்று; பிராட்டியார் கருணைகூர்ந்த திருவுளமுடையராதலின் இராவணனை எரித்திலர்; மகன் துஷ்டனாகித் தாயாரைப்பிடிக்கின், 'தந்தையிடஞ்சொல்லி, உன்னைத் தண்டிக்கின்றேன்' என்று தாயார் பயமுறுத்துவாளேயன்றி, மகனைச் சிக்ஷைசெய்யாள். பிராட்டியார் ஜகன்மாதாவானபடியால், கருணையினால் இராவணனைத் தானேசிக்ஷிக்கவில்லை.

பிராட்டியார் இராவணனைநோக்கி,

† "அஸம்தேசாத்து ராமஸ்ய தபஸஶ்சாநு பாலநாத் /
ந த்வாம் குர்மி தசக்ரீவ பஸ்ம பஸ்மார்ஹ தேஜஸா //"

'அடே, இராவணா! என்னுடைய தவத்தினால் உன்னைச் சாம்பலாக்க எனக்குச் சக்தியுண்டு. ஆயினும் உன்னைச்சபிக்க ஸ்ரீராமபிரானுடைய நியமனமில்லாததினாலும், என் தவம் அழிந்துபோமென்றுங்கருதி, உன்னை நான் சபிக்கவில்லை.' என்றுரைத்திருப்பதாலும்,

பிராட்டியார் திருவடியை நோக்கி

‡ "அல்லன்மாக்களிலங்கையதாகுமோ
எல்லைநீத்தவுலகங்கள் யாவுமென்
சொல்லினாற்சுடுவேனது தூயவன்
வில்லினாற்றற்குமாசென்றுவீசினேன்.

" உலகங்களையெல்லாம் என் சொல்லாலே சுட்டுப்போடுவேன். அது ஸ்ரீராமபிரானுடைய வல்லமைக்குத் தோஷமாகுமென்று நினைத்து, இராவணனையும், மற்றுமுள்ள இராக்ஷஸர்களையும், சுடாமல் விட்டிருக்கின்றேன்" எனக் கூறியிருப்பதாலும், பிராட்டியாருக்கு இராவணனை யெரிக்கத்திறமையுளதென்பது நன்றாகவிளங்கும். மேலும், திருவடியினுடைய வாலில் தீப்பற்றியெரிகிறதென்று கேட்டபொழுது, பிராட்டியார், 'ஶீதோபவ ஹநூமத:" "எரியேயவனைச்சுடல்." என்று அக்கினிபகவானை, அனுமானைச் சுடாமல் குளிர்ந்துபோகும்படி நியமித்தபொழுது,

† வா-ரா. சுந்-கா. சரு 22. சு. 20.
‡ கம்-ரா. சுந்-கா. சூடாமணி. 18.

○ " வெளுத்தமென்னகையவள் விளம்புமேல்வையின்
ஒளித்தவெங்கனலவனுள்ளமுட்கினன்
தளிர்த்தனமயிர்ப்புறஞ் சிலிர்ப்பத்தண்மையால்
குளிர்த்தவக்குரிசில்வாலேன்புகூறவே. "

" மிகுந்த பிரகாசத்தோடுகூடின அக்கினிதேவர் மனதில் பயங்கொண்டு, திருவடியினுடைய உரோமங்கள் கூச்சமுள்ளனவாகி உடம்பெல்லாம் சிலிர்த்தலுண்டாகும்வண்ணம், மிகுந்த சீதளத்தன்மையடைந்தார். திருவடியின் வால்முழுதுங் குளிர்ந்ததாயின." எனக் கூறப்பட்டிருப்பதால், பிராட்டியாருக்கு இராவணனை எரிப்பதற்குறிய திறமை உண்டென்பதற்குப் போதியசான்றும்.

இவ்வாறு இராவணனை பஸ்மமாகும்படி செய்யத்தனக்குத் திறமையிருந்தும், தன்னுடைய கற்புக்கே ஹானிநேருமெனத் தோன்றியபொழுதும், 'அஸந்தேஸாத்து ராமஸ்ய' (உனக்குத்தீமைசெய்பவரைச் சபித்துக்கொள்ளென்கிற)ஸ்ரீராமபிரானுடைய நியமனமில்லாததினால் இராவணனை எரித்துவிடுவது தகாதெனக்கருதி, பிராட்டியார் 'த்யக்ஷ்யாமி திக்ஜீவிதம்' என்று தமது பிராணனை இழக்கத்தீர்மானித்ததால்,

குலஸ்திரீயானவள் தன்பர்த்தாவின் ஆஜ்ஞையின்றியாதொரு காரியமும் செய்யக்கூடாதென்பது ஸூசிதம்.

இங்கு பிராட்டியார் இவ்விதம் அனுஷ்டித்தது யுக்தமோவெனில்:—

சித்திரகூடபர்வதத்தில் ஸ்ரீராமபிரானும் ஸீதாப்பிராட்டியாரும் ஏகாந்தமாயிருந்தஸமயத்தில், பிராட்டியார் பெருமாள்மடிமேல் உட்கார்ந்திருந்தபொழுது இந்திரனது புத்திரனை ஜயந்தனென்பவன் காகரூபமெடுத்துவந்து, பிராட்டியாரின் மார்பை மூக்கினால் கொத்தினன். பிராட்டியார் எழுந்துபோய் ஒரு மண்கட்டியினால் அந்தை ஓட்டியும் போகாமல் அக்காகம் திரும்பவந்து கொத்தவே, வேதனைபொறுக்கமாட்டாமல் அக்காகத்தைக் கோபித்தபொழுது,

¶ 'த்வயாபஹஸிதா சாஹம்.' 'ப்ரஹ்ருஷ்டேந த்வாயஹம் பரிஸாந்த்விதா.'

என்றபடி ஸ்ரீராமபிரான் பரிஹாஸம்செய்து சந்தோஷத்துடன் பிராட்டியாரின் கண்ணீரைத்துடைத்துச் சமாதானஞ்செய்தனர். பின்பு பிராட்டியாருடையமடியில் ஸ்ரீராமபிரான் தலைவைத்துக் கண்வளர்ந்த

○ கம்-ரா, சுந்-கா. பிணிவீட்டு. 128.
¶ வா-ரா. ஷை சரு. 38. சு. 18, 19, 30.

னர். அக்காகம் முன்போலவேவந்து பிராட்டியாரின் மார்பைக்கொத்திற்று. அதிலிருந்து இரத்தம்வழிந்து ஸ்ரீராமபிரான்மேல்விழவே, அவர் விழித்துக்கொண்டு பிராட்டியாரின் மார்பில் இரத்தம் ஓடுவதைக்கண்டு சீற்றங்கொண்டு " ஸ தர்பம் ஸம்ஸ்தராத்க்ருஹ்ய ப்ராஹ்மேணாஸ்த்ரேண யோஜயத்." அருகில்கிடந்த ஒரு தருப்பத்தைக்கிள்ளி பிரம்மாஸ்திரத்தை மந்திரித்து அக்காகாசுரன்மீது விடுத்தனர்.

பிராட்டியார் முதலில் அக்காகத்தை மண்கட்டியினுல் ஓட்டிய பொழுது பரிஹாஸம்செய்து சந்தோஷித்த ஸ்ரீராமபிரான். இப்பொழுது கோபத்துடன் அதேகாகத்தின்மீது பிரம்மாஸ்திரப் பிரயோகஞ்செய்திருப்பதால், பாரியையானவள் தன்னை இரக்ஷித்துக்கொள்ளும் விஷயத்தில், தானே பிரவர்த்தித்தால் பர்தா உபேக்ஷைசெய்வர் என்பதும், பாரியை பிரவர்த்திக்காவிடில் பர்தா முயற்சியுடன்கூடி இரக்ஷிப்பர் எனவும் இங்கு த்யோதமாகின்றபடியால், பிராட்டியார் இராவணனை எரிக்காமலிருந்தது யுக்தமெனக் கொள்ளத்தக்கதாம்.

இராவணவதானந்தரம் ஸ்ரீராமபிரானுக்கு அயோத்தியாபுரி இராஜ்ஜியாபிஷேகஞ் செய்யப்பட்டு, இராஜ்ஜிய பரிபாலனஞ்செய்து கொண்டிருந்தகாலத்தில், ஒருசமயம் இராமபிரான் சபையில் வீற்றிருந்தார். அப்பொழுது அவரதுசினேகிதரான பூரிகீர்த்தியென்பவர் திராக்ஷைப் பழமும், நல்லபுஷ்பங்களும் நிறைந்த சிலகூடைகளை இராமபிரானுக்கு அனுப்பினுர். அவைகளை ஸ்ரீராமபிரான் ஸீதாப்பிராட்டியாரிடம் அனுப்பினர். பிராட்டியார் அக்கூடைகளிலிருந்த சிலபுஷ்பங்களையெடுத்து முகர்ந்துபார்த்துத் திரும்ப அவைகளைக் கூடையில்வைத்து மூடிவிட்டனர். இதைஇராமபிரான் தெரிந்துகொண்டு, இவ்வாறு பிராட்டியார் செய்தது சரியானதல்லவெனக்கருதி, அதற்காகப் பிராட்டியாரைச் சிக்ஷிக்கவேண்டுமெனச் சங்கற்பஞ்செய்துகொண்டு அந்தப்புரஞ்சென்று, கூடைகளிலிருந்த பழம்,புஷ்பம்இவைகளைப் பகிர்ந்து தாய்மார்களுக்கும், குரு, மந்திரிகள், மற்றும் பந்துக்கள் முதலானவர்களுக்கும் அனுப்பிவிட்டுப் பிராட்டியாருக்கும் சிலகொடுத்துத் தாமும் சிலபுஷ்பங்களையும் பழங்களையும் உபயோகித்துக் கொண்டனர். பிறகு சிலதினங்களுக்கப்பால் பிராட்டியார் ஏகாதசியன்று உபவாஸமிருந்து மறுநாள் துவாதசியில் ஸ்நானஞ்செய்து பிருந்தாவனத்தின் சமீபஞ்சென்று, அங்கு துளஸியைப் பூஜித்துப் பிரதக்ஷிணஞ்செய்தனர். அப்போது அவருடையவஸ்திரத்தின் நுனியானது அச்செடியில்பட்டு அதிலிருந்து ஒரு தளம் கீழேவிழுந்தது.

பிராட்டியார் அதைக் கண்டுமிகவும்பயந்து அப்பிருந்தாவனத்தைபக்தியுடன் வணங்கி அரண்மனையடைந்தனர். அந்தச்சமயம் நாரதமஹருஷி வரவே, ஸ்ரீராமபிரான் அம்முனிவரை எதிர்கொண்டழைத்து விதிப்படிபூஜித்து போஜனம்செய்யவேண்டுமெனப் பிரார்த்தித்தனர். நாரதமஹருஷி இராமபிரானைநோக்கி, 'இன்று ஸீதாதேவி ஒரு பாபம் செய்திருக்கின்றனர் அதாவது துவாதசியான இன்று துளஸிபத்திரத்தைச் சேதித்துவிட்டனர்; அது மஹத்தானபாபம் ஆகலால் யான் இங்கு புஜிக்கமாட்டேன்.' என்றனர்.

இதைக்கேட்டு ஸ்ரீராமபிரான் 'முனிவர்பெருமானே! தாங்கள்தான் அப்பாபத்தைப்போக்கி ஸீதையைப் பரிசுத்தப்படுத்தவேண்டும்;' என வேண்டிக்கொண்டனர். உடனே மஹருஷி ஸ்ரீராமபிரானையும், ஸீதாப்பிராட்டியாரையும், பிருந்தாவனத்திற்கு அழைத்துச்சென்று கூறுகின்றார் 'ஸீதாதேவி தன்னுடைய பாதிவ்ருத்திய மஹிமையால் இந்த துளஸிதளத்தை மறுபடியும் செடியில் ஒட்டிக்கொள்ளும்படி செய்தால், அவள் பரிசுத்தமாய்விடுவாள்.' என அருளிச்செய்தனர்.

பிராட்டியாரும் முனிவரைப்பார்த்து 'தாங்கள் அருளிச்செய்தபடி செய்கிறேன்' என்றுரைத்து வெகுபக்தியுடன் அச்செடியினருகேபோய் 'ஏ, மங்களகரமான துளஸியே! என்னிடம் பரிசுத்தமான பாதிவிருத்தியமிருப்பது உண்மையாயின், நான் அறியாமற்செய்த குற்றத்தை மன்னித்து இந்த இலையானது செடியில் சேரும்படி நீ கிருபைசெய்யவேண்டும்' எனவேண்டிக்கொண்டு கீழேவிழுந்திருந்த துளஸிதளத்தைச் செடியில் பொருத்தினர். அந்தஇலை அதில் ஒட்டிக்கொள்ளவில்லை. அப்போது பிராட்டியார் அதிக துக்கத்தையும் பயத்தையும் அடைந்தனர். இந்த ஆச்சரியத்தைப்பார்ப்பதற்காக அரண்மனையிலுள்ளவரெல்லாரும் வந்து சேர்ந்தனர்.

பிராட்டியார் துக்கமடைந்திருப்பதைக்கண்டுநாரதமுனிவர் பிராட்டியாரை இரகசியமாயழைத்து 'ஏ, ஸீதே! ஒருசமயம் நீ உனது பர்த்தா அனுப்பிய கூடைகளிலிருந்து சில புஷ்பங்களை அவரது உத்திரவின்றி முகர்ந்துபார்த்தாய். இது பதிவிரதாதருமத்திற்குரியதல்லவென்பதை உனக்குப் போதிக்கக்கருதி ஸ்ரீராமபிரானே துளசிச்செடியிலிருந்து இலையுதிரும்படி செய்திருக்கின்றனர். அவருடைய திருவுளப்படியே நானும் உன்னிடம் தோஷம் ஏற்றினேன். நான்செய்ததை நீ பொறுத்துக்கொள்ளவேண்டும். நீ மறுபடியும் சென்று 'நான் என் பர்த்தாவின்

உத்திரவின்றி கூடைகளிலிருந்த சில புஷ்பங்களின் வாஸனையை முகர்ந்துபார்த்ததைத்தவிர பாதிவிருத்தியத்தை நான் நன்றாய் இரக்ஷித்திருக்கும்பக்ஷத்தில் இந்த துளசியிலை அதன் செடியோடு ஒட்டிக்கொள்ளட்டும் என்று சொல்லு, அப்போது அந்த இலை ஒட்டிக்கொள்ளும்.' எனப்போதித்தனர்.

பிராட்டியாரும் மறுபடியும் துளசியின் அருகேசென்று வணங்கி நாரதர் போதித்தபிரகாரம் சொன்னார். உடனே எல்லோரும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அந்தத்துளசி இலை அதன் செடியுடன் சேர்ந்துவிட்டது. அப்பொழுது தேவவாத்தியங்கள் முழங்கின; தேவஸ்திரீகள் விமானங்களிலிருந்துகொண்டு ஸ்ரீராமபிரான்மீதும் ஸீதாப்பிராட்டியார்மீதும் புஷ்பங்களை வாரியிறைத்தார்கள்; பிராமணர்கள் ஜெயகோஷஞ்செய்தார்கள்.

இந்தத்தருணத்தில் ஸ்ரீராமபிரான் பிராட்டியாரைநோக்கி 'ஏ ஸீதே! நான் இவ்விதம் செய்தது உலகத்திலுள்ள ஸ்திரீகள் எப்போதும் பதிவிரதாதருமத்தை நன்றாய்ப் பாலனம்செய்யும்பொருட்டே. பதியின் உத்தரவில்லாமல் ஸ்திரீகள் யாதொன்றும் செய்யக்கூடாதென்பதை உலகத்தவருக்குப் போதிப்பதற்காகவே நான் இம்மாயை செய்தேன். ஆதலால் நீ வருத்தப்படாதே' எனப்பிராட்டியாரைச் சமாதானஞ்செய்தருளினர். ஆனந்தராமாயணத்திலுள்ள இந்த இதிஹாஸம் இங்கு அறியத்தகுந்தது.

தமது கற்புக்குப்பங்கமுண்டாகுமெனத் தோன்றுமாயின் குலஸ்திரீகள் தமது பிராணனைவிட்டுக் கற்பைக்காத்துக்கொளவார்கள் என்பதற்குரிய உதாரணங்கள்:—

(1) ஒருசமயம் இராவணன் உலகசஞ்சாரஞ்செய்துகொண்டு இமயகிரித்தடம் சேர்ந்தான். ஆங்கு தேவஸ்திரீபோன்ற வடிவழகுடையளான ஓர் கன்னிகை மான்தோலும் ஜடையுந்தரித்து தவவேடம்பூண்டு, தவம்புரிந்துகொண்டிருந்தனள். அக்கன்னிகையைக்கண்டு மோகித்துக் காமாதுரனாய், அவ்விராவணன் அவளருகிற்சென்று அவளது வரலாற்றை வினவினான். அதற்கு அக்கன்னிகை, இராவணனை நோக்கி—

† "குசத்வஜோநாமபிதாப்ரஹ்மர்ஷிரமிதப்ரப: ||
ப்ருஹஸ்பதிஸுத:ஸ்ரீமாந் புத்யாதுல்யோப்ருஹஸ்பதே: ||
தஸ்யாஹம் குர்வதோநித்யம் வேதாப்யாஸம் மஹாத்மந: |
ஸம்பூதா வாங்மயீகந்யா நாம்நா வேதவதீஸ்ம்ருதா ||"

† வா-ரா. உத்-கா. சரு. 17. சு. 8, 9.

¶ " கோதினீதிக்கு சத்துவசன்னெனும்
மாதவன்மறையோதிடமற்றவன்
ஓதுவேதத்தினுற்பவித்தேனையென்
தாதைவேதவதியென்று சாற்றினன். "

" எனது தந்தை குசத்துவஜரெனப் பெயர்பெற்ற ஒரு பிரம்மரிஷி பிரஹஸ்பதியின் புத்திரர். புத்தியில் பிரஹஸ்பதிக்கொப்பானவர். நித்தியம் வேதாப்பியாஸஞ்செய்துகொண்டிருக்கும் அம்முனிவருக்கு, அவரது வாக்கினின்றும் ஒரு கன்னிகையாக யான் உற்பவித்தேன். அதனால் எனக்கு வேதவதியெனப் பெயருண்டாகியது. தேவகந்தருவயக்ஷராக்ஷஸ பன்னகாதிபலர் என் தந்தையிடம்வந்து, என்னை மணமகளாக வரித்தனர். என்பிதா ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு என்னை விவாஹஞ்செய்து கொடுக்க வேண்டுமெனக்கருதி ஒருவருக்கும் என்னையளித்திலர். தம்பு என்னும் அசுரத்தலைவன்ஒருவன்,இரவில் எனதுபிதா நித்திரைசெய்துகொண்டிருக்கையில் வந்து அவரைக் கொலைசெய்தனன். எனது அன்னை அத்துயரத்தினால் அக்கினியில் பிரவேசித்தனள். யான் என்தந்தையினது மனோரதத்தைப் பூர்த்திசெய்யும்பொருட்டு இங்குவந்து ஸ்ரீமந்நாராயணனைக் குறித்துத் தவம்புரிகின்றேன்." என்று கூறினாள். அதுகேட்டு இராவணன் வேதவதியை நோக்கி,

‡ " அஹம் லங்காபதிர்பத்ரே தசக்ரீவ இதிச்ருத : /
தஸ்யமே பவ பார்யா த்வம் புங்க்ஷ்வபோகாந்யதாஸுகம் //"

" இலங்கைமன்னனிராவணனென்பெயர்
புலன்கள்வென்ற புலத்தியன் பௌத்திரன்
கலங்கல்சிந்தையென்காதலியாய்த்தரா
தலங்களுக்குத்தலைவியுமாகென்றன். "

" ஹே, சுந்தரீ! யான் இலங்காபதி, என்பெயர் இராவணன்; நீ எனக்கு மனைவியாகி, உனக்குவேண்டிய ஸகலபோகங்களையும் உன்னிஷ்டப்போல் அனுபவிக்கக்கடவை." எனக்கூறி, ஸ்ரீமகாவிஷ்ணுவைப் பலவாறுநிந்தித்தனன். இராவணன் புகன்றதைக்கேட்ட வேதவதி "ஹே, ராக்ஷஸராஜனே! நீர்மகாவிஷ்ணுவை இகழ்ந்துபேசியதால், உமது புத்தி மடிந்துவிட்டதென யெண்ணுகின்றேன; நீர் இவ்விடம்விட்டு அப்புறமெழுந்து செல்லுக." என்றுகூறவே, அக்கொடிய இராக்ஷஸன்,

¶ கம்-ரா. உத்-கா. திக்குவிசயம். 5, 9.
‡ வா-ரா. உத்-கா. சரு 17. சு 23.

‡ "மூர்தஜேஷுததா கந்யாம் கராக்ரேணபராம்ருஶத் /"

தன்கையினால் அக்கன்னியினது கூந்தலைப்பற்றி யிழுத்தனன். உடனே வேதவதி கோபமூண்டு, தன்கூந்தலைத் தன்கையாலறுத்து விட்டு, இராவணனை நோக்கி,

‡ "யஸ்மாத்து தர்ஷிதாசாஹம் த்வயா பாபாத்மநா வநே /
தஸ்மாத்தவ வதார்த்தம்ஹி ஸமுத்பத்ஸ்யத்யஹம் புந: //"
ஏவமுக்த்வா ப்ரவிஷ்டா ஸாஜ்வலிதம் ஜாதவேதஸம் /
பபாதச திவோதிவ்யா புஷ்பவ்ருஷ்டி: ஸமந்தத: //

○ "வாடாமலரோன் வரச்செருக்கான் மற்றெனைநீ
கூடாதெனசொல்லிக் கூசாது தீண்டினையால்
ஏடாவுனக்குமிலங்கைக்கு முன்கிளைக்கும்
கேடாகத்தோன்றுவேனென்றாள் கிளர்சினத்தாள்.

"வானோர்மகிழ்ந்து மலர்மாமழைபொழிய
ஏனோர்களெல்லாமினிப்பிழைத்தோமென்றியம்பக்
கானோருந்தவத்தோர் கண்டுவியப்பெய்தத்
தேனேர்மொழிமடவாள் செந்தழலின்மூழ்கினாள்."

"அடா, பாதகா! மகாபாபியான நீ, இவ்வனத்தில், நான் எவ்வளவோ தடுத்துச்சொல்லியும், கூசாமல் என்னைப்பிடித்திழுத்தமையால், உன்னையும் உன்கிளைகளையும் வதைசெய்தல்பொருட்டு யான் மறுபடிவந்து பிறக்கின்றேன்." என்றுரைத்து இராவணன் முன்னிலையிலேயே கொழுந்துவிட்டு எரிகின்ற அக்கினியிற் பிரவேசித்தனள். அப்பொழுது ஆகாயத்தினின்று, மலர்மழை பொழிந்தது. இந்த வேதவதியே ஸீதாப்பிராட்டியாராக அவதரித்தனள். இந்த இதிஹாஸமும்,

† முன்னொருகாலத்தில் தேவராதனுடைய மனைவியான சிரோமணிஎன்னும் பதிவிரதை தன் கணவனுடைய வேஷத்தைத்தரித்த ஒரு ராக்ஷஸனால் கவரப்பட்டாள். அந்த ராக்ஷஸன் ஒரு குளக்கரையில் அவளை இறக்கி அவள் பர்த்தாவினுடைய ரூபத்தைவிட்டுத் தன் சுயரூபத்துடன்தோன்றி, ஸாம

‡ வா-ரா. உத்-கா. சரு. 17. சு. 27, 31, 34.
○ கம்-ரா. ஷை திக்கு. 17, 18.
† விராடபருவம். மொழிபெயர்ப்பு.

தான பேதங்களாலும் தன் விருப்பத்திற்கிணங்காத அவளை நிர்ப்பந்தஞ்செய்யத் தொடங்கினன். அப்பொழுது அவள் தைரியத்துடன் அவ்விராக்ஷஸனுக்கு இடங்கொடுக்காமலிருக்கவே அவன் கத்தியை உருவிக்கொண்டு அப்பதிவிரதையை வெருட்டினன். கற்பையே பிரதானமாகக்கொண்ட அந்த ஸாத்வி தன் உயிரைத்துறக்க நிச்சயித்து 'என்னுடைய பர்தா என்னல் பரதேவதையாக ஆராதிக்கப்பட்டிருப்பதும், பெரியோர்கள் என்செய்கையினல் சந்தோஷப்படுத்தப்பட்டிருப்பதும் உண்மையாயின் என்னுடைய சரீரத்தில் சிலபாகம் கற்பாறையாகட்டும்.' எனப்பிரதிஜ்ஞைசெய்யவே, நாபிக்கும் முழங்காலுக்கும் மத்தியிலுள்ள அவளுடைய அங்கமானது கல்லாய்விட்டது. பிறகு அந்த இராக்ஷஸன் கத்தியால் அவள் தலையை வெட்டிவிட்டான். அவள்பார்வதிக்கு ஜயை என்கிற பிரியஸகியானள்.



**(35) குலஸ்திரீ தன்பர்தாவை பலஜன்மங்களிலும் பிரியாமல் தொடர்ந்தே அனுஸரிப்பள் என்பது.**

ஸீதாப்பிராட்டியார், ஸ்ரீராமபிரானைநோக்கி:—

‡ "ப்ரேத்யபாவோ ஹி கல்யாண: ஸங்கமோமே ஸதாத்வயா ।
ஶ்ருதிர் ஹி ஶ்ரூயதே புண்யா ப்ராஹ்மணாநாம் யஶஸ்விநாம் ॥
இஹ லோகேச பித்ருபி: யாஸ்த்ரீயஸ்ய மஹாபல ।
அத்பிர்தத்தா ஸ்வதர்மேண ப்ரேத்யபாவேபிதஸ்ய ஸா ॥"

"இவ்வுலகில், எந்தஸ்திரீயைப் பெற்றோர்கள் எந்த புருஷனுக்குத் தாரைவார்த்துக் கொடுக்கின்றார்களோ, அந்தஸ்திரீ மறுபிறப்பிலும் அந்தப்புருஷனுக்கே பத்தினியாகக்கடவள்." என பிராம்மணர்கள் வேதத்திலோதுகின்றனர்களல்லவோ.' ஆதலின் மறுபிறப்பிலும் எனக்குத்தேவரே பதியாகுவீர்." என உரைத்தனர்.

$ "ஈண்டு நானிருந்தின்னுயிர்மாயினும்
மீண்டுவந்து பிறந்துதன்மேனியைத்
தீண்டலாவதோர் தீவினைதீர்வரம்
வேண்டினடொழ தென்று விளம்புவாய்."

‡ வா-ரா. அ-கா. சரு. 29. சு. 17, 18. $ கம்-ரா.சுந்-கா.சூடாமணி.35.

ஸீதாப்பிராட்டியார் திருவடியைநோக்கி " ஹே மாருதி ! இந்த அசோகவனத்திலேயே எனதுயிர் நீங்கினும், மறுபடி உலகத்திலுற்பவித்து, ஸ்ரீராமபிரானது திருமேனியை அடையும்படியான ஓர் நல்ல வரத்தை அடியாள் தெண்டம் ஸமர்ப்பித்து வேண்டினேன், என்று அந்த ஸ்ரீராகவனிடம் விண்ணப்பஞ்செய்யக்கடவை." என்றுரைத்தனர்.

இவைகளினால் குலஸ்திரீயானவள் எத்தனை ஜன்மங்கள் அடைந்தபோதிலும், பூர்வம் தான்காதலித்திருந்த புருஷனையே பர்த்தாவாக அடைவதற்கு விரும்புவாளென்பது ஸூசிதம்.

உதாரணம்:—

(1) மௌத்கல்யமுனிவர் தனது பத்தினியான நளாயினியை நோக்கி—

○ " மின்னேயுனக்குமிகு கற்புடைமீனுமொவ்வா
ளின்னேவரம்வேண்டுவ வேண்டுக வீண்டையென்ன
நின்னேயமென்றும் பிரியாநலனேர்கவென்ற
டன்னேரிலாதமனை வாழ்விற்றவத்தின்மிக்காள். "

" பெண்ணே! உன்னுடைய கற்புக்கு அருந்ததியும் ஒப்பாகாள். உன்பணிவிடையால் யான் மிக்கச் சந்தோஷமடைந்தேன். உனக்கு வேண்டும் வரத்தை என்னிடம் பெற்றுக்கொள்ளக்கடவை." என்றபொழுது நளாயினி, " நீர் எந்த ஜென்மத்திலும் என்னைவிட்டுப் பிரியாமலிருக்கும்படியான ஓர்வரம் அருளவேண்டும்" எனப்பிரார்த்தித்தனள்.

○ " குன்றுநதியுமானும்பைங்கொடியுமாகித்
துன்றுந்துணையாய்ப்பல யோனிகடோறுமெய்தி
நின்றுஞ்சரித்து மரும்போக நெடிதுதுய்த்தா
ரென்றும் பிரியாதிருவோருமிதயமொத்தே."

" அவ்வாறே மௌத்கல்யரும் நளாயினியும் பலபிறவிகளிலும் பிரியாமல், இருவரும் ஒருவரோடொருவர் மிகுந்த அன்புடன் கூடி ஸகல போகங்களுமனுபவித்துக்கொண்டு வாழ்ந்திருந்தனர்."

---

○ வில்லிபாரதம்.

(2) பூர்வம் மகதநாட்டை ஸததனு என்னுமரசன் ஆண்டுவந்தான் அவன் மனைவியின்பெயர் சைப்பியை. இவள் அழகில் இரதிதேவிக்கும், கற்பில் அருந்ததிக்கும் நிகரானவள். அனவரதமும் தன் கணவன் மனமுவப்பப் பணிவிடைபுரிதலே, தன் கடமையாகக்கொண்டவள். அவ்வரசனும் அரசியும் ஒருவரோடொருவர் மிகுந்த அன்புடன் ஸகலபோகங்களையும் அனுபவித்துக்கொண்டு வாழ்ந்திருந்து காலக்கிரமத்தில் அரசன் மரணமடைய, அரசியும் உடன்கட்டையேறினாள். ஓர் விரததினத்தில் பாஷாண்டியுடன் சம்பாஷித்த தோஷத்தினால் அரசன் மறுபிறப்பில் நாயாகப்பிறந்தான். சைப்பியை, கற்பின்மகிமையால், காசிராஜனது புதல்வியாகப்பிறந்து பூர்வஜென்மஞானமுள்ளவளாயிருந்தாள். மங்கைப் பருவம் அடைந்ததும், தன்பர்த்தா விதிசையென்கிற நகரத்தில் நாயாகப் பிறந்திருப்பதை, ஞானதிருஷ்டியினாலுணர்ந்து அங்குசென்று நாயாயிருந்த தன் பர்த்தாவைக்கண்டு அன்புடனும் மரியாதையுடனும் நல்லுணவுகளைக்கொடுத்து அதற்கு பூர்வஜென்ம விருத்தாந்தத்தையும் நினைப்பூட்டினாள். அவ்வார்த்தையைக்கேட்டு நாயுருவான அரசன் மிக்கவருந்தி அங்கிருந்த மலைமீதேறிவிழுந்து மரித்துப் பின்பு நரியாகப்பிறந்தது. அதனிடமும் அவ்விராஜகன்னிகைசென்று பூர்வஜென்மங்களைநினைப்பித்தாள். பின்பு அந்நரி கழுகாயும், பின்பு காகமாயும் பிறந்தது. அப்பிறவிகளிலும் அக்கன்னிகைசென்று பூர்வஜென்மங்களை நினைப்பூட்டிவந்தாள். கடைசியாக அரசன் மயில்ஜென்மத்தையடைந்தபொழுது அக்கன்னிகை ஞானத்தாலறிந்து அம்மயிலை தன்னிடத்திற்குக்கொண்டுவந்து நல்லுணவளித்துக் கணவனெனக்கொண்டு போற்றிவந்தாள். பின்பு அப்பெண்ணின் தந்தையான காசிமன்னன் அச்வமேதயாகஞ்செய்தபொழுது, அவப்ருததீர்த்தத்தில் அக்கன்னிகை நீராடித் தன்கணவனாகிய அம்மயிலையும் நீராட்டி நாய்ப்பிறவிமுதல் மயூரப்பிறப்பீறாக அடைந்த எல்லாப்பிறவிகளையும் அதற்கு உணர்த்தினாள். உடனே அம்மயில் பிராணனைவிட்டு ஜனகமஹாராஜாவுக்கு மகனாகப்பிறந்தது. தன்கணவன் ஜனகனது புதல்வனாய்ப் பிறந்து வளர்ந்துவருவதையுணர்ந்த அக்கன்னிகை தன் பிதாவைத் தன் கலியாணத்திற்காக சுயம்வரம் ஏற்படுத்தத்தூண்டினாள். அப்படியே காசிராஜனும் சுயம்வரம்சோடிக்க அச்சுயம்வரத்திற்கு வந்திருந்த அநேகம் அரசகுமாரர்களுள் அந்த ஜனகராஜகுமாரனையே அப்பெண்மணி கணவனாக வரித்தாள்.

இருவருக்கும் விவாஹம் நடந்தேறியபின் அப்பெண்மணி தன் கணவனோடுகூட மறுபடியும் ஸகலபோகங்களையுமனுபவித்துக்கொண்டு பதிவிரதா தருமத்தைச் சரிவர அனுஷ்டித்துக்கொண்டும் வாழ்ந்து வந்தனள்.

(3) தக்ஷனுடைய யாகத்திற்கு தாக்ஷாயணி சென்றிருந்தபொழுது தக்ஷப்ராஜாபதி, பரமசிவன்மீதுள்ள த்வேஷத்தினால் தாக்ஷாயணியை ஆதரிக்காமல் அலட்சியஞ்செய்ததோடு, பகவானாகிய பரமசிவனையும் நிந்தனைசெய்ததைபற்றி தாக்ஷாயணி மிக்கக்கோபங்கொண்டு தக்ஷனை நோக்கி—

" அதஸ்தவோத்பந்நமிதம் கலேவரம் ந தாரயிஷ்யே ஶிதிகண்ட கர்ஹிண: |

இத்யத்வரே தக்ஷமநூத்ய ஶத்ருஹந் க்ஷிதாவுதீசீம் நிஷஸாத ஶாந்தவாக் |

ஸ்ப்ருஷ்ட்வா ஜலம் பீததுகூலஸம்வ்ருதா நிமீல்ய த்ருக்யோக பதம் ஸமாவிஶத் || "

தத: ஸ்வபர்துஶ்சரணாம்புஜாஸவம் ஜகத்குரோஶ்சிந்தயதீ ந சா பரம் |

ததர்ஶ தேஹோ ஹதகல்மஷா ஸதீ ஸத்ய: ப்ரஜஜ்வால ஸமாதி ஜாக்நிநா ||

" பொன்னிற்றோன்றிறை பூங்கழல்போற்றிலை
நின்னிற்றோன்றுடனோர்கலன்யானெனாத்
தன்னிற்றோன்றுந்தழல்கொடு மெய்சுடர்
மின்னிற்றோன்றினள் வெற்பகத்தென்பவே."

" எனது பர்த்தாவாகிய பரமசிவனை நீ நிந்தித்தபடியால், உன்னால் உண்டுபண்ணப்பட்டதாகிய இந்தசரீரத்தை இனிநான் வைத்துக்கொள்ளுகிறதில்லை, என்றுரைத்து ஜலத்தைத்தொட்டு வடக்குமுகமாக பூமியிலுட்கார்ந்து மௌனமாகக் கண்களைமூடிக்கொண்டுத் தமது பர்த்தாவினுடைய பாதாரவிந்தங்களையே தியானஞ்செய்தனள் ஸமாதியாகிய அக்கினியினால் அவளுடையதேகமானது எரிக்கப்பட்டு ஜ்வலித்தது.

" ஏவம தாக்ஷாயணீ ஹித்வா ஸதீ பூர்வகளேவரம் |
ஜஜ்ஞே ஹிமவத: க்ஷேத்ரே மேநாயாமிதி ஶுஶ்ரும ||
தமேவ தயிதம் பூய ஆவ்ருங்க்தே பதிமம்பிகா |
அநந்யபாவைககதிம் ஶக்தி: ஸுப்தேந பூருஷம் || "

" மேனையைமணந்துதெய்வ வெற்பினுக்குதித்துமாழை
மானின்மென்னேக்கங்கொண்டு மடமயிற்சாயல்வெளவும்
தேனவாமழலையாளைத் திருமணம்புரிந்தான்சென்று
கானுலாங்கைதைவேலிக் கைலையம்பொருப்பன்மன்னே. "

இப்படி தாக்ஷாயணியானவள், தன் சரீரத்தைவிட்டு, மறுபடி ஹிமவானுடைய பத்நினியாகிய மேனையென்பவளிடத்தில் ஜனித்துப் பார்வதியென்னும் பெயரடைந்து, பிரளயகாலத்திலடங்கியிருந்த சக்தியானது மஹாபுருஷனையே திரும்பவும் அடைவதுபோல் அந்தப்பார்வதியானவள் மறுபடியும் பரமசிவனையே பர்த்தாவாக அடைந்தாள்.



## (36) பதிபக்தியின் பிரபாவம்.

(1) அத்திரிமஹாமுனிவர் ஸ்ரீராமபிரானை நோக்கி—

‡ " தபஸாவர்ஷாண்யநாவ்ருஷ்ட்யா தக்தே லோகே நிரந்தரம் /
யயாமூலபலேஸ்ருஷ்டே ஜாந்ஹவீச ப்ரவர்திதா //
தேவகார்ய நிமித்தம்ச யயாஸத்வரமாணயா /
தபஸாராத்ரம் க்ருதாராத்ர: ஸேயம் மாதேவ தேநகா //
தாமிமாம் ஸர்வபூதாநாம் நமஸ்கார்யாம் தபஸ்விநீம் /
அபிகச்சது வைதேஹீ வ்ருத்தாமக்ரோதநாம் ஸதா // "

" ஸ்ரீராம! முன்பு பத்துவருஷம் மழையில்லாமல் உலகமெல்லாம் எரிக்கப்பட்டபொழுது இந்த அநஸூயை, கிழங்குகளும், கனிவர்க்கங்களுமுண்டாகச்செய்து கங்காநதியில் பிரவாகமுண்டாகவும்செய்தனள். மேலுமிவள் தேவகார்யார்த்தம் பத்துதினங்களை ஒரு இராத்திரியாகச்செய்தனள். இவ்விதம் மகிமையுடைய இந்த அநஸூயை உனக்கு மாதாவுக்குச் சமானமானவள். யாவராலும் பணியப்பெற்றவளும் விருத்தையுமான இவளிடத்தில் ஸீதை சென்று பூஜையைப் பெற்றுக்கொள்ளக்கடவள்." என அருளிச்செய்தனர். அநஸூயாதேவியின் கற்பின்மகிமையினுல் இவ்வாறு அற்புதச்செயல்கள் ஏற்பட்டன.

(2) இராவணவதானந்தரம் ஸ்ரீராமபிரான் ஸீதாப்பிராட்டியாரை அசோகவனத்தினின்றும் அழைத்துவரச்செய்து, பிராட்டி

‡ வா-ரா. அ-கா. சரு. 117. சு. 9, 10, 12, 13.

யாரது கற்பின் உறுதியை உலகத்தவருக்குக் காண்பிக்கத் திருவுளங்கொண்டு, பிராட்டியாரைநோக்கிச் சில பருஷவசனங்கள் அருளிச்செய்தனர். ஸ்ரீராமபிரானுடைய நிந்தையான வசனங்களைக்கேட்ட பிராட்டியார் மனம்நொந்து கண்களில் நீர்ததும்ப இளையபெருமாளைநோக்கி, "ஹே, ஸௌமித்ரே! யான் எனது பர்த்தாவின் அபவாதமான வசனங்களினால் மிகவும் பீடிக்கப்பட்டேன்; ஆதலின் இனியான் உயிருடனிருக்கவிரும்பவில்லை; உலகிலுள்ளோர் என்னைப்பற்றி அபவாதம் கூறாமலிருக்கவும், ஸ்ரீராமபிரானுக்கு நம்பிக்கையுண்டாவதற்கும், ஏதுவாக யான் அக்னியில் பிரவேசிக்கிறேன்; நீ அக்னியை வளர்க்கக்கடவை." என்று உரைத்தனர்.

இளையபெருமாளும், தமது பிராதாவின் அபிப்பிராயத்தையும் இங்கிதங்களாலுணர்ந்துகொண்டு, பெருங்கட்டைகளைச் சேர்த்து அக்னியைமூட்டித் தீயைவளரச்செய்தனர். பிராட்டியாரும் ஸ்ரீராமபிரானைப் பிரதக்ஷிணஞ்செய்துவிட்டு, ஜ்வலித்துக்கொண்டிருக்கும் அக்னியின் சமீபமடைந்து, அஞ்சலிஹஸ்தராய் நின்றுகொண்டு அக்னிபகவானை நோக்கி,

‡ "யதாமே ஹ்ருதயம் நித்யம் நாபஸர்பதி ராகவாத் /
ததா லோகஸ்ய ஸாக்ஷீ மாம் ஸர்வத: பாது பாவக: //
யதாமாம் ஶுத்தசாரித்ராம்துஷ்டாம் ஜாநாதி ராகவ: /
ததா லோகஸ்ய ஸாக்ஷீ மாம் ஸர்வத: பாது பாவக: //

$ "கனத்தினுற்கடந்த பூண்முலையகைவனை
மனத்தினுல் வாக்கினுன் மறுவுற்றேனெனின்
சினத்தினுற் சுடுதியாற்றிச் செல்வாவேன்றுள்
வனத்துழாய்க்கணவர்க்கும் வணக்கம்போக்கினுன்."

"என் மனமானது சதாகாலமும் ஸ்ரீராமபிரானைவிட்டு விலகாமலிருந்ததும், நான் பதிவிரதையென்பதும் உண்மையாயின், உலகத்தவர் புரியும் ஸர்வகர்மாக்களுக்கும் சாக்ஷியான

‡ வா-ரா. யுத்-கா. சரு. 118. சு. 25, 26.
$ கம்-ரா யுத்த-கா. மீட்சி. 84.

இந்த அக்னிதேவன் என்னை இரக்ஷிக்கட்டும்." என்றுரைத்து பாலர்முதல் விருத்தர்வரையுள்ள பலஜனங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுது அவ்வக்னியை மூன்றுதரம் வலம்வந்து,

† " விவேஶ ஜ்வலநம் தீப்தம் நி:ஶங்கேநாந்தராத்மநா /
ஸா தப்தநவஹேமாபா தப்தகாஞ்சநபூஷணா /
பபாத ஜ்வலநம் தீப்தம் ஸர்வலோகஸ்ய ஸந்நிதௌ //"

$ " நீந்தரும்புன்விடை நிவந்ததாமரை
ஏய்ந்ததன்கோயிலே யெய்துவாளெனப்
பாய்ந்தனள் பாய்தலும் பாலின்பஞ்சேனத்
தீய்ந்ததவ்வெரியவள் கற்பின்றீயினால். "

கல்மஷமில்லாத மனத்துடன் ஜ்வலித்து எழுகின்ற அக்னியிற் பிரவேசித்தனர். அங்கு குழுமியிருந்த முனிதர், வானரர், ராக்ஷஸர், முதலான யாவரும் ஹா, ஹாவென்று கூச்சலிட்டார்கள். பிராட்டியாரின் பதிவிரதாக்னியால், அந்த நெருப்பு குளிர்ச்சியடைந்தது.

○ " அங்கேநாதாய வைதேஹீ முத்பபாத விபாவஸு: /
விதூயாத சிதாம்தாம்து வைதேஹீம் ஹவ்யவாஹந: //
உத்தஸ்தௌ மூர்திமாநாஶு க்ருஹீத்வா ஜநகாத்மஜாம் /
தருணாதித்யஸங்காஶாம் தப்தகாஞ்சந பூஷணாம் //
ரக்தாம்பரதராம் பாலாம் நீலகுஞ்சிதமூர்தஜாம் /
அக்லிஷ்டமால்யாபரணாம் ததாரூபா மநந்திதாம் //
ததௌ ராமாய வைதேஹீ மங்கேக்ருத்வா விபாவஸு: /
அப்ரவீத்து ததா ராமம் ஸாக்ஷீ லோகஸ்ய பாவக: //
ஏஷா தே ராம வைதேஹீ பாபமஸ்யாம் நவித்யதே /
நைவ வாசா நமநஸா நைவபுத்யா நசக்ஷுஷா //
ஸுவ்ருத்தா வ்ருத்தஶௌண்டீர்யம் நத்வாமத்யசரத் ஶுபா /
நாசிந்தயத தத்ரக்ஷஸ் த்வத்கதேநாந்தராத்மநா /
விஶுத்தபாவாம் நிஷ்பாபாம் ப்ரதிக்ருஹ்ணீஷ்வமைதிலீம் //"

---

$ கம்-ரா. யுத்த-கா. மீட்சி. 85.
† வா-ரா. ஷை. சரு. 118. சு. 27, 29.
○ ஷை. ஷை. சரு. 120. சு. 1-6, 9, 10.

○ " அழுந்தினனங்கைமற்றங் கையாற்கமத்
தெழுந்தனனங்கிவெந்தெரியுமேனியான்
தொழுங்கரத்துணையினன் சுருதிஞானத்தின்
கொழுந்தினைப்பூசலிட்டரற்றுங் கொள்கையான்.

அங்கியானெனையிவ்வனைகற்பெனும்
பொங்குவெந்தீச்சுட பொறுக்கிலாமையால்
இங்கணைந்தேனுறு மியற்கைநோக்கியும்
சங்கியாநிற்றியோவெவர்க்குஞ் சான்றுளாய்.

பெய்யுமே மழைபுவி பிளப்பதன்றியே
செய்யுமேபொறையற நெறியிற்செல்லுமே
உய்யுமேயுலகிவளுணர்வு சீறினல்
வய்யுமேன்மலர்மிசை யயனுமாயுமே. "

" யாகாதி ஹோமங்களுக்குப் பிரதானமானவரும், உலகத்திற்குப் பிரத்தியக்ஷ சாக்ஷியாகியவருமான அக்னிதேவன் சுயரூபம்தரித்து நிர்மலமான சூரியனைப்போல் காந்தியுடன் பிரகாசிப்பவனாய், சிவந்த வஸ்திரமுடுத்தியவளும், சுவர்ணமயமான சிறந்த ஆபரணங்களால் அலங்கரிக்கப்பெற்றவளும், திவ்யரூபத்துடன் கூடியவளுமாகிய ஸீதாப்பிராட்டியாரை அவ்வக்கினியினின்றும் கொண்டுவந்து ஸ்ரீராமபிரானிடத்தில் சேர்ப்பித்து, அவரைநோக்கி, 'ஓ, ஸ்ரீராம! இந்த ஸீதாதேவியிடம் கிஞ்சித்தோஷமும்கிடையாது. இவர் வாக்கினாலாவது, மனதினாலாவது, புத்தியினாலாவது, நேத்திரங்களினாலாவது, உம்மைவிட்டு க்ஷணநேரமும் விலகியதில்லை. இராவணனால் அபகரிக்கப்பட்டு அவனாலும் இராக்ஷஸிகளாலும் பலவாறு வெருட்டப்பட்டு ஹிம்ஸையடைந்திருந்தகாலத்தும் தேவரீரையே ஸதா தியானித்திருந்தனளேயன்றி அந்த இராக்ஷஸனைச் சிறிதும் நினைக்கவில்லை. மேலும் ஸீதாதேவியின் கற்பென்னும் பெரியநெருப்பு என்னைச் சுட்டுவிட்டது. அவ்வெப்பத்தை என்னால் பொறுக்கமுடியவில்லை. இத்தேவியைத் தொடுவதற்கு யான் மிகவும் பயந்தேன். இன்னும் இத்தேவிமனம் நொந்து சீறியருளுவாளாயின், மழை

○ கம்-ரா. யுத்-கா. மீட்சி. 85, 91, 95.

பெய்யுமா? பூமிவெடித்துவிடுமேயல்லது அகிலசராசரங்களைத் தாங்கி நிற்குமா? தருமமானது நெறிதவறாமற் செல்லுமா? ஸாதுக்கள் ஜீவித்திருப்பார்களா? பிரமதேவனும் மாண்டுபோவானேயல்லது உயிருடனிருந்து படைப்புத்தொழிலை நடத்துவானோ? ஆதலால் திரிகரணசுத்தியாய் உம்மிடத்திலேயே பிரேமையுடன் கூடியவளும் களங்கமற்றவளுமாகிய இந்த மைதிலியைத் தேவர் சிறிதும் சங்கிக்காமல் அங்கீகரிக்கக்கடவீர்.' எனத் தெரிவித்துக்கொண்டனர்."

அக்கினிதேவனுடைய வாக்கியங்களைக்கேட்டு ஸ்ரீராமபிரான்,

‡ "அழிப்பிலசான்றுநீ யுலகுக்காதலான்
இழிப்பிலசொல்லிநீ யிவளையாதுமோர்
பழிப்பிலளென்றனை பழியுமின்றினிக்
கழிப்பிலளென்றனன் கருணையுள்ளத்தான்." என்றபடி

ஸீதாப்பிராட்டியாரை அங்கிகரித்தருளினர். அப்பொழுது பிரமதேவர் அங்குதோன்றி,

"இனையதாகலினெம்மைமூன்றுலகையு மீன்றிம்
மனையின்மாட்சியை வளர்த்தவெம்மோயினைவாளா
முனையலென்றது முடித்தனன் முந்துநீர்முழைத்த
சினையின்பந்தமும் பகுதிகளனைத்தையுஞ்செய்தோன்."

எனப்பிராட்டியாரை அங்கிகரிக்கும்படி கூறினர். அங்கு பரமசிவனும் பிரஸன்னராகி இராமபிரானை நோக்கி,

"துறக்குந்தன்மையளல்லளாற் றேல்லையேவ்வுலகும்
பிறக்கும்போன்வயிற் றன்னையிப் பெய்வளை பிழைக்கின்
இறக்கும்பல்லுயிரிராமனீயிவடிறத்திகழ்ச்சி
மறக்குந்தன்மையதென்றனன் வரதர்க்கும்வரதன்."

என அருளிச்செய்தனர். தசரதச்சக்கரவர்த்தியாரும் சுவர்க்கத்தினின்றும்வந்து ஸீதாப்பிராட்டியாரை நோக்கி,

"நங்கைமற்றுநின் கற்பினையுலகுக்குநாட்ட
அங்கிபுக்கிடென்றுணர்த்திய வதுமனத்தடையேல்
சங்கையற்றவர்பெறுவது முண்டுதசரதம்
கங்கைநாடுடைக் கணவனை முனிவுறக்கருதேல்.

‡ கம்-ரா. யுத்த-மீட்சி 97, 112, 114, 122.

‡ பொன்னைத்தீயிடைப்பெய்தலப் பொன்னுடைத்தூய்மை
தன்னைக்காட்டுதற்கென்பதுமனக் கொளற்குறி
உன்னைக்காட்டினன் கற்பினுக்கரசியென்றுலகில்
பின்னைக்காட்டுதற்கரியதேன் றெண்ணியப்பெரியோன்.

பெண்பிறந்தவராருந்தநியே முதற்பெருமைப்
பண்பிறந்தவர்க்கருங்கலமாகிய பாவாய்
மண்பிறந்தகமுனக்கு நீவானின்றும்வந்தாய்
எண்பிறந்தநின்குணங்களுக் கினியிழுக்கிலையால்."

எனப்பிராட்டியாரின் பாதிவிருத்தியத்தைப் புகழ்ந்துரைத்துப் பிராட்டியாரைச் சமாதானஞ்செய்தனர்.

3. ஸீதாப்பிராட்டியார் ஸ்ரீராமபிரானைநோக்கி—

¶ " த்யுமத்ஸேநஸுதம் வீரம் ஸத்யவந்தமநுவ்ரதாம் /
ஸாவித்ரீமிவ மாம் வித்தி த்வமாத்மவஶவர்திநீம் //"

" தியுமத்ஸேனன் புத்திரனாகிய சத்தியவந்தன் என்பவனையே தஞ்சமெனக்கருதி அனுசரித்த ஸாவித்திரியைப் போலவே, அடியாளும் தேவரையே தஞ்சமெனக்கருதியுள்ளவளாகத் தேவர்திருவுள்ளத்தில் அறிவீராக." என்று விண்ணப்பஞ்செய்தனர்.

இங்கு, பிராட்டியார் பதிவிரதாஸ்திரீகளில் ஸாவித்திரியை திருஷ்டாந்தமாகக் கூறியிருப்பதின் காரணம்:—

மத்திரதேசாதிபதியான அசுவபதியின்புத்திரி ஸாவித்தரி என்பவள் இராஜ்யமிழந்து கட்புலனுமிழந்து வனத்தில் வாசஞ்செய்துகொண்டிருந்த சால்வதேசாதிபதியின் புதல்வனான ஸத்தியவான் என்பவனைத் தனக்குப் பர்த்தாவாக வரித்தனள், ஸத்தியவானுக்கு ஆயுள் இன்னும் ஒருவருஷமே இருக்கிறதென்று நாரதமுனிவர் சொல்லக்கேட்டும், ஸாவித்திரி வேறு புருஷனை மணக்கவிரும்பாததினால், அரசன் அவளை ஸத்தியவானுக்கே விவாஹஞ்செய்வித்தான். ஸாவித்திரி பர்த்தாவுடன்சென்று அவர்மனம் களிப்படையும்படி பணிவிடைசெய்துகொண்டுவந்து, நாரதமஹருஷி குறிப்பிட்ட தன் பர்தாவின் மரணதினத்திற்கு மூன்றுநாளைக்குமுன்பே விரதமனுஷ்டித்தனள். குறிப்பிட்ட மரணதினத்தன்று கிரமப்படி கிருக

‡ கம்-ரா. யுத்த-மீட்சி. 123, 124.
¶ வா-ரா. அ-கா. சரு. 30. சு. 6.

கார்யங்களைமுடித்து மாமியார், மாமனார் இருவரையும் மற்றும் பிராமணர்களையும் வந்தனஞ்செய்து, அவர்களிடமிருந்து தீர்க்கசுகமங்கிலியாயிருக்கும்படியான ஆசீர்வாதங்கள்பெற்று, விறகுகொண்டுவருவதற்காக வனத்திற்குச்செல்லும் தன்பர்த்தாவுடன் கூடவே சென்றனள். ஸத்தியவானும் விறகுக்கட்டை சுமந்துவந்ததினுல் தலைநோவுஏற்படவே, ஸாவித்திரியின் மடியில்படுத்துச் சுகமாய் நித்திரைசெய்தனன். சாவித்திரி மஹாருஷியால் குறிப்பிட்டநேரத்தைக் கவனித்துவந்தனள். குறிப்பிட்டநேரம்வர சத்தியவான் பக்கத்தில் கையில் பாசக்கயிறுடன் நிற்கும் யமதர்மராஜனைக் கண்டு, “ எதற்காக தூதர்களையனுப்பாமல் நீர் நேராகவே வந்தீர்? ” என்று ஸாவித்திரிகேட்க, யமன் “ நீ பதிவ்ரதைகளுள் முதன்மையானவள், மஹாதர்மிஷ்டை, அதனுல், சத்தியவானை மற்றவர்களால் அழைத்துச்செல்லமுடியாதுஎன்று நானேவந்தேன். ” என்றான்.

உடனே சத்தியவானுடைய சரீரத்திலிருந்து அங்குஷ்டமாத்திரமான புருஷனை பாசக்கயிரால் கட்டி இழுத்துக்கொண்டு தென்திசை நோக்கி எமன் சென்றான். தன் பதியின் உயிரை யமன் கவர்ந்து செல்வதைக்கண்ட அப்பதிவிரதை அடங்காத்துயர்கொண்டு நெஞ்சம்பதைத்து அருகேயிருந்த மண்ணைத்திரட்டித் தன்கணவனுக்குத் தலையணையாக வைத்துவிட்டு அந்த யமன்பின்னே தொடர்ந்துசென்றனள்.

யமன்:— “ பெண்ணே! நீயார்? என்பின்வரக் காரணம்யாது? ”

ஸாவித்திரி:— “ ஐய! யாருடைய உயிரைத்தாங்கள் கவர்ந்து செல்கின்றீர்களோ, அவருடையமனைவி யான்; பர்தா எங்குசெல்கின்றாரோ அங்கு பத்தினியும் செல்லவேண்டியது கடமையென்ற புராதனதருமத்தை யனுசரித்து யானும் வருகின்றேன். ”

யமன்:— “ பெண்ணே! நீ உரைத்த வசனங்கள் மனதிற்குகந்ததும் தருமமுமானது. இறந்தவர்களின் ஆவியைக்கொண்டுசெல்வது என் கடமை; ஆதலால் இவரது உயிரைத்தவிர உனக்கு வேண்டியவரங்களைக் கேள் தருகின்றேன். ”

ஸாவித்திரி:— (1) என்மாமனார் திரும்பவும் கண்களைப்பெறல்வேண்டும் (2) எனது மாமனார் திரும்பவும் இராஜ்ஜியமடையவேண்டும் (3) என்னுடைய பிதாவுக்கு நூறுபுத்திரர்கள் உண்டாகவேண்டும் (4) எங்களுடைய குலத்தை உத்தாரணம் செய்யக்கூடியவர்களான நூறுபிள்ளைகள்

சத்தியவானுடைய ஔரஸப்புத்திரர்களாக என்னிடம்ஜனிக்கவேண்டும்." என நான்குவரங்களை ஒன்றன்பின்னொன்றாக வேண்டிப்பெற்றுக் கொண்டு பின்னும் யமனைப் பின்றொடர்ந்துசென்று அவனைநோக்கி,

ஸாவித்திரி:— "தர்மராஜரே! எனக்கு நூறுபுத்திரர்கள் உண்டாவதாகச் சற்றுமுன்பு வரமளித்திருக்கின்றீர். நீர் தருமராஜரானபடியால் சத்தியவானுக்குப் பிராணனைக்கொடுத்து உம்முடைய வார்த்தையைச் சத்தியமாகச் செய்யக்கடவீர்." என, வேண்டினள். உடனே தருமராஜாவும் பாசத்தையவிழ்த்துவிட்டுச் சந்தோஷத்துடன் சாவித்திரியை நோக்கி "ஏ, பதிவிரதே! உன்பர்த்தாவை விட்டுவிட்டேன். நீ அவனை சௌக்கியமாயழைத்துச்சென்று உன்னபீஷ்டங்களை நிறைவேற்றிக் கொள்வாய்" என்றுரைத்துவிட்டுத் தமதிருப்பிடம்சென்றான்.

ஸாவித்திரியும் தன்பர்தாவின் சரீரம்கிடக்கிற இடஞ்சென்று அச்சரீரத்தையெடுத்து மடியில்வைத்துக்கொள்ளவும், சத்தியவான் உடனே மயக்கம் தெளிந்தெழுந்தனன். ஸாவித்திரியும் நடந்தவிருத்தாந்தமெல்லாம் பர்தாவிடம் உரைத்தனள். உடனே இருவரும் கிருஹஞ்சென்றனர்.

யமதருமராஜன் அளித்தவரங்களின் பிரகாரம் சத்தியவானுடைய பிதா தியுமத்ஸேனன் இழந்திருந்த கண்களைத் திரும்ப அடைந்து, இராஜ்ஜியத்தையுமடைந்து சத்தியவானுக்கு யுவராஜபட்டாபிஷேகஞ் செய்தனர். சத்தியவானும் ஸாவித்திரியுடன்கூடி காலக்கிரமத்தில் மிக்க குணசாலிகளான நூறு புத்திரர்களை அடைந்தான். ஸாவித்திரியின் பிதா மத்திரதேசத்தரசனுக்கும் நூறு புத்திரர்கள் உண்டாயினர்.

இந்தப்பிரகாரம் ஸாவித்திரியானவள் தனதுகற்பின் மகிமையால் இறந்துபோன தன் பர்தாவின் உயிரை யமனிடமிருந்து திரும்பப்பெற்றும், பிறந்தகுலத்திற்கும், பர்தாவின்குலத்திற்கும் மேன்மையையுண்டாக்கியுமிருப்பதால், பிராட்டியார் தமக்குத் திருஷ்டாந்தமாக ஸாவித்திரியையுரைத்தனர் என்க.

**இந்த விருத்தாந்தங்களினால் பதிவிரதைகளைத் தொடுவதற்குத் தேவர்களும் பயப்படுவார்கள் என்பதும், அவர்கள் ஆணையின்படி யாவும் சம்பவிக்குமென்பதும், பதிவிரதைகளின்மகிமை அபாரமானதென்பதும் ஸூசிதம்.**

இப்படியே இந்தக் கலியுகத்தில் நடந்த பதிவிரதைகளின் சரித்திரங்கள்:—

(1) மதுராநகரத்தை அரசுபுரிந்த பாண்டியன் நெடுஞ்செழியன் என்னும் அரசனால், தன் கணவன் கோவலன் கொலையுண்டான் என்ற செய்தியைக் கேழ்வியுற்ற கண்ணகி பதைபதைத்து மூர்ச்சித்துப் பலவாறு புலம்பியழுது, கோவலன் வெட்டுண்டு கிடந்த இடம்சென்று,

"என்றிவை சொல்லி யழுவாள் கணவன்றன்
பொன்றுஞ்சு மார்பம் பொருந்தத் தழீஇக்கொள்ள
நின்று னெழுந்து நிறைமதி வாண்முகங்
கன்றிய தென்றவள் கண்ணீர்கை யான்மாற்ற
வழுதேங்கி நிலத்தின் வீழ்ந் தாயிழையா டன்கணவன்
றொழுதகைய திருந்தடியைத் துணைவளைக்கை யாற்பற்றப்
பழுதொழிந் தெழுந்திருந்தான் பல்லமரர் குழாத்துளா
னெழுதெழின் மலருண்க ணிருந்தைக்க வெனப் போனான்."

அவனுடம்பைத் தழுவிக்கொள்ள, உடனே கோவலன் உயிர்பெற்றெழுந்து நின்று 'மதிபோன்ற உன்முகம் வாடியதே' என்றுசொல்லிக் கையாலேஅவள் கண்ணீரைத்துடைக்க, அவள் கணவனுடைய திருவடிகளை இரண்டு கையாலும் பற்றி வணங்கினாள். உடனே கோவலன், தன் சரீரத்தைப் போட்டுவிட்டு சுவர்க்கமடைந்தான். பின்பு கண்ணகி மிகுந்த கோபங்கொண்டு, வீராவேசத்துடன் அரசனிடஞ்சென்று, தீர விசாரியாமல் தன் கணவனைக் கொல்வித்த அநீதியை எடுத்துரைத்து, கோவலன் நிரபராதி என்பதை உருசுப்படுத்தினாள், உடனே அரசன் துக்கித்து மயங்கிவிழுந்தான். அரசனது மனைவி காப்பாற்றவேண்டுமென கண்ணகி பாதத்தில் வீழ்ந்து வேண்டினள். அப்பொழுது கண்ணகி

"......யானுமோர் பத்தினியே யாமாகி
லொட்டே னரசோ டொழிப்பேன் மதுரையுமென்
பட்டிமையுங் காண்குறுவாய் நீயென்னு விட்டகலா
நான் மாடக் கூடன் மகளிரு மைந்தரும்
வானக் கடவுளரு மாதவருங் கேட்டீமின்
யானமர் காதலன் றன்னைத் தவறிழைத்த
கோநகர் சீறினேன் குற்றமிலேன் யானென்
றிடமுலை கையாற் றிருகி மதுரை
வலமுறை மும்முறை வாரா வலம்வந்து
மாட்டார் மறுகின் மணிமுலையை வட்டித்து
விட்டா ளெறிந்தாள்"

"யான் பதிவிரதை என்பது உண்மையாயின் இவ்வூரை அழித்து விடுவேன் பார்" என்று சபதஞ் செய்து, தனது இடது ஸ்தனத்தைக் கையால் திருகி எடுத்து அதை அந்நகரத்தின்மீதெறிந்தாள். எறியவே, அக்கினிபகவான் ஓர் பிராமண உருவந்தரித்து வந்து 'இப்போது யாரை யழித்தல்வேண்டும்?' என்று கேட்க, அவள்,

"பார்ப்பா ரறவோர் பசுப்பத்தினிப்பெண்டிர்
மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத்
தீத்திறத்தார் பக்கமே சேர்கென்று காய்த்திய
பொற்றெடி யேவப் புகையழ லண்டிற்றே
நற்றேரான் கூட னகர்."

'அந்தணர், முனிவர், பசு, பத்தினிப்பெண்டிர், பெரியோர், சிசுக்கள் இவர்களைவிட்டுத் துஷ்டர்களை எரிக்கக்கடவை.' என்று சொல்லவே, அவள் சொல்லியபடி அந்நகரில் தீப்பற்றிக்கொண்டது. (சிலப்பதிகாரம்)

(2) ஒருசமயம் போஜராஜன் ஒருதாதியின்வார்த்தையைநம்பித்தன் பட்டமகிஷியாகிய லீலாவதியின்மீது சந்தேகங்கொண்டு அவளது கற்பு நிலைமையைப்பரீக்ஷித்தறிய விரும்பி, பழுக்கக்காய்ந்த இருப்புப்பாளங்களைக்கொண்டுவரச்செய்து லீலாவதியைநோக்கி,

"பத்தினிநீயேயானல் பழியொன்றுமறியாயானல்,
சித்தமேன்கலங்கவேண்டும்? செந்தீயிற்காயுமிந்த
பத்திகொள் பாளமீதே பலதரம் வலமேவந்தென்
உத்தமிநீயேயென்றிவ் வுலகுணோரறியச்செய்வதாய்."

'ஹே பிரியை! பழுக்கக்காய்ந்திருக்கும் இந்த இருப்புப்பாளங்களின்மேலேறிநடந்து உனது கற்பின் உறுதியை ஜனங்கள் அறியும்படி செய்யக்கடவை" என்றனன்.

லீலாவதியும் ஸ்நானஞ்செய்துவந்து தனது நாயகனையே மனதில் தியானஞ்செய்துகொண்டு,

"ஜாக்ரதி ஸ்வப்னகாலேச ஸுஷுப்தௌ யதிமேபதி: ||
போஜயேவ பரம் நாந்யோ மச்சித்தே பாவிநோபித ||"

"விழித்தினிதிருக்கும்போதும் விழியதுதுயிலும்போதும்
சுழுத்தியிலடங்கும்போதும் சொர்ப்பனங்காணும்போதும்
பழுத்தநல்லறிவின்மிக்கப் பார்த்திபன் போஜனல்லால்
இழுத்துமே வேறோர் மாந்தரென் மனங்கொள்வதாமோ?"

என்றுசொல்லி அக்கினிதேவனைத்தொழுது,

"ஏறினள் பாளமீதே யெடுத்தனள் சிரமேற்கைகள்
கூறினளரசன்முன்னே குறையொன்றுமறியேனென்றாள்,
ஆறினன்ஜலம்போலய்யனதனையு மரசனோர்ந்தே
சீறினன் தாதிசென்னி சிதைப்பனென் றெடுத்தான்வாளை."

அந்த இருப்புப்பாளங்களின் மேலேறி மூன்றுதரம் வலம்வந்து யாதொருகுறைவுமின்றித் தன்கற்புநிலையை ஜனங்கள்கண்டு மகிழச்செய்து அந்தப்புரம்சென்றனள். (கவிரத்ன சிந்தாமணி)

இந்தப்பிரகாரம் லீலாதேவியின் கற்பின்மகிமையினால் அக்கினிபகவான் ஜலம்போல குளிர்ந்தனன்.

(3) போஜராஜனதுகாலத்தில், ஒருநாள்இரவு ஒருபிராம்மணன் அவனது மனைவியின்மடியில் தலைவைத்து நித்திரைசெய்தான். பக்கத்தில் விளையாடிக்கொண்டிருந்த அவனது அருமைக்குழந்தை தவிழ்ந்துபோய், கொளுந்துவிட்டு எறிந்துகொண்டிருந்த கணப்புச்சட்டியினருகே சென்றது. பதிவிரதையான அந்தப்பிராமணி தன்கணவனது நித்திரைக்குப் பங்கம் நேருமெனக்கருதி குழந்தையை எடுக்கப்போகாமல், 'குழந்தையைக் காப்பதுன்கடமை' என அக்கினிபகவானை மனதில் பிரார்த்தித்துக்கொண்டு கண்களைமூடிக்கொண்டிருந்துவிட்டாள். அக்குழந்தையும் கணப்புச்சட்டியிலுள்ள தணல்களை வாரித் தலையிலும் உடம்பிலும் போட்டு விளையாடிக்கொண்டிருந்தது. சற்றுநேரத்தில், கணவன் நித்திரைதெளிந்து எழுந்திருக்கவும், அந்தஸ்திரீ கண்களைத்திறந்தாள். இருவரும் குழந்தையைக்கண்டு, ஹா! என்றலறிக்குழந்தையை எடுத்தார்கள். பிராம்மணி அக்கினிதேவனைப் பிரார்த்தித்துக்கொண்டிருந்ததினால் அவளுடைய பாதிவிருத்திய மகிமையினால் குழந்தைக்கு யாதொரு கெடுதலும் சம்பவிக்கவில்லை. அப்போது, நகர்சோதனைசெய்துவந்த அரசன் அவ்வீட்டுக்கதவிடுக்கின்வழியாக வெளிச்சந்தெரிவதைக்கண்டு, கதவண்டைசென்று உற்றுநோக்கி வீட்டிற்குள்நடந்த சங்கதிகளைக்கவனித்து அந்த ஸ்திரீயின் பாதிவ்ருத்தியத்தை மனதில் புகழ்ந்துகொண்டு அரண்மனை

யடைந்து, மறுநாள்காலே தமது சபைக்குவந்து வித்துவான்களைநோக்கி, "ஹுதாசநஸ்சந்தன பங்க சீதள: /" "அக்கினி சந்தனம்போல குளிர்ந்தான்." என்னும் கருத்துள்ள ஒரு அடியைச்சொல்லி சுலோகத்தைப் பூர்த்திசெய்யுமாறு கூறினன்.

அப்போது காளிதாசன்,

"ஸுதம் பதந்தம் ப்ரஸமீக்ஷ்ய பாவகே
ந போதயாமாஸ பதிம் பதிவ்ரதா /
ததாபவத் தத்பதிபக்தி கௌரவாத்
ஹுதாசநஸ்சந்தந பங்கசீதள: //"

"தன்குழந்தை நெருப்பில்விழப்போவதைக்கண்டும் ஒருபதிவிரதை தன்மடியில் நித்திரைசெய்திருந்த கணவனை எழுப்பாமலிருந்தாள். அவளுடைய பதிபக்தியின் மகிமையினுல் அக்கினியும் சந்தனம்போல குளிர்ந்தான்." என்னும் கருத்துள்ள சுலோகத்தைப் பூர்த்திசெய்து சொன்னன் (போஜசரித்திரம்)

இந்த மூன்றுசரித்திரங்களும்,

இன்னும், சூரியகுலத்தைச் சேர்ந்தவனும், இராமபிரானின் மூதாதையுமான அரிச்சந்திரன் என்னுமரசன் சத்தியத்தை நிலைநிறுத்தும்பொருட்டுத் தனது இராஜ்ஜியத்தை விசுவாமித்திரமுனிவருக்குத் தாரைவார்த்துத் தத்தஞ்செய்துகொடுத்துவிட்டு, தன் மனைவி சந்திரமதியையும், தேவதாஸன் என்னும் புதல்வனையும் அழைத்துக்கொண்டு, மந்திரியுடனும், நக்ஷத்திரேசன் என்னும் விசுவாமித்திரமுனிவரின் சீடனுடனும், நகரையகன்று, காசியம்பதியைநோக்கிச் சென்றனன்.

வழியில் முனிவரின் சூழ்ச்சியால், அக்கினியாறு ஒன்று குறுக்கிட்டது. அவ்வாற்றைக் கண்டு அரசன் மிக்கவருத்தமடைந்தனன். அப்போது சந்திரமதி- "ஓ, "அக்கினி பகவானே! என் பர்தா ஸத்தியஸந்தன் என்பதும் நான் பதிவிரதையென்பதும் உண்மையாயின், நீ சுத்தஜலமாய்க் குளிர்ந்துபோகக்கடவை" என அக்கினிதேவனைப் பிரார்த்தித்து அந்த நெருப்பிலேபோய்விழுந்தாள்.

"மதுரமென்மொழியாள் கற்புவளர் நெடுவடவைத்தீயின்
முதிர்தழலதுதானென்னைச் சுடுமெனு முழங்குசெந்தீ
அதிர்குரலார்ப்பு மாறியடங்கி நாவொடுங்கிக்காலைக்
கதிரவன்வரவுகண்ட விருளெனக்கழிந்ததன்றே."

தக்ஷணமே அவ்வக்கினியாறு குளிர்ந்துபோய்விட்டது.

பின்பு எல்லோரும் காசியம்பதியடைந்தனர். அரசன் அங்கு தன் மனைவியையும், புதல்வனையும் ஓர் அந்தணனுக்கு விலைக்குவிற்றுத் தானும் ஒரு புலையனுக்கு அடிமையாகிக் கிடைத்த திரவியங்களனைத்தையும் நக்ஷத்திரேசனிடம் கொடுத்தனுப்பிவிட்டனன்.

பின்னர், தருப்பை, ஸமித்து முதலியன கொண்டுவரும்பொருட்டுக் காட்டுக்குச் சென்ற தேவதாஸன் ஓர் அரவுகடித்து இறக்கவே, சந்திரமதி அப்பிணத்தைத் தகனஞ்செய்வதற்காக மயானத்திற்கு எடுத்துச்சென்று சிதையில்வைத்தனள். மயானங்காத்திருந்த அரிச்சந்திரன், இறந்து கிடப்பது தனதருமை மகனெனவும், அருகிலிருப்பவள் தனது மனைவியெனவும் அறிந்தபின், மிகுந்த துயரமடைந்து பிணத்தைச் சுடுவதற்குரிய பணத்தை அந்தணரிடம் யாசித்துப் பெற்றுவரும்படி சந்திரமதியை அனுப்ப, அவள் வீடுநோக்கிச்செல்லும்பொழுது, மார்க்கத்தில் ஒருபிணம் அவள்காலிற்பட்டது. இறந்துகிடந்த காசிமன்னன் புதல்வனாகிய அப்பிணத்தைக்கண்டு, தன் மகனென்று நினைத்துக் கையிலெடுத்துவைத்துப் புலம்பிக்கொண்டிருந்தாள். பிள்ளையைத்தேடிவந்த காசிமன்னன் ஏவலாளர், புலம்பிக்கொண்டிருந்த சந்திரமதியே அப்பிள்ளையைக் களவாடி வந்து கொன்றவளென்றெண்ணி, அவளைப்பிடித்துக் கட்டிக்கொண்டு போய் அரசன்முன் நிறுத்தினர், அமைச்சரும், அவளைகொலைசெய்தவளென்று கூற, அரசனும் வீரவாகுவை அழைத்துவரச்செய்து, அவனுக்குச் சந்திரமதியைக்காட்டி, 'இவள், நம்மகவைக் களவாடிச்சென்று கொலைசெய்தாளாதலின், நீ இவளைக்கொண்டுபோய்க் கொலைசெய்து பழிக்குப் பழி வாங்குக.' என்றனன்.

அவ்வீரவாகு அரசனது ஆஜ்ஞைப்பிரகாரம் சந்திரமதியைக் கயிற்றால் இறுகக் கட்டிக்கொண்டுபோய், தன்னுடைய அடிமையாகிய அரிச்சந்திரனிடம் ஒப்புவித்து 'நமது அரசரது புதல்வரைக்கொன்ற இப்பாதகியை வாளால் வெட்டுக' என்றுரைத்து ஒரு வாளும் கொடுத்தான்.

அரிச்சந்திரனும் யாதொருபாவமும் அறியாத சந்திரமதியைக் கட்டின கட்டுடன் பிடித்து நடத்திக்கொண்டு சுடலையையடைந்து, சந்திர

மதியைநோக்கி, 'என் கண்மணி! தெய்வச்செயலிதுவாயின், நாம்செய்வது யாது? நீ வழிபடும் தெய்வத்தைத் தியானித்துக் கிழக்கு நோக்கி நில்' என, அக்கற்பரசியும், தான் கணந்தோறும் வழிபட்டொழுகும் தன் கணவனது திருவடிகளையே மனத்தில் தியானித்துக்கொண்டு, கிழக்குநோக்கி நின்றனள். அரிச்சந்திரனும் வாளைக் கையிற்கொண்டு,

" நெறியினன்னவென்றனைவிடா நிறையிவட்குளதேல்
இறுதியின்மையைப்பெறுக இல்லெனிவள் இறுதி
பெறுகவென்றுவாள்வீசினன் பேதைதன்கழுத்தில்
மறுமணத்திடுமாலையாய் வீழ்ந்ததவ்வடிவாள். "

" என்னையே உறுதியாகக்கொண்ட கற்பு இவளிடத்திருப்பது உண்மையாயின் இவள் இறக்காமலிருக்கக்கடவள்; அது இல்லெனில் இவள் இறக்கக்கடவள். " என்று வாளை வீசினன். அவ்வாளும் திருமணத்திலிட்ட மாலையேபோல, சந்திரமதி கழுத்தில் விளங்கியது. அக்காலத்தில் மும்மூர்த்திகளும் பிரசன்னராய் அரிச்சந்திரனது சத்தியவிரதத்தையும், சந்திரமதியின் பதிபக்தியையும் புகழ்ந்துரைத்து, இறந்துபோன புதல்வரிருவரும் உயிர்பெறச்செய்து மறைந்தருளினர். இந்த அரிச்சந்திரோபாக்கியானமும் இங்கு அறியத்தக்கன.

அக்கினிபகவான்முதலான தேவர்களின் அநுமதியின்படி ஸ்ரீராமபிரான் ஸீதாப்பிராட்டியாரைச் சேர்த்துக்கொண்டபின்னர், பிராட்டியார் இளையபெருமாள் ஸமேதராய் ஸமஸ்த வானரவீரர்களையுமழைத்துக்கொண்டு ஸ்ரீராமபிரான் புஷ்பகவிமானத்திலேறி, ஆகாசமார்க்கமாகவந்து பாரத்துவாஜாஶ்ரமத்திலிறங்கி, அம்முனிவர் வேண்டுகோளுக்கிசைந்து, அன்று அங்குதங்கியிருந்து, தமதுவரவைப் பரதாழ்வானுக்குத் திருவடியின்மூலமாகத்தெரிவித்து, மறுநாள் அயோத்தியாபுரிக்கு எழுந்தருளினர். பரதாழ்வான் நகரமுழுதும் தோரணங்கள் கட்டி, கொடிகளைத்தூக்கி நன்றாக அலங்காரஞ்செய்வித்து, நகரத்திலுள்ள மஹாஜனங்களுடன்கூடி பூர்ணகும்பங்கள், புஷ்பங்கள், பழங்கள்முதலானவைகளையெடுத்துக்கொண்டு பேரீ சங்கம்முதலியவாத்தியங்களைக் கோஷித்துக்கொண்டு இராமபிரான் முதலானோரை எதிர்கொண்டழைத்து நகரப் பிரதக்ஷிணமாக எழுந்தருளப்பண்ணிக்கொண்டு சென்றனர்.

ஸ்ரீராமபிரான் அரண்மனையடைந்தபின்னர்,

" ததஸ்ஸப்ரயதோவ்ருத்தோ வஸிஷ்டோ ப்ராஹ்மணைஸ்ஸஹ
ராமம் ரத்நமயே பீடே ஸஹஸீதம் ந்யவேசயத் ||
வஸிஷ்டோ வாமதேவஶ்ச ஜாபாலி ரத காஶ்யப: |
காத்யாயந ஸ்ஸுயஜ்ஞஶ்ச கௌதமோ விஜயஸ்ததா ||
அப்யஷிஞ்சந்நரவ்யாக்ரம் ப்ரஸந்நேந ஸுகந்திநா |
ஸலிலேந ஸஹஸ்ராக்ஷம் வஸவோ வாஸவம் யதா || "

பெரியோராகிய வஸிஷ்டபகவான் நவரத்நமயமான மஹா மண்டபத்தில் இரத்தினங்களிழைத்த ஸிம்மாஸனத்தில் ஸ்ரீராமபிரானையும் ஸீதாப்பிராட்டியாரையும் உட்காரவைத்தார். வஸிஷ்டர், வாமதேவர், ஜாபாலி, காஶ்யபர், காத்தியாயனர், ஸுயஜ்ஞர், கௌதமர், விஜயர் என்ற எண்மர்களும் நிர்மலமாய் பரிமளங்களோடுகூடிய புண்ணியதீர்த்தங்களினால், தேவர்கள் இந்திரனைப் பட்டாபிஷேகஞ் செய்வித்தாற்போல் நரசிரேஷ்டரான ஸ்ரீராமபிரானை அபிஷேகஞ்செய்தார்கள்.

அனந்தரம் ஸீதாப்பிராட்டியார் தமது நாயகரான ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியுடன் ஸகலபோகங்களையுமனுபவித்துக்கொண்டுச் சந்தோஷமாகவே பஹுவருஷகாலம் ஸுகமாக வாழ்ந்திருந்தனர்.

இதனால் ஸ்திரீகள் ஸீதாப்பிராட்டியார், அநஸூயாதேவி, ஸாவித்திரி முதலான பதிவிரதா சிரோமணிகளைப் பின்பற்றிப் பதிபக்தியுடன்கூடிப் பதிவிரதாதருமத்தையனுஷ்டித்துவருவார்களாயின், பதியுடன்கூடி குறைவற்றசெல்வமும் நன்மக்களும் பெற்று ஸுகஜீவியாய் நீடூழிகாலம் வாழ்ந்துவருவதோடு, என்றும் அழியாத புகழும் பெறுவார்களென்பது நிச்சயம்.

சுபமஸ்து.



கருணாநிதி பிரஸ், ஸ்ரீவில்லிபுத்தூர்.

# விளம்பரம்.

## இதனால் ஸகல ஆஸ்திக ஜனங்களுக்கும் தெரிவித்துக்கொள்ளுகிறதாவது

இந்தப் புஸ்தகத்தில்கண்ட தருமங்கள் தவிர இன்னும் சகோதர தருமம், பரோபகாரம், சரணாகதரக்ஷணம், புண்ணியபாப கருமங்களின் பயன், யாக்கை நிலையாமை, ஜன்மாந்திரம், ஈஸ்வரபக்தியின் ஆவஸ்யகம், ஸாதுக்களின் பெருமை, உண்மைபேசுதலின் உயர்வு, காமத்தின் இழிவு, நன்றி மறவாமை, அஹிம்ஸையே மேலான தருமமென்பது, அன்பு, இன்சொல், நட்பு, முதலான பலதருமங்கள், ஸ்ரீமத் ராமாயணத்திலிருந்து ஆராய்ச்சிசெய்து எழுதித் தயாராகியிருக்கின்றன. அவைகள் கூடியசீக்கிரம் அச்சிட்டு வெளியிடப்படும்.

இப்புத்தகம் வேண்டுவோர் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

**S. K.** ரெங்கய்யங்கார்,
கர்ணம்,
சிந்தாமணி, புளியங்குடி போஸ்டு,
திருநெல்வேலி ஜில்லா.